எந்நேரத்திலும்
எவ்விடத்திலும்
எச்சந்தர்ப்பத்திலும்








சில்லறை விற்பனை நிலையம்:
216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு
சென்னை - 1

தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லிமிடெட்
மில்ஸ்: பைகுல்லா, பம்பாய்
ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங்ஸ், பல்லார்டு எஸ்டேட், பம்பாய் - 1

SISTA'S-KMS-246.

# ATUL

- DYES
- CHEMICALS
- PHARMACEUTICALS




**THE ATUL PRODUCTS LTD.**
**Atul, via. Bulsar,**
**Western Railway.**

*Agents: For Andhra & Madras States:* M/s. PATEL & SONS, 5, Godown Street, MADRAS-1
*For Madras, Kerala & Andhra Pradesh:* M/s. T. T. KRISHNAMACHARI & Co., 331-333, Thambu Chetty St., MADRAS-1

# வாழ்க்கைப் பாதையில் முன்னேறிச் செல்ல

# ராயல் என்பீல்ட்




இந்த வேகயுகத்தில் வாய்ப்புக்கள் உங்களைத் தேடிவரும் என்று காத்திருக்க முடியாது. வெற்றிபெற நீங்கள் அதை வேகமாக அடைவதில் முயற்சிக்க வேண்டும்.

உங்களைக் கருத்தில் கொண்டே 'ராயல் என்பீல்ட் மோட்டார் ஸைக்கிள் தயாரிக்கப்பட்டுள்ளது. ஒரு மோட்டார் ஸைக்கிளிடம் நீங்கள் எதிர்பார்க்கும் பெருமளவு சக்தி, கம்பீரமான அமைப்பு, அநாயாசமான வேகம் — அனைத்தும் கொண்டது.

**அதிவேகமாகச் செல்லும் மோட்டார் ஸைக்கிள் ராயல் என்பீல்ட்**

தயாரிப்பாளர்:
**என்பீல்ட் இந்தியா லிமிடெட்**
சென்னை - 19

பூரண விற்பனை ஏஜெண்டுகள்:
**மெட்ராஸ் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
சென்னை - பெங்களூர் - டில்லி

காரணம்

எதுவாகிலும்

உங்களுக்குப்

பிரியமான

துணிகள்

கிடைக்குமிடம்



தீபாவளி



பொங்கல்



திருமணம்



பிறந்த நாள்



பள்ளி திறக்கும் நாள்



# வேங்கடேஷ் வஸ்திராலயா

மைசூர் பாங்க் கட்டிடத்தில் (மதறாஸ் ஹைக்கோர்ட்டுக்கு எதிரில்)

ஷோரூம் நெ. 1 இங்கு பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் வகைகளும் கிடைக்கும்.

ஷோரூம் நெ. 2 இங்கு பக்கிங்காம் & கர்னாடிக் மில் துணிகள் விற்கப்படும்.

மதறாஸ் ஸெண்ட்ரல் ஸ்டேஷனுக்கு எதிரில்

ஷோரூம் நெ. 3 இங்கு பின்னி மில் வகைகளும் மற்ற மில் துணிகளும் கிடைக்கும்.

JWT/VV-1156




சித்தூர்
ராணி பத்மினி

டைரக்ஷன் :
CH. நாராயணமூர்த்தி B.A.

திரைக்கதை, வசனம் :
ஸ்ரீதர்

R.P.S.

# ...hauls non-stop round the clock





**TATA-**
**MERCEDES-BENZ**
Diesel Trucks and Buses





**For efficient life-long service**

**V.S.T. MOTORS PRIVATE LTD.,**
**MADRAS-2 VELLORE SALEM**

உயர்ந்த ரக

பிஸ்கோத்துகள்

சரசமான விலைகளில்

L-4/59

லில்லி பிஸ்கட் கோ., பிரைவேட் லிட்.
கல்கத்தா-4

# லில்லி

தாகத்தீர்க்கும் சுவைக்கும் சிறந்தது

சென்னை, மைசூர், கேரளாவிற்குப் பூரண விநியோகஸ்தர்கள்
மெஸர்ஸ் ஜி. அதர்டன் & கோ., பிரைவேட் லிட்., 11 & 12, ஜாபர் ஸரங் தெரு, சென்னை
கேரளா, மைசூர் ராஜ்யத்திற்கு சப் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ் மார்ஸ் கார்ப்பொரேஷன், 2/284, புது ரோடு, மட்டாஞ்சேரி, கொச்சி-2

விசேஷ காலங்களுக்கு உகந்த
பலரக நகைகள் கிடைக்குமிடம்

# உம்மிடியார்



மனதைக் கவரும் நவீன மோஸ்தரிலுள்ள வைரம், தங்கம், வெள்ளி நகைகள் எங்கள் ஷோரூம்களில் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

அவசியம் ஒருமுறை வந்து பாருங்கள்






உம்மிடி ராமய்ய செட்டி குருஸ்வாமி செட்டி & கோ.
23-25, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை-1

கிளை: எல். ஐ. ஸி. கட்டிடம், சென்னை-2




எக்காலத்துக்கும் ஏற்ற நாகரிகமானது

9 ரட்டன் பஜார், சென்னை 3

221, டாக்டர் தாதாபாய் நௌரோஜி ரோடு, பம்பாய் 1

2, லின்ட்ஸே ஸ்ட்ரீட், கல்கத்தா 16;

அயல்நாட்டு எம்போரியங்கள்: ஏடன், கொழும்பு, கோலாலம்பூர், சிங்கப்பூர், பாங்காக்

தலைமை ஆபீஸ்: ஆல் இந்தியா ஹாண்ட்லூம் பாப்ரிக்ஸ் மார்கெடிங் கோ-ஆபரேடிவ் சொஸைட்டி லிமிடெட், ஜெஹாங்கீர் சேம்பர்ஸ், போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய் 1

நீங்கள் பெற
விரும்புவதையே
அன்பளிப்பாகக்
கொடுங்கள்...
டன்லபில்லோ
கொடுங்கள்.

**டன்லபில்லோ**



தலையணைகள்
குழந்தைகளுக்கும்,
பெரியவர்களுக்கும்,
மூன்று அளவு
களில்; பாது
காப்பான
அடித்துணியுடன்
கூடியது.



திருப்பக்கூடிய
வட்டமான பஞ்சணை
ஒவ்வொரு சமயத்
தில் உபயோகிக்கும்
நாற்காலிக்கு
உகந்த பின்னணை.



திருப்பக்கூடிய
சதுர பஞ்சணை.
படுக்கையறை,
படிப்பறை,
விருந்தினர்
அமரும் அறை,
மற்றெந்த
அறைக்கும் கூட.



நாற்காலிப்
பஞ்சணைகள்.
மூன்று அளவு
களில், வேலைக்கும்
உல்லாஸத்திற்கும்.



திண்டு உங்கள்
சோபாவிற்கு
அலங்காரம்;
உங்களுக்கு
சௌகர்யம்.



மிக்க உயரிய
அன்பளிப்பு
அசாதாரணமான
அன்பளிப்பாயின்,
ஒரு டன்லபில்லோ
பிரயாணப்
பெட்டி அளியுங்
கள்—மிகசௌகர்ய
மான ஜிப்பொருத்
தியது.
டன்லபில்லோ
மெத்தையும்
தலையணையும்
பொருத்தப்பட்டது.




**டன்லப் ரப்பர் கோ. (இந்தியா) லிட்.**

எமது அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் எமது மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்!

# கேச பராமரிப்பு—ஒரு கலை




# கேசவர்த்தினி

ஹேர் ஆயில்,
ஷாம்பூ,
கண் மை



உங்கள் பின்னல் பழைய சம்பிரதாயப்படி இருந்தாலும் சரி, அல்லது புது மோஸ்தரில் அமைந்திருந்தாலும் சரி, கேசவர்த்தினியே உங்களுக்குச் சிறந்த அழகுச் சாதனமாகும். கேசவர்த்தினி, கூந்தல் வளர்ச்சிக்கும் அலங்கரிப்புக்கும் சிறந்தது. தலையில் ஏற்படும் சங்கடமான பொடுகைப் போக்குகிறது. அடர்ந்த நீண்ட, கருமையான கூந்தலை வளர்க்கிறது.





**கேசவர்த்தினி பிராடக்ட்ஸ்,**
கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர்.

KSV-3 TM

அதிக விளைச்சலைப்பெற....

**சுப்பையா** பம்புகளை
நிறுவி பயனடையுங்கள்

S. F. மானோ பிளாக் பம்பு செட்



**சுப்பையா பவுண்டரி** கோயமுத்தூர்
போன் 2935 - தந்தி: பவுண்டரி

---





புனித தீபாவளி நன்னாளிலே
புத்தாடையுடுத்தி புத்தமுதுண்டு
புனித வாழ்த்துக்கள் பரிமாறி
சற்றே கண்ணயரும் வேளையில்
இதமான காற்று மெல்ல வீசி
இன்பம் யாவும் தருபவை.



**போனிக்ஸ்**
*விசிறிகள்*



Mfrs: ENG. WORKS OF INDIA (Private) Ltd., CALCUTTA-2

CHARI

# TYRESOLES

## நம்பிக்கையின் சின்னம்

சிறந்த வேலைப்பாட்டிற்கும், 'டிரெட்'டின் சாஸ்திரீயமான அமைப்புக்கும் பிரசித்த பெற்ற இடம் டயர்ஸோல்ஸ். தேய்ந்த டயர்களை டயர்ஸோல்ஸ் மூலம் புதுப்பிப்பதால் உங்களுக்கு உத்தரவாதமான சேவை கிடைக்கிறது. உங்கள் டயர்களை ஒரு முறை அல்ல, பன் முறை பயன் பெறச் செய்யலாம். இதை விடச் சிறந்த அநுகூலம் உங்களுக்கு வேறெங்கும் கிடைக்காது.



**டயர்ஸோல்ஸ்** டிவிஷன்.

**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட்.**

தொழிற்சாலைகள்: கோயமுத்தூர், மதராஸ், விஜயவாடா, திருச்சி, கோட்டயம், மங்களூர், பெங்களூர், கல்கத்தா.

# ஜாலிபோர்டு

## எண்ணற்ற வகையில் உபயோகப்படும் மரப்பலகை

ஜாலிபோர்டு இவ்வேலைகளுக்கு ஏற்றது: 1. பழைய கதவுகள் மீது பொருத்துவதற்கு; 2. சுவர் மீது பொருத்துவதற்கு; 3. அழகான மறைப்புகளுக்கு; 4. கூரையின் உட்புறத்தை அழகாக மூடுவதற்கு; 5. அழகிய கவுன்டர்கள் செய்வதற்கு; 6. மேஜைக்கு மேற்பலகையாக உபயோகிப்பதற்கு; 7. நாற்காலிகளின் வழுவான உட்காரும் பலகையாக உபயோகிப்பதற்கு

## கவர்ச்சியான டிஸைன்களில் எங்கும் ஏராளமாகக் கிடைக்கிறது

உங்கள் கடை மற்றும் ஆபீஸை இம்மாதிரி கவர்ச்சியான முறையில் தோற்றமளிக்கச் செய்யுங்கள். நீங்கள் எம்மாதிரியான மாறுதல் செய்ய விரும்பினாலும் சரி, ஜாலிபோர்டை உபயோகித்தால் வேலை சுலபமாக முடியும்; நீடித்த காலம் நிற்கும். செலவு ஒன்றும் அதிகமாகாது. நவீன முறையில் கட்டட அலங்கார வேலைகளுக்கு உபயோகப்படும் ஜாலிபோர்டு இந்தியாவின் மிகச் சிறந்த ஹார்ட்போர்டாகும். இருந்தும் அதன் விலை, பதிலாக உபயோகப்படும் மற்ற மட்டரக பலகைகளின் விலையைவிட அதிகம் இல்லை.

**மிகவும் குறைவான விலைகள்!**

ஜாலிபோர்டு * மிக வழுவானது, இலேசானது மற்றும் நெடுகாலம் உழைக்கக்கூடியது; மரநாரிலிருந்து வழுவான பலகைகளாக உருவாக்கப்படுகிறது — பிரிட்டிஷ் ஸ்டாண்டர்ட் ஸ்பெஸிபிகேஷன் பிரகாரம் தயாரிக்கப்படுகிறது. * அநேக ஸைஸ்கள், பருமன்கள் மற்றும் கவர்ச்சியான டிஸைன்கள் கிடைக்கின்றன. * செதில்கள் அல்லது முட்டு முடிச்சுகள் கிடையாது; பிளவு அல்லது வெடிப்பு ஏற்படாது. * சுலபமாக எந்த உருவத்திலும் அறுக்கலாம்; எங்கும் பொருத்தலாம். * பொருத்தும் வேலை சுலபமாக முடியும்; சேர்த்தியான வேலைப்பாட்டுக்கு மிகவும் ஏற்றது. பெயிண்ட், வார்னிஷ் மற்றும் பாலிஷ் இதன்மேல் நன்கு ஒட்டிக்கொள்ளும். * கல்கத்தாவிலுள்ள கவர்ன்மெண்ட் டெஸ்ட்ஹவுஸின் சர்டிபிகேட் பத்திரம் பெற்றது.

பருமன்கள் : 3 மி.மீ., 4.5 மி.மீ., 6 மி.மீ.

ஸைஸ்கள் : 12'x4', 8'x4', 6'x4', 4'x4'

வெகு சீக்கிரத்தில் இன்ஸுலேஷன் போர்டும் கிடைக்கும்




இலவச மாதிரிக்கு இன்றே கேட்டு எழுதுங்கள்!

**ஜாலிபோர்டு** ... மனோகரமான மரப்பலகை

அனில் ஹார்ட்போர்ட்ஸ் லிமிடெட், சக்தி இன்ஷ்யூரன்ஸ் பில்டிங், ஸர் பிரோஜ்ஷா மேதா ரோட், பம்பாய்

# பொருளடக்கம்





# ஸ்ரீமுகம்

ஒவ்வொரு வருஷமும் தீபாவளியன்று நாம் மங்கள ஸ்நானம் செய்து புத்தாடை அணிந்து ஒருவருக்கொருவர் 'கங்கா ஸ்நானம் ஆயிற்றா?' என்று கேட்டு மகிழ்கிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் நரகாசுரன் தன்னுடைய கடைசி விருப்பமாக அந்த தினத்தில் யாவரும் மகிழ்ச்சியுடன் இருக்க இவ்விதம் வரம் கேட்டு அதன்படி அன்று காலையில் யார் எண்ணெய் தேய்த்து மங்கள ஸ்நானம் செய்கிறார்களோ அவர்களுக்கு நரகம் இல்லாமல் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதனால் அன்று ஸ்நானம் செய்பவர்களுக்கு நரக வாசம் இருக்காது. ஸன்யாசிகளும் இந்த ஸ்நானம் செய்ய வேண்டும் என்பது விதி.

இப்புனித தினத்தில் நாமும் எல்லோருடைய துக்கமும் விலகி, இன்புடன் வாழ அருள் புரியுமாறு பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டு நல்வாழ்வு வாழ்வோமாக.

ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள்
காஞ்சி காமகோடி பீடம்



# பப்பாளி உப்புக்கரித்தது

வினை தீர்த்தான் முதலித் தெருவில் ஒரு வேப்ப மரம். அதன் அடியில் ஒரு பிள்ளையார். அந்தப் பிள்ளையாருக்கு பூஜையுமில்லை, கேட்பார் யாரும் இல்லை. அவர்பாட்டுக்குச் சும்மா சிரித்த வண்ணம், தெருவில் வரவும் போகவும் செய்யும் மக்களை ஆசிர்வதித்துக் கொண்டிருந்தார்.

காக்கை ஒன்று மரத்தில் வந்து உட்கார்ந்து பேசத் தொடங்கிற்று, மரத்துடன்.

"தம்பி! இந்தப் பிள்ளையாரை ஏன் யாரும் கவனிப்பதில்லை? பூவாவது பழமாவது வைப்பவர் யாரும் இல்லை. இவர் ஏன் வேறே இடத்துக்குப் போகமாட்டேன் என்கிறார்?" என்று கேட்டது காக்கை.

"அண்ணே! உனக்கு ஏன் இவர்பேரில் கோபம்? அப்படியெல்லாம் பெரியவரை ஏளன மாகப் பேசலாகாது" என்றது மரம். அப்போது ஒரு ஏழை, தெருவில் போய்க் கொண்டிருந்தவன், வந்து பிள்ளையாரைக் கும்பிட்டுக் கன்னத்தில் போட்டுக் கொண்டு வழக்கம்போல் குட்டிக் கொண்டான்.

"இவன் யார் உனக்குத் தெரியுமா?" என்றது மரம்.

"தெரியவில்லையே. யார் அவன்?"

"பாவம், ஒரு பெரிய மனிதர் தோட்டத்தில் வேலை செய்கிறான். அவன் கூரைக் குடிசையை இன்று சர்க்கார் பிடுங்கித் தள்ளிவிட்டார்கள். அதற்காக அழுது அழுது கெஞ்சிக் கேட்டுப் பார்த்தான். யாரும் உதவவில்லை. பிள்ளையாரிடம் முறையிடுகிறான்" என்றது மரம்.

இதற்குள் அந்த ஏழை எழுந்து போகப் புறப்பட்டான். காக்கையும் அவன்கூடப் பறந்து சென்றது.

ஒரு ஓடை. பெரிய மழை பெய்தால் அதில் ஜலம் இருக்கும். மற்றக் காலத்தில் நாற்றமடிக்கும். அதன் இரண்டு கரையிலும் செடிக இடிந்து கிடந்த குடிசைகள். எல்லாம் தரைமட்டம் செய்துவிட்டு அதிலிருந்த ஏழைகள் நகரத்தில் இங்குமங்கும் அலைந்து இன்னது செய்வது என்று தெரியாமல் திண்டாடிக் கொண்டிருந்தார்கள். இடிந்த குடிசை களுக்கிடையில் ஒரு பப்பாளி மரம்.

பிள்ளையாரைக் கும்பிட்ட ஏழை அந்த மரத் தண்டை சென்று அதில் இருந்த ஒரு பழத்தைப் பறித்துச் சென்றான்.

"இது இவன் வளர்த்த மரமாக இருக்கலாம்" என்று காக்கை தனக்குள் சொல்லிக் கொண்டு மரத்தின்மேல் உட்கார்ந்தது. மரங்கள் எல்லாம் பறவைகளுடன் பேசும்.

"என்ன செய்தி?" என்றது காக்கை.

"ஐயோ! அதை ஏன் கேட்கிறாய்! இந்த இடத்தில் நாற்பது ஏழைகள் கஷ்டப்பட்டுப் பிழைப் பவர்கள் தங்கள்பாட்டுக்குக் குடிசைகள் கட்டிக் கொண்டிருந்தார்கள். இவற்றையெல்லாம் கொடிய வர்கள் ஈரம் இரக்கமில்லாமல் மூந்நாளன் வந்து இடித்து விட்டுப் போனார்கள். அவர்கள் அர சாங்கத்து வேலைக்காரர்கள். அவர்களுக்கு இம் மாதிரி குடிசைகளை அழித்து நாசம் செய்ய மனம் இல்லை. கூடவந்த ஒரு உத்தியோகஸ்தன் அவர் களைத் தாண்டி இடி, இடி என்று அதட்டிக் காரி யத்தை முடிக்கச் செய்தான்."

"ஏன் இப்படிச் செய்தார்கள்? உனக்குத் தெரியுமா?" என்றது பறவை.

"அது சர்க்கார் நிலமாம். அங்கே குடிசைகள் இருப்பது அவலட்சணமாம். அடுத்த வாரம் ஒரு பெரிய மந்திரி சென்னைக்கு வருகிறாராம். அவர் இந்த வழியில் செல்வாராம். அவருக்கு இந்த ஏழைக் குடிசைகளைப் பார்ப்பதற்கு நன்றாயிருக்காது என்று இப்படிச் செய்தார்கள்" என்றது மரம்.

"மரத்துக்கு விஷயம் சரியாகத் தெரியவில்லை. அதற்காக அல்ல அந்தக் குடிசைகளை அழித்தது. இது ரொம்ப அசுத்தமான இடம். இங்கே மக்கள் குடிசைகள் கட்டிக்கொண்டு வாழ்வது சுகாதாரத் துக்கு நல்லதல்ல. அதனால் இடித்து விட்டார்கள்" என்று அப்போது வந்த ஒரு தெரு நாய் சொல்லிற்று.

"இது நல்ல இடமல்ல என்று இடித்து விட்டால் வேறு இடம் ஏதாவது அவர்களுக்கு அமைத்துத் தந்தார்களா?" என்று கேட்டது பப்பாளி மரம்.

இதற்கு நாய் பதில் சொல்லுவதற்குமுன் காக்கை மரத்தில் பழுத்திருந்த ஒரு பழத்தைக் கொத்தி, "க்ராவ்! க்ராவ்!" என்று வெறுப்புடன் கத்திக்கொண்டு பழத்தை விட்டு விட்டுத் தூர உட்கார்ந்தது. மறுபடியும் வந்து "மரமே! ஏன் உன் பழம் இவ்வளவு உப்புக் கரிக்கிறது! முந்தி நன்றாக இருந்து வந்ததே?" என்று கேட்டது.

"ஐயோ, இதை ஏன் கேட்கிறாய்? இந்தக் குடிசைப் பெண்களும் குழந்தைகளும் இரண்டு நாட்களாக அழுது அழுது அவர்கள் விட்ட கண்ணீர் இந்த மண்ணை உப்புக்கரிக்கச் செய்துவிட்டது. என் பழங்கள்கூடக் கெட்டுப்போச்சு" என்றது மரம்.

"மனிதர்கள் விடும் கண்ணீர் அத்தனை உப்பா?" என்று காக்கை கேட்க, நாய் "ஆமாம், இது உனக்குத் தெரியாதா?" என்று சொல்லி ஓடிப் போயிற்று.



காக்கை மறுபடியும் வினைதீர்த்தான் தெருவுப் பிள்ளையார் மரத்துக்குப் போய்ச் சேர்ந்தது.

"பார்த்து வந்தேன், தம்பி! அந்தப் பாழ்கிடந்த இடத்தில் இருந்த பப்பாளி மரம்கூட அந்த ஏழைகள் அழுத கண்ணீரால் உப்புக்கரித்துப் போச்சு. தின்னவே முடியவில்லை" என்றது.

காக்கை கீழே சென்று பிள்ளையாரண்டை போய் அவருடன் பேச ஆரம்பித்தது.

"இன்று ஆயுதபூஜையாம். ஊரெல்லாம், தெருவெல்லாம் தோரணமும் வாழை மரமும் அலங்காரமுமாக இருக்கின்றன. செருப்பு தைக்கிற இடங்கூட தோரணம் வாழை மரம். உனக்கு ஏன் யாரும் அலங்காரம் செய்து கும்பிடவில்லை?" என்று கேட்டது.

விநாயகர் சிரித்து விட்டுப் பதில் சொல்லாமலிருந்தார். அப்போது கந்தல் துணி உடுத்த ஒருவன் கையில் ஒரு மாலையுடன் வந்து பிள்ளையாருக்கு அதைச் சூட்டித் தரையில் விழுந்து நமஸ்கரித்தான்.

"எங்கள் கஷ்டம் நீங்குமா சாமி? நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லிவிட்டு எழுந்து சென்றான்.

"ஐயோ பாவம்! இவன் அந்த இடிந்த சேரியைச் சேர்ந்தவன்" என்று காக்கை மரத்துக்குச் சொல்ல, மரம், "கஷ்டம் வந்தால்தான் இந்த மக்கள் சாமியை நினைக்கிறார்கள். பார்! இந்தப் பிள்ளையாருக்கும் ஒரு மாலை வந்தது. அந்தச் சேரியை இடித்துத் தள்ளி விட்டபடியால்" என்றது.

ஒரு பில்லைச் சேவகன் வந்தான். அவன் தன் டவாலியைக் கழற்றி வைத்துவிட்டுப் பிள்ளையாரைக் கும்பிட்டான். அவன் ஏதோ சொல்லிக் கும்பிட்டது காக்கைக்குத் தெரியவில்லை.

[அவன் தெலுங்கில் பேசினான். அந்தக் காக்கைக்குத் தெலுங்கு தெரியாது. அது தமிழ்க் காக்கை]

மரத்தைக் கேட்டது: "இவன் என்ன சொல்லுகிறான்?"

"'ஏழைகளின் குடிசைகளை இடித்தேன். அந்தப் பாபத்தைத் துடைக்கவேண்டும், கணபதி! நீ தான் கதி; நான் வேணுமென்று செய்யவில்லை. கட்டாயத்தினால் செய்தேன். மன்னிக்கவேண்டும், விநாயகா!' என்கிறான்" என்றது மரம்.



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



# புலவரேறும் பக்கீரும்

குவிஞர் இருவர் கிராமத்துத் தனிமையில் ஒன்று கூடி அளவளாவினர். காவியப் பூஞ்சோலையில் தம்மை மறந்து திரிந்தனர். ரவீந்திரர் அச்சமயம் ஸெலாயிதஹில் நீண்ட நாட்கள் தம் குடும்பத்துடன் இருந்தார். யௌவன வயது அவருக்கு. ஜமீனின் முழுப் பொறுப்பையும் அவர் ஏற்றிருந்தார். பல்லக்கிலும் படகிலும் ஊர்ந்து அலுவல்களை நேரில் கவனிக்கப் பல ஊர்களுக்குச் செல்வார். எளிய மக்களுடன் ஒன்றிப் பழகுவார். காரியஸ்தர்களின் சூழ்ச்சிகளிலிருந்து ஏழைக் குடிகளின் நலனைக் காத்திடுவார்.

அக்காலத்தில் லாலன் ஸாயி என்ற பக்கீர் அருமையான 'பாடல்' கீதங்களைக் கிராமியக் கொச்சை மொழியில் பாடி மக்களின் மனத்தைக் கவர்ந்தார். பழக்கமான உவமைகள் வைத்து அத்யாத்மிக ரகசியங்களை அவர் வெளிப்படுத்தும் திறமை வியக்கத் தக்கது. நம் தமிழகத்துச் சித்தர் பாடல்களைப் பெரும்பாலும் அவை ஒத்திருக்கும்.

ஒருநாள் ரவீந்திரர் விடியற்காலையில் தம் ஸெலாயிதஹில் மாளிகையின் கீழ் அறை யொன்றில் வீற்றிருந்தார். ஜமீன் நிலபுலங்களைச் சாகுபடி செய்யும் ஊர் மக்கள் ஆண்டுதோறும் செலுத்தும் 'நஜரானு' (காணிக்கைக்காக)வுடன் வந்து வரிசையாக நின்றனர். ரவீந்திரர் அவர்களை உட்காரச் சொல்லி, அவர்களுடைய சுக துக்கங்களைப் பற்றி விசாரித்தார். இதுபோன்ற சமயங்களில் ரவீந்திரர் தம் 'நாயெப்' பையோ (காரியஸ்தர்) சிப்பந்திகளையோ அருகில் வைத்துக் கொள்வதில்லை. இவர்களுக்கு அஞ்சித் தம் குறைகளைக் குடியானவர்கள் வெளியிடத் தயங்குவாரென்பது அவர் எண்ணம்.

குடிமக்கள் வரிசையாக அமர்ந்தனர். அவர்களுக்கெல்லாம் பின்னால் ஒரு கிழவன் — குறை சொல்லிக் கொள்ள அவனுக்கு ஒன்றுமில்லை — அவன் கையில் காணிக்கையும் இல்லை; ரவி பாபுவையே கண்ணாரப் பார்த்துக் கொண்டிருந்தான். அம்முதியவனின் மேனி நிறம் நல்ல சிவப்பு; முகத்தில் அம்மை வடு; தலையில் மயிர்க்கற்றை. அது உச்சியில் முடிந்திருந்தது. நரைத்த நீண்ட தாடி மோவாயில். நாரத முனிவின் உடல் அமைப்பு. எவரையும் கவரும் ஒரு வசீகரம் அவனுடைய கண்களில். 'க்ராந்த தர்சி'யான ரவீந்திரரின் நோக்கம் அவன் பால் சென்றது. ஆனால் அவனுடன் பேசவோ அவனை இன்னாரெனத் தெரிந்து கொள்ளவோ அச்சமயம் அவருக்கு வாய்ப்பு இல்லை. பேட்டி காண வந்தவருடன் அக்கிழவனும் போய்விட்டான்.

ரவீந்திரர் குளிக்கும்பொருட்டு மாடிக்குச் சென்றார். கீழே அவருடைய குழந்தைகள் விளையாடும் கூச்சல். குளித்து உண்டபின் வெளியே வரும்பொழுது கூச்சல் பின்னும் வலுத்தது. ஒரே கொந்தளிப்பு, சிரிப்பு, கொண்டாட்டம் சிறுவர்களிடையே. இதற்குக் காரணம் அவருக்குப் புரியவே இல்லை. அவருடைய மூத்த பெண் அதிசயமான பொருள் ஒன்றை ஏந்திச் சிரித்தவண்ணம் அவர் எதிரே வந்து நின்றாள். வேறு ஒன்றுமில்லை. ஒரு தடி. ஆனால் அதன் வேலைப்பாடுதான் என்ன! இந்தக் காலத்து 'வாக்கிங் ஸ்டிக்' அன்று. நாட்டுப் புறத்தவர் உபயோகிக்கும் கழி. எண்ணெயிலும் நீரிலும் ஊறிய அக்கழி கறுத்து நிகுநிகுவென்றிருந்தது. அதன் பிடி பாம்பின் படம்போல் வளைந்திருந்தது. பாம்பின் உடலில் காணும் சிற்று புள்ளி யாவும் அதிலும் அமைந்திருந்தன. இத்தகைய விளையாட்டுச் சாமானைக் குழந்தைகள் எப்போதுமே பார்த்ததில்லை. கேள்விக்கு மேல் கேள்வி போட்டு ரவீந்திரரை அசைத்து விட்டனர். கடைசியில் மருமம் வெளியாகியது. ஜமீனைச் சேர்ந்த சிப்பாய் ஒருவன் "பாபு இது எங்கள் ஊர் லாலன் ஸாயியின் கைத்தடி" என்றான்.

ரவி பாபு அந்தப் பக்கிரியின் பாடல்களைக் கேட்டிருக்கிறார். ஆனால் ஆளைக் கண்டதே யில்லை. சிப்பாய் மேலும் அறிவித்தான்.

"இன்று காலை பக்கீர் வந்திருந்தார்."

"லாலன் ஸாயியா...எனக்கு ஏன் யாரும் சொல்லவில்லை?" என்றார் ரவீந்திரர்.

அப்பொழுதே தம் காரியஸ்தருக்கு உத்தரவிட்டார், சேவுடே கிராமத்திலிருந்து லாலன் ஸாயியை அழைத்து வருமாறு. மறுநாள் பகல் பாம்புருவான தடியின் உரிமையாளரான கிழ லாலன் பக்கீர் ரவீந்தரர் முன்பு தோன்றினார். அமைதியை விரும்பும், தம்மை வெகு வாய்க் காட்டிக் கொள்ளாத பண்பினர் அந்த 'பாஉல்.' அவர் கையில் ஓர் அழகிய 'ஏக்தாரா, (ஒற்றை நரம்பு



த.நா.குமாரசுவாமி



தம்புரா) நாரத முனி வீணையுடன் இந்திரன் அவையுள் நுழைவது போலவே இருந்தது அக்காட்சி. லாலனுடன் அவருடையசீடன் ஒருவனும் வந்தான்.

நாட்டுப்புறப் பாவலர், நாடறிந்த கவிவாணர் இவர்களிடையே சுவை மிகுந்த உரையாடல் நிகழ்ந்தது. ரசிகர்கள் களிக்கக்கூடிய சொல்விருந்து. டாகுர் தம் ஜமீனையே மறந்தார். லாலன் 'ஏக்தாரா'வை மீட்டிப் பாடினார்.

கல்லாத புகழே அறியாத அந்நாட்டுப் புறப்புலவனின் பொருள் செறிந்த பாட்டைக் கேட்டு ரவீந்திரர் மெய்ம் மறந்தார்.

லாலன் சாதி மதபேதமற்றவர். 'அம்ருதஸ்ய புத்திர' என்ற இனத்தவர். எல்லா உயிர்களிலும் கரந்தொழுகும் அப்பரம் பொருளை 'மனேர் மனுஷ்' தேடி ஆவித்து அழுபவர், ஆடிப் பாடுபவர். அவர் ஹிந்துவுமன்று, முஸ்லிமும் அன்று; அவர் மனிதர். அவருடைய சின்னமான அந்த அரவுக்கழியை அவர் கையில் தந்து அரவிந்தர் அவரைத் தழுவிக் கொண்டார். என்னே அருமை அக் கைக் கழிக்குத்தான்; இரு கவிஞரை ஒன்று சேர்த்த பெருமை அதற்குத்தானே!

அடிக்கடி ரவீந்திரரைக் காண லாலன் வருவார். தாம் புனைந்த புதிய கீதங்களை அவருக்குப் பாடிக் காட்டுவார். பரந்த பத்மா ஆற்றில் தம் படகின் மேல் தட்டில் அமர்ந்து நிலவு தோய்ந்த இரவு நேரங்களில் லாலனின் தத்துவப் பாடல்களைச் செவிமடுத்து டாகுரும் 'பாஉல்' கீதங்களைத் தாமே புனைவதற்கான ஊக்கத்தைப் பெற்றார். 'கேயா' என்ற கவிதைத் தொகுப்பில் இவற்றைக் காணலாம். புலன்களை மீறியதொரு சுவை இந்தப் பாட்டுக்களின் வாயிலாக அவர் பெற்றார்.

ஜொரசங்கோவில் நடக்கும் எந்த விழாவுக்கும் லாலனையும் அவருடைய கோஷ்டியினரையும் அழைத்து மணிக் கணக்காக அமுத கீத வலையில் சிக்கித் திளைத்திருப்பார். சில சமயம் பக்கீரைக் காணத் தாமே அவருடைய குடில் போன்ற ஆசிரமத்துக்குப் போவார். இந்த லாலன் நிறை ஆயுளுக்கு மேல் பதினுருண்டுகள் உயிர் வாழ்ந்தவரெனக் கூறுகின்றனர். கபீரைப் போல் அவர் ஹிந்துவாகப் பிறந்து, முஸல்மானுக வளர்ந்தவர். இத்தகைய ஞானிக்கு ஞாபகச் சின்னமாக அவருடைய சமாதியின்பேரில் ஓர் அழகிய கோயிலைக் கட்டுவித்தார் ரவீந்திரர். லாலனுக்குச் சீடர்கள் அனந்தம் பேர். இரு சமூகத்தாராலும் ஒதுக்கப்பட்டவர். ஊர் ஊராகப் போய்த் தம் குருவின் பாடல்களைப் பாடுவதும், பிச்சை எடுத்து உண்பதுமே இவர்களின் தரும நெறி. ரவீந்திரர் இவருடைய பாடல்களில் கொண்டிருந்த ஈடுபாட்டினுல் சில காணி நிலம் மானியமாகத் தந்து உதவினுர். லாலனின் 'பாஉல்' கீதங்களைப் பத்திரிகைகளில் பிரசுரம் செய்தார். பக்கீரைப் பின்பற்றி ரவீந்திரர் எழுதிய ஆன்மீகப் பாட்டுக்கள் இன்னும் வங்காளிகளின் உள்ளத்தில் இன்னிசையைக் கிளப்பி வருகின்றன. ரவீந்திரருக்கு மிகவும் பிடித்த லாலன் பக்கீரின் ஒரு பாட்டு:

தோமாய் நதுான் கரேஇ பாபோ பலே
ஓராராஇ க்ஷணே க்ஷணே
ஓ மோர் பாலோபாஷார் தன!
தே கா தேபே பலே துமி ஹேர ஜே அதர்சன
ஓ மோர் பாலோ பாஷார் தன!

(புதிது புதிதாய் உன்னைப் பெறும் பொருட்டு ஒவ்வொரு கணமும் உன்னைப் போக்கி நின்றேனே, என் அன்பின் ஆரமுதே! காட்சிக்கெளிதாய் விடுவோமென்று நீ உன் உருவினைக் கரந்துள்ளாய் - என் அன்பின் ஆரமுதே!)



கல்பனா

# தெய்வ சக்தியின் திரு உருவம்



உலகிலுள்ள யாவருடைய துயரங்களையும் நீக்கி நலனை அளிக்க ஸ்ரீ பகவானே சக்தியுள்ளவர். அவரை நாம் மறந்தாலும் அவரது நினைவை உண்டு பண்ணவே பகவான் பல வித அவதாரங்களைச் செய்தார். அந்த அவதாரங்களும் கலியுகத்தைத் தவிர மற்ற யுகங்களில்தான் உள்ளது.

இக்கலியிலோவெனில் நமது குறைகளை நீக்கி ஆனந்தத்தை அளிப்பதற்கு சாதுக்களின் சங்கம், தரிசனம், பகவானுடைய கதைகள் இவைகள் தாம் உதவியாகும். இந்த இடங்களில் எல்லாம் தெய்வத்தின் சக்தி விளங்குவதே அதற்குக் காரணம். தெய்வத்தின் சக்தியை இக்கலியில் நேரில் காண வேண்டுமேயானால் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசார்யாளைத் தரிசித்தாலே போதும். அவர்களின் உருவமே தெய்வத்தின் சக்தியாகும். தெய்வத்தைக் கண்டவர்கள் என்ன பயனை அடைவார்களோ, அப்பயனை நமது ஜகத்குரு அவர்களைக் காண்பவர்கள் அடைந்து வருகிறார்கள். சாஸ்திரங்களில் துறவிகள் அனுஷ்டிக்க வேண்டிய தருமங்கள் கூறப்பட்டுள்ளன. அதன்படி துறவிகள் அத்தருமங்களை அனுஷ்டித்ததை நாம் நேரில் கண்டதில்லை. ஆனால் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அனுஷ்டிப்பதை நேரில் காண்கிறோம். அவர்களது கடைக் கண்களிலேயே தவத்தின் சக்தி ததும்பி நிற்கிறது. அவர்கள் யதிகளுக்குரிய தண்டத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வரும்பொழுது யதிதர்மமே உருவத்தோடு நடமாடுவது போலவும், அவர்களின் இனிமையான சொற்களைக் கேட்கும்போது தெய்வத்தின் சக்தியே உருவோடு வந்து உரையாடுவது போலவும், அம்பாளையும், சந்திரமௌளீசுவரரையும் பூஜை செய்யும்போது ஸ்ரீ பரமசிவனே தன்னைப் பூஜை செய்து கொள்வது போலவும் யாவருக்கும் தோன்றுகிறது.

நமது ஸ்ரீ ஆசார்யாளைப் போன்ற சில மஹான்கள் இப்புவியில் நடமாடி வருவதனால்தான், இந்தக் கோரமான கலியிலும் பல நன்மைகள் உலகில் ஏற்பட்டு வருகின்றன.

ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளை (இளைய ஸ்வாமிகளை) தனித்துப் பார்த்தால் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைப் போல் தோன்றுவது ஆச்சர்யமான காட்சியாகும். இருவரையும் சேர்த்துப் பார்த்தால் ஸ்ரீ பரமாசாரியாளின் தவத்தின் ஒளிபோல் இளைய ஸ்வாமிகள் தரிசனமளிப்பதைக் காண்கிறோம். இப்படிப்பட்ட மஹான்களின் அருளை நாம் அடைவதற்குச் சுலபமான வழி ஒன்றுதான். அதாவது அவர்கள் சொல்வதைத் தவறாமல் செய்வதேயாகும்.

ஸ்ரீராமன் செய்ததையும், ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசித்ததையும், கடைப்பிடிக்க வேண்டுமெனப் பெரியோர்கள் கூறுவது வழக்கம். ஆனால் ஸ்ரீ பரமாசார்யாள் சொல்வது, செய்வது, இவ்விரண்டையுமே நாம் கடைப்பிடிக்கலாம். ஸ்ரீராமன், ஸ்ரீ கிருஷ்ணன் இவ்விரு தெய்வங்களின் சக்தியே நமது ஆசார்யாளின் உருவாக வந்துள்ளது என்றால் மிகையாகாது. ஸ்ரீ ஆசார்யாள் கூறுவதை நம்பிக் காரியம் செய்கின்றவர்கள் நற்பயனை அடைவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அவர்கள் வாக்கினால் எதைச் சொன்னாலும் உடனே நற்பயனை அளிக்கிறது. அநுக்ரஹச் சொல்லைத் தவிர வேறு வார்த்தைகள் அவர்கள் வாக்கில் வருவதில்லை. யாவரும் நல்வாழ்வு வாழ வேண்டுமென அல்லும் பகலும் ஸ்ரீ அம்பாளை அர்ச்சித்து, ஜபித்து, தியானித்து வேண்டுகின்றனர். கடலுக்காவது ஓர் அளவைக் கூறலாம். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் கருணைக்கும், தவத்துக்கும் அளவு கூற முடியாது. இம் மஹாபுருஷரது காலத்தில் பிறப்பை அடைந்த நாமே பாக்யசாலிகள்.

நம் நாட்டில் எல்லா வகுப்பினரும் தருமத்தை நம்பி வாழ்ந்து வந்தனர். இதனால் பல நாடுகளும் நற்பயனை அடைந்து வந்தன. தருமமாகிற விதைக்குப் பூமி போன்றது பரத கண்டம். இப்படிப்பட்ட நமது பரத கண்டத்திலேயே தருமம் குறைந்து வரும் இக்காலத்தில் நம் நாடும் இதர நாடுகளும் நன்மையை அடைய வேண்டுமானால் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளிடம் சென்று அவர்கள் சொல்லும் தருமத்தை நாம் கையாண்டால் போதும். அவர்கள் நமக்குச் சிறிதும் சிரமமின்றிச் செய்யக் கூடியவைகளைத்தான் உபதேசிப்பார்கள். அவர்கள் கூறுவதும் தாய் குழந்தைக்கு ஊட்டும் சர்க்கரையும் பாலும் கலந்த அன்னத்தைப் போல் இனிக்கும். இப்படிப்பட்ட பெரியவர்களின் உபதேசத்தை யாவரும் அடைந்து அவர்கள் சொற்படித் தவறாமல் நடந்து நல்வாழ்வு வாழ ஸ்ரீ பகவான் அருள் புரிய வேண்டும்.

தீபங்களை ஆவளியாக (வரிசையாக) வைத்துக் கொண்டாடும் இந்தத் தீபாவளி நன்னாளில் நல்லெண்ணெயில் மஹாலக்ஷ்மியும், ஜலத்தில் கங்காதேவியும் விளங்குவதாக சாஸ்திரம் கூறுகிறது. ஆகையால் தான் இந்த நல்ல நாளில் எண்ணெய் தேய்த்து நீராடுகிறோம். இந்த மங்களமான நாளில் நாம் அனைவரும் நமது ஸ்ரீ பரமாச்சார்யாளைப் போன்ற மஹான்களை இதயத்தில் நினைத்து நினைத்து வணங்குவோமாக.





சேங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

# கடல் கடந்த தமிழ்

'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்று ஔவைப் பிராட்டியார் கூறிய உபதேசம் மிகப் பழைய காலந் தொட்டுத் தமிழ் மக்கள் கடைப்பிடித்து வந்த ஒரு கொள்கையை ஒட்டியதாகும். கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் வாணிகம் கிழக்குத் திக்கிலும் மேற்குத் திக்கிலும் பல நாடுகளில் பரவி யிருந்தது என்பது சரித்திர ஆராய்ச்சியாளர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை. தமிழ் மாலுமிகளும் வர்த்தகர்களும் சென்ற நாடுகளில் சில தமிழ்ச் சொற்கள் ஆங்காங்கு புகுந்து வழங்கப்படலாயின. யூதர்கள் ஹீப்ரு மொழியில் எழுதிய பைபில் என்ற சமய நூலில், தோகை என்ற தமிழ்ச் சொல் தூக்கிம் என்று மருவிய வடிவில் காணப்படுகிறது. பாலஸ்தின நாட்டை ஆண்ட சாலமன் என்ற அரசன் காலத்தில் தோகைகள் அங்கு இறக்குமதி செய்யப்பட்டன என்று அந்நூல் கூறுகிறது. அரிசி, இஞ்சி முதலிய தமிழ்ச் சொற்கள் பழைய கிரேக்க மொழியில் காணப்படுகின்றன. தமிழகத்துக்கு உரியதாக இருந்த யாழ் என்ற இசைக் கருவி கிரேக்க நாட்டில் பரவி ஹார்ப் என்ற பெயர் பெறுவதாயிற்று. சாவகத் தீவில் மாறன் என்ற பாண்டிய வமிசப் பட்டம் தரித்த மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்களுடைய நகரங்களில் ஒன்று மதுரை என்ற பெயருடையதாயிருந்தது. ஜாவா என்று இந்தக் காலத்தில் கூறப்படும் இத்தீவில் இப்பொழுதும் மச்சான் என்ற தமிழ்ச் சொல் வழங்கி வருகிறது. மலாய் மொழியில் மாப்பிள்ளை, பூக்கா முதலிய தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன. அமெரிக்காவில் மெக்ஸிகோ நாட்டு மொழியில் கட்டுமரம் என்ற சொல் படகைக் குறிப்பதாக இன்றும் சொல்லப்படுகிறது.

தமிழகத்துக்கு அப்பால் வெகு தூரத்திலுள்ள நாடுகளில் இவ்வாறு புகுந்த தமிழ்ச் சொற்கள் சிலவேயாகும். ஆனால் தமிழகத்துக்கு அருகிலுள்ள இலங்கைத் தீவில் தமிழ் கடல் கடந்து பரவி நிலை பெற்ற மொழியாக இடம் பெற்றுள்ளது. இலங்கையில் தமிழ் வளர்ந்த வரலாற்றைப் பற்றித் தமிழ் மக்களிற் பலரும் இக் காலத்தில் ஓரளவு அறிந்திருத்தல் அவசியமாகும். இலங்கையில் யாழ்ப்பாணம், மன்னார், வன்னி என்ற வடக்குப் பகுதிகளிலும், திருகோணமலை, மட்டக்களப்பு என்ற கிழக்குப் பகுதிகளிலும் மிகப் பழைய காலந்தொட்டுத் தமிழ் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இப் பகுதிகளிலுள்ள முஸ்லிம் மக்களும் தமிழையே தாய்மொழியாகக் கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. மத்தியப் பகுதியாகிய மலை நாட்டில் தென்னிந்தியாவினின்று தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்வதற்காக ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கொண்டு வரப்பட்ட தமிழ்க் குடிகளின் வழி வந்தோர்கள் வசிக்கின்றனர். வட பகுதியாகிய யாழ்ப்பாணம் நெடுங்காலமாகத் தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சியில் மேம்பட்ட இடமாக விளங்கி வருகிறது. இங்கு ஓர் அரச பரம்பரை ஆட்சி செய்து தமிழைப் போற்றி வளர்த்தமை இதற்கு முக்கிய காரணமாகும்.

சங்க இலக்கியங்களில் ஈழத்துப் பூதன் தேவனார் என்ற புலவர் இயற்றிய செய்யுட்கள் காணப்படுகின்றன. இவர் இலங்கையோடு தொடர்பு உடையவர் என்பது வெளிப்படை. யாழ்ப்பாணத்தினின்று இவர் மதுரைக்குச் சென்றிருக்கக் கூடுமென்று ஊகிப்பதற்கு இடமிருக்கிறது. பூதன் என்ற பெயர் யாழ்ப்பாணத்தில் இப்பொழுதும் வழங்கி வருவதாகும். சங்ககாலச் சொற்களிற் சில இந்தக் காலத்திலும் யாழ்ப்பாணத்தில் கல்வித் தேர்ச்சியில்லாத சாதாரண மக்களின் பேச்சு வழக்கில் இருக்கின்றன. ஐது என்பது சங்க இலக்கியச் சொல்லாகும். யாழ்ப்பாணத்தில் காய்கறித் தோட்டங்களில் வேலை செய்வோர், பயிர்களை ஐதாக நடு என்று சொல்வார்கள். ஐது சிறிது அகன்றுள்ளவற்றைக் குறிக்கும் சொல்லாக இங்கு வழங்கப்படுகிறது. அதர் என்ற சொல், வெட்டப்பட்ட குறுகிய வழியைக் குறிக்கும் பொருளில் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. யாழ்ப்பாணத்தில் அதர் வெட்டுதல் என்பது சாதாரணப் பேச்சு வழக்கில் உள்ளது. நொதுமலாளர் என்ற பிரயோகம் புறநானூற்றில் வருகின்றது. இரண்டு பக்கங்களிலும் சாராமல் இருப்பவரை, அவர் நொதுமலில் இருக்கிறார் என்று யாழ்ப்பாணத்து மக்கள் கூறுவார்கள். நிரை (வரிசை) முகில் (மேகம்) திரை (அலை) போன்ற சொற்கள் யாழ்ப்பாணத்தில் சாதாரணப் பேச்சு வழக்கில் இருக்கின்றன. தென்னிந்தியாவில் இச் சொற்களின் பொருளைத் தமிழிற் பாண்டித்தியம் பெற்றவர்களே அறிவார்கள். மிகப் பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில், பெண் குழந்தையை மகனே என்று அழைக்கும் வழக்கத்தைக் குறிக்கும் ஒரு சூத்திரம் உண்டு. இவ் வழக்கம் தென்னிந்தியாவில், அறவே மறைந்தொழிந்து போயினும், யாழ்ப்பாணத்தில் இன்றும் உலவுகின்றது. யாழ்ப்பாணத்தில் தமிழ் மக்கள் சங்ககாலத்திலே நிலைபெற்றிருந்தனர் என்பது பல காரணங்களால் உறுதிப்படுகின்றது.

யாழ்ப்பாணத்தில் ஆரியச் சக்கரவர்த்திகளின் ஆட்சி ஆரம்பித்த பிறகு பல தமிழ் நூல்கள் தோன்றலாயின. இம் மன்னர்கள் 14ஆம் நூற்றாண்டில் இலங்கை முழுவதிலும் ஆதிக்கம் பெற்று விளங்கினார்கள். இந்தப் பரம்பரையினர் யாழ்ப்பாணத்தில் ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவினார்கள். பாண்டிய மண்டலத்தினின்றும் சோழ மண்டலத்தினின்றும் தேடிக் கொண்டு வரப்பட்ட அரிய ஓலைச் சுவடிகளை இவர்கள் ஒரு நூல் நிலையத்தில் சேமித்து வைத்தார்கள். இவர்களிற் சிலர் தமிழிற் பாண்டித்தியம் பெற்றவர்களா யிருந்தார்கள். தக்ஷிணகைலாச புராணம் என்ற கவி நயம் மிக்க நூல் ஓர் ஆரியச் சக்கரவர்த்தியினால் இயற்றப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. 14-ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் செகராச சேகரமாலை என்ற ஒரு சோதிட நூல் இயற்றப்பட்டது. இதிலுள்ள சிறப்புப் பாயிரத்தினின்று ஆராய்ச்சியாளர்கள் இதன் காலத்தை வரையறுத்துள்ளார்கள். இக் காலத்தில் சரசோதிமாலை என்ற இன்னொரு சோதிட நூலும் வெளி வந்தது. செகராசசேகரம், பரராசசேகரம் என்ற விரிவான வைத்திய நூல்களும் ஆரியச் சக்கரவர்த்திகளின் காலத்தில் இயற்றியதாகும். இங்கு குறிக்கப்பட்ட சோதிட நூல்களும் வைத்திய நூல்களும் இனிய செய்யுள் நடையில் அமைந்துள்ளன. யாழ்ப்பாணத்தின் பூர்விகச் சரித்திரத்தையும் முதல் ஆரியச் சக்கரவர்த்தி பாண்டிய நாட்டினின்று யாழ்ப்பாணத்தில் ஆட்சி புரிய வந்த வரலாற்றையும் கூறும் கைலாயமாலை என்ற செய்யுள் நூலும் ஆரியச் சக்கரவர்த்திகளின் காலத்தில் தோன்றியவையாகும். இம் மன்னர் பரம்பரையைச் சேர்ந்த அரசகேசரி என்ற புலவர் வடமொழி இரகு வமிசத்தைத் தழுவி ஒரு சிறந்த செந்தமிழ்க் காவியத்தை இயற்றினார். பலவகைக் கலைகள் பொதிந்த இந்தக் காவியம் யாழ்ப்பாணத்தில் ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்தில் தமிழ் மொழி அடைந்திருந்த உன்னத நிலையைக் காட்டும் பேரிலக்கியமாக விளங்குகிறது. 16-ம் நூற்றாண்டுக்

சு. நடேசபிள்ளை

ருப் பிறகு ஆரியச் சக்கரவர்த்திகளின் ஆட்சி முடிவடைந்து, யாழ்ப்பாணம் போர்த்துக்கேயர் வசத்தில் வந்த காலத்தில் தமிழ் வளர்ச்சி தடைப்பட்டது.

போர்த்துக்கேயருக்குப் பின் 18-ம் நூற்றாண்டில் ஒல்லாந்தர் இலங்கையில் ஆட்சி புரிந்தனர். அக் காலத்தில் யாழ்ப்பாணத்தில் சில தமிழ்ப் புலவர்கள் தோன்றினார்கள். அவர்களில் சின்னத் தம்பிப் புலவர் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார். இவர் சிறு பிராயத்தில் இயற்றிய மறைசையந்தாதி பிரசித்தி பெற்ற பிரபந்தமாகும். இவர் இயற்றிய வேறு நூல்கள் கல்வளையந்தாதி, கரவைவேலன் கோவை, பருளை விநாயகர் பள்ளு என்பன. இப்பள்ளு நாடகம் கற்பனை நயமும் ஓசையின்பமும் செறிந்த இலக்கியமாகும். இதில் வரும் ஈழநாட்டு வர்ணனையும் சோழநாட்டு வர்ணனையும் படிப்போரின் உள்ளத்தைக் கவரும் கவிச் சித்திரங்கள் என்று கூறலாம். ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் அவ்வரசர் விருப்பத்துக்கிணங்கி மயில்வாகனப் புலவர் யாழ்ப்பாணச் சரித்திரத்தைத் தொகுத்து யாழ்ப்பாண வைபவமாலை என்ற நூலைத் தெளிவான உரை நடையில் இயற்றினார். இந்நூல் யாழ்ப்பாணச் சரித்திர ஆராய்ச்சிக்கு மிகவும் பயன்படுகிறது. ஒல்லாந்தரின் ஆட்சிக் காலத்தில் தென்னிந்தியாவிலிருந்து வரத பண்டிதர் என்ற கவிஞரும் கூழங்கைத் தம்பிரான் என்ற சிறந்த புலவரும் யாழ்ப்பாணத்துக்கு வந்தனர். வரதபண்டிதர் திருச்செந்தூர்ப் புராணம் முதலிய சில புராணங்களை இயற்றினார். கூழங்கைத் தம்பிரானிடம் கல்வி பயின்ற சேனாதிராய முதலியார் பெரும் புலவராக விளங்கினார். இவர் இயற்றிய நல்லையந்தாதி, நல்லைக் குறவஞ்சி முதலிய பிரபந்தங்கள் சுவைமிக்கனவாகும். இவர் வழியாக யாழ்ப்பாணத்தில் புகழ் பெற்ற ஒரு வித்துவ பரம்பரை தோன்றுவதாயிற்று.

19-ம் நூற்றாண்டில் ஆங்கிலேயரின் ஆட்சி இலங்கையில் நிலைபெற்றது. இக் காலத்தில் யாழ்ப்பாணத்தில் தமிழ் வளர்ச்சி உச்ச நிலை அடைந்தது; தமிழ்ப் புலமைக்கு உறைவிடமாக அது விளங்கியது. சேனாதிராய முதலியாரின் வழி வந்த வித்துவ பரம்பரை தழைத்தோங்கியது. சேனாதிராய முதலியாரிடம் கல்வி கற்ற ஆறுமுக நாவலர் தமிழுக்கும் சைவத்துக்கும் அரிய சேவை புரிந்து யாழ்ப்பாணத்தின் புகழ் சுடர்விட்டு ஒளிரச் செய்தனர். இவர் திருக்குறள், திருக்கோவையார், நன்னூல், பெரிய புராணம், கந்தபுராணம் முதலிய நூல்களைத் திருத்தமான முறையில் அச்சிட்டு உதவினர். பாலபாடம், பெரிய புராணச் சுருக்கம், திருவிளையாடற் புராணச் சுருக்கம், முதலிய உரை நூல்களை எழுதி வெளியிட்டனர். இவருடைய உணர்ச்சி மிக்க பிரசங்கங்களும், தெளிவும் பொருட் செறிவும் வாய்ந்த இவரது உரை நடையும் தமிழில் ஒரு புதிய இயக்க முறையை உண்டாக்கின. தற்காலத்துத் தமிழ் உரைநடைக்கு இவர் தந்தை என்று சொல்வது மிகவும் பொருத்தமாகும். இவரது உரைநடையின் வீறு மிக்க ஆற்றலை இவருடைய பெரிய புராணப் பதிப்பிற் சேர்க்கப்பட்ட சூசனக் கட்டுரைகள் நன்கு புலப்படுத்துகின்றன. இவர் தமிழ் நூல்களை வெளியிட்ட முறையைப் பின்பற்றி, சி. வை. தாமோதரம் பிள்ளை தொல்காப்பியம் முழுவதையும், கலித்தொகை, சூளாமணி, வீரசோழியம் முதலிய அரிய நூல்களையும் ஏடுகளிலிருந்து பரிசோதித்துப் பதிப்பித்தனர். தமிழகத்தில் 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய மறுமலர்ச்சிக்கு உதவியவர்களின் வரிசையில் ஆறுமுக நாவலரும் தாமோதரம் பிள்ளையும் முன்வைத்து எண்ணுதற்குரியவர்கள் என்பது மிகையாகாது. இவர்கள் இருவரும் தென்னிந்தியாவில் பெரும் புகழ் ஈட்டியவர்கள். இவர்களுக்குப் பின் யாழ்ப்பாணத்திலிருந்து தென்னிந்தியாவுக்குச் சென்று அங்குள்ள கற்றோரின் நன்மதிப்பைப் பெற்ற புலவர் பலராவார், திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக விளங்கிய சபாபதி நாவலர் அவர்களில் பிரதானமானவர்.

ஆறுமுக நாவலர் காலத்துக்குப்பிறகும் யாழ்ப்பாணத்தில் தமிழ்ப் புலமை மணம் மறையவில்லை. குமாரசுவாமிப்பிள்ளையிடத்தும் வித்துவசிரோமணி பொன்னம்பல பிள்ளையிடமும் தமிழ் கற்ற புன்னாலைக் கட்டுவன் கணேசையர் இலக்கண அறிவு நிரம்பியவராய்த் தொல்காப்பிய உரை விளக்கம் எழுதி உதவினர். இவர் இயற்றிய ஈழநாட்டுப் புலவர் சரித்திரம் யாழ்ப்பாணத்துப் புலவர்களின் நூல்களைப் பற்றியும் அவர்கள் வாழ்க்கை வரலாற்றைப் பற்றியும் அறிவதற்குச் சாதனமாக இருக்கிறது. இனிய பல செய்யுள் நூல்களை இயற்றிய நவாலியூர் சோமசுந்தரம் பிள்ளை யாழ்ப்பாணத்தில் தோன்றிய சிறந்த கவிஞர்களில் ஒருவராவர். மட்டக்களப்பிற் பிறந்து யாழ்ப்பாணத்துப் புலவர்களுடன் தொடர்பு கொண்ட விபுலானந்த அடிகள் எழுதிய யாழ்நூல், மதங்கசூளாமணி என்ற நூல்கள் அவரது முத்தமிழ்ப் புலமையைக் காட்டுகின்றன. நாற்பது ஆண்டுகளுக்குமுன் சோழ நாட்டிலிருந்து நவநீத கிருஷ்ண பாரதியார் என்ற புலவர் யாழ்ப்பாணத்தில் வந்து தங்கி உலகியல் விளக்கம் என்ற செய்யுள் நூலை இயற்றினர். இது சங்ககாலச் செய்யுள் நடையைப் பின்பற்றியது. தமிழகத்திலிருந்து இலங்கைக்கு அண்மைக் காலத்தில் கடல் கடந்து வந்த தமிழுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இதனைக் கொள்ளலாம்.

இலங்கையில் தமிழ் மக்களைக் காட்டிலும் சிங்கள மக்கள் பெருந் தொகையினராவர். அவர்களிடையிலும் அநேக நூற்றாண்டுகளாகத் தமிழ்மொழி நெருங்கிய தொடர்புடையதாய் இருக்கிறதென்பது குறிப்பிடத் தக்கதாகும். இலங்கைச் சரித்திரத்தைக் கூறும் மகாவம்சம் என்ற இதிகாசம் இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன் இலங்கையை ஆண்ட விஜயன் என்ற ஆதிசிங்கள அரசன் அக் காலத்துப் பாண்டிய மன்னனின் குமாரத்தியை மணந்தான் என்றும், அவனுடன் அவனுடைய துணைவருக்கு மனைவியராக எழுநூறு பெண்களும் அநேகம் பணியாளரும் மதுரையிலிருந்து இலங்கைக்கு வந்தார்கள் என்ற வரலாற்றை உரைக்கின்றது. இதனின்று இலங்கைச் சரித்திரத்தின் ஆரம்ப காலத்திலேயே தமிழ்மொழி இலங்கையில் நிலை பெற்றிருந்தது என்பது அறியக் கிடக்கின்றது. கி. மு. 3-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு பாண்டிநாட்டுப் படைகளும் சோழ நாட்டுப் படைகளும் இலங்கைக்கு வர ஆரம்பித்தன என்று மகாவம்சத்திலிருந்து தெளிவாகிறது. கி. மு. 2-ஆம் நூற்றாண்டில் இலங்கை மீது ஏலேலன் என்ற தமிழரசன் படையெடுத்து வெற்றி கொண்டான் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பல்லவரும், 11-ஆம் நூற்றாண்டில் சோழரும், 13-ஆம் நூற்றாண்டில் பாண்டியரும் இலங்கையில் ஆதிக்கம் பெற்றிருந்தார்கள். இந்தக் காரணத்தால் சிங்கள மக்களிடையே தமிழ் இடையிடையே ஆட்சியாளர் மொழியாகச் செல்வாக்குப் பெறுவதாயிற்று. அநேக தமிழ்ச் சொற்கள் சிங்கள மொழியில் இடம் பெற்றன. குணசேகர முதலியார் என்ற சிங்கள ஆசிரியர் எழுதிய ஒரு நூலில் முந்நூற்றைம்பது தமிழ்ச் சொற்கள் சிங்களவரின் பேச்சு வழக்கிலிருப்பதை ஓர் அட்டவணையில் காட்டியுள்ளார். சிங்களவரிடையே முதலியார், ஆராய்ச்சி என்ற சொற்கள் சில உத்தியோகங்களுக்குரிய பட்டப் பெயர்களாக வழங்குகின்றன. இலங்கைக் கோன், தென்னூர்கோன், பெருமாள் முதலிய பட்டங்கள் சிங்களப் படைத் தலைவர்களுக்கு முன் காலத்தில் கொடுக்கப்பட்டு இக்காலத்திலும் அவர்களின் சந்ததியார்கள் அப்பட்டங்களைத் தங்கள் பெயர்களாகக் கொண்டுள்ளார்கள். பௌத்த பிக்குகள் தங்கள் பாடசாலைகளில் தமிழைக் கற்றனர். சில சிங்கள அரசர்களும் தமிழை விரும்பிக் கற்றனர். சோழர் ஆட்சிக்குப் பின்வந்த சில சிங்கள மன்னர்கள் தங்கள் சாசனங்களைத் தமிழிலேயே பொறித்திருக்கின்றனர். கண்டிக்கு அருகிலுள்ள கடல்தெனியா, இலங்காதிலகா என்ற இடங்களில் அமைக்கப்பட்ட பௌத்த ஆலயங்களின் முன் கற்பாறையில் சாசனங்கள் அரசாணையின்படி தமிழிலும் சிங்களத்திலும் பொறிக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம். 6-ஆம் பராக்கிரமபாகு ஆட்சிபுரிந்த 15-ஆம் நூற்றாண்டில் அவன் அரசவையில் தமிழ் மொழியின் ஆதிக்கம் மிகுந்திருந்ததாகத் தெரிகிறது. அவனுடைய மகளின் பெயர் உலகுடைய தேவி என்று சொல்லப்படுகிறது. 17-ஆம் நூற்றாண்டில் கண்டியில் மதுரை நாயக்க வமிசத்தினர் ஆளத் தொடங்கிய பிறகு தமிழ் அரசாங்க மொழியாயிற்று. கடைசியில் ஆண்ட கண்டி மன்னனிடமிருந்து இலங்கையை ஆங்கிலேயர் கைப்பற்றிய காலத்தில், சிங்களத் தலைவர்கள் ஆங்கிலேயருடன் செய்து கொண்ட உடன்படிக்கையில் அவர்களில் சிலர் தமிழிலேயே கைச்சாத்திட்டனர். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தமிழும் சிங்களமும் சமமாகக் கருதப்பட்டன. ஆங்கிலேயர் ஆளுகையின்று இலங்கை சுவாதீனம் பெற்றபின் 1956-ஆம் ஆண்டு வரையில் சிங்களத்துடன் தமிழும் அரசாங்க மொழியாக ஏற்றுக் கொள்ளப் பட்டிருந்தது. சிங்களத்துடன் தமிழுக்கிருந்த சம உரிமை இப்பொழுது பறிக்கப்பட் டிருப்பினும், இலங்கையில் தமிழ்மொழி சென்ற காலத்திற் பெற்றிருந்த 'பழநிலைச் சிறப்பை' மீண்டும் எய்தும் என்று எதிர்பார்க்கிறோம்.

# ஆடைப் பொருளில் விஞ்ஞானம்



ஸர் சி. வி. ராமன்

பௌதிக விஞ்ஞானத்தில் "தெர்மோஸ்டாட்" என்று ஒரு கருவி உண்டு. உஷ்ணத்தைக் குறிப்பிட்ட ஒரு நிலையில் மாறுபடாது வைத்துக் கொள்ள இச் சாதனம் பயன்படுகிறது. நமது மானிட சரீரத்தைப் பௌதிக விஞ்ஞான பரிபாஷையில் விளக்க வேண்டுமானால், இதை ஒரு 'தெர்மோஸ்டாட்' என்று கூறுவது பொருந்தும். குறிப்பிட்ட நிலையில் உஷ்ணத்தை நிரந்தரமாக வைத்துக் கொள்ளும் ஓர் அமைப்புத்தான் நமது சரீரம். வெப்பம் அதிகமானாலோ அல்லது சூடு குறைந்தாலோ அதைத் தடுத்துச் சம நிலையில் வைத்துக் கொள்ளப் போதிய சாதனங்கள் உடலிலேயே அமைந்துள்ளன. எனினும், மனிதனுடைய வாழ்க்கையில் உடல் உஷ்ணத்தைக் காட்டிலும் மிக அதிக வெப்பமுள்ள சூழ்நிலைகளிலும், அதே போல மிகக் குறைவாகவுள்ள குளிர் நிலைகளிலும் வசிக்க நேரிடுகிறது. அம்மாதிரி சூழ்நிலையில் உடல் உஷ்ணத்தைச் சம நிலையில் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக ஏதாவது ஒரு [illegible] நிலைக்கும் நடுவில் பாதுகாப்பாக உபயோகிப்பது மனிதனுக்கு இன்றியமையாததாகஆகிவிட்டது. பனி உறைந்து உடல் விறைத்துப் போகும் ஆர்க்டிக் பிரதேசங்களில் வாழும் எஸ்கிமோ இம் மாதிரி ஒரு தடுப்புப் பொருளை (போர்வையை) உபயோகித்து அந்தச் சீத மண்டலத்திலும் வாழ்க்கை நடத்துகிறான். அதே போலவே தலை வெடிக்கும் வெய்யில் காயும் பிரதேசங்களிலும் தக்க பாதுகாப்புகளுடன் உடல் உஷ்ணத்தை அதிகரிக்கவிடாமல் வாழவும் மனிதன் தெரிந்து கொண்டிருக்கிறான்.

இதிலிருந்து உடல் உஷ்ணத்தைப் பாதுகாப்பதன் அவசியம்தான் மனிதன் உடை அணிவதற்குக் காரணம் என்பது விளங்கும். ஆனால் உடை அணிவதற்கு இந்த அவசியம் ஒன்றுதான் காரணம் என்று எண்ணிவிடக் கூடாது. இது ஒரு முக்கிய காரணம். உபயோகமுள்ள பொருள் என்றாலும் அது அழகாகவும் இருக்க வேண்டுமென்று விரும்புவது மனித இயல்பு. இந்த இயல்பின் காரணமாகத்தான் உடையின் நேர்த்தி வளரத் தொடங்கியது. ஆதி மனிதன் மிருகங்களின் தோலையும், மரங்களின் பட்டைகளையும் அணிந்து திருப்தியுடன் காலம் கழித்தாலும், இவற்றைக் காட்டிலும் நேர்த்தியான வேறு ஏதாவது ஒரு பொருளைக் கண்டுபிடித்து உபயோகிக்கவே அவன் நாட்டம் கொண்டான். மானிட நாகரிகத்தின் வளர்ச்சியே ஆடை விஷயத்தில் புராதன மனிதனிலிருந்து இன்றைய வரையில் மனிதன் காட்டிய ஆர்வத்தின் வளர்ச்சிதான் என்று கூறலாம். உபயோகத்துக்கு வசதியுள்ளதாயும் பார்வைக்கு நேர்த்தியாகவும் உள்ள ஆடைகள்தான் நாகரிகத்தின் சின்னம் என்றுசொல்வதில் தவறில்லை.

மனிதனுக்கு உகந்த ஆடைப் பொருள் எதுவானாலும் அவற்றுக்கு இரண்டு லட்சணங்கள் இருக்கவேண்டும். ஒன்று நெளியுந்தன்மை; மற்றொன்று உறுதி. உறுதியான ஒரு கனப் பொருளைத் தகடுகள் போன்று எவ்வளவு சன்னமாக அடித்து நீட்டினாலும் இவ்விரண்டு லட்சணங்களும் உள்ளதாக ஆகாது.

நெசவுப் பொருள் இரு திசைகளில் உறுதியும் நெகிழ்ச்சியும் உள்ளதாகவும், மூன்றாவதில் மிருதுவாகவும் தளர்ந்ததாகவும் இருக்க வேண்டும். இதைச் செயற்கை முறையில் சுலபமாகவே சாதித்து விடலாம். நூல்களைக் குறுக்காகவும் நெடுக்காகவும் மாற்றி மாற்றிச் சேர்த்து இணைத்து விடுவதால், அவை நெய்யப்பட்டு அகல நீளம் உள்ள துணியாக மாறி விடுகின்றன. இதிலிருந்து நார்களும், நார்ப் பொருள்களும் மனித வாழ்க்கையிலும் அவனுடைய நடவடிக்கைகளிலும் எவ்வாறு முக்கியத்துவம்

பெற்றுள்ளன என்பது தெளிவாகும். இது வரையில் சொன்னதெல்லாம் நார்களைப் பற்றிய முகவுரையே ஆகும். இனி நார்களைப் பற்றி விரிவாகக் கவனிக்கலாம்.

நார் என்பது செங்குத்தான இரு திசைகளைவிட மூன்றாவது திசையில் மட்டுமே அதிகம் நீட்டக்கூடிய திடப் பொருள் என்று கூறலாம். நார் உபயோகமுள்ளதாக ஆக வேண்டுமானால் அதன் நீளம் முழுவதிலும் நெகிழும் தன்மையும் உறுதியும் இருக்க வேண்டும். இந்த லட்சணங்களுள்ள நார் எது என்று தேர்ந்தெடுப்பதில் சரித்திர காலத்திலிருந்து மனிதன் பிரயாசைப்பட்டிருக்கிறான். இப்படி அவன் தேர்ந்தெடுத்த நார் வகைகள் எல்லாம் பிராணி வகைகளிடத்திலிருந்தோ, தாவர வகைகளிடமிருந்தோதான் கிடைத்துக் கொண்டிருந்தன. அதாவது ரோமங்களாலான கம்பளங்களும் பருத்தி நூலினாலான ஆடைகளும்தான். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இவ்விரண்டு இனங்களையேதான் தனது ஆடைகளுக்கு உகந்த பொருளாக உபயோகித்து வந்தான். சமீப காலத்தில் விஞ்ஞான அறிவின் வளர்ச்சியினாலும் தொழில் நுட்பத் திறமையாலும் செயற்கை நார்கள் ஏராளமாகவும் பலவிதங்களிலும் உபயோகத்தில் புகுந்து விட்டன. இயற்கை நார்கள் ஏகபோக உரிமை வகித்து வந்த இடத்தில் செயற்கை நார்கள் புகுந்து உரிமை கொண்டாடத் தலைப்பட்டு விட்டன.

செயற்கை நார்களின் உற்பத்தியில் ''கார்பன்'' என்று கூறும் கரிப் பொருள் பிரதானமாக விளங்குகிறது. இது ரசாயன முறையில் முக்கியமான பொருள். இதர பொருள்களுடன் சுலபமாகவும் விரைவாகவும் ஒன்றிக் கலக்கக் கூடிய தன்மையுடையது. இவ்வாறு இணைவதன் மூலம் பல புதிய பொருள்களைத் தோற்றுவிக்கக் கூடிய சக்தியடைந்தது. ஒவ்வொரு புதிய பொருளும் தனித் தனிச் செயல்களும் தன்மைகளும் உள்ளது. இது ரசாயன விஞ்ஞானத்தில் நிகழும் பல அற்புதங்களில் ஒன்று. பிராணிகளின் ஜீவியத்தில் இந்தக் கரிப் பொருள் ஒரு முக்கிய ஸ்தானம் வகிப்பது இம்மாதிரி மற்ற வஸ்துக்களுடன் இணைவதால்தான். எனவே, பிராணி வகைகளிடமிருந்து கிடைக்கும் நார் இழைகளிலும், அவற்றின் கலப்புக்களிலும் ''கரிப்பொருள்'' முக்கிய இடம் பெற்றிருக்க வேண்டுமென்று விளங்கும். உண்மையில் அப்படித்தான் உள்ளது. இதில் விசேஷம் என்னவென்றால் விஞ்ஞான ஆராய்ச்சியின் விளைவாக உண்டாக்கப்பட்டவையும், பல விதங்களில் உபயோகத்துக்குக் கொண்டு வரப்பட்டவையுமான நார் வகைகளில் கரிப்பொருளின் சம்பந்தம் மிகுதியாக இருப்பதுதான். ரசாயன முறையில் கரிப் பொருள் எவ்வாறெல்லாம் மாறுகிறது என்பதே செயற்கை நார் வகைகளின் உற்பத்திக்கும் அபிவிருத்திக்கும் சாதகமான அம்சமாக அமைந்துள்ளது.

மனித வர்க்கத்துக்குப் பண்டைக் காலத்திலிருந்து தெரிந்த மிருக தாவர வகை நார்கள் தனித்தனி இரண்டு வகையாக உள்ளன. முதல் வகை நார் எடுப்பதற்கு ஏற்ற செடிகள் மூலம் கிடைத்தவை. இவ்வகையைச் சேர்ந்தவை பருத்தி, சணல், சணல் நார், மற்றும் இவ்வினத்தைச் சேர்ந்த செடிகள். இரண்டாவது வகை பிராணிகளிலிருந்து கிடைக்கும் ரோமங்களும், பட்டு நூல்களும். முதல் வகையில் சொன்ன தாவர இழைகள் நார்களுக்கு எல்லாம் மூலப் பொருளாக அமைந்துள்ளது 'செல்லுலோஸ்' (Cellulose) என்னும் வஸ்து. இதையொத்த இதர பொருள்கள் அதிகமாகக் காணப்பட்டாலும் 'செல்லுலோஸ்தான்' ஆதாரமானது. பிராணி வகைகளிலிருந்து கிடைக்கும் கம்பளம், பட்டு முதலிய பொருள்களில் இம்மாதிரி ஆதாரமாக அமைந்துள்ள வஸ்துவுக்கு 'நார்ப் புரதம்' (Fibrillar proteins) என்று பெயர். எனினும் ரோமங்களுக்கு ஆதாரமாக உள்ள ''நார்ப் புரதத்துக்கும்'' பட்டு நூலுக்கு ஆதாரமாக உள்ள ''நார்ப் புரதத்துக்கும்'' வித்தியாசங்கள் உண்டு. பட்டிலுள்ள புரதத்திற்கு ஃபிப்ரோயின் (Fibroin) என்றும் ரோமங்களிலுள்ள நார்ப் புரதத்திற்கு கேராடின் (Keratin) என்றும் பெயர்கள். இவ்விரண்டும் மாறுபட்ட தனித்தனி அம்சங்கள் உள்ளவை. அதே போல மனித அறிவினால், விஞ்ஞான உதவியைக் கொண்டு, உண்டாக்கப்படும் செயற்கை நார்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதலாவது மறு உற்பத்தி செய்த செல்லுலோஸ் அல்லது செல்லுலோஸ் இனம். இரண்டாவது செயற்கைப் பொருள்களால் ஆன கலப்புகள். இவ்விரண்டு வகைகளிலும், ஆதாரப் பொருள்கள் செல்லுலோஸும் இயற்கையாகக் கிடைக்கும் பால், சோளம், நிலக்கடலை இவற்றில் உள்ள புரதமும் தான். மூன்றாவது வகை நார் இழைகள் உண்மையிலேயே எல்லா விதத்திலும் செயற்கை முறையினாலேயே ஆனவை.

நார்களைப் பற்றிய நமது அறிவு பல கோணங்களிலிருந்து ஆராய்ச்சிகள் நடத்தி அவற்றின் விளைவாக ஏற்பட்டது. முக்கியமாக, நார்களின் பௌதிக அமைப்பு, ரசாயனக் கலப்பு, ஜீவதத்துவம் — இப்படிப் பல விதங்களில் நார்கள் பரிசோதனைக்குள்ளாகின்றன. இவற்றுள் மிக முக்கியமானது எக்ஸ்ரே மூலம் நார்களைப் பரிசோதிப்பது. பரிசோதிக்கப்பட வேண்டிய பட்டு, கம்பளம் போன்ற பொருள்களின் ஒரு நார் அதன் நீளத்துக்குச் செங்குத்தாக வரும் எக்ஸ்ரே ஒளிக் கற்றையின் பாதையில் வைக்கப்படுகிறது. இதனால் சிதறும் கதிர்களை போட்டோக்களில் படம் பிடித்து ஆராயப் படுகிறது. இவ்வாறு புள்ளிகள், கோடுகள், வளையங்கள் ஆகியவை அடங்கியதாகக் கிடைக்கும் நாரின் படம் என்பது பொருளுக்குத் தக்கவாறு உள்ளதாகும். இவற்றிலிருந்து நாரின் உள்ளமைப்பு தெரிய வருகிறது. இப்படங்களால் நாருக்கு ஆதாரமான பொருள் பெரும்பாலும் படிக உருவமாக உள்ளது எனத் தெரிகிறது. அதாவது நாரின் நீளம் முழுவதும் சங்கிலி போல் ஒரே விதமான அணுக்கட்டங்கள் தொடர்ச்சியாக மாறி மாறி வருகின்றன. நார் அமைப்பிலுள்ள ரசாயன தத்துவம் இதுதான். இப்பிரிவு இக்காலத்தில் மிகவும் விரிவடைந்து விட்டது. ஆகவே நார் அமைப்புப் பற்றிய ரசாயனம், செயற்கை ரப்பர் பிளாஸ்டிக் ஆகியவற்றின் தயாரிப்பு அமைப்பு இவற்றைப் பற்றிக் கூறும் ''பெரும் மூலக்கூறு'' (Macromolecular) அல்லது 'பாலிமர்' (Polymer) ரசாயனத்தின் ஒரு பகுதியே ஆகும். இந்த நோக்கிலிருந்து நார் என்பது வரிசையான பெரிய மூலக்கூறுகளாலான பொருள் என்று சொல்லலாம். நார்கள் மூலக்கூறுகளுக்கும் மேற்பட்ட அமைப்பும் காண்பிக்கக் கூடும். இது நாரின் பௌதிக ரசாயன குணங்களை நிர்ணயிப்பதற்கு உதவுகின்றது. சில இடங்களில் பெரும் மூலக்கூறுகள் மிகவும் ஒழுங்காக அமைந்துள்ளன. ஆகவே படிக குணங்களைக் காண்பிக்கின்றன. வேறு இடங்களில் அமைப்பு இவ்வளவு ஒழுங்காக இருப்பதில்லை. இவ்விடங்களில் பொருள் பெரிதும் ''உருவற்ற'' (Anorphous) அல்லது கண்ணாடி போன்ற நிலையில் உள்ளது.

நார்களின் தன்மைகளைப் பற்றி எக்ஸ்ரே கதிர்கள் மூலம் ஆராய்வது போல, சக்திவாய்ந்த மைக்ராஸ்கோப் போன்ற சாதனங்கள் மூலமும் பரிசோதனை செய்யலாம். இவ்விதப் பரிசோதனைகள் 'போலரைஸ்ட்' (Polarized) வெளிச்சத்தில் மேலும் உபயோகமுள்ளதாக ஆகின்றன. அப்பொழுது பெரிய மூலக்கூறுகளின் ஒழுங்கு முறை, இரட்டை ஒளிவிலகல் (Birefringence or optical anisobropy) மூலம் காணக் கூடியதாக ஆகின்றது. இது நார்ப் பொருள்களின் தனித்தனி விசேஷமான குணமாகும். இதனால் நார்ப் பொருள்களின் அமைப்பும் தன்மையும் அறியலாகும்.

# அரசியல் அகராதி


பனிப்போர்
பரஸ்பர அவ
நம்பிக்கை
யுத்தம்


ஆதிக்க வெறி
இதற்கு சீன கம்யூனி
-ஸம் என்ற பெயரும் உண்டு.
இந்தியாவின் வட எல்லை.


ராணுவ ஒப்பந்தம்
தலையை விடுவது எளிது;
வெளியில் எடுப்பது கடினம்.


காங்கோ
வெடிக்கத் தயாராக
இருக்கும் பட்டாசு.


பணவீக்கம்
சர்க்காரையே
காற்றிலே வாரி விடும்
ஒரு சர்க்கார்
திட்டம்.


சர்க்கார்
துறை
பொதுப் பணத்தை
வீணடிக்கும்
துறை.




அணுகுண்டு பலம்
இதைக் கண்டு
பயப்படாத நாடே
கிடையாது.

# இந்தியக் காட்சிகள்
















# சுதந்திரக் கட்சி பதவிக்கு வந்தால்..






# ஜனநாயகத்தின் பொருள்

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் நாம் அரசியல் சுதந்திரம் பெற்றோம். மிகவும் சுலபமாகவே அதை நாம் அடைந்து விட்டோம். ஆனால் சுதந்திரத்துக்குப் பின் நாட்டு நிர்வாகத்தை நேர்மையுடனும், கண்ணியத்துடனும் நடத்துவது அவ்வளவு எளிதான காரியமல்ல. இது மிகவும் கஷ்டமான காரியம். சுதந்திரம் பெறுவதைக் காட்டிலும் மிக மிக கஷ்டமானது என்பதை இப்போது உணர முடிகிறது. ஏனெனில் நிர்வாகம் நன்றாக நடப்பதற்குத் தன்னலமற்ற தன்மையும் நேர்மையும் திறமையுமுள்ள உத்தியோகஸ்தர்களும் வேண்டும். கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்ளும் ராணுவப்படையும் போலீஸ் படையும் வேண்டும். சாமர்த்தியமுள்ள தொழிலதிபர்கள் வேண்டும். திறமையுள்ள தொழிலாளர்கள் வேண்டும். உழைக்கும் விவசாயிகள் வேண்டும். சாதாரணப் பிரஜைகளுக்கு அரசியல் அறிவும் தேசிய உணர்ச்சியும் இருக்க வேண்டும். இவை அனைத்தையும் ஒரே நாளில் அடைந்துவிட முடியாது. நாம் இப்போது செய்து கொண்டிருப்பதெல்லாம் இந்த லட்சியத்தை நோக்கி நம்முடைய சாமர்த்தியத்துக்குட்பட்டுச் சில அடிகள் முன்னேறியிருக்கிறோம். நிர்வாகத்தை நேர்மையுள்ளதாக ஆக்கவும் அரசாங்கத்தை நிலையுள்ளதாகச் செய்யவும் நாட்டை வளமுள்ளதாக மாற்றவும் முயன்று கொண்டிருக்கிறோம். இதுவரையில் செய்துள்ள முயற்சிகளைக் கண்டு நாம் திருப்தி கொள்ள முடியாது. நமக்குக் கவலையளிக்கும் விஷயங்கள், நாம் அவமானப்பட வேண்டிய விஷயங்கள் நாம் துக்கப்படவேண்டிய பல விஷயங்கள் நாட்டில் பலப்பல பாகங்களில் நடந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் நம்மெல்லோருக்கும் அவசியமாகத் தேவைப்படுவது மிகவும் உறுதியான வலிமையான தேசிய உணர்ச்சி. அந்நியஆட்சியை ஒழித்துக் கட்டுவதற்குப் போராடிய காலத்தில் நாம் வலிமையான தேசிய உணர்ச்சியை வளர்த்திருந்தோம். ஆனால் அப்போது வளர்ந்த தேசாபிமானம் அழிக்கும் நோக்கத்துடன் உருவாக்கப்பட்டது. எதையும் மறுப்பதிலேயே நாட்டம் கொண்டிருந்தது. ஆனால் ஆக்க வேலைக்குப் பயன்படக்கூடிய தேசிய உணர்ச்சி சமூகத்தினரிடம் ஆழ்ந்த அனுதாபம் கொண்டு பல துறைகளிலும் சமூக முன்னேற்றத்துக்கு உதவக் கூடிய தேசிய உணர்ச்சி, நாம் உண்மையிலேயே இந்த நாட்டினராக இருப்பதில் பெருமை கொள்ளும் தேசிய உணர்ச்சி இன்னமும் பூரணமாக நம்மிடம் வளரவில்லை. இனிமேல்தான் வளர வேண்டும். மக்கள் சிந்தனையிலும் உள்ளத்திலும் இவ்வுணர்ச்சியை வளர்க்க வேண்டும். நாற்பது ஐம்பது நூற்றாண்டுகளாக எத்தனையோ எதிர்ப்புகளை யெல்லாம் சமாளித்து இன்றும் அழியாமல் நிலைத்துள்ள பாரதப் பண்பாட்டையும் சம்பிரதாயங்களையும் மேன்மேலும் வளர்க்க வேண்டும்.

நமது பாரத சமூகத்தில் ஜனநாயக அமைப்பைத்தான் நாம் வளர்க்க ஆசைப்படுகிறோம். ஆனால் ஜனநாயகம் என்பதன் பொருள் என்ன? ஜனநாயகத்துக்குப் பல முகங்கள் உண்டு; வெவ்வேறு கோணங்கள் உண்டு. அது அரசியல் ஏற்பாடு; அது ஒரு பொருளாதார முறையும்கூட; அத்துடன் அது ஒரு வாழ்க்கை முறையும்கூட.

அரசியல் ஏற்பாட்டில் வயது வந்தவர்கள் எல்லோருக்கும் வோட்டுரிமை அளிப்பது என்று நாம் செய்முறை வகுத்துக் கொண்டிருக்கிறோம். குறிப்பிட்ட ஒரு வயது அடைந்து விட்ட யாவருக்கும், அவர்களுடைய கல்வி அறிவு எப்படியிருந்தாலும் சொத்து எப்படியிருந்தாலும் வேறு உரிமைகள் எப்படியிருந்தாலும் வோட்டுரிமை அளிக்கப்பட்டுள்ளது. ஒரு பிரஜை, ஒரு வோட்டு இதன்மூலம் மானிடர்கள் எல்லாம் சமம் என்ற கொள்கையை வலியுறுத்தியிருக்கிறோம். இந்தத் தத்துவம் நமது பண்பாட்டிலிருந்து வந்துள்ளது. ஒவ்வொருவனும் கடவுளின் அம்சமாக, தெய்வ ஜோதியின் ஒரு பொறியாகப் பிரகாசிக்கிறான் என்பது நமது கொள்கை. "தேஹோ தேவாலயோ நாம" (தேகம் கடவுளின் கோயில்) என்பது நமது சித்தாந்தம். ஆனால் இதைத் தத்துவ ரீதியில் சொல்லிவிட்டோமே தவிர நடைமுறையில் தொடர்ந்து கடைப்பிடிக்கவில்லை. நமது நாடு அந்நியர் படையெடுப்புக்களுக்கும் பலவித இன்னல்களுக்கும் உட்பட்டிருந்த தென்றால் அதற்குக் காரணம் நாம் சமய அடிப்படையில் ஒப்புக் கொண்ட சமத்துவம் நமது உள்ளங்களில் ஊடுருவிச் செல்லாததே. இன்று அரசியல் ஜனநாயகம் ஜாதி, மதம், இனம் என்ற வேறுபாடுகளை யெல்லாம் துளைத்துக் கொண்டு செயல்புரிகிறது. வேறுபாடுகள் எத்தகையதாக இருப்பினும் மனிதனுடைய புனிதத் தன்மை மனிதனுக்கு மனிதன் சமம் என்ற உணர்ச்



உபஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்



சிக்கு எதிரில் அவை வலிமை குன்றிப் போகின்றன. ஒவ்வொருவனையும் அவனும் ஒரு மனிதன், அவனுக்கு மனித இயல்புகள் உண்டு, அவனுக்கும் சமூகத்தில்இடம் உண்டு என்பதற்காகவே மதித்து நடத்தவேண்டும். வாழ்க்கையில் உயர்ந்த நிலையை அடைவதற்கு ஒவ்வொருவனும் தகுதியுள்ளவன் என்ற நினைப்பு இருக்க வேண்டும்.

மேலேசொல்லியவற்றிலிருந்து நாட்டிலுள்ள ஒவ்வொருவரையும் வளமுள்ள, நிறைவு பெற்ற சுதந்திர வாழ்க்கை வாழும்படி செய்ய வேண்டும். ஒவ்வொருவனுடைய உள்ளத்தில் ஆழப் பதிந்து கிடக்கும் ஆர்வங்கள், அபிலாஷைகள் அனைத்தையும் சிதறவிடாது நிறைவேற்றிக்கொள்ள வெளியேகொணர உதவவேண்டும். இவ்வாறு செய்வதற்குப் பொருளாதாரம், பண்பாடு இவ்விரண்டு துறைகளிலும் தகுதியான சூழ்நிலைகளை ஓரளவுக்கு உண்டாக்கித் தர வேண்டும். இதனால்தான் நமது அரசியல் அமைப்பில் "எல்லாருக்கும் கல்வி அளிக்கப்பட வேண்டும்" என்ற குறிக்கோள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. "சோஷலிஸப் பாணி சமுதாயம்" என்று அடிக்கடி கேள்விப்படுகிறோம் அல்லவா? இதற்குப் பொருள் எல்லா மனிதர்களையும் ஒரே மட்டமாகச் சமன்படுத்துவது அல்ல. மனித சமுதாய வளர்ச்சி என்னும் நீண்ட நாடகத்தில், முக்கிய பாத்திரங்களாக இருப்பவர்கள் மானிடர்களே. அதிலும் மகா மேதைகளென மதிக்கப்பட்ட மானிடர்கள் அத்தகைய தனித் தன்மை வாய்ந்த மேதாவிகளே, விஞ்ஞான முன்னேற்றம் காரணமாகவோ, வாழ்க்கையை யந்திரசாலையாக மாற்றிவிடுவதினுலோ, அமிழச் செய்வது அல்லது குறைப்பது விரும்பத் தக்கதல்ல. அவ்வாறு நிகழும்படி விடக்கூடாது.

தனிப்பட்டவர்களுடைய திறமைகளை யெல்லாம் சரிசமானமாகச் செய்வது சோஷலிஸத்தின் பொருள் அல்ல. அவ்வாறு செய்ய முயன்றாலும் முடியாது. ஏனெனில் மனிதர்களெல்லாம் ஒரே சமம் அல்ல. சோஷலிஸம் எல்லோருக்கும் சமானமாக வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும் என்றுதான் கூறுகிறது. எல்லா மனிதர்களும் சமம் என்று நாங்கள் சொல்லவில்லை; ஆனால் அவரவர்களுடைய திறமைக்கும் ஆர்வத்துக்கும் ஏற்றபடி அவரவர்கள் செயல் புரியப் பூரண சமான வாய்ப்பு ஒவ்வொருவனுக்கும் அளிக்கப்பட வேண்டும் என்றுதான் நாங்கள் வலியுறுத்துகிறோம். 'ஒவ்வொருவருக்கும் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க நிழலும் கொடுக்க வேண்டும்' என்று நாங்கள் சொல்லும்போது ஜனநாயகத்தின் பொருளாதார முறையைத்தான் வலியுறுத்துகிறோம். ஒரு தனிகனுக்கும், தரித்திரனுக்கும் உள்ள பொருளாதார இடைவெளியைக் குறைத்துப் பொதுமக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவே விரும்புகிறோம். நமது நாட்டில் ஒருவேளை உணவுகூடக் கிடைக்காமலும், குந்தக் குடிசையில்லாமலும் நடைபாதைகளிலேயே படுத்து உறங்கும் மக்கள் உள்ளளவும், இதை ஒரு சவாலாகவே நாம் ஏற்க வேண்டும். இப்படிப்பட்ட பரிதாபகரமான வறுமையையும் துன்பத்தையும் கண்ணெதிரே காணும்போது, நாட்டின் நலத்தில் கருத்து கொண்ட எவருக்கும் சும்மா இருக்கத் தோன்றாது. அவ்வாறு நிலைமையுள்ளபோது சந்தோஷத்தைப் பற்றிக் கேட்க வேண்டுமா? இந்த நிலைமை நம்மெல்லோருக்கும் சவால் விடுவது போலவே, நமது நாடு ஜனநாயகநாடு என்பது உண்மையானால் இந்த நிலைமையைப் போக்க வேண்டும். ஜனநாயகம் என்பது இன்னும் நமக்கு லட்சியமாகவேதான் இருக்கிறது. அதில் [illegible] பொருளாதாரக் கருத்தையும் சமூக நலம் என்னும் கருத்தையும் இணைத்திருக்கிறோம். அதைத்தான் சோஷலிஸ பாணி சமுதாயம் என்கிறோம். நமது மக்கள் எல்லோருக்கும் உடலையும் உயிரையும் ஒன்றுக வைத்திருப்பதற்கு வகை செய்ய இடைவிடாது முயன்றுகொண்டிருக்கிறோமே, அதைத்தான் சோஷலிச பாணி சமுதாயம் என்கிறோம். ஜனநாயகத்தின் பொருளாதார அம்சம் என்பதும் இதுதான்.

ஜனநாயகப் பொருளாதாரம் கைகூட வேண்டுமானால் நமது தேசியச் செல்வம் பெருகவேண்டும். விவசாய உற்பத்தியும் அதிகரிக்க வேண்டும். நமது ஐந்தாண்டு திட்டங்கள் இந்த லட்சியங்களைப் பெறுவதற்காக வகுக்கப்பட்டுள்ளன. நம்முடைய கிராமப் புறங்கள் வெகுவாகப் புறக்கணிக்கப்பட்டுள்ளன. அவைகளுக்கு அபிவிருத்தி அளிக்க வேண்டும். துரதிருஷ்டவசமாக, சாதாரண மக்களுடைய உற்சாகத்தை இன்னமும் தூண்டிவிட முடியவில்லை. நாட்டின் நிர்வாக யந்திரம் அளவுக்கு அதிகமாகப் பெருகிவிட்டது. முன்னேற்றத் திட்ட இனங்களில் மக்களின் ஒத்துழைப்பைத் தட்டி எழுப்ப வேண்டியிருக்கிறது. உற்பத்திச் செல்வத்தை விநியோகிக்கும் விதமும் மாறுதல் அடைய வேண்டும்.

மேலே விவரித்த இரண்டு அம்சங்களைக் காட்டிலும் முக்கியமானதும், அடிப்படையானதும் ஜனநாயகத்தின் மூன்றாவது அம்சமுமானது வாழ்க்கை முறை. ஜனநாயகம் என்பது நீதியுணர்ச்சியுள்ள ஒரு கோட்பாடு, செயல்முறை. நம்முடைய பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்வதில் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி, ஆத்திரமடையாமல், பேச்சுவார்த்தைகள் மூலமே நடவடிக்கைகள் இருக்க வேண்டுமென்பது ஜனநாயக முறை. கட்டுப்பாடுகள் மிகவும் அவசியம். சுதந்திரத்தைப் பூரணமாக அனுபவிப்பதற்குக் கட்டுப்பாடுகள் இன்றியமையாதவை என்ற உண்மையை நாம் நன்கு புரிந்துகொண்டிருக்கிறோமா என்பதை நினைத்துப் பாருங்கள். ஒரு சச்சரவு ஏற்பட்டால் நாம் நேரடியாக நடவடிக்கை மேற்கொள்ளவே விரைகிறோம். கோபம் மேலிடுகிறது. பலாத்காரத்தில் பிரவேசிக்கிறோம். உணர்ச்சி வசப்பட்டு மிருகங்கள் போல் நடந்து கொள்கிறோம். ஜனநாயகத்தில் நீதி உணர்ச்சி மேலோங்கி இருக்கும் என்று சொல்லும்போது மனிதர்களெல்லாம் அறிவுள்ள பிராணிகள் என்பதை அங்கீகரிப்பதுடன் எந்தப் பிரச்னையையும் அறிவைக் கொண்டே தீர்த்துக் கொள்ளலாம் என்பதை ஒப்புக் கொள்ளுகிறோம். நாம் சொல்வது மட்டும் எப்போதும் நியாயமாகவே இருக்கும் என்று நினைப்பது கூடாது; நமது எதிரியும் சில சமயங்களில் நியாயமாகவே இருக்கலாம் என்பதை அங்கீகரிக்க வேண்டும். விரோதியிடத்திலும் விவேகம் இருக்கலாம் என்று நினைக்கும் அளவுக்கு நம்மிடம் பணிவு வேண்டும். இந்த மாதிரியான பணிவை, கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நடக்கும் முறையை ஜனநாயகம் நம்மீது சுமத்துகிறது. இதை உணர்ந்து கொள்ள வேண்டியது நமது கடமை. நமது விரோதிகளிடத்திலும் நேச பாவத்துடன் நடந்து



கொள்ளப் பழகிக்கொள்ள வேண்டும். ஆட்சேபணை எல்லாம் துரோகம் அல்ல. எதிர்ப்புகள் எல்லாம் கலகமும் அல்ல. அறிவைக் கொண்டு, மனக்கசப்பின்றிப் பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். பலாத்கார நடவடிக்கைகளும் ஜனநாயக முறைகளும் ஒன்றுக்கொன்று முரணானவை. சண்டை அல்லது சச்சரவு நேரும்போதெல்லாம் நமது எதிரிகளும் நம்மைப் போலவே உணர்ச்சியுள்ளவர்கள், அறிவுள்ளவர்கள், நமக்குள்ளதுபோலவே அவர்களுக்கும் அபிலாஷைகள் உண்டு என்பதைச் சாதாரணமாக மறந்துவிடுகிறோம். அவர்கள் நம்மைக் காட்டிலும் வேறான மானிட வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல; அவர்களும் நம்மவர்களே.

நாகரிகப் பண்புகள் சிதறி நசித்துப் போனாலும் போகட்டும். சொந்தக் கௌரவம் குறையக் கூடாது என்ற அசட்டுத்தனமான எண்ணம் நமது நாட்டில் மட்டும் அல்ல, இதர நாடுகளிலும் நிலவி வருகிறது. இது ஒரு பெரும் துரதிர்ஷ்டம். மனித இனத்தின் பிற்கால ஜீவியமே தத்தளித்துக் கொண்டிருக்கும்போது, தனது சுய கௌரவம், தனது புகழ், தனது மேன்மை ஆகியவற்றை உயர்வாக மதிக்கும் மக்கள் பலர் இருக்கிறார்கள். மனித இனத்தின் பிற்காலத்தைப் பாதிக்கக் கூடிய மகத்தான பிரச்னைகளை எதிர்நோக்கி நிற்கும்போது நாம் அவசியமாகச் செய்ய வேண்டியது காலத்துக்குள்ள தன்மை. காலம் ஒரு பிணி தீர்க்கும் மருந்து. மனிதத் தன்மை நெகிழ்ந்து கொடுக்கும் சக்தியை உடையது. சமூக ஸ்தாபனங்களும் அரசியல் ஸ்தாபனங்களும் கூட உலகத்தில் இதர விஷயங்களில் உள்ளதே போல ஒரே நியதிக்குட்பட்டு ஒரேமாதிரியாக மாறும் இயல்புள்ளவை. மனிதத் தன்மையின் நெகிழ்ச்சியிலும் காலத்தின் பிணி தீர்க்கும் தன்மையிலும் சமூக, அரசியல் ஸ்தாபனங்களின் மாறும் தன்மையிலும், எல்லாவற்றுக்கும் மேலாக மக்களின் நல்லெண்ணத்திலும் நமக்கு நம்பிக்கை இருக்குமேயானால் இன்று நம்மிடையே பிளவுகளை உண்டாக்கிச் சமாளிக்கக்கூடாத பயங்கரப் பிரச்னைகளாகத் தோன்றுவதெல்லாம் கொஞ்ச காலத்துக்குப் பின் மறைந்துபோகக்கூடும்.

உலக நாடுகளைப் பார்த்து, "நீங்கள் சமாதான சகவாழ்வு வாழ வேண்டும்" என்று சொல்லுமுன் நம் நாட்டுக்குள்ளேயே தோன்றியுள்ள பல்வேறு பிரச்னைகளை அதே மனப்பான்மையுடன் தீர்த்துக்கொள்ள வேண்டும். பேச்சை விடச் செயல் எப்போதும் மேல் அல்லவா! அதைத்தான் நாம் செய்ய முயல வேண்டும். நம்மை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகள் பலப்பல. மொழிச் சண்டைகள் ராஜ்யங்களில் பரஸ்பரப் பொறாமைகள்; சில்லறைப் பூசல்கள் இப்படிப் பல இருக்கின்றன. இம்மாதிரி பிளவுச் சக்திகள் நூற்றாண்டுகளாகவே நம்முடைய நாட்டை அலைக்கழித்திருக்கின்றன என்று நமது சரித்திர வரலாறு பறைசாற்றுகிறது. சரித்திரத்தினின்று நாம் தெரிந்துகொள்ள வேண்டிய உண்மைப் பாடம் உண்டென்றால், இதுதான். நம்முடைய சண்டைகளாலும், பொறாமைகளாலும், சச்சரவுகளாலும் நமது சுதந்திரத்தை அடிக்கடி இழந்திருக்கிறோம். இந்தப் பாடத்தைத்தான் நாம் இன்னமும் கற்கவில்லை. நாம் மறுபடியும் பிளவுபட்டுச் செல்லும் பாதையிலேயே செல்லுகிறோம்.

இப் பிளவுச் சக்திகளுக்கு நாம் மறு முறையும் உட்படவேண்டுமா? நம்முடைய பெரும் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளச் சுமுகமான வேறு வழிகளைக் கையாளக் கூடாதா? ஹிமாலய பர்வதத்துக்குத் தெற்கேயும் சமுத்திரங்களுக்கு வடக்கேயுமுள்ள பரந்த பூமிதான் இந்தியா. அதாவது பாரதம் என்று நாம் சொல்லிக் கொள்ளுகிறோம். 'தத்வர்ஷம் பாரதம் நாம, பாரதீ யத்ர ஸந்ததி:' இந்த எல்லைக்குள்ளடங்கிய பாரதம் என்ற நிலப் பரப்பில் வசிப்பவர்கள், ஜாதி, மதம், கொள்கை எதுவாக இருந்தாலும், அவர்கள் எல்லோரும் இந் நாட்டுப் பிரஜைகள். நமது தேசம் ஒன்று, நமது சமூகம் ஒன்று என்றுதான் நமக்குப் போதிக்கப்பட்டிருக்கிறது. இதனால்தான் பலசமயங்கள் நாட்டில் பிரசாரத்திலிருந்தபோதிலும், ஒன்றுக்கொன்று விரோத மனப்பான்மையின்றிச் செழிக்க நாம் பயில்கிறோம். இந்தப் பாடத்தை இன்று நாம் மறந்துவிட்டு, கட்சி விசுவாசத்தைப் பெரிதாக எண்ணினால், நமது எதிர்காலம் வெறிச்சென்றுதான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

ஜனநாயகம் என்பது ஓர் அரசியல் ஏற்பாடு. இதன்படி மக்கள் எல்லோரும் சமமாகவே கருதப்படுகிறார்கள். பொருளாதாரத் துறையில் மக்களின் வறுமை நிலையைப் போக்கி அவர்களின் வாழ்க்கையை உயர்த்திவிட ஜனநாயகம் முற்படுகிறது. நம் நாட்டில் மட்டுமல்ல, உலகமனைத்திலும் பண்பாட்டுத் துறையில் எல்லோரையும் நண்பர்களாகவே கருதவேண்டுமென்று வலியுறுத்துகிறது - தற்போது எதிரிகளாகத் தோன்றுபவர்கள்கூட நண்பர்களாக வேண்டியவர்களே. தோல்வியடைந்துவிட்ட ஒரு விரோதி என்றும் விரோதியாகவே இருப்பான். தனக்குச் சாதகமான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து வஞ்சம் தீர்த்துக் கொள்ளக் காத்திருப்பான். ஆனால் சமரசம் செய்துகொண்ட விரோதி நண்பனாக மாறி விடுகிறான். வன்மம் கொள்ளுவது அபாயகரமானது. அதுவே நம்முடைய பெரும் பகைவன். நம்முடைய மனப்பான்மை முழுதும் சமாதானம், சமரசம் என்ற நோக்கிலேயே செல்லவேண்டும். நம்முடைய நாட்டை உண்மை ஜனநாயக நாடாக மாற்றவேண்டுமானால் கடுமையான உழைப்பும், திறமையும், நிர்வாக உயர்வும் அவசியம். நன்றாக வளமுடன் பயிர் செய்யப்பட்ட ஒரு பண்ணையை அதன் சொந்தக்காரர் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்த ஓர் அமெரிக்க நண்பருக்குக் காண்பித்துக்கொண்டிருந்தார். அதைக் கண்டு திருப்தியடைந்த அமெரிக்க நண்பர், "என்ன வளமான பயிர்; ஆண்டவனும் மனிதனும் ஒத்துழைத்தால் என்ன அற்புதமான பலன் கிடைக்கிறது, பாருங்கள்" என்று வியந்து கூறினார். அதைக் கேட்ட சொந்தக்காரர், "கடவுள் மட்டும் தனியாக இந்தப் பண்ணையை நடத்தி வந்தபோது இதை நீங்கள் பார்த்திருந்தால் என்ன சொல்வீர்களோ?" என்று பதிலளித்தாராம். நாம் கடும் உழைப்பு, உண்மையான உழைப்பு உழைக்க வேண்டும் என்றுதான் ஆண்டவன் எதிர்பார்க்கிறார். தன் கையே தனக்குதவி என்று வாழ்பவர்களுக்குத்தான் ஆண்டவன் உதவி செய்கிறார்.



# சித்திரத் தாமரை



பேராசிரியர் ஜி.சுப்பிரமணியம் எம்.ஏ.பி.எல்

மனத்தை உருக்கும் நிகழ்ச்சிகள் நிறைந்த இராமாயணக் காவியத்தில், இராமன் முடி துறந்து காடு நோக்கிப் புறப்படும் இடம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உச்சநிலைக் கட்டமாகும். அதற்குக் காரணமாய் இருந்தவள் கைகேயி. இராமன் அவளிடம் பெற்ற தாயினும் பேரன்பு கொண்டிருந்தான். தான் வளர்த்த கிளிக்கு யார் பெயர் இடுவது என்று சீதை கேட்ட பொழுது, 'அன்னை கைகேயியின் பெயரையே அமைத்திடுக' என்று இராமன் கூறினான். கோசலை இராமனைப் பெற்றதைத் தவிர, அவனை வளர்க்கத் தவம் செய்தவள் கைகேயியே யாவாள். பரதனை விட இராமனையே தன் அன்பிற் சிறந்த மகனாகக் கருதி யிருந்தவள் கைகேயி. 'இராமனைப் பெற்ற எனக்கு இடரும் உண்டோ?' என்று பூரித்து இன்பத்தில் திளைத்து வந்தாள். இராமனுக்கு நாளை முடி சூட்டு விழா என்று கூனி சொன்னதும் யாதொரு வேறுபாடும் அறியாத அவள் தூய மனம் மிக்க மகிழ்ச்சி அடைந்தது. உடனே விலையுயர்ந்த ஒரு மணி மாலையை எடுத்துப் பரிசளித்தாள். அத்தகைய கைகேயியின் மனத்தைக் கூனி மாற்றினாள். தன் மாற்றாளான கோசலையால் உண்டான அழுக்காறு இராமன் மீது கொண்டிருந்த அன்பையும் அழுங்கச் செய்தது; அவள் அறிவையும் மழுங்கச் செய்தது. அன்றிரவே தசரதனிடம் இரண்டு வரங்களைக் கவர்ந்தாள். அவற்றைத் தெரிவிக்க மறுநாட் காலை இராமனைத் தன்னிடம் அழைத்தாள்.

தாய் என நினைத்து வந்த இராமன் முன்னே உயிருண்ணும் காலன்போல், உள்ளத்து இரக்கமே யின்றித் தமியளாய்க் கைகேயி வந்தாள். அன்னை முன் எவ்வாறு பணிந்து இராமன் மரியாதை காட்டினான் என்பதைக் கம்பர் பாடுகிறார்:

"வந்தவன் தன்னைச் சென்னி மண்ணுற வணங்கி வாசச்
சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையிற் புதைத்து மற்றைக்
கந்தரத் தடக்கை தானை மடக்குறத் துவண்டு நின்றான்
அந்திவந் தடைந்த தாயைக் கண்டஆன் கன்றின் அன்னான்."

தாயிடத்து மகன் எவ்வாறு பணிவும் பரிவும் காட்ட வேண்டும் என்பதை இந்தச் செய்யுள் ஓர் எழிலோவியமாக அமைத்துத் தருகிறது.

பசுவிடத்துக் கன்றுபோற் பரிவு காட்டிய இராமனிடம் தன் கருத்தைக் கைகேயியால் உடனே சொல்ல முடியவில்லை. 'உன் தந்தை ஒன்று சொல்லும்படி ஏவினார்' என்று தயங்கியே பேசுகிறாள். தானே வேண்டிய வரங்கள் என்று சொல்லவும் கூசுகிறாள். அதைக் கேட்ட இராமன் பேருவகையுறுகிப் புன்னகை பூத்து, 'தந்தையின் ஏவலைத் தாயாகிய நீரே திருவாய் மலர்ந்தருளுவதானால் என்னைவிடப் பாக்கியசாலி வேறு யார்? பிறவிப் பயனை இன்றே பெற்றவனானேன். தந்தையும் தாயும் நீரே. தாயே அருளுக. இப்பொழுதே செய்து முடிக்கிறேன்' என்று கூறுகிறான். அப்பொழுது நம் உடல் சிலிர்க்கிறது. என்ன குணசாலி! என்ன அன்பு! அந்த அன்னை இந்த மகனுக்கு ஒரு தீங்கேனும் கருத முடியுமா? கருதலாமா? அவள் அவ்விதம் செய்யின் நாம் அதைப் பொறுக்க முடியுமா? அந்நிலையே கேட்டோம் என்று அலறித் துடித்து விழுவோம் அல்லவா? அந்த நிலைக்கு நம்மைக் கொண்டு வந்துவிடுகிறது கம்பரின் தெய்வீகப் பாடல். தான் சொல்லியபடி கேட்க இராமன் தயாராக இருக்கிறான் என்பதைத் தெரிந்துகொண்ட கைகேயி, பின்வருமாறு தெரிவிக்கிறாள்:

"ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண்டு ஆண்டின் வாஎன்று இயம்பினன் அரசன் என்றாள்."

இது எல்லாருக்கும் தெரிந்த பாடல்தான். ஆனால் இதன் நயங்களையெல்லாம் தெரிவதற்குக் கைகேயி எவ்வாறு கூறி யிருப்பாளோ அவ்வாறே, கூட்டும் இடத்தில் கூட்டியும் நீட்டும் இடத்தில் நீட்டியும், இழுக்கும் இடத்தில் இழுத்தும் குறைக்கும் இடத்தில் குறைத்தும், அசைத்தும், இசைத்தும், அழுத்தியும் பாடிப் பார்க்க வேண்டும். சிலர் நீண்ட காலத்துக்கு இடையே நடக்கும் நிகழ்ச்சிகளை, வேகமாய்ச் சொற்களை உச்சரிப்பதன் மூலம் அண்மையில் நடப்பது போன்ற உணர்ச்சியை நமக்கு ஊட்டி விடுவார்கள். சுருங்கிய காலத்தில் நடக்கும் செயல்களை நீட்டி விழுத்துச் சொல்லி மிகத் தொலைவுக்குக் கொண்டு போய் விடுவார்கள். ஒரு மாற்றாந்தாய் இருந்தாள். அவள் தன் குழந்தையை வாரத்துக்கு இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவாள். தன் மூத்தாள் குழந்தைக்கு ஆண்டுக்கு ஒரு முறைகூட எண்ணெய் காட்டுவது கடினம். பக்கத்திலுள்ளவர்கள் குறை கூறத் தொடங்கினர். அதற்குச் சலித்துக் கொண்ட அக் கொடியவள், பின்வருமாறு சமாதானம் கூறுவாள். "என் குழந்தையைச் சனியோ ஓட சனி, புதனோ ஓட புதன்தான் குளிப்பாட்டுகிறேன். என் சக்களத்தி பிள்ளையைத் தீவளிக்குத் தீவளி, தீவளிக்குத் தீவளி முழுக்காட்டுகிறேன். அப்படியிருந்தும் ஊரார் என்னைக் குறைகூறுகிறார்களே" என்று அங்கலாய்த்துக் கொள்

வான். இங்கே, சனியும் புதனும் ஆண்டுக்கு ஒருமுறை வருவனபோல் நீட்டி இழுத்துப் பேசுவாள். தீபாவளி என்று நெடில் எழுத்துக்களால் கூறினால் நீண்டு தோன்றுமோ என்று அஞ்சி அதைத் திவளி என்று குறுக்கி, அடுத்தடுத்துத் துரித கதியில் திருப்பிச் சொல்லி, வாரத்துக்கு இருமுறை தீபாவளி வருவது போற் பேசுவாள். இது பேச்சுத் திறமையிலுள்ள ஒரு சாமர்த்தியம். அவ்வாறு கைகேயியும் இங்கு பேசக் காணலாம்.

இராச்சியம் முழுவதும் பரதனுக்கு உரித்தாகி விட்டது என்று சொன்னால், அந்தப் பேறு தனக்குக் கிடைக்கவில்லையே என இராமன் வருந்தக் கூடாதல்லவா? அதற்காக, ஒருவருக்கும் வராத ஒரு பெருந் துன்பம் பரதனுக்கு வந்துவிட்டது போல் பேசுகிறாள் கைகேயி. தனியாகவே தாங்கி ஆளும்படியான துன்பம் பரதனுக்கு நேர்ந்துவிட்டது என்பது போல, 'பரதனே எ ஆள' என்று நீட்டுகிறாள். ஆள்வது துன்பம் என்பதை 'ஆழி சூழ் உலகம்' என இழுத்துக் காட்டுகிறாள். இவ்வாறு துன்பம் தொனிக்கப் பேசியவள் மேற்கொண்டு இன்பம் தொனிக்க இனிக்கப் பேசுவதைக் காணலாம். இராமனுக்கு நேரும் இன்னலை இன்பம் போற் காட்டுகிறாள். இராமன் அந்தத் துன்பத்தினின்றும் விடுபட்டான் என்பதை 'நீ போய்' என்கிறாள். ஒருவருக்கும் கிடைக்காத தவம் இராமனுக்குக் கிடைத்திருக்கிறது என்பதை, 'தாழ் இரும் சடைகள் தாங்கித் தாங்கருந் தவம் மேற்கொண்டு' என்கிறாள் பொன்மகுடம் தாங்குவதை விடத் தாழ்ந்த பெரிய சடைகளைத் தாங்குவதும், அரியணைமேற் கொள்வதைவிடத் தவம் மேற்கொள்வதும் இன்பம் போலப் பசப்புகிறாள். இராமன் போக வேண்டிய இடம் மிக நல்லதாம். பட்டு மணல் பரப்பிவிட்டது போல் மெத்தென்றிருக்கும் விரும்பத்தக்க காடு என்று இராமன் நினைக்க வேண்டுமாம். அதற்காக, 'பூழிவெம் கானம் நண்ணி' என்கிறாள். அங்கே அவனுக்குப் புண்ணியம் காத்துக் கொண்டிருக்கிறதாம். நீராடுவதற்குப் புனிதமான ஆறுகள், நீர் நிலைகள் எல்லாம் உண்டாம். மனம் போலக் குளித்து விளையாடி மகிழலாமாம். 'புண்ணியத் துறைகள் ஆடி' என்கிறாள். இவ்வாறு எத்தனைநாளைக்கு? பதினான்கு ஆண்டு என்றால் பையன் ஒரு வேளை பயந்து விடுவானே என்று, 'ஏழ் இரண்டு ஆண்டு' எனச் சுருங்கிய காலம்போற் காட்டுகிறாள். இவ்வளவும் தந்தை கூறினார் என்றால், அப்பா தானே என்று மகன் அசட்டை செய்யலாகாதே எனக் கருதி 'ஏயினன் அரசன்' என்றாள். அரசன் என்பதை அழுத்திச் சொன்னாள், அவன் கட்டளை மீறலாகாது என்பது தோன்ற. இவ்விதம் மேலே குறித்த பாடலைப் பாடிப் பார்த்தால் இத்தனை நயமும் இனிது சிறக்கக் காணலாம். அன்பே உருவான தூமொழி மடமானனை கைகேயி ஓர் இராப் பொழுதுக்குள் இத்துணை நயவஞ்சகியாக மாறிவிட்டதைக் காண நம் உள்ளம் துணுக்கம் எய்துகிறது.



ஆனால் துணுக்கம் எய்திலன் இராமன். அவன் தங்கக் கம்பி போன்றவன். அவனது சிரித்த முகம் தாய் மொழிந்ததைக் கேட்டதும் மும்மடங்கு மேலும் மலர்ந்து விளங்கியது. அசோகவனத்துச் சிறையிருந்த செல்வி அந்த முகத்தை நினைத்ததாகக் கம்பர் சுந்தர காண்டத்தில் காட்டுகிறார் :

"தேம்ப டங்கிய சேணிலம் கேகயர்
தம்ப டந்தைஉன் தம்பிய தாம்மனை
மும்ப டங்குபோ லிந்த முகந்தினன்
வெம்ப டங்கலே உன்னி வெதும்புவாள்."

இப்பாடலில் மும்மடங்கு என்று புலவர் குறிப்பிடுகிறார். முகம் பொலிவெய்தியது என்று சொன்னாலே போதும். ஆனால் மூன்றாக எண்ணி 'மும்மடங்கு' என்று கூறியுள்ள குறிப்பை ஓர்தல் வேண்டும். 'தேம் மடங்கிய' என்றதனால், பகைவராகிய அரக்கரை அழிக்கும் வாய்ப்புக் கிட்டி விட்டது என்று ஒரு மகிழ்ச்சி. கேகயர் தம் மடந்தை கூறினன் என்பதால்,

அன்னையின் சொற்படி நடக்கும் பேறு தனக்குக் கிடைத்ததே என்று இருமடங்கு மகிழ்ச்சி. சேணிலம் 'உன் தம்பியது ஆம்' என்றதால், தன் உயிரினுமினிய தம்பி உத்தமப் பரதனுக்கும் பட்டம் கிடைத்ததே என்று மும்மடங்கு மகிழ்ச்சி. ஆக இம் மூன்று மகிழ்ச்சிகளாலும் இராமன் முகம் பொலிந்ததை மும்மடங்கு பொலிந்தது என்றார்.

கூற்றினும் கொடிய கைகேயியின் கடுமையான கட்டளை இராமனுக்குக் கிடைக்கவிருந்த பொன் முடியையும் தட்டிப் பறித்து, உலக வாழ்க்கை யின்பத்தையும் கொட்டிக் கவிழ்த்துக் காட்டி விட்டதே அவனை நெட்டித் தள்ளியது. ஆனால் அவன் மனம் தள்ளவில்லை. கவலை கொள்ளவில்லை. தாயை எள்ளவில்லை, விள்ளவும் இல்லை. சிரித்த பங்கயம் ஒத்த அவன் திருமுகம் முன்னையிலும் அதிகம் ஒளிகாட்டி விளங்கலாயிற்று. உடனே கைகேயியின் அடிபணிந்து 'தந்தையே யன்றி நீரே ஏவினும் யான் மறுப்பதொன்று உண்டோ? என் தம்பி வேறு, நான் வேறு? அவனுக்குக் கிடைத்த அரசு எனக்குக் கிடைத்த மாதிரிதான். இப்பொழுதே காடு செல்கின்றேன். தாயே, விடை கொடுங்கள்' என்று இராமன் செலவு கொண்டான். அப்பாடல் வருமாறு:

"மன்னவன் பணியன் றாகின்
நும்பணி மறுப் பனோஎன்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ
என்இனி உறுதி யப்பால் இப்பணி
தலைமேற் கொண்டேன்
மின்ஒளி கானம் இன்றே போகின்
றேன் விடையும்கொண்டேன்"

வையத்து மனிதனையும் வானுறையும் தெய்வமாக ஆக்கிவிடும் தேமதுரச் சொற்கள் இவை. 'மன்னவன் பணி என்று நீ சொல்வது போலன்று: ஆயினும், உன் பணி மறுப்பனோ' என்று முதலடியில் தொனிப்பதைக் காணலாம்.

சித்ரலேகா

'மின் ஒளி கானம்' என்பது மின்னல் போன்று வெயில் வீசுகின்ற கானம் என்றும், மின்னற் கொடி போல் வாளாகிய சீதை மறையும் காடு என்றும் பொருள்பட நிற்பதையும் காணலாம். தன் இயல்பான அன்பை விடுத்து இரக்கமற்ற கொடியவளாகக் கைகேயி மாறி விட்டதை இராமன் உணராதவன் அல்லன். ஆயினும் அவள் தந்த இன்னலுக்கு இசைந்து நின்றான். அதுவே நம்மை இறும்பூது கொள்ளச் செய்கிறது. கைகேயி நஞ்சு பெய்வதைக் கண்டும் அதனை இராமன் உண்டு நாகரிகமாக நடந்து கொண்டான். அவன் நன்னயம் நம்மை விம்மிதம் அடையச் செய்கிறது.

இடுக்கண் வந்துற்றபோது நகுவதோடமையாது மகிழ்ச்சியுறுவது செயற்கருஞ் செயலேயாகும். இதனைச் 'செப்பருங் குணம்' என்கிறார் கம்பர். அத்துன்பத்தில் இராமன் முகம் பெற்றிருந்த விளக்கத்தை அப்பொழுது கண்கூடாகக் கண்டவர்கள் சொல்ல வேண்டுமே யல்லாமல், இப்பொழுது நாம் எவ்வாறு சொல்லுதல் கூடும் என்று கைவிரித்த கம்பர் ஒருவாறு சொல்லிப் பார்க்க முற்படுகிறார் :

"இப்பொழுது எம்ம னோரால் இயம்புதற்கு எளிதோ யாரும்
செப்பருங் குணத்து ராமன் திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உணரக் கேட்ட
அப்பொழுது அலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா!"

இச்செய்யுள் இன்சுவையே எழிலுருப் பெற்றது என்னலாம். 'இராமன் திருமுகச் செவ்வி முன்பு, அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை ஒப்பதே; அவ்வாசகம் உணரக் கேட்ட பின் (அதனை) வென்றது அம்மா' எனக் கூட்டிப் படிக்க வேண்டும். வென்றது என்றால் ஒப்புமை இல்லை என்பது பெறப்படும். அங்ஙனமாயின், வேற்றுமை யாது என்பதை நாம் ஆராய்தல் வேண்டும். அந்த நேரத்தில் இராமன் முக நிலையை நேரிற் கண்டு அனுபவித்தவள் சீதை. அந்த முகத்தை அவளால் ஒரு நாளும் மறக்கக் கூடவில்லை. அசோக வனத்தில் வருந்தி யிருந்து நினைக்கிறாள். அது எப்படிப்பட்ட முகம்?

"மெய்த்திருப் பதம் மேவு என்ற போதினும்
இத் திருத் துறந்து ஏகு என்ற போதினும்
சித் திரத்தின் அலர்ந்த செந் தாமரை
ஒத் திருக்கும் முகத்தினை உன்னுவாள்"

இதில் இராமன் முகம் ஒரு சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரைக்கு ஒப்பிடப் படுகிறது. சித்திரம் என்பதைப் படம் எனக் கொண்டு, படத்தில் வரைந்த தாமரை போல் மாறுபடாது ஒரேபடித்தாய் இராமன் முகம் இருந்தது என்று பொருள் கூறுவது உண்டு. இதைச் சிறிது சிந்திக்க வேண்டும். இராமன் முகம் ஒரே படித்தாய் இருக்கவில்லை. தனக்குப் பட்டம் என்ற போதைவிட, பரதனுக்கே பட்டம் என்ற போது மும்மடங்கு பொலிந்த முகம் அப்படியே இருந்தது என்று சொல்ல முடியாது. அப்பொழுதே அலர்ந்திருக்கும் உண்மைத் தாமரையை வென்ற ஒரு முகம், கேவலம், ஒரு சித்திரத்தில் தீட்டிய பொய்த்தாமரையை ஒத்திருந்தது என்று கூறுவதில் யாதொரு பொருட் சிறப்பும் பயனும் இல்லை. பின், வேறு பொருள் யாது?

மனிதர் முகம் எப்பொழுதும் ஒரு நிலையில் மலர்ந்திருப்பது அரிது. காலையில் இருக்கிற முகம் உச்சியில் வேறாகி மாலையில் மாறிவிடும். இவ்வுண்மையை,

"காலையில்ஓர் குவர் கடும்பகலில் ஒன்குவர்
மாலையில்ஓர் குவர் மனிதரெலாம் — சாலவே
மும்மலரைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லாளைக் கண்டறியோம் நாம்"

என்ற ஔவையார் பாடல் அறிவுறுத்துகிறது. காலை மாலை என்னும் இரண்டும் இன்பம் துன்பம் எனும் இவற்றைக் குறிப்பதாக நாம் கொள்ளலாம். தாமரை மலர் காலையில் சூரிய ஒளியில் மலரும், மாலையில் இருள் வரவே மூடிக் கொள்ளும். எனவே, தாமரை ஒருபோது மலரும், ஒருபோது கூம்பும். இருபோதும் மலராது. இது தாமரையின் இயற்கை. இருபோதும் மலரும் தாமரை ஒன்று உளதேல், அது புதுமையை விளக்கக் கூடியதாய் விசித்திரமாகவே இருக்கும். அத்தகைய அதிசயத் தாமரையை ஒத்திருந்தது இராமன் முகம் என்று கம்பர் வியந்து பாடுகிறார். சித்திரம் என்பதற்கு ஓவியம் என்பதோடு, புதுமை அல்லது அதிசயம் என்ற பொருளும் உண்டு. வேறு பாடல்களிலும் கம்பர் புதுமை என்ற பொருளில் சித்திரம் என்ற சொல்லைக் கையாண்டுள்ளார். இருபோதும் மலரும் தாமரை இராமன் முகத்துக்கு இல் பொருளுவமை. இராமன் முகம் இருபோதும் மலர்ந்தது எங்ஙனம் என்னில், 'மெய்த்திருப்பதம் மேவு' என்ற ஒருபோதும், 'இத் திருத்துறந்து ஏகு' என்ற ஒருபோதும், ஆக இருபோதும் செந்தாமரையின் செவ்விய அழகை ஏந்திக் காட்டி மலர்ந்து, துன்பம் தோன்றாது இன்ப மயமாய் விளங்கிற்று. இராமனது முகத்தாமரை முடிசூடும் விழா வாகிய சூரிய வொளியிலும் மலர்ந்து நகை ததும்பி விளங்கிற்று; இரவின் இருளாகிய, முடியிழந்து பொடி சுடும் காட்டில் அடிகடப் போய் அலையும்படியான இன்னல் வந்தபொழுதும் தன் பொலிவை இழக்காது, வாடாது, மலர்ந்து, சோதி விரித்துச் சுந்தரமாய்த் திகழ்ந்தது. இம்முறையால், இராமன் திருமுகச்செவ்வி அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்று விட்டது. இது ஒரு புதுமையல்லவா? ஆகவே இராமன் முகம் ஒரு சித்திரத் தாமரைதான்.








ஆதரவாளர்களுக்கு எமது
மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்

# காளீ பிராண்ட்

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாக்டரி

Our SPECIALITIES











I am Coffee ..............
I am ready for use

stainless steel coffee perculator





**STAINLESS STEEL**
**DINNER CUTLERY SET**

போன்: 108

**ஸ்ரீ எம்.வி.எம். ஸ்டோர்ஸ்,**
கும்பேஸ்வரர் சன்னதி — கும்பகோணம்.

தந்தி: காளீ பிராண்ட்

-JEEVAN-



"ஆயுள், புத்தி, பலம், ஆரோக்கியம், சுகம், விருப்பம் இவற்றை வளர்ப்பனவும், ரஸமுடையனவும், பசையுடையனவும், உரமுடையனவும், இன்பமளிப்பனவும் ஆன உணவுகள் ஸாத்விகர்க்குப் பிரியமானவை"

—பகவத் கீதை.







# சுதா வனஸ்பதி

திரு-கொ கேரள
சர்க்கார் தயாரிப்பு

வைட்டமின் சேர்க்கப்பட்ட சுத்தமான சுதா வனஸ்பதியில் தயாரிக்கப்படும் பண்டங்களில் சக்தி, ஊக்கம், பலம் ஆகியவற்றை அபிவிருத்தி செய்யும் அம்சங்கள் வெகுவாக நிறைந்துள்ளன. சுதாவின் பரிசுத்தத் தன்மை கெடாமலிருப்பதற்காக ஸீல் இட்ட டின்களில் சப்ளை செய்யப்படுகிறது. ஓர் சுத்தமான உணவுச் சாதனம் என்பதுடன் சுதா விலை குறைவும் கூட.

கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜினேஷன் பாக்டரி,
கல்லிக்கோட்டை—கேரளா

---

எமது மங்களகரமான தீபாவளி வாழ்த்துக்கள்!



# S.R கூட்டு பெருங்காயம்

அசல்

# குமரன் கற்பூர வில்லைகள்

ஸ்பெஷல் & ஜவ்வாது பத்திகள்







போன்: 51256. தந்தி: பெருங்காயம்

BALAKRISHNA INDUSTRIAL WORKS, MADRAS-13.

எல்லா T. U. C. S. ஸ்டோர்களிலும் கிடைக்கும்

# வேப்பமரம்

இந்த வருஷந்தான் அது பூத்திருந்தது. பருவம் அடைந்த மங்கையைப் போல் அவருக்கு அது காட்சி அளித்தது. பச்சைப் பசிய வானத்திலே அங்கங்கே கொத்துக் கொத்தாக நட்சத்திரங்கள் ஒளி விட்டால் எப்படி இருக்கும்? அப்படித்தான் இருந்தது. அடர்ந்து வளர்ந்த பசுமைச் சூழலினிடையே சிறிய சிறிய வெள்ளை மலர்கள். அதற்கு ஒரு தனி மணம். இறைவனுடைய படைப்பில் உள்ள கலை அழகைக் காட்டும் மரம் அல்லவா அது? ஓர் இலையை எடுத்துப் பார்த்தாலே போதுமே! கடவுளின் புகழைப் பேசும் ஏடு அல்லவா அது? இரு புறமும் ஒழுங்காகக் கத்தரித்து விட்டது போன்ற அமைப்பு; நடுவே நரம்பு; சிறுநரம்புகள் இரு பக்கத்திலும். அடர்த்தியான புருவத்துக்கு இந்த இலையைத்தானே புலவர்கள் உவமை கூறுகிறார்கள்?

மூன்று நான்கு ஆண்டுகளாக வளர்ந்தும் இப்போதுதான் மலர்ந்திருக்கிறது. அதைத் திரும்பத் திரும்பப் பார்த்தார் அவர். தம்முடைய வீட்டில் தாம் வேலை செய்யும் அறையின் ஜன்னலுக்கு எதிரே அது இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு வளர்த்தார். வீடு மேற்குப் பார்த்தது. சன்னல் தெற்குப் பார்த்தது. அந்த மரத்தின் மேல் பட்டு வரும் காற்றுக்குத் தனி மகிமை உண்டல்லவா?



தாம் பெற்று வளர்த்த பெண் அலங்காரங்களுடன் மணப் பலகையில் உட்காரச் செல்லும் போது தந்தை கண் குளிரப் பார்ப்பானே, அப்படிப் பார்த்து மகிழ்ந்துபோனார். இந்த ஆண்டு வருஷப் பிறப்புக்கு அது தன் மலர்களை உதவும். விலைக்கு வாங்க வேண்டாம், பிறரிடம் யாசகமும் செய்ய வேண்டாம்.

நீண்ட மெல்லிய பச்சைத் தண்டிலே சின்னச் சின்ன வெள்ளைப் பூக்கள் தொங்கின. சன்னல் வழியே அவற்றின் உருவம் நன்றாகத் தெரிந்தது. 'இதன் இலை, பூ, பட்டை எல்லாம் மனிதனுக்குச் சஞ்சீவி அல்லவா?' என்று அதன் பெருமையை எண்ணினார்.

முத்துசாமி தாம் வைத்து வளர்த்த வேப்பமரத்தை அழகுபார்த்துக் கொண்டிருந்தார். அதன் முதல் மலர்ச்சியிலே அவர் தம் உள்ளத்தைப் பறி கொடுத்தார். அப்போது அவருடைய பெண் ஓடிவந்தாள். "அப்பா, அப்பா, அந்தச் சின்னப்பன் இல்லே..." என்று ஏதையோ ஒரு செய்தியைச் சொல்ல வந்தாள்.

முத்துசாமியின் கண்கள் தாம் வளர்த்த மங்கையினிடமிருந்து திரும்பித் தாம் பெற்ற செல்வத்தைப் பார்த்தன. அவர் வாயில் புன்முறுவல் அரும்பியது. 'இந்தக் குழந்தையும் ஒரு நாள் இந்த மரத்தைப் போல மங்கையாகப் பூத்து நிற்கும் பருவம் வரும் என்று நினைத்தாரோ? ஆம்; உடனே அந்த முறுவலிலே சிறிது வாட்டமும் தொடர்ந்து தோன்றியது. வேப்பமரம் பூத்துக் குலுங்கினால் அதைக் கவலையின்றிப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். இந்தச் சிறு கொடி அப்படி அல்லவே? இந்தக் கொடி பூத்தால் இதைப் படரவிட ஒரு மரம் தேட வேண்டுமே! பெண்ணைப் பெற்ற தந்தைக்கு இது பெரிய பொறுப் பல்லவா? இந்த எண்ணம் தான் அவர் உள்ளத்துள்ளே வேகமாக ஓடியிருக்க வேண்டும்.

கி. வா. ஜகந்நாதன்

வேப்பமரம் அத்தகைய கவலையை அவருக்கு வைக்கவில்லையே!

"என்ன அப்பா, நான் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல்..." என்று அந்தச் சிறு கொடி முணுமுணுத்தது.

"என்ன அம்மா சொல்கிறாய்?" என்று அவளை இழுத்து மடிமேல் வைத்துக் கொண்டார்.

"இன்றைக்குக் காலையில் அந்த ரிக்ஷாக்காரச் சின்னப்பன் வேப்பமரத்தில் ஒரு கொத்தை மளுக்கென்று ஒடித்துக் கொண்டு போனான் அப்பா!"

"என்ன?"

"பல் குச்சிக்காக ஒடித்திருப்பான் என்று வேலைக்காரி வேலம்மாள் சொல்கிறாள்!"

முத்துசாமிக்குக் கோபம் வந்தது. மங்கைப் பருவம் அடைந்த வேப்ப மரத்தைப் பற்றியும் கவலைப்பட இடம் இருக்கிறதே!

"அந்தப் பயல் வரட்டும் சொல்கிறேன்" என்று உறுமினார். "நான் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வரும் இந்த மரத்தைத் தொட அவனுக்கு எப்படித் தைரியம் வந்தது? நாளைக்கு வரட்டும்; கையை ஒடித்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன்."

அப்பாவின் கோபத்தை மூட்டி விட்டு அந்தக் குழந்தை மெல்ல நழுவி விட்டது. முத்துசாமி யோசனையில் ஆழ்ந்தார். ரிக்ஷாக்காரச் சின்னப்பன் அவர் அகக்கண்ணில் வந்து நின்றான். அவன் கையில் ஒரு கோடரி யிருக்கிறது. வேப்ப மரத்தின் கிளையை வெட்டுகிறான். அதிலிருந்து இரத்தம் வருகிறது. "அடபாவி!" என்று அவர் கத்துகிறார். எல்லாம் பகற்கனவு. ஆனாலும் அவர் பல்லைக் கடித்துக் கொண்டார்.

★

**ம**றுநாள் காலையில் அவர்தம் அறையில் உட்கார்ந்திருந்தார். கையும் களவுமாகத் திருடனைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு அமர்ந்திருந்தார். தெருப் பக்கம் திறந்த வெளி. அங்கே போகிறவர்கள் எட்டி மரத்தில் இலையைப் பறிக்கலாம். சின்னப்பன் அவருக்குத் தெரியாத ஆள் அல்ல.

காலைப் பத்திரிகையில் கண்ணைப் பதித்திருந்தார். சுவாரசியமான செய்தி ஒன்றில் ஆழ்ந்து போனார். அப்போது சலசல சத்தம் கேட்டது. ஆம், திருடன் வந்து விட்டான். சின்னப்பன் வேப்பங் கொத்து ஒன்றைக் கையிலே வைத்துக் கொண்டிருந்தான்.

முத்துசாமி, "அட திருட்டுப் பயலே!" என்று சொல்லி எழுந்து சன்னலோரமாகச் சென்று எட்டிப் பார்த்தார். "ஏண்டா இதை ஒடிக்கிறாய், கழுதை!" என்று கூவினார்.

"வேப்பிலை ஐயா!" என்று அவன் கெஞ்சுவது போலப் பேசினான்.

"தெரிகிறது; வேப்பிலைதான். ஆனால் அது உங்கள் வீட்டுச் சொத்தோ? குழந்தை கையை ஒடிக்கிறமாதிரி மளுக்கென்று ஒடிக்கிறாயே! உனக்குப் பல் குச்சிக்காகத்தான் நான் வளர்க்கிறேனா?" என்று அவர் இரைந்தார்.

"என் மகளுக்கு மாரியாத்தாள் பூட்டியிருக்கிறாள். அதற்காக—"

"சரிதான் போ போ; ஒடித்தது போதாதென்று பொய் வேறு சொல்கிறாயா? இனிமேல் கைவைத்தாய், அந்தக் கையை வெட்டிப் போட்டு விடுவேன்."

முத்துசாமிக்கு உடம்பு படபடத்தது.

அவன் வேப்பிலைக் கொத்தை அங்கேயே போட்டுவிட்டுப் போய்விட்டான்.

"திருட்டு நாய்க்கு ரோசத்தைப் பார்!" என்று அவர் ஓடவிட்ட நாயைக் கண்டு குரைக்கும் நாயைப் போலக் கத்தினார். "இந்தப் பயல்களுக்கு இடம் கொடுத்தால் வீட்டுக் கூரையையே பட்டப்பகலில் பேர்த்துக்கொண்டு போய் விடுவார்கள். நான் என் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்து வருகிறேன். இந்தக் கழுதை வந்து ஒடிக்கிறதாவது! கேட்டால் வேப்பிலைதானே என்கிறான். வேப்பிலை என்றால் வீதியிலே இறைபடுகிறதா?" அவர் கத்திக் கொண்டே இருந்தார்.

"அப்பா, அம்மா குளிக்கச் சொல்லுகிறாள்" என்று அவருடைய பெண் குழந்தை வந்து நினைவு மூட்டினாள். குளிப்பறைக்குச் சென்று மடமடவென்று நாலைந்து செம்பு குளிர்ந்த நீரை எடுத்துத் தலையில் ஊற்றினபிறகே அவர் கோபம் கொஞ்சம் தணிந்து நிதானம் பிறந்தது.

'இதற்குப் போய் இவ்வளவு பிரமாதப்படுத்தினேனே!' என்ற எண்ணம் கூடத் தலைகாட்டியது.

சாப்பிடத் தட்டின்முன் அமர்ந்த போது அவருடைய பத்தினித் தெய்வம், "என்ன, காலை நேரத்தில் அப்படி இரைந்தீர்களே!" என்று கேட்டாள்.

"சின்னப்பனோடு சண்டை போட்டார் அம்மா" என்று பெண் குழந்தை விளக்கினாள்.

அவர் ஒன்றும் பேசவில்லை. சாப்பிட்டு விட்டுக் கம்பெனிக்குப் போய் விட்டார்.

★

**மா**லை நேரம். அன்று ஏதோ புதிய நாவலை வாசித்துக் கொண்டிருந்தார் முத்துசாமி. ஏழைகளைப் பணக்காரர்கள் அலட்சியம் செய்வதையும், அவர்களுடைய உணர்ச்சிகளைக் கிள்ளுக்கீரையாக மதிப்பதையும் ஆசிரியர் அந்த நாவலில் நன்றாகக் கதைப்போக்கிலே எடுத்துக் காட்டியிருந்தார். முத்துசாமிக்கு அந்தக் கதை போட்டத்தோடே மற்றொரு நினைவோட்டமும் கூடக்கூட வந்தது. ரிக்ஷாக்காரச் சின்னப்பனை வைது திட்டிய காட்சியும் கதைக்கு நிழல் போலத் தொடர்ந்தது. இரண்டு நாட்களுக்கு முன் நிகழ்ந்தபோது இருந்த சூடு குறைந்து அமைதி வந்திருந்தது. எரிந்து போன நகரில் வெந்தொழிந்த சாம்பலிடையே பொருள்கள் சில அரையும் குறையுமாகக் கிடப்பது போல் அவர் உள்ளத்தில் கோபக்கனலால் வெந்து போகாமல் நல்ல எண்ணங்கள் சில தலைகாட்டின. "பாவம்!" என்று முணு முணுத்தார்.

அப்போது அவருடைய பத்தினித்தெய்வம் அங்கே வந்தாள். "பாவம்! சமாசாரம் கேட்டீர்களா?" என்று சொல்லிக்கொண்டே அவர் நாற்காலியைப் பற்றிக்கொண்டு நின்றாள். அவர் முணுமுணுப்பின் எதிரொலியோ அது? அவர், "என்ன?" என்று கேட்டார். அவளும் சின்னப்பனைப்பற்றியே சொன்னாள்.

"சின்னப்பனுடைய குழந்தை போய் விட்டதாம்!"

"என்னவாக இருந்ததாம்?"

"அம்மை பூட்டி இருந்ததாம். அது கடுமையாகி இறந்துவிட்டதாம். பாவம்! ஒரே குழந்தையென்று வேலம்மாள் சொன்னாள்."

அரசியல்



"என்ன!"-முத்துசாமி இடிந்து போய் விட்டார். அவருக்குப் பேச்சு எழவில்லை. 'அப்படியானால் அவன் சொன்னது உண்மைதானா? தன் குழந்தைக்கு அம்மை வார்த்தது என்று சொன்னானே! அதை நாம் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளவில்லையே!' அவர் இப்போது அக்காட்சியில் சஞ்சரிக்கலானார்.

அடுப்பில் வேலையிருந்ததனால் அவருடைய மனைவி உள்ளே போய்விட்டாள்.

அவர் உள்ளத்தே காட்சி ஓடியது. "நீதான் என் குழந்தையைக் கொன்றாய்" என்று சின்னப்பன் அவரைப் பார்த்துக் கூவுகிறான். "ஏழையென்று தானே அவனை மிரட்டினாய்?" என்று மடியில் கிடந்த நாவலாசிரியர் கேட்கிறார். "ஒரு கொத்தை ஒடித்தான் என்று உறுமினாயே! அவனுடைய குழந்தையையே கொன்று விட்டாயே!" என்று யாரோ ஒருவர் பேசுகிறார்.

கண்ணை மலர்த்திச் சன்னலுக்கு வெளியே பார்த்தார். எல்லாம் வெறும் பிரமை. அங்கே யாரும் இல்லை. வேப்ப மரம் மாத்திரம் தன்னுடைய பூக்களாகிய சிறிய பற்களைக் காட்டிக்கொண்டு சிரித்தது. "அட முட்டாளே!" என்று அது சிரிக்கிறதோ!

முத்துசாமிக்குத் தாமே அந்தக் குழந்தையைக் கொலை செய்து விட்டது போன்ற ஏக்கம். 'ஒரு கொத்து ஒடித்தால் மரமே பட்டா போய்விடும்? மரம் எதற்காக இருக்கிறது? வருஷப் பிறப்புக்குப் பூங்கொத்தை ஒடிக்க வேண்டுமென்று நினைத்தோமே! அதுமட்டும் செய்யலாமா? மரமும் குழந்தையும் ஒன்றுவார்களா? மரம் வெட்டவெட்டத் தளிர்க்கும், குழந்தை செத்துப் போனால்' அவருக்கு மேலே யோசனை ஓடவிடப் பயமாக இருந்தது. புத்தகத்திலே கண் ஓட்டினார்; கண் ஓடியதேயன்றிக் கருத்து ஓடவில்லை. சின்னப்பனின் குழந்தை சவமாகத் தம் காலடியிலே கிடப்பது போன்ற உணர்ச்சி; காலை எடுத்து நாற்காலி மேலே வைத்துக் கொண்டார். தம் பேதைமையை நினைத்துக் கொஞ்சம் சிரிப்புக்கூட வந்தது. புத்தகத்தை வைத்துவிட்டு வெளியிலே போய்வரலாமென்று புறப்பட்டார்.

"ஒருகால் எதிரே சின்னப்பன் வந்தால்?" மறுபடியும் உள்ளே போனார். புத்தகத்தை எடுத்தார். வேப்பமரத்தைப் பார்த்தார்.

அன்று அவருக்குச் சரியான தூக்கமே இல்லை. அந்த வேப்பமரத்திலே நூறு குழந்தைகள் ஏறிக்கொண்டு விளையாடுகிறார்கள். அடுத்த கணத்தில் அத்தனை பேரும் பாம்புகளாக இருக்கிறார்கள். மரத்தினடியில் நாலைந்து பிணம். காற்றுப் பேயாய் அடிக்கிறது. அந்தக் காற்றினிடையே அவருடைய பெண் குழந்தை கிடந்து தடுமாறுகிறது. அதனுடைய தலைமுடியைக் காற்று அலைத்துப் பிய்க்கிறது. சின்னப்பன் ரிக்ஷா வண்டியை இழுத்துக்கொண்டு போகிறான். அதில் நிறைய வேப்பந்தழை; அடுத்த கணம் ஏதோ குழந்தையின் பிணம்! பாதிக் கனவில் அவர் விழித்துக் கொண்டார்.

ஒருவாரமாயிற்று, அவருக்கு நிதானம் உண்டாக. இனிமேல் வேப்பந்தழையை யார் ஒடித்தாலும் கேட்பதில்லை என்று ஒரு விரதம் மேற்கொண்டார்.

## 2

ஓர் ஆண்டு ஆகியிருக்கும். அவர் எங்கோ கம்பெனி வேலையாகப் போயிருந்தார். மறுபடியும் ஊருக்கு வந்தார். அவருக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. அவருடைய வேப்பமரத்தை நன்றாக மொட்டையடித்திருந்தார்கள். அவர் மனைவியைக் கேட்டார். "அது பேயாய்ப் படர்ந்து பழுப்பு இலைகளைக் குப்பை குப்பையாகக் கொட்டியது. யாரோ ஒருவன் இரண்டு ரூபாய் கொடுக்கிறேன் என்று சொன்னான். வெட்டிக்கொண்டு போ என்று சொல்லிவிட்டேன். நேற்றுத்தான் தழை முழுவதையும் வெட்டிக் கொண்டு போனான்" என்றாள். வேப்ப மரத்தை அவர் நன்றாகப் பார்த்தார். முழு மொட்டையாக இருந்தது. இப்போது அவருக்குக் கோபம் வரவில்லை. சில மங்கையர் திருப்பதிக்குச் சென்று கூந்தலைப் பிரார்த்தனைக்காகக் களைந்து விட்டு வந்தால் எப்படித் தோற்றுவார்களோ அப்படி அந்த மரம் தோற்றியது. அவர் மொட்டை மரத்தைப் பார்க்கவில்லை. இன்னும் சில நாட்களில் தளதளவென்று புதுத் தளிர்விட்டுப் பளபளப்புடன் நிற்கும் கோலத்தையே உள்ளே கண்டார். வேப்பமரமே புதுப்பிறவி எடுக்கப் போகிறது.

ஆனால்—சரேலென்றது உள்ளம். செத்துப்போன சின்னப்பனின் குழந்தை? இவ்வளவு மாதங்கள் மறந்திருந்த நினைப்பு எங்கிருந்தோ வந்து மேலே மிதந்தது. ஆனால் முன்புபோல் அத்தனை துன்பத்தை உண்டாக்கவில்லை.

இரண்டு நாட்கள் கழித்து அவருடைய பெண் குழந்தைக்குக் கடுமையான ஜுரம் வந்தது. டாக்டர் பார்த்தார். "இரண்டு நாள் பார்த்துக்கொண்டு சொல்கிறேன்" என்றார். பிறகு 'ஒருகால் அம்மை ஜுரமாக இருக்கலாமோ என்று பார்க்கிறேன்' என்றார்.

முத்துசாமிக்குத் தூக்கிவாரிப் போட்டது. "அம்மையா!" - அவர் கலக்கம் அந்தச் சொல்லில் புலம்பியது.

"பயப்படாதீர்கள். அம்மையாக இருந்தால் என்ன? ஜாக்கிரதையாக இருந்தால் போகிறது!" என்று சொல்லிவிட்டு டாக்டர் போய்விட்டார்.

முத்துசாமிக்குப் பழைய நினைவுகள் வந்தன. "கடவுளே, என்னையே தண்டித்துவிடு; என் குழந்தையை ஒன்றும் செய்யாதே!" என்று மௌனக் குரலில் அவர் கதறினார்.

டாக்டர் சொன்னபடியே குழந்தைக்கு வைசூரிதான் பூட்டியது. முத்துசாமி எத்தனையோ தெய்வங்களை வேண்டிக் கொண்டார்; என்ன என்னவோ செய்வதாக நேர்ந்து கொண்டார். நல்ல வேளை! குழந்தைக்கு அம்மை கடுமையாக இல்லை. பத்து நாட்கள் கழித்துத் தலைக்குத் தண்ணீர் விட்டார்கள். முத்துசாமி ஆறுதலாகப் பெருமூச்சு விட்டார்.

அன்று மாலை அவர் தம் அறையில் உட்கார்ந்திருந்தார். வேப்ப மரத்தில் இலையே இல்லை; கொழுந்துகள் சிறிது சிறிதாகத் தோன்றியிருந்தன. 'நம்முடைய வீட்டில் வேப்பிலை வேண்டியிருந்த போது நம் மரம் உதவவில்லையே!' என்ற எண்ணம் உண்டாயிற்று. அப்போது அவர் மனைவி வந்து நின்றாள். "சமாசாரம் கேட்டீர்களா?" என்றாள்.

"உனக்கு என்ன சமாசாரத்துக்கு? உன் சமாசாரங்களை வைத்துக் கொண்டு ஒரு தினப் பத்திரிகையே நடத்தி விடலாம். உனக்குத்தான் வேலம்மாள் என்ற பிரதான நிருபர் வேறு இருக்கிறாளே!" என்று சிரித்துக் கொண்டே சொன்னார்.



## சுந்தரும் மந்தரும்

மந்தர்: "என் வாழ்நாள் முழுவதும் இந்த "டைப்" அடிக்கும் வேலைதானு! நான் படித்த படிப்பைப் பாருங்கள்."

சுந்தர்: "உங்கள் முணுமுணுப்பைக் குறைத்து ஆடைகளைப்பற்றி சற்று அதிக கவனம் செலுத்தினால் ...

மந்தர்: "என் உடைகளில் என்ன தவறு? அவைகளுக்காக என் வருமானத்தில் பெரும் பகுதியை அல்லவா செலவு செய்கிறேன்."

சுந்தர்: "மட்ட ரக ஆடைகளில் பணத்தை ஏன் வீணாக செலவு செய்கிறீர்கள்? நல்ல ஆடைகளை தேர்ந்தெடுக்கமுடியாதா? உதாரணமாக, பின்னியின் ஆடைகள். அவை தர நிர்ணயம் செய்யப்பட்டவை. கண்ணிற்குப் புலப்படாத சிறு குறைகளையும் பழுதுகளையும் உற்பத்தி செய்யும் ஒவ்வொரு கட்டத்திலும் துப்புரவாக நீக்கி விடுகிறார்கள். இதனால் தான் பின்னி துணிகள் பார்வைக்கு ரம்யமாகவும், உழைப்புக்கு வன்மையாகவும் விளங்குகின்றன."

**பின்னி -**

**துணி உலகில்**

**ஒரு புகழ் பெற்ற பெயர்**

**BINNY - a great name in textiles**

பின்னி கம்பெனிகள் ஒவ்வொரு வருஷமும் சுமார் 9 கோடி கெஜம் துணியை உற்பத்தி செய்கின்றன. அவை தோற்றுவித்துள்ள பல ரகங்களில் கீழ்க்கண்டவை சில:

ஷர்ட்டிங் - காக்கி டிரில் - வெளுக்கப்பட்ட மற்றும் சாயம் தோய்த்த டிரில்கள் - சுருக்கம் விழாத ஸூட்டிங்குகள் - டஸ்ஸூர்கள் - யூனியன் துணிகள் - டவல்கள் - பட்டுச் சேலைகள் - கம்பளிகள்.




குறிப்பு:- உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்கவும்.



பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்

பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

"ஆமாம்; வேலம்மாள்தான் சொன்ஞள். குழந்தைக்கு அம்மை பூட்டியிருந்த போது வேப்பிலைக்கு என்ன செய்தேன், தெரியுமோ?"

"ஆமாம், வேப்பமரத்தை மொட்டை யடித்து விட்டு ஊராரிடம் பாசகம் செய்திருப்பாய்."

"வேலம்மாளிடம் சொன்னேன்; அவன்தான் வாங்கி வந்தாள். அவனுக்கு நான் தவருமல் சின்னப்பன்தான் கொண்டு வந்து தந்தானும். நம் வீட்டில் அம்மை போட்டிருக்கிறதென்று தெரிந்து விசாரித்திருக்கிருன். வேலம்மாள் சொல்லியிருக்கிருள். அவனே சொந்தையாக ஒவ்வொரு நாளும் கொண்டு வந்து தந்தானும்!"

முத்துசாமிக்கு அந்தக் கணத்திலே ஓடிப் போய்ச் சின்னப்பன் காலில் விழ வேண்டுமென்று தோன்றியது. அவனுக்குத் தாம் செய்த தீங்குக்கு, அவன் எவ்வளவு பெருந்தன்மையோடு நடந்து கொண்டான்!

"வேலம்மாளிடம் சொல்லி அவனே இங்கே அழைத்து வரச் சொல்கிறாயா?" என்று தாழ்ந்த குரலில் முத்துசாமி சொன்னார்.

"சொன்னல் வருகிறான்" என்று அலட்சியமாக அவள் சொன்னாள். அவளுக்கு அவன் ரிக்ஷாக்காரச் சின்னப்பன் தானே?

"ஐயா, உன்னைக் கடிந்து கொண்டாரே, அதை நினைத்து வருந்துகிறாராம். ஒரு தடவை உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாராம் என்று சொல்லச் சொல்."

"ஆமாம்; எப்போதோ நடந்ததற்கு இப்போது சமாதானமாக்கும்! வாடா என்றால் வந்து விட்டுப் போகிறான்!"

அவள் போய் விட்டாள். அவள் சொன்ன செய்தி முத்துசாமியின் உள்ளத்தை உருக்கியது. 'நீ செய்ததற்கு அவன் செய்ததைப் பார்த்தாயா?' என்று மனச்சாட்சி உறுத்தியது. அவனுக்கு எப்படி அபராதம் செலுத்துவது, நன்றிக் கடன் செலுத்துவது?— ஒன்றுமே தெரியாமல் விழித்தார்.

மறு நாள் சின்னப்பன் அவர் வீட்டுக்கு வந்தான். "ஐயா! என்னைக் கூப்பிட்டீர்களாமே!" என்றான்.

அவனே நிமிர்ந்து பார்க்கக்கூட முத்துசாமிக்குத் திராணி யில்லை. "ஒன்றும் இல்லை. வந்து..வந்து..உனக்குப் பெரிய தப்புப் பண்ணி விட்டேன்..உன்னுடைய குழந்தை..."

சின்னப்பன் இடைமறித்தான். "அதெல்லாம் இப்போது ஏன் ஐயா பேச வேண்டும்? உதிர்ந்த இலையைப் பொறுக்கி என்ன சுகம்? அந்த இலையை எடுத்துச் சாம்பலாக்கி விடலாம். அவ்வளவுதான். மறுபடியும் பசுமை ஏறுமா?"

முத்துசாமிக்கு அவன் ஞானம் தமக்கு இல்லையே என்று தோன்றியது.

"நம் வீட்டுக்கு வேப்பிலை தந்தாயாமே?"

"ஆமாம்! குழந்தைக்குத் தலைக்குத் தண்ணீர் விட்டாயிற்றல்லவா?"

"உன்னுடைய புண்ணியத்திலே விட்டாயிற்று..."

"என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? சாமி புண்ணியத்திலே என்று சொல்லுங்கள்."

'இவன் நந்தனைப் போலல்லவா பேசுகிறான்?' என்றது உள்ளம்.

"எங்கிருந்து வேப்பிலை பறித்தாய்?" இது ஒரு பெரிய கேள்வியாக அவருக்குத் தோன்றியது.

"நீங்கள் வேப்பிலை ஒடிக்க வேண்டாம் என்று சொன்ன மறுநாளே எங்கள் குடிசைக்குப் பக்கத்தில் ஒரு செடி வைத்து வளர்த்தேன்."

"ஆமாம் நான் பாவி. உன் குழந்தை...."

"கடவுள் சித்தம் எதுவோ அது நடக்கும் ஐயா! குழந்தை போனலும் வேப்பஞ்செடி வளர்ந்தது. அது சமயத்துக்கு உபயோகப்பட்டது. அதிலிருந்துதான் தழை ஒடித்துத் தந்தேன்." இது அவருக்கு மேலும் பிரமிப்பைத் தந்தது.

"ஒரு வருஷந்தானே ஆகியிருக்கும்? அதற்குள் அந்தச் செடியை மொட்டை யடிக்கலாமா?"

"தழை பறித்தால் என்ன? மறுபடியும் வளர்கிறது? அதற்குத்தானே அது இருக்கிறது?"

"அன்றைக்கு எனக்கு இந்த ஞானம் இல்லையே! உன்னை விரட்டி வைதேனே! உனக்கு நான் என்ன செய்யப் போகிறேன்!" என்றார் நெஞ்சம் நெகிழ.

"அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். உங்கள் மரத்திலிருந்து நிறையக் கொத்துக் கொத்தாக ஒடிக்க வேண்டிய நிலை வரும். அப்போது தழைக்குத் தழை கொடுத்து விடுங்கள்."

"சின்னப்பா! அப்படிச் சொல்லாதே! உனக்கு அந்த நிலை வரவேண்டாம். போதும், ஒருதடவை வந்தது!"

"என்ன ஐயா, அப்படிப் பயந்து போகிறீர்கள். மறுபடியும் அம்மை பூட்டவேண்டும் என்று நான் சொல்கிறேன்? வேறு சந்தர்ப்பம் வரத்தான் போகிறது."

முத்துசாமிக்கு அவன் குறிப்பு விளங்கவில்லை. "என்னப்பா சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"அந்தக் குழந்தை போனபோதே முண்டகக்கண்ணியம்மாளை வேண்டிக் கொண்டேன். கொடுத்ததைத் திருப்பிக் கொடுத்தால் அந்தக் குழந்தைக்கு வேப்பிலைப் பாவாடை கட்டி உன் சந்நிதிக்கு அழைத்துக்கொண்டு வருகிறேனென்று வேண்டிக் கொண்டிருக்கிறேன்."

"அது எப்போது நடக்கிறதோ! நான் உனக்குப் பெருங் கடனாளியாகி விட்டேன்" என்றார் முத்துசாமி.

"அப்படிச் சொல்லாதீர்கள். முண்டகக்கண்ணியம்மாள் கண்கண்ட தெய்வம். அவள் கண் பார்த்து விட்டாள். என் பிரார்த்தனை நிறைவேறத்தான் போகிறது" என்று சொல்லிப் புன்சிரிப்புச் சிரித்தான் சின்னப்பன்.

முத்துசாமிதான் பகற் கனவு காண்பதில் சமர்த்தராயிற்றே. பேசும்போதே அகக் காட்சி இதுவென்று அவருள் விரியும் அல்லவா? அவர் உள்ளத்தே ஏதோ காட்சியைக் கண்டார்.

"அப்படியா! மிகவும் ஆனந்தம்" என்று அவரும் வாய் நிறையப் பல்லாகச் சிரித்தார்.





# நியூயார்க்கில் தீபாவளி

''இப்போதெல்லாம் இந்திய மக்களை நியூயார்க் நகரத்தில் சந்திப்பது ஆச்சரியமாகவே இல்லை'' என்றார் எனது நண்பர். அவரும் என்னைப் போலவே இந்தியாவிலிருந்து அமெரிக்கா வந்திருப்பவர்.

''உண்மைதான். இந்தியர்கள் எல்லாத் தேசங்களிலும் இருக்கின்றனர். எந்த நாட்டுக்குச் சென்றாலும் இரண்டு மூன்று இந்தியர்களையாவது நிச்சயமாகக் காண முடியும். நியூயார்க் நகரத்தைப் பற்றிக் கேட்க வேண்டுமா? இங்கே அவர்களைக் காண்பது அமெரிக்க மக்களைக் காண்பது போல் அவ்வளவு சகஜம்'' என்று பதிலளித்தேன்.

எந்த நாட்டினரும் அயல் நாடு சென்ற புதிதில் நமது நாட்டு மக்களைப் பார்த்து அளவளாவி இன்புறுவதில் மகிழ்ச்சி கொள்ளுவர். சொந்த தேசத்தில் சர்வ சாதாரணமாகக் காணப்படும் வித்தியாசங்கள், பிளவுகள், பிரிவினைகள் எல்லாம் வெளிநாட்டில் மறைந்து போகின்றன. வட இந்தியர், தென்னிந்தியர் என்ற பேதம்கூட மறைந்து விடுகிறது.

நியூயார்க்கில் வசிக்கும் இந்தியர்கள் பல துறைகளில் ஈடுபட்டுள்ளவர்கள். சிலர் மாணவர்கள்; சிலர் ஐ. நா. சபையில் பணியாற்றுவதற்கென்று பாரத அரசாங்கம் ஸ்தாபித்திருக்கும் காரியாலயத்தில் வேலை செய்பவர்கள். சிலர் இந்திய வர்த்தக கம்பெனிகளில் உத்தியோகம் பார்ப்பவர்கள். மற்றும் சிலர் நமது அரசாங்கத்துடன் தொடர்பே இல்லாது ஐ. நா. 'செக்ரடேரியட்'டில் பணியாற்றுபவர்கள். இவர்கள் அமெரிக்காவிலேயே நிரந்தரமாக இருப்பவர்கள். இவர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை இந்தியா சென்று வர ஐ. நா. ஸ்தாபனம் செலவை ஏற்றுக் கொள்கிறது. இம்மாதிரி வேலை பார்க்கும் தென்னிந்தியர்கள் பலர் இருக்கின்றனர்.

கொலம்பியா பல்கலைக் கழகத்தின் அருகில் அகில உலக மாணவர்களுக்கெனத் தற்சமயம் நியூயார்க் ராஜ்யத்தின் கவர்னராக இருக்கும் புகழ்பெற்ற ராக்பெல்லர் குடும்பத்தினர் பெரிய மாளிகை ஒன்றைக் கட்டியிருக்கின்றனர். இங்கு நிறைய இந்திய மாணவ, மாணவிகள் வசிக்கிறார்கள். இவர்கள் ஒன்றுகூடி இந்திய மாணவ சங்கம் ஒன்று நிறுவியிருக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும், தீபாவளி, ஹோலி, சுதந்திர தினம் முதலிய பண்டிகைகளை உற்சாகத்துடன் கொண்டாடுகின்றனர். எப்பொழுதாவது ஒன்று இரண்டு ஹிந்தி படங்கள்கூட வரவழைத்துக் காண்பிக்கிறார்கள்.

இந்த அகில உலக மாளிகையில் வசிக்கும் மற்ற நாட்டவருக்கு இந்தியாவைப் பற்றி அறியவும், இந்தியர்களுடன் பழகவும் இங்கே சிறந்த வாய்ப்பு கிடைத்திருக்கிறது. மேலும், பிற நாட்டவர்களின் பண்டிகைகளைப் பற்றியும் பழக்க வழக்கங்கள் பற்றியும் தெரிந்து கொள்வதற்கு வாய்ப்புள்ளது. இம்மாதிரி சந்தர்ப்பத்தை இந்திய மாணவர்களும் நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். இந்தியர்கள் பலர், முக்கியமாக மாணவர்கள் இந்நாட்டுப் பெண்களுடன் உல்லாசமாக வெளியே செல்வதும் உண்டு.

நமது ஸ்தானிகர் நிலையத்தில் வெளிநாட்டில் மேல் படிப்புப் படித்துத் தேர்ச்சி பெற்றவர்களுக்கு இந்தியாவில் உள்ள வேலைவாய்ப்புகளின் பட்டியல் ஒன்று பிரசுரிக்கிறார்கள். அதன்படி இங்கு இருக்கும் இந்திய மாணவர்கள் பலர் மனு அனுப்பி வேலை கிடைத்து இந்தியா திரும்பியிருக்கிறார்கள். அதற்கும் ஏராளமான போட்டிதான்! சிறந்த தேர்ச்சி பெறும் இம்மாணவர்கள் இந்தியாவின் முன்னேற்றத்துக்குப் பயன்படுவார்கள்.

தனியாக வசிக்கும் மாணவர்களை அநேக அமெரிக்கக் குடும்பங்கள் வாரக் கடைசிகளில் தங்கள் தங்கள் வீட்டுக்கு அழைத்து விருந்தளிக்கின்றனர்.

குடும்பத்துடன் வசிக்கும் இந்தியர்களில் பலர் தனியாக இருக்கும் மாணவர்களை அழைத்து இந்தியச் சாப்பாடு அளிக்கிறார்கள். இந்த வருடம் இங்கு வசிக்கும் தென்னிந்தியர்கள் ஒன்றுகூடி, திரு விசுவநாதன் என்பவர் வீட்டில் தியாகராஜ உற்சவம் கொண்டாடினார்கள். திரு சி. வி. நரசிம்மன் ஸ்ரீ தியாகராஜர் பாடல்களுக்குப் பொருள் விளக்கி, அப்பாடல்களைத் தியாகராஜர் எச்சமயம் இயற்றினார் என்பதையும் சிறப்பாக எடுத்துக் கூறினார். இவ்விழா மிகவும் சிறப்பாக நடந்தது. அதேபோல் தீபாவளிப் பண்டிகையையும் இந்தியர்கள் கூடிச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். நியூயார்க்கில் தீபாவளியன்று குழாய்த் தண்ணீரில் குளித்தாலும், ''கங்கா ஸ்நானம் ஆச்சா?'' என்று தென்னிந்தியர்களுக்குள் கேட்டுக் கொள்வதிலுள்ள ஆனந்தமே தனி தானே.

ஐ. நா. வில் வேலை செய்பவர்களுக்கெனக் கட்டப்பட்ட 'Parkway village'ல் தான் பெரும்பாலான குடும்பங்கள் வசிக்கின்றன. இவ்விடத்தில் எல்லா நாட்டவரும் வசிக்கின்றனர். இங்கு ஐ. நா. பள்ளிக்கூடம் ஒன்றும் இருக்கிறது. எப்படி டெல்லி, கல்கத்தா, பம்பாய் முதலிய நகரங்களில் தென்னிந்தியர்களின் எண்ணிக்கை அதிகரித்து விட்டதோ, அவ்வாறே, முன்புக்கு இப்பொழுது நியூயார்க்கிலும் நிறைய இந்தியர்கள் இருக்கிறார்கள்!

தீபாவளிப் பண்டிகையன்று விசேஷ கேளிக்கைகள் — நரசிம்மன் தியாகராஜ கிருதிகளுக்கு விளக்கம் தருகிறார்.



டி. லலிதா நடராஜன்



# மங்கலக் காட்சிகள்

மணமங்கலம்: அவன் அரசகுமாரன். வீரத்தால் போர்களில் வென்றவனைத் தன் இரு கண்களால் வென்று கொண்ட அழகி அவள். செவ்வாய், வெண்பல் மென்னகைத் தளிர்க்கொடியாக ஒசிந்து நின்று தன் கைகளில் ஏந்திய மாலையின் நடுவட்டமே அவனைக் காணும் கண்களின் பாதையாகக் கொண்டு அந்த மணப் பெண் காட்சியளிக்கிறாள். முகத்தில் மணக் கோலத்தின் குறும்பு நகையழகு குலவ அவள் மாலைக்காகத் தோள் நெகிழ்ந்து நிற்கிறான், எதற்கும் நெகிழாத அந்த மன்னாதி மன்னன். அரசனுடைய மணத்துக்கு 'மணமங்கலம்' என்று பழைய இலக்கியங்கள் பெயரிட்டிருக்கின்றன.

அணைக்கருந் தானையான்
அல்லியந்தார் தோய்ந்தான்
மணக்கோல மங்கலம்
யாம்பாட - வணக்கருஞ்சீர்
ஆரெயில் மன்னன்
மடமகள் அம்பணைத்தோள்
கூரெயிற்றுச் செவ்வாய்க்
கொடி.



நாள் மங்கலம்: அன்று அரசனுக்குப் பிறந்த நாள். சர்வாலங்காரமும் நிறைந்து முடிசூடிய கோலத்தில் அரியணையில் வீற்றிருக்கிறான். அருகில் அவனுடைய பெருந்தேவியும் வீற்றிருக்கிறாள். அவைக்களத்தின் இருபுறமும் கவிஞரும், புலவரும், அமைச்சர்களும், பிறரும் தத்தம் இருக்கைகளில் அமர்ந்திருக்கின்றனர்.

அவையில் பாணர் அமர்ந்து பாடிக் கொண்டிருக்கிறார். ஆடல் மகளிர் நாட்டியம் ஆடிக் கொண்டிருக்கின்றனர். எங்கும் மிக இனிய இசைக் கருவிகளின் ஒலி நிறைந்து ஒலிக்கிறது. தன் பிறந்த நாளின் மகிழ்ச்சியை எல்லோரும் நுகர்வதற்காகப் பரிசில்களை வாரி வழங்குகிறான் அரசன். அரசனுடைய பிறந்த நாள் கொண்டாட்டத்துக்கு 'நாள் மங்கலம்' என்று பழைய இலக்கிய மரபு பேர் கூறுகிறது. அதற்கே வெள்ளணி நாள் என்றும் மற்றொரு பெயருண்டு.

கரும்பகடும் செம்பொன்னும்
வெள்ளணிநாள் பெற்றார்

விரும்பி மகிழ்தல்
வியப்போ - கரும்பிமிர்தார்,

வெம்முரண் வேந்தரும்
வெள்வளையார் தோள்விழைந்து

தம்மதில் தாந்திறப்பர்
தாள்.



நீராடல் மங்கலம்: பேரரசன் நீராடுகிற கோலாகலமான காட்சியைச் சித்திரிப்பதற்கு நீராடல் மங்கலம் என்று பெயர். 'மண்ணு மங்கலம்' என்றும் இதற்கு மற்றொரு பெயர் உண்டு. 'மண்ணுதல்' என்றால் நீராடுதல்.

கங்கை நீர் நிறைந்த பொற் குடத்தை எடுத்து அரசனை நீராட்டுகின்றனர். கங்கை முடியில் பாய்ந்து தோள்களின் வழியே வடிந்து இறங்கி அரசனின் பரந்த மார்பைத் தழுவுகிறாள். அரசன் நீராடும் இத்தகைய அழகான மங்கலக் காட்சியையே இங்கே காண்கிறோம்.

பொலிவு மங்கலம்: குறுகுறு விழித்துச் சிறு கை நீட்டித் தொட்டிலில் தவழ்கிறது தங்க மதலை. சாதாரணக் குழந்தையன்று அது. பேரரசனுக்குப் பிறந்த செல்வம். காந்தள் மொட்டுப் போல் சின்னஞ்சிறு வாயிதழ்களைக் காட்டிச் சிரிக்கிறது. பேரரசன் தன் குழந்தையைப் பார்த்து மகிழும் நிலைக்குப் 'பொலிவு மங்கலம்' என்று அழகாகப் பெயரிட்டிருக்கிறார்கள். இந்தக் காட்சியில் பொலிவும் இருக்கிறது; மங்கலமும் இருக்கிறது.

கொங்கலர் கோதைக்
குமரி மடநல்லாள்
மங்கலம் கூற
மலிபெய்திக் - கங்கையாள்
பூம்புனல் ஆகம்
கெழீஇயினன் போரடுதோள்
வேம்பார் தெரியல்எம் வேந்து.

கருங்கழல் வெண்குடைக்
காவலற்குச் செல்வாய்ப்
பெருங்கட் புதல்வன்
பிறப்பப் - பெரும்பெயர்
விண்ணோர் மகிழ்ந்தார்
வியலிடத்தார் ஏத்தினர்
எண்ணார் அவிந்தார் இகல்.




குடை மங்கலம்: நாற்திசையும் புகழ் பெருக வீற்றிருக்கும் அரசனின் குடை நிழல் செம்மையாயிருந்து புகழ்பட ஆள்வதைக் 'குடை மங்கலம்' என்பார்கள்.

வாள் மங்கலம்: அரசனுடைய நல்லாட்சிக்கு எப்படி அவனது வெண் கொற்றக் குடை அடையாளமாகக் கூறப்படுகிறதோ, அப்படியே அவனுடைய வீரத்துக்கு வாள் அடையாளமாகிறது. பேரரசனுடைய வீர வாளைப் புகழ்ந்து கூறுவதற்குத் தமிழில் 'வாள் மங்கலம்' — என்று பெயர்.

அரசன் போருக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறான். முன்னோர்கள் பரம்பரையாகப் போர்க் காலங்களில் பயன்படுத்திய வீர வாளைப் பொன் தட்டில் வைத்துப் போர்க்கோலம் பூண்டு வந்து நிற்கும் நாயகனிடம் பூசிப் போடு நீட்டுகிறாள் அவன் பட்டத்தரசி.

புறப்பொருள் வெண்பா மாலையில் வரும் இந்த மங்கலக் காட்சிகளை அழகுபட அமைத்துக் கொடுத்திருக்கிறார் நமது ஓவியர் விஜயா.

தன்நிழலோர் எல்லோர்க்கும்
தண்கதிராம் தற்சேரா
வெந்நிழலோர் எல்லோர்க்கும்
வெங்கதிராம் - இன்னிழல்வேல்
மூவா விழுப்புகழ்
முல்லைத்தார்ச் செம்பியன்
கோவாய் உயர்த்த குடை.

கொங்கவிழ் ஐம்பால்
மடவார் வியன்கோயில்
மங்கலம் கூற
மறங்கனலும் - செங்கோல்
நிலந்தரிய செல்லும்
நிரைதண்டார்ச் சேரன்
வலந்தரிய ஏந்திய வாள்.

நீங்கள் தயங்கத்





தேவையில்லை



எப்போதும்





விரும்பி

வாங்கலாம்

வாழ்வும், அழகும் அரிய பொக்கிஷம். அவை பணயம் வைப்பவை அல்ல. ஒருவேளை நீங்கள் உங்களது அதிர்ஷ்டத்தைப் பார்க்க விரும்பினால் எதை வேண்டுமானாலும் சோதனைக்கு உட்படுத்துங்கள்; ஆனால் உங்கள் அழகை மட்டும் பணயமிட வேண்டாம். ஒருதரம் உங்கள் அழகின் பொலிவை அஜாக்கிரதையால் இழந்துவிட்டால் பிறகு வாழ்நாள் முழுவதும் அழுது அழுது வருந்தினாலும் முன்பு திகழ்ந்த அழகைத் திரும்பப் பெறவே முடியாது. **ஆப்கன் ஸ்னோ** அழகு சாதனங்கள் இருக்கும்போது கவர்ச்சி மிகுந்த தோற்றத்தைப் பற்றிய கவலையே உங்களுக்கு வேண்டியதில்லை. அவைகள் சிறந்தவை... நம்பகமானவை... விலையிலும் மிதமானவை...

# ஆப்கன் ஸ்னோ

அழகு சாதனங்களை

ஈ. எஸ். படான்வாலா, பம்பாய் - 27 (இந்தியா)

# பள்ளிக் கிடக்கும் பேரன்பு



புண்டரீக மகரிஷி என்று ஒரு பக்தர். அவர் மகா விஷ்ணுவிடம் மிகுந்த ஈடுபாடு உடையவர். ஆகலால் பெருமானைத் தவிர வேறு தெய்வங்களை வணங்குவதில்லை என்ற வைராக்கியமும் உடையவர். எந்தத் தலத்துக்குச் சென்றாலும் அங்கு சிவன் கோயில் இருந்தால் அங்கு கண்ணை மூடிக் கொண்டே நடப்பார். விஷ்ணு கோயில் இருந்தால் மாத்திரமே கோயிலுள் சென்று அங்குள்ள பரந்தாமனைத் தரிசிப்பார். இவர் வைஷ்ணவ க்ஷேத்திரங்கள் பலவற்றுக்குச் சென்று பெருமானைக் கண் குளிரக் கண்டு, தரிசித்து விட்டு, காஞ்சிக்கு வருகிறார். அங்குதான் இடறி விழுகின்ற இடம் எல்லாம் கோயிலாயிற்றே. ஆதலால் அத்தகிரி அருளாளனாகிய வரதர், சொன்னவண்ணம் செய்தவர், அஷ்டபுயகரர், இன்னும் உலகளந்தார், பச்சை வண்ணர், பவள வண்ணர் முதலிய பெருமான்களையெல்லாம் கண்டு வணங்கித் தொழுது விட்டு மேலும் நடக்கிறார் மேற்கு நோக்கி. வழியிலே திருப்பாற்கடல் என்று ஓர் ஊர். ஊரின் பெயரைக் கேட்டதுமே அங்கு கட்டாயம் பரந்தாமன் பள்ளி கொண்டிருப்பானே என்று எண்ணுகிறார். அந்த எண்ணத்தோடேயே ஊருக்குள் நுழைந்து வீதிகளையெல்லாம் கடந்து ஊரின் மேல்கோடிக்கே வருகிறார். அவருக்கு எதிரே ஒரு கோயில். கோயில் வாயிலிலே ஒரு குளம். கோயிலைச் சுற்றி ஒரு மதில். அந்த மதில் மேல் சிவ சின்னமான நந்தி. இவைகளைப் பார்த்தவுடனேயே தெரிந்து கொள்கிறார், அது ஒரு சிவன் கோயில் என்று. 'அட, பாவமே! இருந்து இருந்து சிவன் கோயிலுக்கு வரவா இத்தனை சிரமப்பட்டோம். இந்தப் பக்கமே தலை வைத்துப் படுக்கக் கூடாதே. பொல்லாத சிவன், ஊர்ப் பெயரைத் திருப்பாற்கடல் என்று வைத்துக் கொண்டல்லவா நம்மை ஏமாற்றி யிருக்கிறான். நாமும் ஏமாந்து போய் விட்டோமே' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டு திரும்பி விடுகிறார், கோயிலுள் நுழையாமலேயே. இதையெல்லாம் மகாவிஷ்ணு பார்க்கிறார். முனிவரை அவ்வளவு எளிதாகத் திருப்பி அனுப்ப இஷ்டமில்லை அவருக்கு. உடனே ஒரு கிழ வேதிய வடிவில் முனிவரை அணுகுகிறார். அவரை அடுத்து 'என்ன சுவாமி! தரிசனத்துக்கு வந்தவர்கள் கோயிலுக்குள் நுழையாமலேயே திரும்புகிறீர்கள் போலிருக்கிறதே, ஏன்? என்ன காரணம்?' என்று மெதுவாக விசாரிக்கிறார். அவரும், 'நான் இது பெருமான் கோயிலாக்கும் என்று நினைத்துக் கொண்டு வந்து விட்டேன். பார்த்தால் அது சிவன் கோயிலாக இருக்கிறது. நான் சிவனை வழிபடுகிறதில்லை. ஆதலால் திரும்புகிறேன்' என்கிறார். வந்த கிழ வேதியரோ விடுவதாக இல்லை. 'இல்லை சுவாமி, நீங்கள் கொஞ்சம் அவசரப்பட்டு விட்டீர்கள். நீங்கள்



பார்த்த கோயில் பெருமான் கோயிலேதான். வாருங்கள் நானும் உடன் வருகிறேன். தரிசனம்செய்து விட்டே போகலாம்' என்கிறார். 'என்ன வேதியரே! இப்படிச் சொல்கிறீர், பெருமான் கோயில் மதிலில் ஏது ரிஷபம்? அங்கு ரிஷபம் இருப்பதைப் பார்த்தேனே. தப்புத் தண்டாப் பண்ணி நம்மைச் சிவன் கோயிலுக்குள் இழுத்துக் கொண்டு போய் விடாதேயும்' என்கிறார் முனிவர். வேதியர்



தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்



இன்னும் வலியுறுத்தி அழைக்கவே புண்டரீகர் ஒரு நிபந்தனை போடுகிறார். 'சரி! நான் கண்ணைக் கட்டிக் கொள்கிறேன். நீர் என்னைக் கைப்பிடித்து அழைத்துச் செல்லும். கோயிலுள் சென்றதும், அங்கு இருப்பவர் பெருமான்தானா என்று நிச்சயப்படுத்திக் கொள்ளும். நானும் என் கைகளாலே தடவிப் பார்த்துத் தெரிந்து கொள்கிறேன். அதன்பின் அவர் பெருமான்தான் என்றால் கண் கட்டை அவிழ்த்து அவரைப் பார்க்கிறேன். இல்லை, அவர் லிங்க உருவத்தில் உள்ள சிவன் தான் என்றால் கண் கட்டை அவிழ்க்காமலேயே, அவர் முகத்தில் விழிக்காமலேயே திரும்பி விடுகிறேன். அப்போது என் விரதத்துக்குப் பங்கம் ஒன்றும் நேராது அல்லவா' என்கிறார். வந்திருப்பவரோ மாமாயன். எப்படியும் புண்டரீகரை இழுத்துச் செல்லக் கங்கணம் கட்டிக்கொண்டு நிற்பவர் ஆயிற்றே. ஆதலால் 'சரி, உம் நிபந்தனைப்படியே அழைத்துச் செல்கிறேன்' என்று சொல்லி அப்படியே கண்ணைக் கட்டி அழைத்துச் செல்கிறார். கோயில் வாயில், பிராகாரம், மகாமண்டபம், அர்த்தமண்டபம் எல்லாம் கடந்து கருவறைக்கே சென்று விடுகின்றனர் இருவரும். அங்கு சென்றதும் முனிவரிடம், 'சுவாமி நான் பார்த்து விட்டேன்; இங்கு நிற்பவர் வேங்கடேசனே; சிவன் அல்ல' என்று சொல்கிறார். புண்டரீகர்தான் இந்த வார்த்தைகளினால் எல்லாம் ஏமாறுதவர் ஆயிற்றே. ஆதலால் கண்ணில் கட்டிய கட்டை அவிழ்க்காமலேயே தடவிப் பார்க்க முனைகிறார். அந்த நேரத்தில் உடன் வந்த வேதியர் தம் சுய உருவத்தோடு இங்குள்ள லிங்கத் திரு உருவை ஏந்தி நின்ற ஆவுடையாரின் பேரில் ஏறி நின்று கொள்கிறார். தடவிப் பார்த்த புண்டரீகருக்குப் பெருமானின் நீண்டு உயர்ந்த கிரீடம் தெரிகிறது. கைகளில் சங்கு சக்கரம் ஏந்தியிருப்பது தெரிகிறது; கையில் பிடித்துள்ள கதை தெரிகிறது; கட்கம் தெரிகிறது; இடையில் உடுத்திய பீதாம்பரம் தெரிகிறது. அதன் மேல் புரளும் பொன் அரைஞாண் தெரிகிறது. இன்னும் சந்தேகம் இருக்கக் காரணம் இல்லையே என்று நினைந்து கட்டிய கட்டை அவிழ்த்துக் கண் திறந்து பார்க்கிறார். தன் முன் நிற்பவன் அந்தத் திருப்பதி வேங்கடேசனே என்று தெளிகிறார். பக்கத்தில் திரும்பிப் பார்த்தால் உடன் வந்த வேதியரைக் காணோம். அத்துடன் அந்த வேங்கடேசன் சிவனை ஏந்தும் ஆவுடையார் பேரில் எழுந்து நிற்பதையும், முழங்கால் வரை லிங்கத் திருவுருவிலே அமைந்திருப்பதையும் கண்டு உண்மையிலேயே கண் திறக்கப்படுகிறார். 'சிவன் வேறு, விஷ்ணு வேறு அல்ல; இருவரும் ஒருவரே' என்ற உண்மையைப் புண்டரீகர் அன்று உணர்கிறார். அந்த உண்மையை விளக்கிக் கொண்டே இன்றும் அந்தத் திருப்பாற்கடல் என்ற ஊரிலே **பிரசன்ன வேங்கடேசன்** என்ற பெயரிலே பெருமான் ஆவுடையார் பேரில் ஏறிக் கொண்டு நிற்கிறார். இந்தப் பிரசன்ன வேங்கடேசனைக் காண விரும்புகிறவர்கள் சென்னையிலிருந்து பெங்களூர் செல்லும் ரோட்டில் செல்ல வேணும். காவேரிப்பாக்கம் என்னும் போலீஸ் ஸ்டேஷன் பக்கம் காரை நிறுத்தித் தெற்கு நோக்கிச் செல்லும் பாதையில் செல்ல வேணும். அங்கு **ஆஷணேசுரர்** என்னும் பழைய சிவன் கோயில் எப்படிப் பெருமான் கோயிலாக மாறி நிற்கிறது என்பதையும் காண வேணும். பக்கத்திலேயே கோயில்



கொண்டிருக்கும் திருப்பாற்கடலானை ரங்கநாதனையும் அவன் துணைவி ரங்கநாயகியையும் கண்டு வணங்கவும் வேணும். இப்படித் தனக்கு என்று ஒரு கோயில் இருந்தும், இந்தத் திருப்பாற்கடல் நாதன் தம் கோயிலையும் ஆக்கிரமித்துக் கொள்ளவிட்டு விடுகிறார் அந்தப் பழைய பரமசிவன். அதன் பின் தம் துணைவியாம் அபீத குசாம்பாளுடன் **வாலீசர்** என்னும் பெயரில் ஊரின் ஓர் ஒதுக்குப்புறத்தில் இடம் பிடித்து நின்று கொண்டிருக்கிறார் இன்றும்.

இப்படி சிவன் கோயில் விஷ்ணு கோயிலாக மாறிய கதையை இந்தத் திருப்பாற்கடல் என்னும் சிற்றூரிலே கேட்கிறோம். இந்தக் கதைக்கு எதிர்க் கதை ஒன்றும் உண்டு. அக்கதையில் பெருமாள் கோயில் சிவன் கோயிலாக மாறிப் பிரசித்தி அடைகிறது. அந்தக் கதை நடந்த தலம்தான் **திருக்குற்றாலம்**. திருக்குற்றாலம் என்றதும் நமக்கு அருமையான அருவிதான் நினைவுக்கு வரும். அந்த அருவியில் நீராடுவதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்று சொன்னால் அது மிகையாகாது. இந்த அருவிக்கரையும் குற்றாலத்தின் மரங்கடர்ந்த கலைக் காட்சியும் காணக் கண் கோடி வேண்டும்.

செல்வம் மல்கு
    செண்பகம் வேங்கை
சென் றேறிக்
    கொல்லை முல்லை
மெல்லரும்பு ஈனும்
    குற்றாலம்

என்று சம்பந்தர் லயித்துப் பாடி விருக்கிறார்.

சம்பந்தப் பெருமானும் போற்றிப் பணியும் திருக்குற்றாலத்தில் நிகழ்ந்த அந்தக் கதையையுமே கொஞ்சம் தெரிந்து கொள்ளலாமே. இமயத்திலே நடக்கிறது இறைவன் திருமணம். அதனைக் காண மக்கள் தேவர் முனிவர் எல்லாம் திரண்டு செல்கின்றனர். இப்படி எல்லோருமே இமயத்திலே சென்று சேர்ந்ததினால், பளுவைத் தாங்காமல் வடதிசை தாழுகிறது. தென்திசை உயர்கிறது. நாட்டைச் சமமாக்க இறைவன் 'என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்ட' **அகஸ்திய முனிவரை** அழைத்துத் தென்திசை செல்ல உத்தரவிடுகிறான். தனது திருமணம் முடிந்ததும் தானும் துணைவியும் திருமணக் கோலத்திலே அகஸ்தியர் இருக்கும் இடம் வந்து காட்சி கொடுப்பதாயும் சொல்கிறான். அகஸ்தியர் தென்திசை நோக்கி வந்து பொதியமலையில் தங்குகிறார். அங்கு வந்த உடன் **திரிகூடமலைப்** பக்கம் செல்கிறார். அங்கு சென்றதும் அங்குள்ள கோயில் விஷ்ணு கோயில் எனக் காணுகிறார். இவருக்குச் சைவ வைஷ்ணவ பேதங்கள் இல்லை என்றாலும், கோயில் காவலர்கள் சிவச் சின்னம் தரித்து வந்த அகஸ்தியரைக் கோயிலுள் அனுமதிக்க மறுக்கிறார்கள். அகஸ்தியர், பக்கத்தில் உள்ள **இலஞ்சி**க்குச் செல்கிறார். அங்குள்ள **குமரனை** வணங்குகிறார். அந்தக் குமரன் சொல்லிக் கொடுக்கிறார்: திரிகூடமலைக் கோயிலை எப்படிச் சிவன் கோயில் ஆக்குவதென்று. அவர் உபதேசித்தபடியே மறுநாள் காலை அகஸ்தியர் துவாதச நாமம் தரித்து, பெரிய வைணவ வேடத்தோடு கோயிலுக்கு வருகிறார். காவலர்கள் ஏமாந்து கோயில் உள்ளே இவரை அனுமதிக்கின்றனர். இவரும் அர்ச்சகர்களிடம் தான் பெருமானை ஏகாந்த சேவை செய்ய விரும்புவதாகச் சொல்கிறார். இவர் போட்டிருந்த வேடத்தில் மயங்கி அர்ச்சகர்களும் இவரைக் கருவறையில் தனியே இருக்க அனுமதித்து விடுகிறார்கள். அவ்வளவுதான்; உள்ளே சென்ற அகஸ்தியர் கதவடைத்துத் தாழ் போடுகிறார். பெருமான் தலையிலேயே கையைவைத்து ஒரு அமுக்கு அமுக்குகிறார். கைலைப் பிரானை நினைந்து 'குறுகுக குறுகுக' என்று மந்திர உச்சாடனம் வேறே செய்கிறார். அவ்வளவுதான், நீண்டுயர்ந்து நின்ற வண்ணத்தில் இருந்த நெடுமால் கூனிக்குறுகி சிவலிங்க வடிவில் அமைந்து விடுகிறார். அகஸ்தியரும் பின்னர் கதவைத் திறந்து பெருமானைக் காட்டி வைணவ அர்ச்சகர்களுக்கு அங்கு இடம் இல்லை என்று விரட்டி விடுகிறார். பெருமாளும் அன்று திரிகூட மலைக் கோயிலை விட்டு வெளியே ஓடி, சங்க வீதியில் **நன்னகரப் பெருமாள்** என்ற பெயரோடு வதிகிறார். இப்படித்தான் இத் திரிகூடத்தில் குறுகிய பெருமான் குறும்பலா அடியிலே **குற்றால நாதராக** நிலைக்கிறார் தன் துணைவி **குழல்வாய் மொழியுடன்**.

இந்தத் திருப்பாற்கடல், குற்றாலம் என்னும் தல வரலாறுகள் எதைக் குறிக்கின்றன? நாட்டிலே அன்றிருந்த சைவ வைணவ வேற்றுமைகளையே அல்லவா? இப்படிக் கதைகளும், அதற்கேற்பக் கோயில்களும் அமைந்த பெருமக்களே இந்த வேற்றுமைகளைக் களைந்து சைவ வைணவ ஒற்றுமைகளை நிலைநாட்டவும் வழி வகுத்



சுடரை வளர்க்கின்றான்
சுத்தம் வளர்க்கின்றோம்
—போட்டோ: பி. குருமூர்த்தி.

இருக்கிறார்கள். அந்த ஒற்றுமையை உருவகித்துக்காட்ட எழுந்த மூர்த்தமே **சங்கர நாராயண** மூர்த்தம். அந்தச் சங்கர நாராயணர் திருவுருவம் எப்படி எழுந்தது என்று அறியச் **சங்கரன் கோயிலுக்கே** செல்லவேணும். திருநெல்வேலி ஜில்லாவில் சங்கரநயினார் கோவில் ஒரு தாலூகா. இதற்கு ரயில்வே நிலையமும் உண்டு. பஸ்ஸிலும் இந்த ஊருக்குச் செல்லலாம்.

சங்கன் பதுமன் என்று இரண்டு நாகர்கள். இவர்களில் சங்கன் சிவபக்தன், பதுமன் விஷ்ணுபக்தன். இவர்களுக்கிடையே ஒரு விவாதம்; சிவன் பெரியவரா, இல்லை விஷ்ணு பெரியவரா என்று. இதே சந்தேகம் அன்னை பார்வதிக்குமே வந்து விடுகிறது. 'இருவரும் ஒருவர் தாமா?' என்றே கேட்கிறாள் இறைவனிடம். அவர் என்ன அவ்வளவு எளிதில் விடை சொல்லிவிடுவாரா? மண்ணுலகத்தில் புன்னைவனத்தில் சென்று தவமிருக்கச் சொல்கிறார். அப்படியே அன்னையும் அங்கு வந்து தவம் கிடக்கிறாள். ஆடிமாதம் பௌர்ணமி அன்று சங்கரனார், சங்கரநாராயணர் உருவில் வந்து அம்மைக்குக் காட்சி கொடுக்கிறார். இதனால் அரி அரன் எல்லோரும் ஒன்றே என்றும் அரியும் அரனார் திருவில் அடங்கினவரே என்ற உண்மையும் நிலைபெறுகிறது. சங்கரனும் பதுமனுமே சங்கரநாராயணர் காட்சியைக் கண்டு உண்மை உணர்ந்து கொண்டிருக்கின்றனர். ஏதோ அரனும் அரியும் தனித்தனியே இருப்பவர்கள் என்ற எண்ணம் போய், இருவரும் பின்னிப் பிணைந்து நிற்பதிலே ஓர் உண்மையை அல்லவா உணர்த்தியிருக்கிறார்கள். நமது கவிஞர்கள் இந்த உண்மையையே,;

**அரன் நாரணன் நாமம்:**
**ஆன்விடை புள் ஊர்தி**
**உரைநூல்மறை: உறையும்**
**கோயில் — வரைநீர்**
**கருமம் அழிப்பு அளிப்பு:**
**கையது வேல் நேமி:**
**உருவம் கார் மேனி ஒன்று.**

என்று **பொய்கை ஆழ்வார்** பாடுகிறார். இரண்டு பெயர்கள், இரண்டு வாகனங்கள், இரண்டு இருப்பிடங்கள், இரண்டு தொழில்கள், இரண்டு ஆயுதங்கள், இரண்டு வண்ணங்கள். ஆனால் இவை எல்லாம் ஒரே கடவுளுக்கு என்று கூறுவதன் மூலம் சங்கரநாராயணர் உருவத்தை நம்முன் நிறுத்துகிறார். இவருடன் சேர்ந்த **பேய் ஆழ்வாரோ** திருமலை சென்று **வேங்கடவாணனைக்** கண்குளிரக் கண்டு தரிசித்தபோது இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து நிற்கும் எழிலையே அனுபவித்திருக்கிறார்.

**தாழ் சடையும் நீள்முடியும்,**
**ஒண் மழுவும் சக்கரமும்,**
**சூழ் அரவும், பொன்நாணும்**
**தோன்றுமால் — சூழும்**
**திரண்டு அருவி பாயும்**
**திருமலைமேல் எந்தைக்கு**
**இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து.**

என்று தம் அனுபவத்தை அழகாகச் சொல்லவும் செய்கிறார். சைவ வைஷ்ணவர்களுக்குள்ளே, ஆம், புண்டரீகருக்கும் அகஸ்தியருக்கும் இடையே இந்த வேற்றுமை வளர்ந்தாலும், அந்த அரனும்-அந்த அரியும் இணைந்து ஒன்றாகி விடுகிறார்கள். அப்படிப் பின்னிப் பிணைந்து இணைந்தே நிற்க வைத்துவிடுகிறான் கலைஞன். அவனது கற்பனையே சங்கரநாராயணரைக் கற்பித்து நம்முன் நிறுத்துகிறது நல்ல சிலை வடிவில்.

இந்தப் பின்னலும் பிணைப்பும் சங்கர நாராயணருடன் நிற்கவில்லை. அன்னையும் அத்தனையும் இணைத்தே பிணைத்திருக்கிறது. எங்கும் நிறைந்த பெருமானைச் சிவன் என்றும், எல்லாம் வல்ல அன்னையைச் சக்தி என்றும் உருவகம் பண்ணினார்கள். இந்த சக்தியும் சிவமும் தனித்தனியே இருந்து தொழிற்படுவதில்லை என்றும் காணுகிறார்கள். இந்த ஆணும் பெண்ணும் சேர்ந்து இணைவதிலேதான் உலக வளர்ச்சியே இருக்கிறது என்பதையும் உணர்கிறார்கள். ஆதலால் ஒரே உருவில் அம்மையையும் அத்தனையும் இணைக்கிறார்கள். அந்த மூர்த்தியை **அர்த்தநாரி** என்றும் **மாதிருக்கும் பாதியன்** என்று பாடிப் பரவுகிறார்கள். காதல் மடப்பிடியோடு களிறு வழிவதைக் கண்டு, வரிக்குயில் பேடையோடு ஆடிவருவதைக் கண்டு, பேடை மயிலொடும் கூடிப் பிணைந்து வருவதைக் கண்டு, 'கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்று எக்களிப்போடு பாடுகிறார் **அப்பர்**. இந்த அம்மையும் அப்பனும் பிணைந்து நிற்கும் திருக்கோலமே அந்தத் **திருச்செங்கோட்டு** மலைமேல் ஏறி நிற்கிறது. இந்த வடிவைக் காணக் கொஞ்சம் கால் கடுக்க நடந்து மலை கடந்தே ஆகவேண்டும். இந்த வடிவம் மிகவும் தொன்மையானதுதான். இந்த வடிவினைத்தானே சிலப்பதிகாரம் பாடிய **இளங்கோ** 'கங்கை

**அந்தி சாய்கிற நேரம்**
**அழகு சாய்கிற வீதி..**

—போட்டோ: பி. குருமூர்த்தி



முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து மங்கை உருவாய் மறை ஏத்த நிற்கும்' என்பர். இன்னும் 'உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி' என்று பாடிய மாணிக்கவாசகர் திரும்பவும்,

**தோலும் துகிலும்,**
**குழையும் சுருள்தோடும்,**
**பால் வெள்ளை நீறும்,**
**பசுஞ் சாந்தும் பைங்கிளியும்,**
**சூலமும், தொக்க வளையும்,**
**உடைத் தொன்மைக்]**
**கோலமே நோக்கி**
**குளிர்ந்து ஊதாய் கோத்தும்பீ!**

என்றும் தும்பியைக் கூவி அழைக்கிறார். இந்த **அம்மையப்பன்** உருவிலும், அன்பு பின்னிப் பிணைந்து கிடப்பதைக் காண்கின்றோம் நாம். சக்தியும் சிவமும் தனித் தனியே நிற்பவை அல்ல என்றும் பின்னிக் கிடந்தே அருள்புரிய வல்லது என்றும் அல்லவா கற்பனை பண்ணியிருக்கிறார்கள் கலைஞர்கள்.

இத்துடன் விடவில்லை இந்த இணைப்பையும் பிணைப்பையும் நமது கலைஞர்கள். இன்னும் ஓர் இணைப்பையும் உருவகப்படுத்தியிருக்கிறார்கள். தமிழ் மக்கள் வணங்கும் வீரப் பெருமக்கள் இருவர். ஒருவன் தமிழ் மக்களுக்கே உரித்தான கடவுள் **முருகன்**. மற்றொருவன் விற் பெருந் தடந்தோள் வீரனான ராமன். இவர்கள் இருவருமே தலைசிறந்த வீரர்கள். என்றாலும் இவர்களுக்கிடையே எத்தனையோ வேற்றுமைகள். முருகன் சைவச் சார்பு உடையவன், தென்னாட்டுக்காரன். ஒன்றுக்கு இரண்டு மனைவியரை உடையவன். அவன் ஏந்தியிருக்கும் ஆயுதமோ ஞானவேல். ஆனால் ராமன் முழுக்க முழுக்க விஷ்ணுவின் அம்சம், வடநாட்டான், ஏகபத்னி விரதன், அவன் ஏந்தியிருப்பதோ கோதண்டம். இத்தனை அடிப்படை வேற்றுமைகள். 'இருந்தாலும் இருவரும் தமிழ் மக்கள் தொழும் தெய்வங்கள். இருவரும் தனித் தனியாக இருப்பதைவிட இருவரையும் இணைத்துப் பார்க்கவே விரும்பியிருக்கிறார்கள் தமிழ்க் கலைஞர்கள். ஆதலால் வேலேந்தியவனை வில்லேந்த வைத்திருக்கிறார்கள். வில்லேந்தியவனை வேலேந்தவும் செய்திருக்கிறார்கள். அவனைத் **தனுஞ் சுப்பிரமணியன்** என்று அழைத்திருக்கிறார்கள். **வில்லேந்திய வேலன்** என்று புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்கள். இந்த வில்லேந்திய வேலனைக் கல்லிலே செதுக்கி நிறுத்தியிருக்கிறார்கள் திருவையாற்றிலும் திருவண்ணாமலையிலும். செப்புச்சிலையாக வடித்து வைத்திருக்கிறார்கள் **சாய்க்காடு** என்னும் சாயா வனத்திலே. ஆம், ராமனும் முருகனும் பின்னிப் பிணைந்து நிற்கும் திருக்கோலந்தான் எத்தனை அழகு. இணைப்பிலே காணும் பிணைப்புக்குத்தான் எத்தனை கவர்ச்சி?

இந்தப் பிணைப்புகளுக்கு எல்லாம் அடிப்படை என்ன? உலகில் உள்ள உயிர்கள் அனைத்தையும் ஒன்றோடு ஒன்று இணைக்கும் வலியுடையது அன்புதானே. அன்பென்னும் பிணைப்பில்தானே உலகமே இந்த அண்டங்கள் எல்லாமே உருண்டு கொண்டு வருகின்றன. ஏன்? இந்த உயிர்களை இறைவனிடத்துப் பிணைக்கும் இயல்புடையதும் இந்த அன்புதானே. அதைத்தானே கூறுகிறார் திருமூலர்.

**பொன்னைக் கடந்து இலங்கும்**
**புலித் தோலினன்,**
**மின்னிக் கிடந்து**
**மிளிரும் இளம்பிறை,**
**துன்னிக் கிடந்த**
**சுடு பொடி யாடிக்கு**
**பின்னிக் கிடந்தது**
**என் பேரன்பு தானே.**

என்று. ஆம்! உயிர்களை ஒன்றுடன் ஒன்றாய்ப் பிணைப்பது மாத்திரம் அல்ல, உயிர்களை இறைவனிடம் பிணைப்பது மாத்திரம் அல்ல; அந்தத் தெய்வ வடிவங்களையே ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைத்து உயிர்களிடம் அவர்கள் வைத்த பேரன்பை வெளிப்படுத்துகிறார்கள். அத்தகைய அரிய பணி செய்த கலைஞர்களுக்கு நாம் தலை தாழ்த்த வேண்டாமா?

தாயார்: **அடிச்சாரைச் சொல்லி அழு...!**




குழந்தை: **அதை நீ சொல்லி அழு!**



ENICAR

ULTRASONIC

*Representatives in India:*

PHOENIX WATCH CO.,

BOMBAY-1 - CALCUTTA-1 - DELHI-6




தயாரிப்பாளர்கள்:

N. ஆறுமுகம் பிள்ளை

தங்கபஸ்பம் புகையிலை பாக்டரி

காரைக்குடி




# கல் தேர்

கிருஷ்ண பரமாத்மாவின் குமாரன் சாம்பனுக்கும் நாரதருக்கும் கொஞ்சம் மனஸ்தாபம் ஏற்பட்டு விட்டது. நாரதர், சாம்பனை எப்படியாவது ஒரு கஷ்டத்தில் சிக்க வைத்துவிட வேண்டுமென்று சமயம் பார்த்துக் கொண்டே இருந்து, கிருஷ்ண பரமாத்மாவின் கோபத்துக்கே சாம்பன் ஆளாகும்படி செய்து




விட்டார். அவ்வளவுதான்! சாம்பனுக்குப் பெரு வியாதி | பிடிக்கும்படியான சாபம் கிடைத்தது. உண்மை அறிந்ததும் கிருஷ்ண பரமாத்மா மிகவும் வருத்தப்பட்டார். என்ன செய்வது, இட்ட சாபம் இட்டதுதான். இருந்தாலும், சாபவிமோசனம்பெறத் தம் மைந்தனுக்கு ஒரு வழி சொல்லிக் கொடுத்தார். கலிங்க தேசத்தில் சந்திரபாகா நதிக்கரையில் உள்ள மைத்ரேய வனத்துக்குள் சென்று சகல உயிர்களுக்கும் உயிராய் விளங்கும் சூரியதேவனைக் குறித்துப் பன்னிரண்டு வருடங்கள் தவம்செய்தால் பாவம் நீங்கும் என்று சொன்னார். சாம்பனும் அதன்படியே தவம் செய்து சூரிய பகவானை நேரில் தரிசித்து விமோசனம் பெற்றான். மறுநாள் மைத்ரேய வனத்தை விட்டுப் புறப்படு முன் சந்திரபாகா நதியில் நீராடும்போது, நதியின் தெளிவிய நீருக்கடியில் தாமரை மலர்மீது நின்ற கோலத்தில் சூரியன் விக்கிரகம் ஒன்று இருப்பதைக் கண்டான். அந்த விக்கிரகத்தை நீரிலிருந்து எடுத்து நதிக் கரையிலேயே சூரியதேவனுக்கு ஒரு கோயில் எழுப்பி, தான் கண்டெடுத்த விக்கிரகத்தை அதில் பிரதிஷ்டை செய்தான். இந்த இடம் 'ரவி க்ஷேத்திரம்' என்றும் 'அர்க க்ஷேத்திரம்' என்றும் கபில சம்ஹிதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அந்த அர்க க்ஷேத்திரம்தான் தற்போது ஒரிஸ்ஸாவில் கோனார்க் என்று அழைக்கப்படும் சிறிய கிராமமாக இருக்கிறது. அங்கு இப்போது உள்ள சூரியன் கோயில் கி. பி. 1258ல் கங்க வம்சத்து அரசன் நரசிம்ம தேவனால் கட்டப் பெற்றது. 1200 சிற்பிகள் பதினாறு வருட காலம் வேலை செய்ய, சுமார் 23 கோடி ரூபாய் செலவில் கட்டப்பெற்றதாம் இந்தக் கோயில். பிரும்மாண்டமான இந்தக் கோயிலில் உள்ள சிற்பக் களஞ்சியங்களைப் பார்க்கும்போது அவ்வளவு சீக்கிரத்தில் எப்படிக் கோயிலைக் கட்டி முடித்தார்கள் என்று ஆச்சரியப்படத் தோன்றும்.

சூரியதேவனுக்காகக் கட்டப் பெற்ற தேர் உருவமான இந்தக் கோயிலின் வெளிப் பாகத்தில் சிறு இடம்கூட விடாமல் ஒரே சிற்பங்களாக வடித்திருக்கிறார்கள். சூரிய பகவானுடைய ரதத்துக்கு ஒரு சக்கரம்தான் உண்டு. அதை 'ஏக சக்ர ரதம்' என்று சொல்வார்கள். ஆனால் கோனார்க்கில் உள்ள இக்கோயிலுக்கு 24 சக்கரங்கள். இந்தக் கல் ரதத்தில் ஏழு குதிரைகளைப் பூட்டி யிருக்கிறார்கள். ரதத்தை அருணன் சாரத்யம் செய்வது போன்ற அருணஸ்தம்பம் ஒன்றும் அங்கு இருந்தது. தற்போது அந்த அருண ஸ்தம்பம் பூரி ஜகந்நாதர் கோயிலில் இருக்கிறது. சூரியன் கோயிலில் உள்ள ஒவ்வொரு சக்கரமும் ஒரு பட்சத்தைக் குறிக்கிறது. இரு சக்கரங்கள் ஒரு மாதத்தையும், பக்கத்துக்குப் பன்னிரண்டாக உள்ள 24 சக்கரங்கள் பன்னிரண்டு மாதங்கள் கொண்ட வருடத்தையும் குறிக்கின்றன.

இந்தியாவில் பல இடங்களில் உள்ள கல் சக்கரங்கள் எல்லாவற்றிலும் இந்தச் சக்கரங்கள்தான் மிக்க அழகு வாய்ந்தவை. அவைகளைப் பார்க்கும்போது சுழன்றுகொண்டே இருந்த சக்கரங்கள் திடீரென்று நின்ற நிலையில் இருப்பது போன்ற ஒரு பிரமைத் தோற்றம் ஏற்படுகிறது. அசைவற்ற அந்தச் சக்கரங்கள் மெல்ல அசைந்து போவதுபோல் தோன்றுகின்றன. அந்தச் சக்கரங்களின் ஓரங்களில் உள்ள பொடி வேலைப்பாடுகளையும் இடையில் உள்ள சிறு வட்ட வடிவமான உருவங்களையும் செதுக்க எவ்வளவு நுட்பமான சிறு கருவிகளை உபயோகித்தார்களோ என்று ஆச்சரியம் ஏற்படுகிறது. இவற்றில் அநேகமாக ஒவ்வொரு சக்கரத்திலும் ஒரு காதல் ஜோடியின் உருவம் இடம் பெற்றிருக்கிறது.





இரு தலையணைகள் கொண்ட ஒரு கட்டில். அதில் ஓர் அழகிய இள மங்கை நாணத்தோடு வீற்றிருக்கிறாள். பக்கத்தில் அவள் காதலன் உட்கார்ந்து அவளுடன் உரையாடிக்கொண் டிருக்கிறான். அந்த இளம் ஜோடிகளுக்குப் பேச என்னதான் இருக்குமோ! பேசுகிறார்கள், பேசுகிறார்கள், எழுநூறு வருடங்களாகப் பேசு கிறார்கள். இன்னும் பேசிக்கொண்டுதான் இருக்கிறார்கள். தவம் செய்யும் ரிஷிகள் ஒரு பக்கம் மோன நிலையில் அமர்ந்திருக்கிறார்கள். நாட்டியக் குழுவினர், வாத்திய இசைவாணர், குதிரை மீது சவாரி செய்யும் வீரர்கள் முதலிய பல உருவங்கள் சக்கரங்களில் இடம் பெற்றுள்ளன.

கோனார்க் கோயிலைப் பார்த்துத்தான் விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவ ராயருக்கு, சக்கரம் அமைத்த கோயில் ஒன்று கட்ட வேண்டுமென்று தோன்றியதுபோலிருக்கிறது. அந்தக் காலத்து பிரபல சிற்பிகளை யெல்லாம் வரவழைத்து ஹம்பியில் விட்டலேசுவரருக்கு (கி.பி. 1513) ஓர் அழகிய ஆலயம் எடுக்கக் கட்டளை யிட்டார். சிற்பிகளின் உளிகள் பாறைகளின்மீது நர்த்தனம் புரிந்தன. கற்கள் மங்கையர்களாகச் சிரித்தன. கொடிகள் படர்ந்து மலர்கள் பூத்துக் குலுங்கின. அந்த ஆலயத்தின் எதிரில் கருடாழ்வாருக்குத் தனி யாக ஒரு விமானம் உருவாகியது. இதற்கு நான்கு கல் சக்கரங்கள் பொருத்தி, இரண்டு கல் யானைகளைப் பூட்டினார்கள். இந்தக் கல் தேர் பார்ப்பதற்குக் கற்பனையில் தோன்றும் கந்தர்வ லோக விமானம் போல் மிக அழகாக இருக்கிறது. இந்தக் கோயிலின் கருடாழ்வார் விமானத்தில் உள்ள சக்கரங்களை நன்றாகச் சுற்றமுடியும். யாத்திரைக்கு வருகிறவர்கள் இந்தச் சக்கரங்களைச் சுற்றினால் புண்ணியம் என்ற நம்பிக்கை வளர்ந்து வருகிறவர்கள் எல்லோரும் அதைச் சுற்றிக்கொண்டிருக்கவே அதன் கல் அச்சு தேய்ந்து ஒடிந்து விடும்நிலைக்கு மெலிந்துவிட்டது. பிறகு அதை யாரும் சுற்றாமல்படி புதைபொருள் இலாகாவினர் இப்போது பார்த்துக் கொள்கிறார்கள்.

கிருஷ்ணதேவ ராயர் மிக அழகான ஆலயம் அமைத்தார் என்றால் நாம் ஒரு சாதாரணக் கோயிலாவது அதைப் போலக் கட்டுவோமே என்று வடபெண்ணை நதிக் கரையில் உள்ள தாட்பத்திரியில் (கி. பி. 1465) ராமலிங்க நாயுடு என்பவர் ஒரு கோயில் கட்டியிருக்கி றார். சிந்தாவரங்கஸ்வாமி கோயில் என்ற இந்த ஆலயத்திலும் ஒரு கல்தேர் இருக்கிறது. நான்கு சக்கரங்கள்கொண்ட அந்தத் தேருக்கு இரண்டு குதிரைகளைப் பூட்டிக் கருடாழ்வார் சவாரி செய்கிறார்.

தமிழ்நாட்டில் பல கல் ரதங்களும் கல் சக்கரங்கள் உள்ள மண்டபங்களும் உள்ளன. அவை கோனார்க் கோயிலுக்கு முந்திய காலத் தில் தோன்றியதாகவே இருக்க வேண்டும். சிதம்பரம் சபாநாயகர் கோயிலில் இருக்கும் நிருத்த மண்டபத்திற்கு ஒரு கல் சக்கரம் பொருத்தப்பட்டிருக்கிறது. இந்தச் சக்கரம் நாளடைவில் உடைந்து சிதறிப் போகவே, அதைச் சேர்த்து இப்போது சிமிட்டியினால் மூடிக் கட்டியிருக்கிறார்கள். இந்தச் சக்கரம் முழு வதும் நுண்ணிய வேலைப்பாடுகள் நிரம்பி, அச்சு, கடையாணி முதலியவைகளுடன் பார்ப்பதற்கு அந்த மண்டபத்தையே சக்கரம் தாங்கி நிற்பதுபோலப் பிரமிக்கும் வகையில் மிக அழகாக இருந்திருக்கிறது.

திருவிடை மருதூர் மஹாலிங்க ஸ்வாமி கோயிலில் பூசக் குளத்துக்கு எதிரில் உள்ள மண்டபத்துக்கு இரு கல் சக்கரங்கள் அமைக் கப்பட்டுள்ளன. இவை இப்போது கவனிப்பா ரின்றிக் கழன்று போயிருக்கின்றனவே தவிர, எங்கள் மீது தவறில்லை என்று சொல்லுவது போல இரண்டு சிறு குதிரைகள் அந்தப் பெரிய மண்டபத்தில் பூட்டப்பட்டு இருக்கத் தயாராக நிற்கின்றன.

கும்பகோணம் நாகேசுவரர் ஆலயத்து அலங்கார மண்டபத்தில் உள்ள கல் சக்க ரங்கள் மிக அழகு வாய்ந்தவை. இந்த

1. கோனார்க் கல் ரதம். 2. திருவாரூர் கல் தேர். 3. ஹம்பி யிலுள்ள கல் தேர். 4. கும்ப கோணம் சாரங்கபாணி கோயில் கல் தேர். 5. மேல்ப்பழையாறை



6. தாராசுரம். 7. திருவலஞ் சுழி. 8. தஞ்சாவூர். 9. திரு விடைமருதூர். 10. கும்பகோ ணம் நாகேஸ்வரர் கோயில்.



மண்டபத்தைச் சேணம் பூட்டிய இரு அழகிய குதிரைகள் இழுக்கின்றன.

கும்பகோணம் சாரங்கபாணி கோவிலின் விமான அமைப்பே விசித்திரமானது. அங்கு சன்னிதிக்குப் போக இரண்டு பக்கமும் இரண்டு வாயில்கள் இருக்கின்றன. உத்தராயணத்தில் வடக்கு வாயிலாகவும், தக்ஷிணாயனத்தில் தெற்கு வாயில் வழியாகவும் உள்ளே போக வேண்டும். இவ்வளவு நியதியுடன் கூடிய கர்ப்பக்கிருக விமானம் பெருமாள் உறையும் வைகுண்டத்தைப் போலவே அமைக்கப்பட்டுள்ளது என்று சொல்கிறார்கள். மூன்று கலசங்களுடைய அந்த விமானத்துக்கு "வைதிக விமானம்" என்று பெயர். சாரங்கப்பெருமாள் தன் அழகான விமானத்தில் ஏறி முதலில் அயோத்திக்குச் சென்று, பிறகு அரங்கமாநகர் வந்து, அங்கிருந்து கும்பகோணம் வந்து சேர்ந்தாராம். இந்த வைதிக விமானத்துக்கு இரண்டு பக்கங்களிலும், பலமான இரண்டு கல் சக்கரங்கள் பூட்டப்பட்டுள்ளன. இந்த ரதத்தை இழுக்கும் இரண்டு யானைகளும், குதிரைகளும் 'வேகமாகப் போனால், உள்ளே துயில் கொண்டிருக்கும் சாரங்கன் எங்கே விழித்துக் கொண்டு விடுவானோ' என்ற பயத்துடன் அன்ன நடை போடுகின்றன.

தாராசுரம் ஐராவதேசுவரர் ஆலயத்தில் கோவிலை ஒட்டித் தென் புறம் ஒரு மண்ட ம் இருக்கிறது. அதற்கு ஒரு கல் சக்கரம் பொருத்தப்பட்டு யானைகளும், குதிரைகளும் இழுக்கின்றன. இந்தக் கோவிலை இரண்டாம் ராஜராஜ சோழன் (கி. பி. 1146-1163) கட்டினான். ராஜ ராஜேஸ்வரம் என்ற பெயர் மருவி, ராராசுரம் என்று மாறி இப்போது தாராசுரம் ஆகிவிட்டது.

தாராசுரத்துக்கு இரண்டு மைல் தூரத்தில் உள்ள பழையாறை சோமநாதஸ்வாமி கோவிலிலும், தாராசுரத்தில் இருப்பதைப் போல் தென்புற மண்டபத்துக்குக் கல் சக்கரங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. இந்த மண்டபத்தை இரண்டு குதிரைகள் இழுக்கின்றன. ஒரு காலத்தில் சோழ மன்னர்களின் தலைநகரமாக இருந்த பழையாறையில் அதன் பழம் பெருமைகளைப் பற்றிச் சொல்லிக் கொள்ள இப்போது இந்த ஒரு கோவில்தான் இருக்கிறது.

திருவலஞ்சுழியில் விநாயகருக்கு ஓர் ஆலயம் இருக்கிறது. இதில் உள்ள சின்னப் பிள்ளையார் வெள்ளை நிறமாக இருப்பதால் இவரை வெள்ளைப் பிள்ளையார் (ச்வேத விக்னேசுவரர்) என்று பக்தர்கள் அன்பாக அழைக்கிறார்கள். இந்தச் சின்னப் பிள்ளையார் கோவிலில் இரண்டு மிகச் சிறிய சக்கரங்கள் உள்ளன. இதை இன்னும் சிறிய இரண்டு குதிரைகள் இழுக்கும் லாகவத்தைப் பார்த்தால், எங்கே அவைமண்டபத்துடன் அப்படியே ஆகாயத்தில் சிட்டாய்ப் பறந்து விடுமோ என்று தோன்றுகிறது.

திருவாரூரில், கல்லால் ஆன ஒரு சிறு ரதமே இருக்கிறது. மநுநீதிச் சோழனின் மைந்தன் வீதிவிடங்கன் ஒரு பசுக் கன்றின் மேல் தன் ரதத்தை ஏற்றிக் கொன்று விட்டான். தாய்ப் பசுவுக்குக் கன்றை இழந்த துயரம் தாளவில்லை. அரண்மனைக்குச் சென்றது. அரசனிடம் நீதி வேண்டி ஆராய்ச்சி மணியின் கயிற்றைத் தன் வாயினால் பிடித்திழுத்து ஒலி எழுப்பிற்று. அரசனே நேரில் வந்து பார்த்தான். பசு அரசனைக் கண்டு சோகக் குரல் கொடுத்துக் கொண்டு வீதியை நோக்கிச் சென்றது. அரசனும் அதன் பின் சென்று விவரங்கள் அறிந்தான். தன் மகன் என்றும் பாராமல், வீதிவிடங்கனை நடுத் தெருவில் கிடத்தி அவன் மீது தேர்ச் சக்கரங்களை உருட்டித் தாய்ப் பசுவின் முன்னாலேயே அவனைக் கொன்றான். இப்படி நீதி வழுவாமல் ஆட்சி புரிந்த அந்தச் சோழ மன்னனை 'மநுநீதிச் சோழன்' என்று நாடு அழைத்தது.

இந்தச் சம்பவத்தை வைத்து ஒரு சிற்பி கல்லால் ஒரு ரதத்தையே சிருஷ்டி செய்துவிட்டார்: அதன் சக்கரத்தின் கீழ் நசுங்கி உயிரிழக்கும் வீதிவிடங்கனும், கன்றை இழந்த தாய்ப் பசுவின் சோக உருவம், ஒரு பக்கமும் அங்கே உருப் பெற்றுவிட்டன.

இந்தக் கல் சக்கர வேலைகளெல்லாம் தமிழ் நாட்டில் அநேகமாக நடுக்கால சோழர் காலத்தில்தான் தோன்றியிருக்கின்றன. இப்படித் தமிழகத்தில் உள்ள பழைமையான கல் தேர்களையும், கல் சக்கரங்கள் பொருந்திய மண்டபங்களையும் கண்டுதான் கோணார்க்கில் நரசிம்ம தேவன் தேர் உருவத்தில் ஒரு முழுக் கோவிலையுமே அமைத்து விட்டானோ, என்னமோ!

# அசுர பூஜை

மாலை ஐந்து மணி. ஒரு திறந்த மோட்டார் லாரியில் ஐம்பது யுவர்கள் உத்தரபாராவுக்கு வந்து சேர்ந்தனர். கடைத் தெரு மத்தியில் வண்டி நின்றது. 'அஸாமிய மொழி வாழ்க', 'வங்காள பாஷை ஒழிக', 'எதிர்ப்போரை அழிப்போம்', 'நமது காமாட்சிக்குத் தீ விழாக் கொண்டாடுவோம்' என்று வண்டியில் நின்று கொண்டே வாலிபர்கள் கோஷம் செய்தனர். அதைச் சுற்றிலும் மக்கள் சூழ்ந்து கொண்டனர். மற்றவர்களை அடக்கிவிட்டு, ஓர் அழகிய இளைஞன் பேசத் தொடங்கினான்.

''எனது அன்பார்ந்த அஸாமிய சகோதரர்களே, கௌஹாட்டியில் போலீஸ்காரர்கள் மாணவர்கள்மீது நேற்று துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். அதில் ரஞ்ஜிட்பர் பூஜாரி வீர சொர்க்கமடைந்தார். மற்றும் ஆறு மாணவர்கள் காயமடைந்தனர். இது வெறும் போலீஸ் அக்கிரமமல்ல. வங்காளிகளின் சூழ்ச்சி. அஸாமிய மொழியை நமது ராஜ்ய பாஷையாக்க வேண்டுமென்று நாம் செய்து வரும் முயற்சியை நசுக்கவேண்டுமென்று நமக்குப் பாடம் கற்பித்தனர். அதற்குப் பழி வாங்கி, இனி இந்த நாட்டில் வங்காளிகள் தலை தூக்காமலிருப்பதற்கு நாமும் பாடம் கற்பிக்கத் தீர்மானித்தோம். வங்காளிகளின் வீடுகளைத் தீக்கிரையாக்க முடிவு செய்துவிட்டோம். வீரமுள்ள வாலிபர்கள் முன் வந்து எங்களுக்கு உதவ வேண்டும். வங்காளிகளின் வீடுகளைச் சீக்கிரம் காட்டவேண்டும். மற்றவர்கள் மண்ணெண்ணெயும், தீப்பந்தமும் எடுத்து வாருங்கள். ஒரு மணி நேரத்தில் இவ்விடத்தில் எங்கள் வேலையை முடித்துக் கொண்டு அடுத்த ஊர் போக வேண்டும்.''

''வங்காளிகள் எதிர்த்தால்?'' என்று கூட்டத்திலிருந்து ஒருவன் வினவினான்.

''அடித்து விரட்டுங்கள். கொல்லக்கூடாது. பெண்களைப் பலாத்காரம் செய்யாதீர்கள்'' என்று தலைவன் கூறினான்.

இதற்குள் தேவகாந்தபூகன் மோட்டார் லாரியின் அருகில் போய் நின்றுகொண்டு உரத்த குரலில், ''நண்பர்களே! இந்த வாலிபர்களின் பேச்சைக் கேட்காதீர்கள். இந்த ஊரிலுள்ள வங்காளிகள் என்றும் நமக்கு விரோதமாக எதுவும் செய்ததில்லை. நம்மைப் போலவே அஸாமியத்தைப் பேசுகிறார்கள். அவர்களுடைய குழந்தைகள் அஸாமியத்திலேயே என்னிடம் பாடம் கற்கிறார்கள். மேலும், வங்காளிகளின் வீடுகள் நமது வீடுகளுக்கு நடுவில் இருக்கின்றன. அவற்றைக் கொளுத்தினால் ஊர் முழுதும் அழிந்து விடும்'' என்றான்.

''இந்த அதிகப்பிரசங்கி யார்?'' என்று கேட்டான் மாணவத் தலைவன்.

''எங்கள் ஊரின் நடுத்தரப் பள்ளிக்கூட உபாத்தியாயர். மிகவும் நல்லவர்'' என்று பல குரல்கள் எழும்பின.

'' அமலதோவாயில் ஒரு வங்காளப் பெண்ணை மணக்கப் போகிறார்'' என்றான் ஒரு குறும்புக்காரன்.

க. சந்தானம்

"அவர் சொல்லுவது சரியே. இந்த ஊரில் அஸ்ஸாமியர்களின் வீடுகளும், வங்காளிகளின் வீடுகளும் பிணைந்து கிடக்கின்றன. அமலதோலாவில் ஐந்நூறு வங்காளி வீடுகள் கலப்பின்றி இருக்கின்றன. அங்கே செல்லுங்கள்" என்று ஒரு சாமர்த்தியசாலி தனது ஊரில் கலவரத்தைத் தடுக்கப் பார்த்தான்.

"அமலதோலா, எவ்வளவு தூரம்?"

"இங்கிருந்து பன்னிரண்டு மைல்!"

"சரி, அப்படியானால், இந்த ஊரில் வங்காளி வீடுகளைக் கொளுத்த வேண்டாம். அவைகளைக் கொள்ளையடிப்போம். நாங்கள் எதையும் எடுத்துக் கொள்ளமாட்டோம். இவ்வூரிலிருக்கும் ஏழைகள் அவைகளைப் பங்கு போட்டுக் கொள்ளலாம். கொஞ்சம் இளைப்பாறிச் சாப்பிட்டுவிட்டு, அமலதோலாவுக்குச் செல்லுவோம்!" என்று கூறிவிட்டுத் தனது சகாக்களுக்குச் சைகை செய்தான் தலைவன். உடனே அவர்கள் லாரியிலிருந்து குதித்தனர். ஊர்ப் போக்கிரிகள் சேர்ந்து, வழி காட்டினர். இதற்குள் கலகக் கூட்டத்தின் செய்தி வங்காளிகளுக்கு எட்டியது. அக்கம் பக்கத்திலிருக்கும் அஸ்ஸாமியர்கள் அவர்களை ஓடி ஒளிந்து கொள்ளும்படி தூண்டினர்! ஊரைச் சுற்றிலும் அடர்ந்த காடுகள் இருந்ததால் இது சுலபமாக இருந்தது. வங்காளக் குடும்பங்கள் கையிலிருந்த பணத்தையும், நகைகளையும் எடுத்துக் கொண்டு ஓடி ஒளிந்தனர்.

கொள்ளைக் கூட்டம் ஒவ்வொரு வங்காளி வீடாகப் புகுந்து உபயோகமுள்ள சாமான்களை யெல்லாம் தெருவில் எடுத்துப் போட்டன. கூடைகள் முதலிய தட்டுமுட்டுச் சாமான்களை யெல்லாம் வெளியில் திரட்டித் தீ வைத்தனர். கூலிக்காரர்களும், ஏழைகளும் சாமான்களை எடுத்துச் சென்றனர்.

ஒரு வங்காளியின் தின்பண்டக் கடையில் புகுந்து கொள்ளைக்காரர்கள் ரஸகுல்லா, ஜிலேபி முதலியவைகளை வயிறார உண்டனர். இதற்குள் இரவு பத்து மணியாகி விட்டது. லாரியில் வந்த இளைஞர்கள், ஊர்க் காலிகள் இருபது பேர்களைச் சேர்த்துக் கொண்டு அமலதோலாவுக்குச் சென்றனர்.

## 2

இந்த நடவடிக்கைகளைக் கண்டு தேவகாந்தனுக்கு அடக்க முடியாத கோபமும், துக்கமும் பொங்கின. உடனே போலீஸ்ஸ்டேஷனுக்குப் போய்த் தகவல் தெரிவிக்க வேண்டுமென்று எண்ணினான். ஆனால் அந்த ஊர் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் வங்காளிகளுக்கு விரோதி என்று அவனுக்குத் தெரியும். நல்லவர்களைச் சேர்த்துக் கொண்டு கொள்ளைக்காரர்களை எதிர்க்கலாமென்று சிந்தித்தான். அதற்குப் போதிய அவகாசமில்லை. காலத்தை வீணாக்கினால் அமலதோலாவுக்கு நிச்சயம் தீ வைத்து விடுவார்கள். நள்ளிரவில் குடும்பங்கள் வீடுகளுக்குள் மாட்டிக் கொண்டு மாய்ந்து போக நேரிடலாம். சாந்தாவின் கதி என்னவாகும்? உத்தர பாராவின் கதியைக் கவனியாமல் உடனே அமலதோலாவுக்குச் சென்று வங்காளிகளுக்கு எச்சரிக்கை செய்ய வேண்டுமென்று நிச்சயித்தான். தன் வீடு சென்று ஒரு கெட்டியான மூங்கில் தடியை எடுத்துக்கொண்டு புறப்பட்டான். தன் தாய் வனலதாவிடம் சமாசாரத்தைச் சுருக்கமாக எடுத்துக் கூறினான். இருட்டு வேளையில் காட்டு வழியாகத் தன் மகன் பன்னிரண்டு மைல் போக வேண்டுமே என்று நடுங்கினாள். கொள்ளைக்காரர் கையில் அகப்படாமல் தப்ப வேண்டுமே என்று பயந்தாள். ஆயினும் அவனை அவள் தடுக்கவில்லை. "நீ நன்மை செய்யச் செல்லுகிறாய். உன்னைத் தடுப்பது பாவம். கடவுள் காப்பாற்றுவார்; சென்று வா" என்று அனுப்பினாள்.

அஸ்ஸாமின் பெருமைகள் பிரம்மபுத்திரா நதியும், அடர்ந்த காடுகளும். புதிதாகப் பார்ப்போர் இவற்றின் எழிலைக் கண்டு பிரமிப்பார்கள். அஸ்ஸாமியர்களுக்கும் இவற்றின் பேரில் அளவற்ற பாசமுண்டு. ஆனால் வெள்ளக் காலத்தில் பிரம்மபுத்திரா பயங்கர அரக்கனாக மாறிவிடும். இரவில் காடுகள் கொடிய மிருகங்களின் சஞ்சார க்ஷேத்திரங்களாகிவிடும். தேவகாந்தன் தடியை வீசிக்கொண்டும், உரக்கப் பாடிக்கொண்டும் சென்றான். எவ்வித மிருகத்தையும் காணவில்லை. இரவு பத்து மணிக்கு அமலதோலாவை அடைந்தான். ஊர் முற்றிலும் அடங்கி அமைதி குடிகொண்டிருந்தது. கடைத் தெருவின் மத்தியில் ஒரு வீட்டின் கதவைத் தட்டினான். 'யார்?' என்று ஒரு பெண் குரல் கேட்டது. 'நான்தான் தேவகாந்தன்' என்றான். உடனே ஒரு விளக்கை ஏந்திக் கொண்டு சாந்தா கதவைத் திறந்தாள். இருவர் கண்களிலும் அன்பு பொங்கி வழிந்தது. "இந்த இருட்டில் காட்டு வழியாக வந்தீர்களா?" என்றாள்.

"ஆமாம், சாந்தா! அவசரமான காரியம். உன் அப்பா அம்மாவை உடனே எழுப்பு" என்றான்.

இதற்குள் கிரீசராயும், மாயாதேவியும் எழுந்து வெளியே வந்தனர். தேவகாந்தன் அமலதோலாவுக்கு நெருங்கி வரும் அபாயத்தை அறிவித்தான். மாயாதேவி உரத்தகுரலில் அழ ஆரம்பித்தாள். கிரீசராய் ஓடிப் போய் மற்ற வீடுகளில் உள்ளவர்களை எழுப்பிச் செய்தியைப் பரப்பினார். சில நிமிஷங்களில் கிரீசராயின் வீட்டு வாசலில் பெரிய கூட்டம் கூடி விட்டது. எல்லோரும் கூச்சல் போட்டனர். வயது வந்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கொள்ளைக்கூட்டத்தாரை எதிர்க்கலாமென்று ஆலோசித்தனர். ஆனால் மனைவிமார்கள் சம்மதிக்கவில்லை. வீடுகளைக் காக்க முயன்றால், குழந்தைகளின் உயிர்களுக்கு ஆபத்து நேரிடும். அனைவரும் ஓடிப் போய்ச் சுற்றியுள்ள காடுகளில் ஒளிந்துகொள்ள வேண்டுமென்று முடிவு செய்தனர்.

தேவகாந்தனுக்கு இது பிடிக்கவில்லை. கலகக்காரர்களை எதிர்க்க வேண்டுமென்று எண்ணினான். ஆனால் அது

வெள்ளியலைமேலே துள்ளுது ஓடம்.

போட்டோ : ஏ. வி. ராமமூர்த்தி



பலனளிக்குமென்று அவன் எவ்வாறு உறுதியளிக்க முடியும்? எதிர்ப்பினும் வெறி கொண்டு, கலகக்காரர்கள் பெண்களையும், குழந்தைகளையும் துன்புறுத்தலாம். ஆண்களின் உதவியில்லாமல், அவர்களைக் காடுகளுக்கு அனுப்புவதும் சரியாகத் தோன்றவில்லை.

மற்றவர்களோடு சாந்தாவும், அவளுடைய பெற்றோரும் காட்டுக்குப் புறப்பட்டனர். அப்பொழுது சாந்தாவின் தந்தை கிரீசர் ஒரு சிறு பெட்டியைக் கொண்டு வந்து, அவனிடம் கொடுத்து, "தேவகாந்தா! நீ இன்று செய்த உபகாரத்தை என்றும் மறவோம். இந்தப் பெட்டியில் எனக்கு வரவேண்டிய கடன் பத்திரங்கள் இருக்கின்றன. எனக்கு ஏதாவது அபாயம் நேரிட்டால், நீதான் சாந்தாவையும், அவள் அன்னையையும் காப்பாற்ற வேண்டும். அஸ்ஸாமியரும் வங்காளிகளும் மீண்டும் நண்பர்களாகி வாழ்வதற்கு நீங்கள் இருவரும் வழி காட்டிகளாக விளங்க வேண்டும்" என்று ஆசீர்வதித்தார்.

## 3

பெட்டியை எடுத்துக் கொண்டு ஊர் திரும்பத் தேவகாந்தன் புறப்பட்டான். திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. போலீஸ் அதிகாரிகளுக்குத் தெரிவித்தால் அவர்கள் எப்படியாவது கொள்ளைக்காரர்களைத் தடுக்கக் கூடும் என்று எண்ணினான். சமீபத்தில் இருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றான்.

அது ஒரு சிறிய கிளை போலீஸ் ஸ்டேஷன். ஒரு சப்-இன்ஸ்பெக்டரும் பன்னிரண்டு கான்ஸ்டேபிளும் கூடியது. சப் இன்ஸ்பெக்டர் பதவியை ரோகிணி சௌத்ரி என்பவர் வகித்தார். தேவகாந்தனைப் பிரியத்துடன் வரவேற்று, விவரங்களை விசாரித்தார். உத்தரபாரா சமாசாரங்களைக் கேட்கும்பொழுது, அவர் முகத்தில் கவலைக்குறிகள் தோன்றின. முடிவில் புன்சிரிப்புடன், 'நீ நல்லெண்ணத்துடனேயே காரியம் செய்திருக்கிறாய். ஆனால் இந்த ஆபத்தில் தலையிட்டிருக்க வேண்டாம். உன்னைக் கலகக்காரர்கள் கண்டால், ஏதேனும் கொடுமை செய்வார்கள். ஆதலால், இங்கேயுள்ள சிறையறையில் பூட்டி வைக்கிறேன். இரண்டுபேரைக் காவல் வைத்து விட்டு மீதிப்பேர்களுடன் நான் போய்த் தடுக்க முயற்சி செய்கிறேன்' என்று கூறி விட்டு ஒரு கான்ஸ்டேபிளுக்குச் சைகை செய்தார். தேவகாந்தனை அவன் அழைத்து அறையில் பூட்டினான். தனது உத்தியோகக் குறிப்புப் புத்தகத்தில், 'உத்தர பாராவில் கலகமென்ற செய்தி கேள்விப்பட்டு, இரண்டுபேர்களைக் காவல் வைத்துவிட்டு, மீதி நபர்களுடன் அங்கு செல்லுகிறேன்' என்று எழுதி விட்டுக் கிளம்பினார். போகும்பொழுது காவல்காரர்களில் ஒருவனைக் கூப்பிட்டு அவன் காதில் ஏதோ கூறிவிட்டு, மோட்டார் வரக்கூடாத காட்டு மார்க்கமாகப் போய் விட்டார் இன்ஸ்பெக்டர்.

ஒருமணி நேரத்துக்குப்பின் கலகக்காரர்கள் லாரியில் வந்து சேர்ந்தனர். எல்லா வங்காளி வீடுகளும் பூட்டியிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். ஆனால் தலைவன், "மிகவும் சௌகரியமாகப் போய்விட்டது. உடனே வீடுகளைத் திறந்து சூறையாடிவிட்டுக் கொளுத்துங்கள்" என்று உத்தரவிட்டான். அப்படியே தெருத்தெருவாகக் கொள்ளையடித்துத் தீ வைத்தனர். காண்டவ வனத்தைப் போல் அமலதோலாவை அழித்து அக்கினிதேவன் திருப்தி யடைந்தான்.

இந்தச் சமயத்தில் ஒரு போலீஸ்காரன் வந்து தலைவனிடம் தேவகாந்தன் போலீஸ் ஸ்டேஷனில் பூட்டப்பட்டிருப்பதைத் தெரிவித்தான். தலைவன் ஐந்து சகாக்களுடன் அங்கு சென்றான். உடனே தேவகாந்தனை விடுதலை செய்யும்படி உத்தர விட்டான். போலீஸ்காரர்கள் கதவைத் திறந்து பெட்டியை எடுத்து வந்து தலைவனிடம் கொடுத்தனர். தேவகாந்தனையும் அவன் முன்பு நிறுத்தினர். பெட்டியின் பூட்டை உடைத்து அதற்குள்ளிருக்கும் பத்திரங்களைப் பார்த்ததும், கலகக்காரர்கள் ஆரவாரமிட்டுச் சிரித்தனர்.

"நல்ல வேலை செய்தாய், தேவகாந்தா! இந்த வங்காளி நமது ஜனங்களுக்கு அதிக வட்டியில் கடன் கொடுத்துக் கொள்ளையடித்து வந்தான். வங்காளிகளை யெல்லாம் காட்டுக்கனுப்பி விட்டு, இந்தப் பாத்திரங்களைப் பறிமுதல் செய்து வந்தது மிகவும் சாமர்த்தியம். உனக்கு எங்களுடைய நன்றி" என்று சொல்லித் தேவகாந்தனை முதுகில் தட்டினான். தேவகாந்தன் முகம் கோபத்தால் சிவந்தது.

"நீங்கள் கொடியவர்கள். வங்காளிகள் கோழைகள். உங்களை எதிர்த்துப் போராடுவதற்குத் தயார் செய்யவே இங்கு வந்தேன். இப்பெட்டி என்னிடம் அடைக்கலமாக வைக்கப்பட்டது" என்று கத்தினான்.

தலைவன் மேலும் அதிகமாகச் சிரித்தான். "வங்காளிகளுடன் போரிட நேரிட்டிருந்தால் எங்களுக்கும் குதூகலமாக இருந்திருக்கும். ஆனால், நீயும் அஸ்ஸாமியன். உன்னை நாங்கள் ஒன்றும் செய்ய மாட்டோம். எங்களுடன் மோட்டாரில் ஏறிச் செல்லுவோம். விருப்பமில்லாவிட்டால், மனம் போனபடி போகலாம். இந்தப் பெட்டியையும், பத்திரங்களையும் மட்டும் நீக்கிரையாக்குவோம். அதுவே உனக்குத் தண்டனையாகும்" என்று கூறிவிட்டுப் பெட்டியைத் தன் சகாக்களிடம் கொடுத்து விட்டு அவர்களுடன் போய் விட்டான்.

தேவகாந்தனுக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டரின் புரட்டு தெளிவாயிற்று. தன்னை நம்பாமல், தன்னைச் சிறை வைக்கவே இந்தச் சூழ்ச்சி என்பதை அறிந்தான். ஆனால் அவர்மீது கோபித்து என்ன பயன்? தன் மனம் திரியாமலிருப்பதே ஆச்சரியமென்று எண்ணினான்.

## 4

தேவகாந்தன் அதிகாலையில் தன் வீடு சேர்ந்தான். கலகக்காரர்கள் போய் விட்டார்கள் என்று அறிந்தவுடன், அந்த ஊரிலுள்ள காங்கிரஸ்காரர்களுக்குச் சுயபுத்தி திரும்பியது. இந்த அக்கிரமங்களுக்குத் தாங்கள் ஜவாப்தாரியாக வேண்டுமென்று நினைத்து நடுங்கினர். காலை எட்டு மணிக்கு ஒரு கூட்டம் போட்டனர். தேவகாந்தனும் சென்றான். அமல



தண்டிறால் ஊற்றும் துடியான சிறுவர்கள்
போட்டோ: ஏ. வி. ராமமூர்த்தி

தோலாவில் வீடுகள் கொளுத்தப்பட்டதைக் கூறினான். காட்டில் ஒளிந்திருந்த வங்காளிகள் திரும்பிவந்து ஊர் கடு காடாகி விருப்பதைக் கண்டு, இரு ஊர்களுக்கும் நடுவில் இருக்கும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து கொண்டிருப்பதாக ஒருவன் தகவல் தெரிவித்தான். தேவகாந்தனின் தலைமையில் ஒரு குழு உணவு கொண்டுபோய் உபசரித்து, அவர்களை அமலதோலாவுக்குத் திருப்பி, மீண்டும் புதிய வீடுகள் கட்ட உதவ வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. கூட்டத்திலேயே அதற்காக ஆயிரம் ரூபாய் சந்தா வசூலிக்கப்பட்டது.

சகாக்களுடன் தேவகாந்தன் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றான். வங்காளக்



மாஜிக் நிபுணரின் மகள்: உங்களுக்காக வென்று ஸ்பெஷலாகக் கண்ணாடி பஜ்ஜி, ஆணி முறுக்கு, குண்டூசி ஓமப் பொடி, பிங்கான் லட்டு, திராவக அல்வா செய்து கொண்டு வந்திருக்கேன்!

மாப்பிள்ளை: .....!?!

---

குடும்பங்கள் ஸ்டேஷனில் சிற்சில தட்டு முட்டுச் சாமான்களுடன் குழுமிக் கிடந்தன. பெண்கள் வாய் விட்டு அலறிக் கொண்டிருந்தனர். குழந்தைகளும் கூச்சலிட்டன. தேவகாந்தனும், தோழர்களும் அவர்களைச் சமாதானப்படுத்தி அமலதோளாவுக்குத் திரும்பும்படி வேண்டிக் கொண்டனர். ஒருவரும் சம்மதிக்கவில்லை. ''எங்கள் உயிர் பிழைத்ததே பாக்கியம், வங்காளத்துக்குப் போய் விடுவோம்'' என்றனர். அந்த ஸ்டேஷனிலிருந்த வங்காள ஸ்டேஷன் மாஸ்டர் அவசரமாகத் தந்தி கொடுத்து அங்கு கூடி இருந்தவர்களை யெல்லாம் ஏற்றி அனுப்புவதற்கு ஒரு தனி வண்டிக்கு ஏற்பாடு செய்திருந்தார். அது மாலை ஆறு மணிக்கு வந்து சேர்ந்தது. எல்லா வங்காளிகளும் நுழைந்து புளி மூட்டைகள் போல் அடைந்தனர். ரயில் நகர்ந்தது. தேவகாந்தன், சகாக்களுடன் புறப்பட்டான். அப்பொழுது மறைவிலிருந்து ஒரு பெண் ஓடி வந்து அவர்களுக்கு எதிரில் நின்றாள். தேவகாந்தன் பிரமித்து, ''சாந்தா! உன்னை இதுவரையும் எங்கெங்கெல்லாமோ தேடி அலைந்தேன். காணவில்லை, எங்கிருந்தாய்?'' என்று கேட்டான்.

''எனது பெற்றோர்களுக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருந்தேன். எனக்கு வங்காளத்துக்குப் போக விருப்பமில்லை. இந்த அஸ்ஸாமில் பிறந்தேன். எனக்கு என்ன நேர்ந்தாலும் நான் இங்கேயே இறப்பேன்'' என்றாள் சாந்தா.

பிறந்த மண்ணில் உள்ள பாசம், இனம், மொழி, உறவு - சுற்றம் எல்லாவற்றுக்கும் மேம்பட்டது என்பதை அவள் எடுத்துக் கூறியதாகவே பட்டது தேவகாந்தனுக்கு. இப்படி உள்ளத்தால் ஒன்றுபட்டவர்களிடம் மொழிவெறி காரணமாகப் பூசலா? இது ஒழிய வேண்டும் என்று தீர்மானித்தவன், ''நம்மை இனி ஒருவரும் பிரிக்க முடியாது'' என்று கூறி அவள் கையைப் பிடித்துக் கொண்டான். அடுத்த நாளே உத்தரபாராவின் பிரமுகர்கள் கூடி இருவருக்கும் மணத்தை முடித்து வைத்தனர். தம்பதிகளாக வீடு வந்தவுடன் வனலதா மருமகளை வரவேற்று அவளுக்கு ஒரு பட்டு மேகலாவைப் பரிசளித்தாள். அதை ஏற்று மாமியாரின் பாதங்களை வணங்கினாள் சாந்தா. ஆனால் அவள் கண்களிலிருந்து ஒரு துளி கண்ணீர் கீழே விழுந்ததைத் தேவகாந்தன் கவனித்தான். பிரம்மபுத்திரா பள்ளத்தாக்கில் வசிக்கும் வங்காளப் பெண்கள் தங்களுக்கு வழக்கமான புடவைகளை விட்டு அஸ்ஸாமியப் பெண்களுக்குரிய மேகலாவையே அணிய வேண்டுமென்று சில இடங்களில் பலாத்காரம் செய்யப்பட்டிருந்தனர். அதை நினைத்தே சாந்தா வருந்தினாள் என்று தேவகாந்தன் கண்டு கொண்டான். ''அம்மா, சாந்தா தன் வழக்கப்படியே வங்காள உடை தரித்துக் கொள்ளட்டும்'' என்றான் தன் தாயாரைப் பார்த்து.

வனலதாவின் முகம் வாடிற்று.



''அசடு மாதிரி பெண்டாட்டியைக் கண்டதும் பல்லைக் காட்டின்டு உக்காந்துடாதே! கல்யாணத்தின்போது சொன்னபடி, வைர மோதிரத்தைப் போட்டாத்தான் சாப்பிடுவேன் என்று சொல்லச் சொன்னாள் என் அம்மா!''

''என்ன இருந்தாலும் உங்க அம்மாவுக்கு இப்படி மூளை கெட்டுப் போக வேண்டாம்! சாப்பிடுவதற்காகவா வைர மோதிரம் கேட்பது?''

---

''நான் கட்டாயப்படுத்த விரும்பவில்லை. அன்புடனேயே மேகலாவைக் கொடுத்தேன்'' என்றாள்.

''எனக்குத் தெரியும் அம்மா. நான் இனி அஸ்ஸாமியப் பெண்ணாகி விட்டேன். இம்மாதிரியே அன்பினும் வங்காளிகள் அஸ்ஸாமின் மக்களாக வேண்டுமென்றே விரும்புகிறேன். என் கண்ணீருக்குக் காரணம் மேகலாவல்ல. என் பெற்றோர்களை எண்ணியதும், கண்ணீரைத் தடுக்க முடியவில்லை. என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள் சாந்தா.

''என் மகளே!'' என்று அவளை வனலதா தூக்கி அணைத்துக் கொண்டாள்.



# 'அனஸின்'

## நரம்புத் துடிப்பால்
## ஏற்படும் தீராத தலைவலியைப் போக்குகிறது

வலி

அழுத்தம்

விறைப்புநிலை

தலைவலி ஏற்படுவதற்கு நூற்றுக்கு தொண்ணூறு காரணங்களை உங்களால் யாதென்று சந்தேகிக்கக்கூட முடியாது— உதாரணமாக, முதுகு, கழுத்து, தலை உச்சியிலுள்ள தசைகளில் ஏற்படும் விறைப்புநிலை காரணமாகவும் தலைவலியுண்டாகும். இந்த விறைப்புநிலை, சிறிய இரத்தக் குழாய்களிலும், நரம்புகளிலும் அழுத்தத்தை விளைவித்து வலியை உண்டாக்குகிறது. இந்த வலியின் காரணமாக விறைப்பு நிலையும் நரம்புத் துடிப்பும் அதிகமாகி தலைவலியைக் கடுமையாக்குகிறது.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி நான்கு மருந்துகள் சேர்ந்த ஒரு கலவையாகும். ஆகையால் அது ஒரு டாக்டரின் குறிப்புபோல பாதுகாப்பு அளிக்கிறது. 'அனஸினி'ல் உள்ள விசேஷ மருந்துச் சேர்க்கை நரம்புத் துடிப்பைத் தளர்த்துகிறது, விறைப்பு நிலையிலிருந்து விடுவிக்கிறது. உடனேயே தலைவலியிலிருந்து நிவாரணமளிக்கிறது. 'அனஸின்' துரிதமாக தீராத தலைவலியை நிறுத்துகிறது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

2 வில்லைகள் உள்ள பாக்கெட்களிலும், குடும்பத்திற்கென 32 வில்லைகள் கொண்ட ஏமாற்றுக்கிடமில்லாது சீல் செய்யப்பட்ட சீசாக்களிலும் கிடைக்கும்.




*Registered User:* GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

# பாண்ட்ஸ்

## டிரீம்ப்ளவர் டால்க்

**புத்துணர்ச்சியையும் நறுமணத்தையும்
நாள் பூராவும் அளிக்கும்**

வெய்யிலின் கொடுமையில்கூட குளுமையும் புதுமையும் பெற — மலரின் புதுமையுடனும் நறுமணத்துடனும் நாள் முழுதும் திகழ — பாண்ட்ஸ் டிரீம்ப்ளவர் டால்கை உங்கள் உடம்பின்மீது தூவிக்கொள்ளுங்கள்.




இப்பொழுது சௌகரியமான பெரியதும்
நடுத்தரமானதுமான இரண்டு சைஸுகளில் கிடைக்கும்

செஸ்ப்ரோ - பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ.யில் இணைக்கப்பெற்றது)

# ஒன்றும் புரியவில்லை

சுந்தர ராமசாமி

'அக்கா! அழாதே'' என்று வண்டிக்குள் பார்த்துச் சொல்லிவிட்டு முன்புறம் திரும்பி, இரட்டுக் காளைகளின் ஓட்டத்தில் மனத்தை லயிக்க விட்டான் அம்பி. ஓடுகிற சிரமம் தாளாமல் எலும்பெடுத்துப் போன காளைகளின் பின்னுடம்பு இரு பக்கமும் சாய்ந்து அலைக்கழிந்தன.

கோச்சுப் பெட்டியில் உட்கார்ந்து கொண்டிருந்த அம்பியின் வலது கால் கீழே தொங்கிக் கொண்டிருந்தது. தேவர் கவனியாத சந்தர்ப்பங்களில் அவனுடைய கால் கட்டைவிரல் மாட்டுக்குப் பலமான குத்தல்கள் விட்டவண்ணமிருந்தன. அப்பொழுதெல்லாம் அம்பியுடைய தலை தானாகவே உயர்ந்து வானத்துக் காட்சிகளைப் 'பராக்' பார்த்துக் கொண்டிருக்கும்.

வண்டிக்குள் முனகல் கேட்டது.

காற்று, வண்டிக்குள்ளோடு வெளியேறிய போதெல்லாம் அதற்கு என்ன மணம்! வெகு சுகமாக இருந்தது அம்பிக்கு. எல்லாம் சந்தோஷப்படும்படி இருப்பதாகவும், அதனால் நிறைய சந்தோஷப்பட வேண்டுமென்றும் அவனுக்குத் தோன்றியது.

''நான்குனேரிக்கு இன்னும் ரெண்டு மைல்'' என்று உரக்கத் திமர் அறிவிப்பு விடுத்தான் அவன். மைல் கல், வண்டியின் முன்னால் வந்து பின்னால் செல்கிற ஒவ்வொரு சமயத்திலும் அவன் இப்படி அறிவித்துக் கொண்டிருந்தான்.

வண்டிக்குள் விசும்புவது கேட்டு, ''அக்கா, அழாதே அக்கா'' என்றான் அம்பி. 'நான்குனேரிக்கு ரெண்டு மைல்' என்று சொன்னது போல் இதையும் சொன்னான் அவன்.

தலையை வண்டிக்குள் திருப்பிப் பார்த்து விட்டு, 'இருச்சே' என்று மாட்டை விரட்டினான் தேவர்.

முன்தினம் அம்பி கற்பனை செய்து பார்த்துக் கொண்டபடிதான் அதுவரை எல்லாம் நடந்து கொண்டிருந்தன.

அவன் சலவை செய்த சட்டைதான் போட்டுக் கொண்டிருந்தான். நிக்கரும் சலவை செய்ததுதான். சட்டை நுனியை நிக்கருள்போகும்படி திணித்துக்கொண்டது அவனுக்குப் புது விஷயம். வெளியூர் செல்கிறபோது ஏதாவது வித்தியாசமாகச் செய்து கொள்ளத்தானே வேண்டும்! இரண்டணா இருந்தது பையில், அவனுக்கே சொந்தமான அணா. அவன் என்ன வேண்டுமென்றாலும் அதைச் செய்து கொள்ளலாம். நான்குனேரியிலிருந்து அற்புதமான சாமான் ஏதாவது வாங்க வேண்டும். பஸ் ஸ்டாண்டில் அபூர்வமாக ஏதாவது ஒன்று இருக்கும். வேண்டுமென்றால் புதுசாக ஒரு பிளேடு வாங்கிக் கொள்ளலாம். பென்ஸிலைக் 'கிரீச் கிரீச்' சென்று சீவுகிறபோது வெகு சுகமாக இருக்கும். எல்லாம் ரொம்ப ஜோர்தான். காளை மாட்டை இப்படி அடிக்கொரு தரம் குத்திக் கொண்டிருக்க முடியுமென்று அவன் கற்பனையிலும் எண்ணவில்லை. இருந்தாலும் இந்த அக்கா இப்படி அழுகிறாளே. சீ! என்ன இது..... பாவம் அக்கா..... என்ன செய்வாள்? அம்மா, சச்சு, செல்லம்மா மாமி, லக்ஷ்மி, பிரண்ட்ஸான லலிதா, சீதைக் குட்டி, வெள்ளைப் பாப்பா எல்லோரையும், ஒரே நாளில் 'கட்' பண்ணிக் கொண்டு புறப்பட வேண்டுமென்றால்.....கஷ்டமாகத்தானே இருக்கும். கொஞ்ச நேரம் அழுதுவிட்டு அப்புறம் அவள் பாட்டுக்கு அழாமல் இருந்து விடுவாள். எல்லாம் சரியாகி விடும். எல்லாம் சரியாகிற பொழுது ஒரே சந்தோஷமாக இருக்கும்...

இடது புறம் ஒரு தடவை கண்ணோட்ட





மீட்டுவிட்டுப் பட்டென்று காளை யைக் குத்தினன் அம்பி. வானம் அவனுடைய கண்களுக்கு ஒரே வெள்ளையாகத்தான் தெரிந்தது.

தனக்குத்தானே சிரித்தபடி யிருந்தான் அம்பி. அவனுடைய பார்வை எதிலும் நிர்க்கமாகக் கவியவில்லை. கணத்துக்குக் கணம் அவனுடைய தலை அசைந்துகொண் டிருந்தது.

அம்பி, சிறிது தூரம் செல்வதற்குள் ளாகவே மீண்டும் வண்டிக்குள் திரும்பி, "என்ன அக்கா இது !" என்றன்.

"எதுக்கம்மா அழுதீங்க? போயி, மூனே மூணு நாளு இருந்துப் போட்டு வரப் போறீங்க. கூட அம்பியும் இருக்கப் போருரு. இல்லே அவசரம்னு சொன்னு தெக்கே வர காரிலே அம்மா ஒரு நொடியிலே வந்துட்டுப் போறுங்க. களக்காட்டுக்கும் நான்குனேரிக்கும் தொலையாத தூரமா ? சத்தம் போட்டுக் கூப்பிட்டாக் கேக்குமே" என்றன் தேவர்.

தேவர் இப்படிச் சொன்னது அம்பிக்கு மிகவும் பிடித்தது. 'அம்பியும்கூட இருக்கப் போருரு' என்றனே அவன் !

உலக நியதி ஒன்றைக் கூறும் மனோபாவத்திலும், மூக பாவத்திலும் தேவர் சொன்னன்.

"என்னதான் பெண் கொழந்தைகளை ஆசையா அருமையா வளர்த்திருந்தாலும் ஒரு நா இல்லாட்டா ஒரு நா வெளியிலே போன்னு பிடிச்சுத் தள்ளத்தானே வேண்டியிருக்குது. என்ன செய்யும் பாவங்க !"

சிமெண்டுத் திண்ணையில் தேங்கி நிற்கும் தண்ணீரை விரலால் இழுத்துவிட்டால் படியில் வழிவது மாதிரி, தேவரின் சொற்கள் பங்கஜத்தின் மனத்தில் விம்மிக் கொண்டிருந்த துன்பத்தை வெளியே பாயவிட்டன.

அம்பிக்குக் கோச்சுப் பெட்டியில் உட்கார்ந்து கொண்டிருக்க முடியவில்லை. அவனது முகம் வண்டிக்குள் பார்த்து வெறித்தது.

பங்கஜம் கால்களைக் கைகளால் கட்டிக்கொண்டு முகத்தைக் கால் முட்டுக்களில் புதைத்துக் கொண்டிருந்தாள். முதுகு அதிர்ந்து கொண்டிருந்தது.

அம்பியின் கண்களிலிருந்து காளையும், ரோடும், மைல்கற்களும் மறைந்தன. ஆஹா! பிரயாணம் என்ற உணர்வும் மறைந்துபோய்விட்டது.



அவன் பின்புறம் திரும்பி இரு கைகளையும் இழை ஊன்றியபடி, நார்ப் பெட்டி, பெரிய சம்புடம், டிரங்குப் பெட்டி, காய்கறிக் கூடை, இவைகளைத் தாண்டி அக்காளின் பாதத்தை ஒட்டி வந்து ஒடுங்கிக் கொண்டான். அக்காளைப் பார்த்துக்கொண் டிருந்த போதே அவனுக்குள் உள்ளூற அழுகை வந்து கொண்டிருந்தது. அவளைப் பார்த்துக் கொண் டிருப்பதைத் தவிர வேறு எதுவும் அவனுல் செய்ய முடியவில்லை.

மாமா அளித்த புடவை தான் பங்கஜம் கட்டிக்கொண் டிருந்தாள். பட்டு ஜம்பரும் மாமா கொடுத்ததுதான். கோடிப் புடவையின் மணமும் மொரமொரப்பும் இத

மாக இருந்தன. அக்காளுக்குப் பட்டுப் புடவையும் பட்டு ஜம்பரும் கொடுத்த மாமா, அவனுக்குப் பட்டு வேஷ்டி கொடுத்தார். குடுமி வைத்துக் கொள்ளாமல் தப்பித்துக் கொண்டதுகூட மாமா தயவால்தான்.

அம்பி அக்காளின் கழுத்தைப் பார்த்தான். பிடரியில் மஞ்சள் கயிறு தெரிந்தது. கழுத்தெல்லாங்கூட ஒரே மஞ்சளாக இருந்தது. தலை வகிட்டில் வைத்திருந்த பொட்டுக்கும், நெற்றிப் பொட்டுக்கும் மத்தியில் அம்மா பாம்பு விரலால் குங்குமத்தைப் பதித்திருந்தாள். ஏற்கெனவே வைத்துக் கொண்டிருந்த பூவுக்கு மேல் அம்மா சூடிய கட்டுப் பூ பொதியாய்ச் சுமந்து தனியாய்த் தெரிந்தது. காலில் நலங்கு மஞ்சள் அழிந்து விடவில்லை. தளிட்டு மஞ்சள் நிறம் பூண்டு அற்புதமான காலணி போல் பாதத்தோடு இழைந்திருந்தது.

அம்மா படித்துப் படித்துச் சொல்லிய பின்பும், அக்கா ஏன் முகத்தைக் கவிழ்த்தபடி இருக்கிறாள்?

"பங்கஜம்! அழாதே. விளக்கேற்றப் போகிறோம். அழாதே. எல்லோரையும் நமஸ்காரம் பண்ணிவிட்டு வண்டியில் வந்து ஏறிக் கொள். நாழியாகிறது" என்றாள் அம்மா.

அக்கா ஆள் ஆளாய் நமஸ்காரம் பண்ணிக் கொண்டே வந்தாள்.

"நீ எதற்குடா நமஸ்காரம் பண்ணுகிறாய்? நீயும் அங்கே மாட்டுப் பெண்ணாக இருக்கப் போகிறாயா என்ன?" என்று கேலி செய்தாள் செல்லம்மாள்.

அம்பிக்கு ஒரே வெட்கமாய்ப் போய் விட்டது!

"பங்கஜம், கண்ணைத் துடைத்துக்கொள். அழுது கொண்டே செய்ய வேண்டிய காரியமல்ல இது" என்று கண்டிப்பான குரலில் சொன்னாள் அம்மா.

அங்கு கூடியிருந்த மாமிகள் எல்லோரும் தாங்கள் வெளியேறிய அந்த நாட்களில் அழுததைப் பற்றி, சிரித்தபடி பேசிக் கொண்டனர்.

"இந்தாடா அம்பி, சம்பந்தி அம்மாவிடம் சொல்லு. வெள்ளிக்கிழமை சுமங்கலிப் பிரார்த்தனையாம். அதற்கு அக்காவைக் கூட அனுப்பணுமாம். பின்னால் நல்ல நாள் பார்த்துக் கொண்டு விடுகிறேன் என்று சொல்லு. தெரிந்ததா?"

"சரி, அம்மா!"

"வியாழக்கிழமை தேவரை வண்டியுடன் அனுப்பி வைக்கிறேன், என்ன?"

"சரி அம்மா."

வாசல் திண்ணையில் வந்து வழியனுப்பி வைக்காமல் வீட்டுக்குள்ளிருந்து வழியனுப்பி வைத்தாள் அம்மா.

அப்பொழுதெல்லாம் வண்டியில் பிரயாணம் செய்யப் போகிறோம் என்ற எண்ணமே அம்பியின் மனத்தில் நிறைந்திருந்தது.

ஆனால் இப்போது அவன் சற்றும் எதிர்பாராத காரியமல்லவா நடந்து கொண்டிருக்கிறது! அக்காளைக் கட்டிக்கொண்டு போவதில் இப்படி ஒரு சூழ்நிலை உருவாகும் என்று சற்றும் எதிர்பார்க்கவில்லையே! எல்லோரையும்போல் அவனுக்கும் அப்பா இருந்திருந்தால் அவனுக்கு ஏன் இக் கவலை?

'அக்கா!' என்று கூப்பிட்டான் அம்பி. பங்கஜம் தலையைத் தூக்கவில்லை.

"நீ அழுதால் நானும் அழுவேன்" என்று சொல்லிக்கொண்டே முகத்தை மூடிக் கொண்டிருந்த அவளுடைய விரல்களைப் பலவந்தமாக அகற்ற முயன்றான்.

அவள், அவனுடைய கையை வெடுக்கென்று தள்ளினாள்.

அம்பியும் அழ ஆரம்பித்தான். அழுது கொண்டே, "அக்கா! நானும் அழுகிறேன்" என்றான் அவன்.

பங்கஜம் தலையை உயர்த்திப் புறங்கையால் கண்களைத் துடைத்துக் கொண்டே அவனைத் தன்னோடு இறுக்க அணைத்துக் கொண்டாள்.

"அம்பி அழாதேடா, நான் அழலை... இதோ என்னைப் பாரு. சிரிக்கிறேன்... அழலை..." என்றாள் பங்கஜம்.

## 2

காலையில் கண்ணை விழித்துப் பார்த்தபோது பக்கத்தில் அத்திம்பேரைக் காணவில்லை.

முன்தினம் இரவு அவர்தான் அவனுக்குப் படுக்கை போட்டுக்கொடுத்தார்.

"நீரும் என் பக்கத்திலே படுத்துக்கும் ஓய்!" என்றான் அம்பி.

பன்மையில் தன்னை அழைத்துக் கேட்பது மணிக்கு அதுதான் முதல் தடவை. சிரிப்பாக இருந்தது அவனுக்கு. விளையாட்டாகவும் வெட்கமாகவும் இருந்தது.

மணி, அம்பியின் பக்கத்தில் படுத்துக் கொண்டான்.

"ஒரு கதை சொல்லும் ஓய்" என்றான் அவன்.



மணி, 'ஹவுண்டு அப் தி பாஸ்கர் வில்ஸ்' கதையைச் சொல்ல ஆரம்பித்தான். கதையில் வேட்டை நாய் வருவது அம்பிக்கு ருசிக்கும் என்ற எண்ணம். கதையில் வேட்டை நாய் வருவதற்கு முந்தியே அம்பி தூங்கிவிட்டான்.

அம்பி படுக்கையைச் சுருட்டி வைத்துவிட்டு அதன்மீது உட்கார்ந்து கொண்டான். அவனுக்கு இடது பக்கம் வாசல், வாசலுக்கு இடது பக்கம் மாடிப்படி.

சம்பந்தி அம்மாள் வந்து, வாசற்படியை ஒட்டி நின்றுகொண்டு மாடிப்படியின் மேலே பார்த்து, "மணி, காப்பி போட்டாச்சு" என்று கத்திவிட்டுச் சென்றாள்.

அம்பி மாடிக்குச் சென்றான்.

அழகான கட்டிலில், புத்தம் புதிய வெல்வெட் மெத்தையில் அத்திம்பேர் கவிழ்ந்து படுத்துக் கொண்டிருந்தார்.

அவன் அடுத்த அறைக்குச் சென்றான். அங்கிருந்தும் கீழே செல்ல ஓர் ஏணிப்படி இருந்தது அவனுக்கு மிகவும் பிடித்தது. அந்த ஏணிப்படியின் முதல்படியில் இறங்கிக் குனிந்து நின்றுகொண்டு கால் முட்டுக்களின் இடைவழியாகக் கீழே பார்த்தான். அடுக்களை வாசலில் சம்பந்தி அம்மாள் கரிகாய் நறுக்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. சம்பந்தி அம்மாள் கொலுவில் வைத்த பொம்மை மாதிரி அழுங்கிப் போய் இருந்தாள். வெகு ரசமாய் இருந்தது.

அம்பி திரும்பவும் கட்டிலின் அருகே வந்து, டபாவில் இலேசாக உட்கார்ந்து கொண்டான்.

மணி எழுந்திருந்து மெத்தையைச் சுருட்டப் போனான்.

"மெத்தையில் குட்டிக்கரணம் போட்டால் வலிக்காது?" என்றான் அம்பி, மெத்தையைப் பார்த்துக் கொண்டே.

"போடு, பார்ப்போம்" என்றான் மணி. அம்பி தயங்குவதைப் பார்த்து, "சும்மா போடு, நான்கூட சின்ன வயசில் ஜோராய்ப் போடுவேன்" என்றான் மணி.

மெத்தையில் ஒரு கரணம் அடித்துக் கீழே துள்ளிக் குதித்தான் அம்பி.

"சபாஷ்!" என்றான் மணி.

மணி ஏணிப்படியில் இறங்கினான்.

"நான் அப்படி வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அடுத்த அறைக்கு ஓடினான் அம்பி.

அம்பி சம்பந்தி அம்மாளின் பின்னால் வந்து இறங்கினான். சம்பந்தி அம்மாள் கீரை ஆய்ந்து கொண்டிருந்தாள். பின்னாலிருந்து அழகு காட்டிவிட்டு அம்பி அடுக்களைக்குள் எட்டிப் பார்த்தான்.

பங்கஜத்தைக் காணவில்லை.

'அக்கா எங்கே? இன்னுமா தூங்கி எழுந்திருக்கவில்லை?'

அம்பி, கொற்றடிக்கு வந்தான். ஸ்நான அறைக்குள்ளிருந்து கருமேகங்கள் வெளியாகிக் கொண்டிருந்தன. அம்பி ஸ்நான அறை வாசல் முன் வந்தான்.

என்ன ஆச்சரியம்!

பங்கஜம் வெந்நீர் போட்டுக் கொண்டிருந்தாள். குளிகூட ஆகிவிட்டது. ஈரத் தலை, நெளிசலின்றிப் படிந்து கீழிறங்கியிருந்தது. நுனியில் நாடா முடிச்சு. கோடிப் புடவை மொர மொர வென்றிருந்தது.

இந்து மணிக்கே எழுந்து குளித்துவிட்டாளா?

அம்பி வந்தது பங்கஜத்துக்குத் தெரியாது. அவள் அடிக்கடி தனக்குத்தானே சிரித்துக் கொண்டிருந்தாள். முகத்தில் 'குப் குப்' என்று சிரிப்பு வந்து வந்து மறைந்து கொண்டிருந்தது.

தனியே சிரித்துக் கொள்கிறாளே!

"ஸிஸ்டர்!" என்று கூப்பிட்டான் அம்பி.

தூக்கி வாரிப்போடத் திரும்பிப் பார்த்தாள் பங்கஜம்.

"தனியே சிரிக்கக்கறியோ?" என்று கேட்டான் அம்பி.

"யாரு தனியே சிரிக்கறு?"

"நீதான். நேத்து வண்டியிலே வறச்சே ரொம்பச் சமர்த்தா இருந்தோமேன்னு சிரிக்கறயோ?"

"போடா!"

பலதடவைகள் ஊதிப் பார்த்தும் அடுப்பு பற்றுவதாக இல்லை. புறங்கையால் கண்ணைத் தேய்த்துக் கொண்டு மீண்டும் குனிந்து ஊதிப் பார்த்தாள் பங்கஜம். ஊஹூம்.

அம்பி அடுப்பண்டையில் வந்து குந்திவிட்டு உட்கார்ந்து கொண்டான்.

"விறகு ஈரமாயிருக்கே!" என்றான்.

"அதொன்னுமில்லே" என்றாள் பங்கஜம்.

"இல்லையா? யாரு சொன்னு? இதோ பாரு" என்று சொல்லியவாறு ஒரு விறகுத் துண்டை யெடுத்து அவள் முன்னால் நீட்டினான் அவன்.

"சரி சரி, தள்ளிப் போ!"

"ஈர விறகை வச்சு வெந்நீர் போடச் சொல்லுவாளோ?" என்று கேட்டான் அம்பி. அவனுக்குக் கெட்ட கோபம் வந்துவிட்டது.

"வாயை மூடிக்கொண்டு இரு" என்றாள் பங்கஜம்.

"இல்லே கேக்கறேன், ஈர விறகை வச்சுத்தான் வெந்நீர் போடச் சொல்வாளோ?" என்று சற்று உரக்கக் கேட்டான் அம்பி.

பங்கஜம் அவன் வாயைப்பொத்தினாள்.

"சரி, சரி! நான் போட்டுக்கறேன். நீ போ" என்றாள் அவள்.

"அந்த அம்மாளுக்குப் போட என்ன கொள்ளையாம்?"

"இந்தப் பாரு அம்பி. அடி விழும்" என்று ஹோமக் குழலை அவன் தலைக்கு மேல் தூக்கினாள் அவள்.

"சரி, நான் போடறேன்."

அம்பி, பங்கஜம் கையிலிருந்து ஓமக் குழலைப் பிடுங்கி, கன்னத்தை முடிந்த மட்டும் உப்ப வைத்துக் கொண்டு 'பூ' வென்று ஊதினான்.

பக்கென்று பிடித்துக் கொண்டது அடுப்பு.

"தெரிஞ்சுதாம்மா? இப்படித்தான் அடுப்புப் பத்த வைக்கணும்."

"மகா கெட்டிக்காரன்தான் போ."

"பல் தேய்ச்சுட்டு வரேன். நீதான் காப்பி தரணும்" என்றான் அம்பி.

"அம்மா தருவா"

"அதாரு அம்மா?"

"அவர் தான்!"

"எவர்?"

"அவர் அம்மா."

"எவர் அம்மா?"

"தடியா! தடியா!" என்று கத்தினாள் பங்கஜம்.

மணி அங்கே வந்தான்.

அவனைப் பார்த்துச் சிரித்தவாறு உள்ளே சென்றாள் பங்கஜம்.

மறு நாள் மத்தியானம் வெளியே தோதாத்திரியுடன் விளையாடிக் கொண்டிருந்த அம்பி உள்ளே வந்து பார்த்த போது, அக்காவையும் காணவில்லை; அத்திம்பேரையும் காணவில்லை. கூடத்தில் மரக்கட்டையைத் தலைக்கு வைத்தபடி சம்பந்தி அம்மாள் பூனைத் தூக்கம் போட்டுக் கொண்டிருந்தாள்.

"மாமி! அத்திம்பேர் எங்கே?" என்று கேட்டான் அம்பி.

மாமி தலையைத் திருப்பிப் பார்த்துவிட்டுப் பதில் பேசாமல் இருந்தாள்.

"மாமி! எங்க அக்கா எங்கே?"

"போய் விளையாடிண்டிரு. உங்க அக்காவை யாரும் முழுங்கிடமாட்டா."

முகத்தை வலித்துக்கொண்டே அம்பி வாசல் திண்ணைக்கு வந்து ஏணிப் படியில் காலை வைத்ததும், "அம்பி வாடா ஒரு விஷயம்" என்று பின்னாலிருந்து தோதாத்திரி கூப்பிட்டான்.

அம்பி அவன் பின்னால் சென்றான். தோதாத்திரியோடு கிராமத்தை இரண்டு தடவை சுற்றிச் சுற்றி அலைந்தான். கோவிலில் மணி அடித்ததும் அவனும் நெற்றியில் நாமம் இழித்துக் கொண்டு 'திருக்கண்ணமுது' வாங்கி உண்டான்.

ஏழு மணிக்கெல்லாம் அவன் வீட்டுக்குள் நுழைகிறபோது அத்திம்பேர் வெளியே சென்றுவிட்டிருந்தார். அக்கா தோசைக்கு அரைத்துக் கொண்டிருந்தாள். 'இந்த அக்காளிடம் ஒரு நிமிஷம் பேசவேண்டும் என்றால் கூட முடியாது. சதா சமயம் ஏதாவது செய்துகொண்டிருக்கிறாளே' என்று மனத்தில் சொல்லிக் கொண்டான் அம்பி.

மறுநாள் மாலையில்தான் மீண்டும் அவனுக்கு அவனுடைய அக்காளோடு இரண்டொரு வார்த்தைகள் பேச முடிந்தது.

பங்கஜம் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தாள்.

"அக்கா! உன்னைப் பார்க்கவே முடியவில்லையே!" என்றான் அம்பி.

"இங்கேதானே இருக்கிறேன்" என்றாள் பங்கஜம்.

பங்கஜம் குடத்தைத் தூக்கி அண்டாவில் கவிழ்த்தாள்.

"எதுக்குத் தண்ணீர் இழுக்கறே?"

''புடவை துவைக்க.''
''யாரோட புடவை?''
''அவர் அம்மாவோடது.''
''நீதான் துவைக்கணுமோ?''
பங்கஜம் ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்தாள்.

என்ன சிரிப்பு வேண்டியிருக்கிறது!

அம்பிக்கு ஒன்றும் புரியவில்லை. எல்லா வேலைகளையும் அக்காதான் செய்ய வேண்டுமோ!

அண்டாவில் கையை முக்கி ஈரக் கையை அவளை நோக்கி உதறிவிட்டுச் சென்றான்.

அம்பி வாசலுக்கு வந்தான். அழித் திண்ணையில் விளக்கு இல்லை. சுருட்டி வைத்திருந்த பாயில் தலையை வைத்து ஏணிப் படி அருகில் படுத்துக் கொண்டான். அவனுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. அந்த நிமிஷத்திலேயே அந்த இடத்தை விட்டுத் தப்பிச் சென்றுவிட வேண்டு மென்று இருந்தது.

அக்காளுடன் ஒரு நிமிஷம் பேச முடியாதபடி அவளுக்கு வேலை. எல்லா வேலையும் அவள் தலையில்தான். அக்கா வீட்டில் தண்ணீர் இறைத்து அவன் பார்த்ததில்லை. புடவை துவைத்தும் அவன் பார்த்ததில்லை. 'இப்போதிருந்தே அவள் காரியம் செய்து உடம்பைக் கெடுத்துக் கொள்ளணுமா?' என்பாள் அம்மா. இங்கே எடுத்ததற்கு எல்லாம் அக்காதான். 'பங்கஜம்! சோத்தை வடிச்சயோ?' 'பங்கஜம்! கறிக்கு நறுக்கினயோ?' 'பங்கஜம்! பெருக்கித் தள்ள வேண்டாமோ?' என்ன மாமி இது? எல்லா வேலைகளையும் எங்க அக்காதான் செய்ய வேண்டுமோ? நீங்கள் மட்டும் காலை நீட்டி வம்பளந்து கொண்டிருப்பீர்களாக்கும்!

அக்கா அழுததில் தப்பில்லை.

அம்மாவையும், தங்கையையும், பக்கத்து வீட்டு மாமிகளையும், அருமைத் தோழிகளையும் பிரிகிறோம் என்பதற்காக மட்டும்தான் அக்கா அழுதாள் என்றல்லவா அவன் எண்ணிக் கொண்டிருந்தான்?

'இப்படி வந்து அகப்பட்டுக் கொண்டு இடுப்பு முறிய வேலை செய்ய நேரும் என்பது தெரிந்தால் யார்தான் அழ மாட்டார்கள்? நான்கூட அழுவேன்' என்று சொல்லிக் கொண்டான் அம்பி.

பாவம், அக்கா!

ஆயிற்று. நாளைக்கு 'ஜம்'மென்று தேவர் வந்துவிடுவான் வண்டியுடன். அக்காவைக் கூட்டிக் கொண்டு ஓடியே போய் விடலாம். தொல்லை தீர்ந்தது. வீட்டுக்குச் சென்று 'ஹாயா' இருக்கலாம் அக்காளுக்கு. நடுக்கூடத்தில் படுத்துக் கொண்டு ஆனந்தமாகத் தொடர்கதை பைண்டு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கலாம். வெள்ளைப் பாப்பாவுடன் குஷியாகப்பல்லாங்குழி ஆடலாம்.

இனிமேல் உங்களால் என்ன செய்ய முடியும், மாமி? நீங்கள்தான் இறைக்க இறைக்கத் தண்ணீர் இழுத்துக் கொள்ள வேண்டும். குனிந்து குனிந்து பெருக்க வேண்டும். கண்ணைக் கசக்கிக்கொண்டு ஈர விறகால் அடுப்பை எரியவிட்டுக் கொண்டிருங்கள். நாங்கள் போகிறோம். குட் பை!

## 3

''களக்காட்டுக்கு இன்னும் மூனு மைல்'' என்று அறிவித்தான் அம்பி.

அவனது சந்தோஷத்துக்கு இப்போது என்ன தடை? அவனுக்கும் சந்தோஷம். அவனுடைய அக்காளுக்கும் சந்தோஷம். எல்லாம் ஒரே சந்தோஷ மயம்தான்! இன்னும் ஒரு மணி நேரம் ஆகும் களக்காடு போய்ச் சேர. அந்த ஒரு மணி நேரத்தையும் முடிந்த மட்டும் அனுபவித்துவிட வேண்டும்.

மொட்டைக் காளைகள் ஜெட்டோட்டம் ஓடிக் கொண்டிருந்தன.

திருப்பங்களில் தேவரின் விரல்கள் அசைவது மூலம் எப்படிக் காளைகளுக்குச் செய்தி எட்டுகின்றன என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தான் மணி. முந்திய திருப்பத்தில் கவனித்தபோது, தேவர் எதுவுமே செய்ததாகத் தெரியவில்லை. இருந்தும் காளைகள் திரும்பத்தான் திரும்பின. காளைகளுக்குக் கண் இல்லையா? தேவரைப் போல் அவைகளுக்கும் கண் உண்டே? இருந்தாலும் அதில் என்ன ரகசியம்? அடுத்த திருப்பத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான் அம்பி.

காளையை ஒரு தடவை காலால் குத்தி விட்டு வண்டிக்குள் எட்டிப் பார்த்தான் அம்பி.

பங்கஜம் வண்டிக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கன்னத்தில் கண்ணீர் வழிந்தபடி இருந்தது. இப்பொழுது எதற்கு அழுகிறாள்!

அம்பி அசந்து போனான்.

அவன் பின்புறம் திரும்பித் தவழ்ந்த வாறே அவள் முன்னால் வந்தான்.

''அக்கா ஏன் அழறே?''

பங்கஜம் சட்டென்று புடவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''இப்போ எதுக்கு அக்கா அழறே?''
''அழலியே.''
''அழுதாய், நான் பார்த்தேன்.''
''சத்தம் போடாதே'' என்று சொல்லிக்கொண்டே தேவரின் முதுகைச் சுட்டிக் காட்டினாள் பங்கஜம்.

''இப்போ மட்டும் தேவருக்குத் தெரியப்படாதோ?''

''இல்லே, நான் அழலே.''
''சொல்லு அக்கா எதற்கு அழுதே? இனிமேல் நீ ஹாய்யாக இருக்கலாமே. தோசைக்கு அரைக்க வேண்டாம்; தண்ணி இறைக்க வேண்டாம்...''

பங்கஜம் பேசாமல் வானவெளியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''பின்னே ஏன் அழுதே, சொல்லு. நான் யாரிட்டேயும் சொல்லமாட்டேன், அக்கா!'' என்று சொல்லிக் கொண்டே அவளுடைய கரங்களைப் பற்றிக் கொண்டு இழுத்தான் அம்பி.

பங்கஜம் அம்பியைத் தனது உடம்போடு சேர்த்து அணைத்தவாறு அவனது காதருகில் குனிந்து, ''அம்பி நீ சின்னக் குழந்தையடா. இப்போ சொன்னாலும் உனக்குத்தெரியாது. பெரியவன் ஆனதும் உனக்கே தெரியும்'' என்றாள்.

அம்பிக்கு ஒன்றும் புரியவில்லை.

---

### அச்சமில்லை!

அச்சமில்லை... அச்சமில்லை அச்சமென்பதில்லையே!.. உச்சி மீது வானிடிந்து...
விழு கின்ற போதிலும் அச்சமில்லை.. அச்சமில்லை..!
அப்படியா?
யாருக்கு?
பாரதியாருக்கு!



தமாஷா—
மஹாராஷ்டிரத்தின்
மிகப் புகழ் பெற்ற
நாடோடிக் கலை

சரித்திர முக்கியத்துவம்
வாய்ந்த அஹமத்நகர்
கோட்டை - 1942ல்
இங்குதான் தேசியத்
தலைவர்கள் - பிரதமர்
ஸ்ரீ நேரு உள்படச் சிறை
வைக்கப்பட்டனர்



# ம ஹா ரா ஷ் டி ர ம்

கவிதை, கதைக்குப் புகழ்பெற்றது
சரித்திரக் கீர்த்தியும் வாய்ந்தது



சந்திரபாகா நதிக்
கரையில் அமைந்துள்ள
பண்டரிபூர் கோயிலின்
விட்டோபா மற்றும்
ருக்மாயி விக்ரகங்கள்
பண்டரிபூர் ஒரு புனித
தீர்த்தயாத்திரை ஸ்தலம்

இந்தியக் குடியரசின் ஒரு முக்கியப் பகுதியான

## மஹாராஷ்டிர ராஜ்யத்தை

சுற்றிப் பாருங்கள்



உலகப் புகழ் வாய்ந்த
அஜந்தா ஓவியங்கள்

மஹாராஷ்
டிரத்தைவளம்
பெற உதவும்
கோயினா
மின்சார
நீர்நிலைத்
திட்டம்



டைரக்டர் ஆப் பப்ளிஸிட்டி, மஹாராஷ்டிர அரசாங்கம், பம்பாய்



'அக்காகிட்டே அத்திம்பேர் என்னடா கேட்டார்?'
'அந்தப் பட்டாஸ் கட்டைக் கொடு, சொல்றேன்.'
'இந்தா பட்டாஸ்; சொல்லு.'
'இன்னிக்கு என்ன சமையல் என்று கேட்டார்!''



''நீங்க இந்த வியாதியிலிருந்து பிழைத்தது உங்க தைரியத்தினால் தான்!''
''அப்பாடி! அப்ப இவர் 'பீஸ்' கேட்கமாட்டார் போலிருக்கே!''



**பெண்:** முதலாளி! அவரு எனக்கு வேண்டுமென்கிற புடவையை வாங்க விடமாட்டேங்கரு.''
**முதலாளி:** டேய்! வேண்டுமென்பதைக் கொடேண்டா!
**சிப்பந்தி:** அது என் மனைவிங்க. கேக்கறதைக் கொடுத்தா எனக்குக் கட்டுமாங்க?



''மாப்பிள்ளே! உங்க பெட்டியை ஓரமாக வையுங்கோ.''
''அது அங்கேயே இருக்கட்டும். அதிலே எல்லோரும் தடுக்கி விழுந்திண்டு இருந்தால் தான் பெட்டி இருப்பது எனக்கு ஞாபகம் இருக்கும்; இல்லாவிட்டால் மறந்து போய் விடும்!''



''எனக்குத் திருடணுங்கற எண்ணமில்லே. ஒரு 'வீக்மோமெண்டிலே' இந்த இரும்புப் பெட்டியைத் தூக்கிப் போனேனுங்க.''
''அப்படியா! 'ஸ்டிராங்கா' இருந்தால் இன்னும் என்னவெல்லாம் தூக்கிப் போயிருப்பாயோ!''



''அப்பா! மாப்பிள்ளே குடும்பத்தோடு வருகிறார்!...''
''அதுதான் நான் சொல்லி இருக்கேனே, மகனே! கஷ்டம் வந்தால் தனியா வராதுன்னு!''



''டேய்! மூளையே இல்லையே உனக்கு; மருந்துக் கடையில் போய் மூளைக்கு மருந்து வாங்கிக் கொண்டு வா!''
''எசமான்! எனக்குன்னு கேட்டால் கொடுக்க மாட்டானுங்க. உங்களுக்குன்னு சொல்லி வாங்கி வரட்டுங்களா?''



**பையன்:** அவன் மகா புத்திசாலியாம்டா! ஆனால் பள்ளிக்கூடத்தில் படிக்கவில்லே!
**பெயிலான பையன்:** அதிலேயும் அவன் தன் புத்திசாலித்தனத்தைக் காட்டியிருக்கிறான்!

சாமா



# நாகார்ஜுன கொண்டா- சமயங்களும் தெய்வங்களும்

அண்மையில் அமைந்திருக்கும் ஆந்திரப் பிரதேசத்தில் குண்டூர் ஜில்லாவைச் சேர்ந்த பல்நாடு தாலூக்காவின் வடகிழக்கே பரவிக் கிடக்கும் கண்ணுக்கினிய பள்ளத்தாக்குதான் நாகார்ச்சன கொண்டா. அதன் தற்காப்பு, வாணிபம் இவைகளைக் கருத்தில் கொண்டு, இயற்கையன்னையின் ஆணைக்குட்பட்டு, அரைக்கச்சு போல் சுற்றி நிற்கும் குன்றுகளின் சங்கிலித் தொடர் ஒருபுறம். பல வளைவுகளில் வேகமாய்ப் பாய்ந்தோடி, அப்பள்ளத்தாக்கினை மூன்று சம பகுதிகளாகப் பிரித்து, அகழியும் ஆற்றுப் படுகையும் அமைத்துக் கொடுத்து, ஆதரித்து நிற்கும் கிருஷ்ணாநதி ஒருபுறம். இவ்விதமாக, தனிச் சிறப்புடன் இயற்கை யெழில் பூரித்து நிற்கும் நாகார்ச்சனகொண்டா, சமயப்பற்றுள்ளவர்கள் முதல், அதிகார வெறியர்கள் வரை, அத்தனை மானிடர்களையும் தன்னகத்தே வசிகரித்ததில் வியப்பென்ன இருக்கிறது?

இப்பள்ளத்தாக்கிலே, புத்த மதமும், ஆந்திர சிறப்புக் கலைகளும் செழித்து வளர்ந்திருந்தன என்பதை நாம் இப்போது அறிகிறோம். புத்த மதத்தின் மாத்யமிகப் பிரிவை ஸ்தாபித்த ஆசாரியர் நாகார்ச்சனர் இங்கேதான் வாழ்ந்தார் என்பதும் நமக்குத் தெரிந்த விஷயமே. தவிர, இப்பள்ளத்தாக்கின்கண் செய்யப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சிகளிலிருந்து வெளியான ஞாபகச் சின்னங்களும் பண்டையப் பொருள்களும், அதே நாகார்ச்சனகொண்டாவில் இந்து மதமும் தன் கட்டடக் கலை, சிற்பக் கலை, மதச் சடங்குகள் ஆகியவற்றில் தழைத்திருந்தது என்பதை வெளிப்படுத்துகின்றன. மேலும் மிகத் தொன்மையான காலமாகக் கருதப்படும் பழங் கற்காலம், நூதன கற்காலம் ஆகியவற்றைச் சேர்ந்த ஞாபகச் சின்னங்களும் இப்பள்ளத்தாக்கிலே காணக் கிடைக்கின்றன. அவற்றில் சில கி.மு. நூற்றாண்டுகளைச் சேர்ந்த, பெருங்கற்படைக் காலத்திய, சடங்குகள் செய்வதற்கான கட்டடங்கள், பூர்வீகக் குடிகளின் உபயோகத்திலிருந்த கற்கருவிகள் ஆகும். இப்பள்ளத்தாக்கிலேதான், பூர்வீகக் கற்காலத்து மனிதன், பழங் கற்கள், நுணுக்குக் கற்கள் வடிவில் அழிவற்ற குறிப்புக்களை விட்டுச் சென்றிருக்கிறான். இவ்விடத்திலே கிடைக்கப்பெற்ற நூதன கற்காலத்துப் பொருளாதார நிர்வாகத்தின் சான்றுகளாகத் திகழும் வழவழப்பான பாறைகளால் செய்யப்பட்ட கோடரி, உளி, ஆப்புகள் போன்ற கருவிகள், சில குறிப்பிட்ட முறைகள் அல்லது அமைப்புகள் கொண்ட கையாலான, மட்பாண்டங்கள், மணிகள் போன்ற கைத்தொழில் பொருள்கள் ஆகியவை அப்போதையக் குடிகள் விவசாயம், வாணிபம் இவைகளில் நாட்டங் கொண்டிருந்ததை எடுத்துரைக்கின்றன. மேலும் ஆங்காங்கே காணப்படும் புள்ளிமான், பழக்கப்பட்ட எருமை இவைகளின் எலும்புகள், அப்போதைய மனிதன் பொழுதுபோக்குக்காக இவைகளை வேட்டையாடினான் என்பதை நிரூபிக்கின்றன. மரித்தவர்களைப் புதைக்கும் வழக்கம் தன் காலத்திலேயே தொடங்கிவிட்டது என்று பறைசாற்றுவதுபோல் அந்தக் கற்காலத்து மனிதன், தன் முன்னோர்களின் சவங்களை அடுத்தடுத்தோ, தனித்தனியாகவோ அநுபோக பூமியிலும், குழிகளிலும் இறந்த குழந்தைகளை வாய்அகன்ற மட்பாண்டங்களிலும் புதைத்துவந்திருக்கிறான்.

நூதன கற்காலத்துப் பழங்குடிகள், ஈமச் சடங்குகளிலே ஒரு புதிய திட்டம் கொண்டு வந்தார்கள் என்று சொல்லக்கூடிய வகையில் கி. மு. 400 - கி. பி. 100ம் ஆண்டுகளைச் சேர்ந்த பெருங் கற்படைக் காலத்தில், இப்பள்ளத்தாக்கிலே, இரும்புக் கருவிகளுடன் கூடிய கல்லறைகள் அல்லது சமாதிகள் தோன்றியிருந்தன. இக்கல்லறைகளிலே, சவங்களுடன் மரித்தவர் உபயோகித்த இரும்புக் கோடரி, கட்டி போன்ற ஆயுதங்களையும் அடக்கஞ் செய்தார்கள். இந்தக் கல்லறைகள், புதைக்கப்பட்ட எல்லையை நிர்ணயிக்கும் வகையில், கற்கள் வளைவாக அடுக்கி வைக்கப்பட்டு, ஆழமான குழிகளைக் கொண்ட கற்களாலான சவப் பெட்டிகள் வடிவில் இருந்தன. இந்தக் கல்லறைகளின் வாயிலாக, அப்போதைய சமூகத்தினர் மரித்தவர்களை மரியாதையுடன் அடக்கஞ் செய்தார்கள். கற்களை வெட்டியெடுத்து வந்து கற்பலகைகள் செய்து, குறிப்பிட்ட வடிவில் சவப் பெட்டிகள் அமைக்கும் ஆற்றல் பெற்றிருந்தார்கள்; சமுதாயத்தோடு கூட்டாக


கி. நா. இராமச்சந்திரன் எம்.ஏ.,எப்.ஏ.எஸ்.

(விசேஷ அதிகாரி, நாகார்ச்சுனகொண்டா தொல்பொருள் ஆராய்ச்சி இலாகா)



நாகார்ஜுனகொண்டாவின் புத்த ஸ்தூபத்தைச் சுற்றியுள்ள தூண்களின் மேல் 'உஷ்ணீஷம்' என்று சொல்லப்படும் கொடுங்கையின் முன்பக்கத்தில் உள்ள புத்தரின் வாழ்க்கைக் காட்சிகளைச் சித்திரிக்கும் அற்புதமான சிற்ப வடிவங்கள்.



நாகார்ஜுனகொண்டாவிலுள்ள பல அழகான சிற்பங்களில் மேலே உள்ளதும் ஒன்று. புத்தரின் அஸ்தி அடங்கிய புத்தஸ்தூபியை அரச குடும்பத்தினர்கள் பூர்ண கும்பத்துடன் வணங்கி வலம் வருகிறார்கள்.

உழைத்து, கல்லறைக் கட்டடங்கள் எழுப்பினார்கள்; இரும்பின் உபயோகத்தை உணர்ந்தவர்களாக, இரும்பை உருக்கி, இரும்பு ஆயுதங்கள் செய்து கொண்டார்கள் என்றெல்லாம் தெரிய வருகிறது. இந்தக் கற்காலத்து மனிதனின் வரலாற்றிலே, மரித்தவர்களைப் புதைத்தல் என்பது ஒரு பகுதியாகவும், இரண்டாவது பட்சமாகவும்தான் இருந்தது. தோண்டி யெடுக்கப்பட்ட, பெருங் கற்படைக் காலத்திய பண்டைப் பொருள்களான, முன்னேற்றத்தைக் காட்டும் மண் பாண்ட வகைகளும் சண்டை சமாதான காலங்களிலே புழக்கத்திலிருந்த ஆயுதங்களும், மற்றும் சமூகத்தின் நிலையிலே அரசன், மற்றவன் என்ற தரவாரிப் பாகுபாடுகள் இருந்தன என்பதை நிரூபிக்கும் சான்றுகளும் போகப் போகச் சமூகம் முன்னேறி வந்திருப்பதை விளக்குகின்றன.

காலக் கிரமப்படி, இந்தப் பள்ளத்தாக்கின் சரித்திரத்திலே ஒரு சிறு இடைவெளி இருக்கத்தான் செய்கிறது. இந்த இடைவெளியைத் தவிர்த்துப் பார்த்தோமானால், இரண்டாவது மூன்றாவது நூற்றாண்டுகளிலே, சாதவாகனர்கள் காலத்திலும், இக்ஷ்வாகு வம்சத்தினர் காலத்திலும் இந்தப் பள்ளத்தாக்கு பட்டினத்துப் பாங்கிலே முன்னேற்றம் அடைந்திருந்ததையும், அது சமயம் இங்கே புத்த மதமும், இந்து மதமும் இன்பகரமான சூழ்நிலையிலே பரஸ்பரம் ஒன்றையொன்று ஊக்குவித்து ஒத்தவாறு வளர்ந்து பரவலாயின என்பதையும் உணரலாம். உதாரணமாக, ஸ்தூபிகள் எனப்படும் வட்ட வடிவில் அமைந்த கல்லறைக் கட்டடங்களும், சைத்தியங்கள் என வழங்கும் யானை முதுகு போன்ற தோற்றத்தைக் கொண்ட ஆலயங்களும், புத்த மதத்தைச் சார்ந்த விஹாரங்கள் எனப்படும் மடாலயங்களும், இந்து மதத்தைச் சேர்ந்த சடங்குகள் செய்யும் இடங்களும், ஆலயங்களும் தெளிவாக வரையறுக்கப் பட்டுத் தனித்தனியான பிரதேசங்களில் விளங்கியதைக் காணலாம். இவை தவிர, ஸ்நானக் கட்டங்கள் (படித்துறைகள்) எரிக்கும் துறைகள், படகுத் துறைகள் போன்ற ஆற்றங்கரைக் கட்டங்களையும் காணலாம். மேலும், இந்தப் பள்ளத்தாக்கின்கண் நடந்த புதைபொருள் ஆராய்ச்சியின் பயனாக, இங்கே வாணிபமும், பொருளாதார நிர்வாகமும் செழித்திருந்ததைக் கூறும் வகையில் தங்கம், செப்பு, ஈயம் ஆகிய உலோகங்களினால் செய்யப்பட்ட நாணயங்களும், நகைகளும் சுட்ட மண்ணினாலான கலைப்பொருள்களும், கைத்தொழில் பொருள்களும், மரித்த வீரர்களுக்கு அஞ்சலி செய்யும் வகையில் எழும்பிய ஞாபகார்த்தத் தூண்களும் வெளிக் கொணரப்பட்டன. இவ்விதமாக, இப்பள்ளத்தாக்கிலே, ஆறு சதுர மைல் விஸ்தீரணத்தில் வியாபித்திருக்கும் புராதன இடிபாடுகள், அரச பரம்பரையைச் சேர்ந்தவரில், 1-2ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஆந்திர அரசர்கள், 3ம் நூற்றாண்டைச் சேர்ந்த இக்ஷ்வாகு வம்சத்தினர், 3-4ம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஆபீரர்கள் ஆகியோரின் புகழையும், தவிர, வீரர்களைப் போற்றி வாழ்ந்த அந்தக் காலத்து நாகரிகத்தையும், பல பிரிவுகளைக் கொண்ட இந்து மதம், மஹாயான புத்தமதம், மாத்யமிகப் பிரிவைச் சேர்ந்த புத்த தத்துவ சாத்திரம், பொதுவாக மதம், சமயப்பற்று இவைகளின் மேன்மையையும் அலசிக் காட்டுகின்றன.

கற்சிலைகள், விக்ரகங்கள், சித்திரங்கள், முத்திரைகள் இவை யாவும் உள்ளுணர்ச்சியைப் பிரதிபலிக்கும் வெளித் தோற்றங்களேயாகும். எழுத்திலும் பேச்சிலும் எப்படியோ அவ்விதமே கலையிலும், வெளிப்படுத்திக் காட்டுவதற்கென்று சில விதிகளும், முறைகளும் தோன்றின. அவற்றில் தொன்றுதொட்டுப் புழக்கத்தில் இருக்கும் மும்முறைகளாவன.

1. சின்னங்களால் (சங்கேதங்களினால்) அறிவித்தல்.
2. சுருக்கமாகத் தெரிவித்தல்.
3. விஸ்தாரமாகக் காட்டுதல்.

இந்தப் பள்ளத்தாக்கின் நாகரிகத்திலே, கலையை வெளிப்படுத்தும் இந்த மூன்று முறைகளும் காணப்படு







தூண்மேலுள்ள கொடுங்கையின் பின்பக்கத்திலுள்ள சிற்பங்கள்

வின்றன. இங்கே வாழ்ந்து சிறப்படைந்த சிற்பிகள், போதிசத்துவர், சித்தார்த்தர் என்று அழைக்கப்படும் புத்தபிரானின் வாழ்க்கை வருணனையை, எவ்விதத் தெளிவு நளினம், உண்மை, வசீகரத்தோடு உருவாக்கினார்களோ? பக்கத்தில் இருக்கும் குதிரைக் காட்சியைக் கண்டதும் உங்களை அறியாமலே கீழ்வருமாறு கற்பனை செய்யத் தொடங்கி விடுவீர்கள் :

நட்ட நடு நிசி!

மெத்தென்றிருக்கும் மலரணையில் இன்பக் கனவு கண்டு முறுவலித்தவாறு புரளுகிறாள் யசோதரை.

குழந்தை ராகுலனும் கண்வளரும் அந்த வேளையிலே என்ன அற்புதமான விளையாட்டைக் கனவில் கண்டானோ, களுக்கென்று நகைத்துவிட்டுத் தாயை அணைத்துக் கொள்கிறான்.

உலகத்தின் ஜீவராசிகள் அனைத்தும், இன்ப துன்பங்களை மறந்து, உலகை மறந்து ஆனந்த நித்திரை செய்யும் அந்த நேரத்திலே ஒரே ஒரு ஜீவன் மட்டும் இமைக்காமல் உட்கார்ந்திருக்கிறது. உலகத்தின் சுக துக்கங்களை எண்ணி எண்ணிப் பக்குவப்பட்டுப் போன உள்ளம். உலகத்தின் துன்பங்களையெல்லாம் மறந்து, உயர்நிலையடைய ஆவல்கொண்ட உள்ளம். அன்றிரவே, மனைவி மக்களை, சுற்றம் சூழலை விட்டுப் புறப்பட்டு, யாரும் அறியாத இடத்திலே சென்று மெய்ஞானம் பெறத் திட்டமிட்டிருந்த உள்ளம். தன் திட்டத்தைச் செயலாக்க, மனைவியும் மகனும் தூங்கும் நள்ளிரவு நேரத்தைத் தேர்ந்தெடுத்திருந்தது அது.

சகல ராஜ லட்சணங்களும் பொருந்திய குதிரை ஒன்று அதன் வரவை எதிர்பார்த்து நின்றது. தன் எசமான் வந்துவிட்டானே என்று வாலை அசைத்து மகிழ்ச்சியைக் காட்டியதா? அல்லது தொண்டையைக் கனைத்துக் களிப்பைத்தான் காட்டியதா? இல்லை!

அவன் தன் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்ததும் அது குளம்படிச் சத்தம்கூடக் கேட்காமல் மெதுவாக நடந்து சென்றது. இரவுக்கு இரவே, அவனை அவன் போக வேண்டிய இடத்துக்குக் கொண்டு விட்டுத் திரும்பியது. அப்படிச் சொல்லாமல் கொள்ளாமல், இல்வாழ்க்கையைத் துறந்து, இரவோடு இரவாகக் கானகம் சென்ற ஜீவன் வேறு யாராக இருக்க முடியும்? பூர்வாசிரமத்தில் சித்தார்த்தனாக, அரசிளங் குமரனாக இருந்த கௌதம புத்தர்தான்!

பொழுது பலபலவென்று விடியும் நேரத்தில் குதிரை அரண்மனைக்குத் திரும்பி வந்தது. உறக்கம் நீங்கி எல்லோரும் எழுந்துவிட்டார்கள். ஏன்? சிறுவன் ராகுலனும் அவன் அன்னை யசோதரையும் கூடத் தூக்கம் கலைந்து எழுந்து விட்டார்கள்! கண் விழித்ததும் விழியாததுமாக 'அப்பா' என்று அழைத்துக் கொண்டு ஓடும் ராகுலனுக்கு ஒரே ஏமாற்றம்! கணவனையே கண்கண்ட தெய்வமாகக் கொண்ட யசோதரைக்கோ அதைவிடப் பெரிய ஏமாற்றம்!

பல நாட்களாகவே தன் கணவனின் போக்கைக் கவனித்துவந்த யசோதரைக்கு எது நடந்திருக்கும் என்று இன்னொருவர் சொல்லித் தெரியவேண்டியதில்லை. தன் கணவர் தன்னைப் பிரிந்து சென்றுவிட்டார் என்பதை அவள் உணர்ந்துகொண்டாள்.

அவள் கணவரைக் கானகத்தில் கொண்டு விட்டுத் திரும்பிய குதிரை அவளைக் கண்டதும் 'ஹேஹேஹே' என்று கனைத்தது.

உள்ளம் இருக்கும் நிலையைச் சூழ்நிலை பிரதிபலிப்பதாக எண்ணுவதுதானே உலகோரின் இயல்பு! யசோதரைக்கு அந்தக் குதிரை தன்னைப் பார்த்துக் கேலி செய்வதாகப் பட்டது. கணவரைப் பிரிந்தவளுக்கு, அவர் காரியத்துக்கு உறுதுணையா யிருந்த குதிரையின் கேலியைக் காணச் சகிக்கவில்லை. குதிரைக்குச் சூடு கொடுக்கிறாள்! இரும்பைக் காய்ச்சியல்ல; பிரிவுத் துயரால் சூடேறிவிட்ட தன் சொற்களைக் கொண்டு.

''இத்தனை நாளும் நீ என்னுடனும்தான் பழகி யிருக்கிறாயே! பழகின நல்லவன் செய்யும் காரியமா இது? இப்பொழுது அரண்மனை கிடுகிடுக்கக் கனைக்கிறாய்; 'ஹேஹே' என்று அழகு காட்டி என்னைக் கேலி செய்கிறாய்! இது நியாயமா?

''முன்னிரவு என் நாயகனைக் கானகத்திலே கொண்டு விடுவதற்காக உன் முதுகில் ஏற்றிச் சென்றாயே! அப்பொழுது மூச்சுப் பரிந்தாயா? முணுக்கென்றாவது சத்தம் செய்தாயா? அப்பொழுது மட்டும் ஒரே ஊமையாகி விட்டாயே! உனது இந்தக் கனைப்பு அப்பொழுது எங்கு சென்றது? கேடுகெட்ட மிருகமே!'' என்று கடிந்து கொள்கிறாள்.

அசுவகோஷர் என்னும் வடமொழிக் கவி 'புத்த சரிதம்' என்னும் தமது நூலிலே இப்படிப் பொருள்பட

அழகானதொரு சொற்சித்திரம் தீட்டியிருக்கிறார்! சுலோகத்தைப்படிக்கும்போதே குதிரையின் கனைப்புக் குரலைக் கேட்பது போன்று பிரமை தட்டும்படி சொற்களை அமைத்திருக்கிறார்.

அசுவகோஷரின் இந்தச் சொல்லோவியத்தைக் கல்லோவியமாக - கவினுறு காட்சியாகக் காண்கிறோம்நாகார்ச்சுன கொண்டாவிலே.



நாகார்ஜுனகோண்டா பள்ளத்தாக்கில் பௌத்த மதத்தைச் சார்ந்த இடத்திலிருந்து கிடைத்த சிற்பங்களில் முதன்மையானது புத்த பாதமாகும். சிற்பி இந்தப் புத்த பாதத்தில் பௌத்த நூல்களில் சொல்லப்பட்ட புத்தருக்கே உகந்த மகா புருஷ லக்ஷணங்களை வெகு அருமையாகச் சித்திரித்திருக்கிறான்.

அவ்விதமே, மனைவி தேவசேனையோடு கூடிய சிவகுமாரன் கார்த்திகேயனுடைய பெருமைகளையும் சித்திரித்துக் காண்பித்திருக்கிறார்கள். விக்கிரக வழிபாட்டினர் கவனத்தைக் கவரும் வகையில், இந்தப் பள்ளத்தாக்கிலே ஒரு விசேஷம் இருக்கிறது. இங்கே சிவகுமாரன் கார்த்திகேயன், தேவி தேவசேனையுடன் தனித்து நிற்கிறான். ஆனால் நம்பியின் மகளாய் வளர்ந்து தமிழ்க் குமரியாய்த் தவழ்ந்து, தமிழரின் நாடித் துடிப்பாய்த் திகழ்ந்து, கானகத்தே கண்ட கந்தனைக் கடிமணம் புரிந்து கொண்ட குலமகள் வள்ளியோ, இந்தப் பள்ளத்தாக்கிலே, கார்த்திகேயன் அருகில் காணப்படவில்லை. மேலும், இங்கே திருமாலும், நாராயணர், அஷ்டபுஜ சுவாமி, திருவிக்கிரமர் என்ற முத்திரைப் பெயர்களோடு விளங்குகிறார். தவிரவும், இங்கே ஆட்சி புரிந்த அரச பரம்பரையினர் ஒவ்வொருவரும், தங்களுக்கென்று, தனிப்பட்ட பெண்குலத் தெய்வங்களை ஏற்படுத்திக் கொண்டு, வழிபாடு செய்து பூரித்திருந்தார்கள். இந்த அரச பரம்பரையிலே ஹாரிதியைக் குல தெய்வமாகக் கொண்ட ஹாரிதி புத்திரர்களும், வாஸிஷ்டியை இஷ்ட தெய்வமாகக் கருதிய வாஸிஷ்டி புத்திரர்களும், மாதரியைக் காவல் தெய்வமாகக் கொண்ட மாதரி புத்திரர்களும், கௌதமியை ரக்ஷிக்கும் தெய்வமாக வழிபட்ட கௌதமி புத்திரர்களும் காணப்படுகின்றனர். வீர வழிபாடும் இங்கே காணப்படுகிறது. இப்பள்ளத்தாக்கின் புராதன வீரர்களிடையே படைத் தளபதிகளும், வீராங்கனைகளிடையே, சதி, ஸ்வமேதம் எனப்படும் உடன்கட்டையேறி உயிர் நீத்த அரச குலத்தைச் சேர்ந்த பெண் இரத்தினங்களும் இடம் பெற்றிருந்தனர். பரவலாக, சமூக முக்கியத்துவம் கொண்ட சில சான்றுகள் கொண்டு, இப்பள்ளத்தாக்கிலே அரசாண்ட இக்ஷ்வாகு வம்சத்து மாதர்களின் சமூக அந்தஸ்து மேம்பட்டதாக இருந்ததை உணர்கிறோம். குறிப்பாக, அந்தப் பெண்ணரசிகள் தைரியம், வீரம், பராக்கிரமம் ஆகிய அணிகலன்களுடன், சேனாபத்னி, மஹாதலவரி என்ற பட்டப் பெயர்கள் பூண்டு, யுத்தகளத்தில், லாகவமாக வாள் சுழற்றிச் சண்டையிட்டு, இறுதியில் உயிர் நீத்தோ, உடன் கட்டையேறியோ, விண்ணுலகம் சாடியதை அறிகிறோம்.

இந்த நாகார்ச்சுன கொண்டாவின் தெய்வங்களிடையே, சக்கிரனை (இந்திரனை)த் தலைவனாகக் கொண்ட திக்பாலகர்களையும், லோகபாலர்களையும், யக்ஷ அரசன் குபேர வைச்ரவணனையும், நாகராசர்களையும், மாறன் எனப்படும் மன்மதனையும், அஷ்டவசுக்கள் போன்ற உபதேவதைகளையும் காணலாம். இந்தப் பள்ளத்தாக்கின் கலைக்குவியல்களிலே, மண்ணுலகம், விண்ணுலகம், வாயு மண்டலம், நட்சத்திர மண்டலம் ஆகிய பகுதிகளில் வாழும் குடிகளும் இடம் பெற்றிருந்தனர். இங்கே காணப்படும் கட்டடப் பகுதியிலே, சமூகம், இராணுவம், சமயம் இவற்றைச் சார்ந்த மாளிகைகள், ஸ்தூபிகள், சைத்தியங்கள் விஹாரங்கள் என வழங்கும் புத்த மடாலயங்கள், கல்வெட்டுக்களில் தேவகுலம் என்று அழைக்கப்படும் ஆலயங்கள், ப்ராஸாதங்கள் என வழங்கும் கூடங்கள், மாளிகைகள், அதிவாஸங்கள் எனப்படும் தெய்வங்களுக்கான தாற்காலிக வாசஸ்தலங்கள், மேலும், இந்து மதத்தைச் சேர்ந்த ஆலயங்கள், அசுவமேதம் போன்ற வேள்விகளையும், இதர சமயச் சடங்குகளையும் செய்யும் மண்டபங்கள், அவபிருதம் எனப்படும் சுத்த ஸ்நானங்கள் செய்வதற்கென்றே ஏற்பட்ட பொய்கைகள், அரச குடும்பத்தினர் சடங்குகளைச் செய்யும் வேதி என வழங்கும் வேள்விக்கூடங்கள், கிராமச் சங்கங்கள் பல தரப்பட்ட விளையாட்டு மைதானங்கள், நாடகசாலைகள், திறந்த வெளி அரங்கங்கள், பிரார்த்தனைக் கூடங்கள், எண்ணிறந்த தூண்கள் கொண்ட மண்டபங்கள், படித்துறை (ஸ்நானக் கட்டம்), எரிக்கும் துறை (சுடுகாடு) போன்ற இடங்களில் தர்ப்பண குண்டம் என விளையும் அபிஷேக தீர்த்தம் போன்ற தூய்மையான நீர் நிறைந்த தீர்த்தேக்கங்கள் ஆகியவையும் காணக் கிடக்கின்றன.

இவ்விதமாக, புராதன இந்தியாவின் பெருமையை விளக்கும் வகையில் இந்த நாகார்ச்சுனகொண்டா பள்ளத்தாக்கிலே, புத்தமதம், சைவ மதம், வைஷ்ணவ மதம், சக்தி வழிபாடு, வீர வழிபாடு ஆகிய எல்லா சமயப் பற்றுகளும், ஒன்றையொன்று அடுத்து இன்பகரமாக வளர்ச்சியடைந்து தழைத்து நின்றதைக் காண்கிறோம்.

நாகார்ஜுனகோண்டா பௌத்த விஹாரத்திலுள்ள சந்திரகாந்தக் கல்







# லேசான பளபளப்பான சுத்தமான பல வர்ண வீட்டு சாமான்கள்

உடைக்கமுடியாத **'ஆல்கதீன்'** கொண்டு செய்யப்பட்டவை



"ஆல்கதீன்" வீட்டுச் சாமான்கள் உங்கள் இல்லத்தில் வர்ண ஜாலங்களைப் புகுத்தும். லேசான, ஆனால் வலுவான பைகளில் நிறையக் கடைச் சாமான்கள் வாங்கிவரலாம்; கவர்ச்சிகரமான சிறு துண்டுகள் உங்கள் மேஜைகளைக் கறைபடியாமலும், கீறல் விழாமலும் காப்பாற்றுகின்றன; விசேஷமாக வடிவமைக்கப்பட்ட ரெப்ரிஜெரேட்டர் புட்டிகள் ரொம்பப் பொருத்தமாக இருக்கின்றன; சதுரடிப்பான் பெட்டிகளுக்கோ, நூற்றுக்கணக்கான உபயோகங்கள் உண்டு.

ஞாபகமிருக்கட்டும்:

"ஆல்கதீன்" முற்றிலும் சுகாதாரமானது; பத்திரமானது.

"ஆல்கதீன்" சாமான்களை சோப்பும், வெந்நீரும் கொண்டு கழுவ வேண்டும்.





குழந்தைகளுக்கான பெல்ட்கள், மணிகள், விளையாட்டுக் கருவிகளும் உள்ளன.

'ஆல்கதீன்' பாலிதீனில் ஐ.ஸி.ஐ. சரக்கு

ICI

1ST IN THE WORLD
IN INDIA

I.C.I. DISCOVERED POLYTHENE, AND I.C.I.'s SUBSIDIARY, THE ALKALI & CHEMICAL CORPORATION OF INDIA LTD., ARE THE FIRST TO MAKE POLYTHENE IN INDIA.

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) பிரைவேட் லிட்., கல்கத்தா பம்பாய் சென்னை புது டெல்லி

IPC-48 TM

வள்ளுவர் இன்பம்.3



கல்கி தீபாவளி மலர். 1960

# Fashionably Feminine.

"Bentex"

வளையல் பிராஸ்லெட்கள்







THE NAME Bentex IS YOUR GUARANTEE

தயாரிப்பவர்கள் :

காலின்ஸ் அண்டு கம்பெனி, பம்பாய்-7

பூரண விற்பனை ஏஜெண்டுகள் :

பெண்டக்ஸ் சேல்ஸ் கார்ப்பொரேஷன்

பெண்டக்ஸ் பில்டிங்ஸ், பம்பாய்-7

# கவியரங்கம்

## அழைப்பு

கண்முன்னால் நீ யமர்ந்து
கதையொன்று சொல்லிடடி—என் (கண் முன்னால்)

மண்தின்னும் கொடியினிலே
மணம் மலரும் கதையொன்று
மலர் இதழின் ஓரத்தில்
மது விரியும் கதையொன்று
(கண் முன்னால்)

பனி இரவின் அமைதியிலே
படருகின்ற நிலவொளியில்
பார்வையினால் காதலர்கள்
பரிமாறும் கதையொன்று
(கண் முன்னால்)

இலை நெளியும் புழுவினிலே
இறகென்னும் அதிசயங்கள்
இருபுறமும் வந்திணைதல்
ஏன் என்னும் கதையொன்று
(கண் முன்னால்)

செவ்வல்லி மலர் இரண்டு
தெவ்வனிலச் செங்கிளி போல்
சேரத் துடித்திதயம்
சிலிர்க்கின்ற கதையொன்று
(கண் முன்னால்)

வைகறைச்செம் பனியுருகி
வழிந்தோடும் மெல்லொளியை
வான் குருவி பருகி, இசை
வழங்குகிற கதையொன்று
(கண் முன்னால்)

முடிவென்ப தில்லாத
முற்றும் எனச் சொல்லாத
முன்பறியாக் கதையொன்று
மொய்க் குழலே சொல்லிடடி
(கண் முன்னால்)



# மீட்டும் ஒருமுறை நீ...



மீட்டும் ஒருமுறை நீ
வா ரா யோ? — அந்தப்
பாட்டை மறுமுறை யும்
பா டா யோ? — நெஞ்சை
வாட்டும் தனிமையிருள் மூட்டம் கலைந்திடய
நாட்டம் தனக்கொளியைக் காட்டும் அமுதமயக்

தேம் தனைத் திரும்பக்
கே ளே னோ? — மீண்டும்
பாதை முனையி லுனைப்
பா ரே னோ? — உன்றன்

பாதத் தணிலணிந்த நாதச் சிலம் [பணிகள்
தாதை எனப்புலம்பித் தூதுப் பதம் [விளம்ப

வன்னத் திருமயி லாய்
வா ரா யோ? — வந்தே
இன்னம் ஒருமுறை நீ
ஏ கா யோ? — உன்றன்

மின்னற் கொடியிடையில் மின்னக் குடமணைத்து
அன்ன நடைநடந்து தன்னந் தனியளாய்நீ

ஆற்றங் கரைக்கு வர
வா கா தோ? — சற்றே
வீற்றுத் தனித் திருக்க
வேண் டா யோ? — மாலைக்

கீற்றுக் கதிரொளியின் சாற்றைப் பிழிந்தெடுத்துத்
தீற்றிச் சமைத்ததெனத் தோற்றும் எழில்முகத்தில்

தென்றல் செது செதுக்கத்
தீண் டா தோ? — கன்னம்
கன்றிச் செவ் வொளிர்ந்து
கா ணு தோ? — அந்தத்

தென்றல் தருஞ்சுகத்தில் ஒன்றி மனம்மயங்கி
நின்று மயங்குகின்ற உன்றன் பரவசத்தில்

உள்ளந் தனில் உவகை
ஓங் கா தோ? — இன்ப
வெள்ளம் பெருக் கெடுத்து
வீங் கா தோ? — அந்த

வெள்ளக் களிப்பிடையே கள்ளத் தனமாயென்னை
மெள்ளக் கடைக்கண்ணிட்டுடன் உள்ளம் கவரு [முன்றன்

நாவில் மதுர இசை
நா டா தோ? — நெஞ்சின்
ஆவல் அதில் தொனிக்க
வா கா தோ? — என்னுள்

தாவிக் கொடிபடர்ந்து ஆவி தனைப் பிணித்துத்
தேவ லீலையெனக்குப் பாலித் தருளுமந்தப்

பாட்டை மறுமுறை யும்
பா டா யோ? — பாட
மீட்டும் ஒருமுறை நீ
வா ரா யோ?...

**திருச்சிற்றம்பலக் கவிராயர்**

விஜயா

# குயில்

**பெ. தூரன்**



தேன்குழைத்து வெண்ணிலவு
தென்றலிலே வீசியதோ
தெள்ளமுதம் கனிபிழிந்து
திசையெல்லாம் பொங்கியதோ

வான்செழித்துப் பூத்திருந்த
வண்ணமணித் தாரகைகள்
மாமதியின் மதுமயக்கில்
வரிசையாய்ப் பொழிந்தனவோ

ஊன்குழையக் குரலெடுத்து
உயிர்தழைய மிதந்துவரும்
உன்காதல் தனிப்பாட்டிற்
குவமைசொல மொழியுண்டோ

மீன்சுழித்த நதிக்கரையில்
வெண்கொழித்த மணற்பரப்பில்
மெல்லாடந் தமர்ந்த வென்றன்
விழிக்கெட்டாப் பொழிற்குயிலே

உலகத்துச் சிறுமையிலே
உளம்வாடி ஏங்கிவந்தேன்
உன்னிதயக் கிளர்ச்சியிலே
ஒன்றியுனே வாழ்த்துகின்றேன்.

பலகற்றும் உளம் விரியாப்
பாமரராய் அருளன்புப்
பண்பழித்து அணுவரக்கப்
படைதேடி அஞ்சியஞ்சிக்

கலகத்துப் பேயிருட்டுக்
கல்மனத்தால் ஐயமெனும்
காலனுக்கே மக்களினம்
கணப்பொழுதில் இரையாகும்

நிலையுற்று விதிர்த்திடினும்
நீணிலத்தே எங்களைப்போல்
நெடுந்திறல்யார்க் குண்டென்றே
நெஞ்சத்தே செருக்குடையேம்

பால்சுரக்கும் விஞ்சை நிலா
பண்சுரக்க நீ செய்தாய்
பயம்சுரக்கும் சிறு மதியால்
படைபடைத்து நாங்களெலாம்

மால்சுரக்க நடுங்கியிங்கு
வழியறியாக் குருடர்களாய்
மானிடத்துப் பெருங்குலமே
மாயவகை செய்தின்னோம்

நூல் சுரக்கும் அறிவொளியால்
நுண்மையமு இன்பமுடன்
நுடங்காத பெருவாழ்வே
நோன்பாகக் கொள்ளாமல்

கால்சுரக்கும் அணுப்பிளந்தோம்
கடவுளுக்கே நிகரென்று
கருவமுடன் தோள்புடைத்தோம்
கடையூழி சிரித்ததுவே.

கரையில்லாக் காதலினுல்
காவிரித்தன் சோலையிலே
கவிதைபின்னிப் பாடுகின்றுய்
கந்தருவர் நாடதிர்தேன்.

உரையில்லாக் கனிவென்னுள்
ஊற்றெடுக்கச் செய்ததுபோல்
உலகெல்லாம் பகைமாறி
உயரன்பு பெருக்கருணே

புரையில்லா அறவாழ்வு
பொங்கிடவே பாடாயோ
புன்மையெலாம் பொன்றியிது
பொன்னுடாய்த் தழையாதோ

நரையில்லா அருள்வாழ்வில்
நட்புறவே காணேமோ
நல்லிசையால் மெய்புணர்வாம்
நறவூட்டும் பூங்குயிலே

முத்துநிலாப் பந்தரின்கீழ்
மோகனத்துப் பாட்டுருவாய்
மூழ்த்திருக்கும் உன்னிடத்தே
முறையிட்டுன் மகிழ்வொழிக்கச்

சித்தமிலேன் என்றாலும்
திங்குழற்பண் தெய்விகத்தால்
சிறுமையெலாம் மாயுமென்ற
செவிக்கனவைத் தவிர்க்ககிலேன்

புத்தியிலாப் பிள்ளையாய்ப்
போனதெனில் நானுமுன்றன்
போகவிசைப் பேருலகில்
புகவிழைவேன் இணைசுரமாய்

வித்தையினல் வானூர்ந்தும்
மிகச்சிறந்த உளமுடையேம்
மெத்தளிர்ப்பூ மரத்தமர்ந்தும்
விண்ணெட்டும் உளமுடையாய்.



# மங்கை

என். எஸ். சிதம்பரம்

மங்கை, உன்னை மலரென்பார்
மதியை மயக்கும் மதுவென்பார்
பொங்கிப் பாயும் புனலென்பார்
புரிய முடியாப் புதிரென்பார்

திங்கள் உனது முகமென்பார்
தெளிவு காட்டும் கலையென்பார்
தங்கி நெஞ்சில் அலைபாய்ச்சும்
தன்மை யுடையாய் என்பாரே!

பெண்ணே, உன்னைக் கனவென்பார்
பேசும் ஒளியென் பார்—உன்றன்
கண்ணின் விழியோ கயலென்பார்
கனிந்த மொழியோ பாகென்பார்

வண்ண இடையோ மின்னலென்பார்
வயங்கு நடையோ அன்னமென்பார்
உன்னும் சுவைத்தேன் கனியாகி
உளத்தில் இனிப்பாய் என்பாரே!

குழந்தைப் பெண்ணு யிப்பின்னர்
குமரி யாகி மணம்புரிந்து
தழுவி யணைக்கும் சேயின்று
தாயே யாகும் பேறுற்று

வழுவில் லாமல் இல்லறத்தை
வளர்க்கும் தெய்வம் நீயென்பார்
அழகுப் பதுமை நீநியே!—உன்
அருமை பெருமை சொலத்தரமோ?

இன்பத் திற்கோர் உறைவிடம்நீ
இனிய இசைக்கோர் எழில்யாழ்நீ
துன்பத் திற்கோர் மருந்துநீ
தூய சக்திக் கோர்பொருள்நீ

அன்பிற் கோர்மெய் வடிவம்நீ
அகத்தை யிழுக்கும் காந்தம்நீ
வன்பு காணும் பாவை,யிந்த
வையம் உனக்கே அடிமையன்றோ?

நீலம் வானில் இணைந்தாற்போல்
நீயும் வாழ்விற் கலந்துவிட்டாய்
கோலத் திருவே, அருளணங்கே,
கூடும் காதல் விளக்கின்றும்

சீலம் மிகுந்த ஆணுக்கோர்
செழுமை நல்கப் புவிவந்தாய்
ஆளும் அரசும் போல்தழைப்பாய்
ஆசைக் கொழுந்தே, வாழியவே!





# அனங்க விஜயம்

சோலை விட்டுப் பேடை சென்ற சோலையில்
மேலும் மேலும் மோக மேறக் கோகிலம்
கோலங் காட்டேன் றேங்கி யேங்கிக் கூவுதல்
ஞாலஞ் சார னங்க னம்பின் நாதமோ?

மதிநி றைந்த வானி லேறும் மாகடல்
ரதியெ ழுப்ப னங்க ராஜ மாலையில்
இதழெ னத்தன் னுரைசை யாம லைகளால்
அதர பான மாழ விண்ணை நாடுதோ?

விண்ணை நோக்கி வீசி விட்ட கற்களும்
பண்ணை யார்ம ரம்ப மூத்த வர்க்கமும்
மண்ணை நாடி மாய மாயி றங்குதல்
பெண்ணை ஒன்றும் பெட்ப தன்றி வேறெதோ?

அந்த ரத்தி லங்கு கோளம் யாவையும்
சொந்த சக்தி யற்று வானில் தொங்கினும்
பந்த முற்ற பாவை என்றி சைந்திடல்
கந்த ரன்றெ ழுத்த வானி சூழ்ச்சியா?

சிவ சாதி தாங்கொ ணாத சோர்விடை
பூவும் மண்ணும் பொன்னும் கைக்கக் காண்கையில்
ஆவி ஊற வான்சஞ் சீவி யாவது
காமி ராதை அந்தரங்க காமமோ?

வதனங் கண்ப டாத வேனி காதலன்
புதும லர்கள், பொங்கு தென்றல், மற்றதில்
மதியி பூத்து மங்கைக் கேங்கி யாய்குதல்
ரதியி னிப்பு வில்ல னங்கன் சூரமோ?

கொல்லை வண்டு தொட்டுக் கோணி வீறதாய்,
புல்லைத் தொட்டுப் பூக்கும் வான மீறதாய்
எல்லை யில்ல னங்க வீட்டும் வெற்றியைச்
சொல்லைக் கொண்டு ஊமை சொல்ல வல்லனோ?

ந. பிச்சமூர்த்தி

## எழிலும் தொழிலும்

தமிழழகன்

மின்னும் மரகத மேடையிலே — கதிர்ச்
செங்கோல் கரகம்முன் ஆடையிலே

முத்துப் பனித்துளி மொட்டுக்கள்ளாள்; — வைர
வித்தின் மணித்துளிச் சொட்டுக்கள்ளாள்!

உள்ளம் வெடித்த நிலங்களிலே — கண்ணீர்
வெள்ளம் வடித்த புலங்களிலே —

உழைப்பவர் வேர்வை யுறுதுளிகாள்; — ஆங்கு
களைப்பவர் தீவ சிறுதுளிகாள்!

மஞ்சள் வெயில்வரும் மாலையிலே — கூடிக்
கொஞ்சக் குயில்வரும் வேளையிலே

மணம்முறிச் சோர்தும் மழைக்கண்ணீராள்;-கூலிப்
பணமறிச் சோர்தும் பிழைக்கண்ணீராள்!

அந்தர வான அடவியிலே — காயும்
சுந்தர சிவப் புடவையிலே

அள்ளி யிறைத்த அழல்மலராள்; — கோலப்
புள்ளி விரித்த தழல்மலராள்!

* * *

எழிலென்றும் என்னை எழுதிடுவார்; — அதன்
தொழிலென்றும் என்னைத் தொழுதிடுவார்!

எழிலெனில் உள்ளேன், மெய்யெண்ணத்திலே :-அதன்
தொழிலெனில் உள்ளேன், கைவண்ணத்திலே

## வாழ்வின் கதவம்

கோ. வி. மணிசேகரன்

மனமெனும் மாளிகைத் தலைவாசல் - அதில்
மஞ்சள் நிறமலே: பொற்கதவம்!
அனலெனும் தூய்மை அங்குண்டு - அது
அண்டித் திறந்திடில் சுட்டிடுமோ?
நிலவான் கோலமோ, சாளரங்கள்? - இளம்
நித்திரை தவழ்ந்திடும் கனவுலகம்!
சிலமோ, இசைத்திடும் நீர் அருவி? - மயில்
செய்திடும் ஜாலமோ இமைக் கதவம்?

இலக்கியக் கதவம் அதரங்கள்! - அவை
இனிதின் விலகிடில் சொர்க்கம்தான்!
கலங்கிய கற்பனை கள்ளாரும் - பூங்
காவின் முல்லை வெட்டி விடும்!
அணைத்துக் காக்கும் இருகரங்கள் - தினம்
அகத்தை ஈர்க்கும் அருள் கரங்கள்!
பிணைத்த வாழ்வின் பெருங்கதவம் - வனே
பேசும் குரலில் தாழுண்டோ?

மழலைப் பேழை திருவயிறு - உயர்
மனிதர் பிறந்த பொன்னுலகம்!
சுழலும் அலைவு அதற்கில்லை - ஆ!
சுழன்றால் கதவம் திறந்திடுமோ?
ஆலயக் கதவம் மனைக் கதவம் - இரு
அருகைக் கூட்டும் இணைக்கதவம்!
பாலியம் ஒலிக்கும் கலைக்கதவம்! - மனப்
பசுமை வளர்க்கும் நீலக் கதவம்!

## நினைவுச் சுவர்க்கம்

மஹி

நினைவே எந்தன் சுவர்க்கமடி—உன்
நினைவே வாழ்வின் சுவர்க்கமடி!
கனவாய் வந்தேன் மனதில் கலந்து
நினைவே நெஞ்சில் தோய்ந்து வளர்ந்து
மனமே நீயாய் மயங்கி, நீயங்க
நினைவை நிறுத்தி நீயும் மறைந்த
—நினைவே எந்தன் சுவர்க்கமடி!

நீரில் மோனம் நிறைந்த குளிர
நிலவில் நீயும் நானும் இணைந்து
கனியும் கற்பனை ஊற்றில் மூழ்கக்
காட்சி வழுக்கிக் கனவில் மிதந்த
—நினைவே எந்தன் சுவர்க்கமடி!

குளிரைத்தந்தாய், கோட்டும் அனலைக்
கொத்திடே அருவிக் குளுமை கலந்து
பனிக்குத் தெவிழும் புகையின் மூட்டம்
புரியாப் போதை புரிந்த விழியின்
—நினைவே எந்தன் சுவர்க்கமடி!

சொல்லில் சலங்கை கருத்தைப்பக்கூட்டி
சொக்கும் குயிலாய்க் கருட்டி இசைத்து
ஒல்லெனச் சிரித்து உயிரை ஒளியில்
ஆட்டிய நாட்டிய ஒளியின் அழைப்பின்
—நினைவே எந்தன் சுவர்க்கமடி!

வந்தாய், சென்றாய், வாழ்வின் அல்ல
வளரும் எண்ணம் வரையும் கீற்றில்
சிந்தனை தேக்கிச் சிலிர்த்த எழுத்தைச்
சேர்த்தே ஏட்டில் தீட்டிய போதின்
—நினைவே எந்தன் சுவர்க்கமடி!



# சிறைகாக்கும் காப்பு



அப்பு கனபாடிகள் ஆகாயத்தை நோக்கினார். முகவாயைத் தடவிக் கொண்டார். பிறகு இடுப்பில் கையை விட்டுத் துழாவினார். மடித்து மடித்துச் செருகியிருந்த வேஷ்டிப் பட்டையில் ஓர் எட்டணா நாணயம்!

அதை வைத்துக் கொண்டு தான் அன்றையத் தினத்தையோ, வரும் பல தினங்களையோ அவர் ஓட்டியாக வேண்டும்.

தோளில் வலி கண்டது. தடவிப் பார்த்தார். கரடுமுரடாகத் தென்பட்டது. காய்த்துப் போயிருக்கிறது. தொட்டால் வலி எடுக்கிறது. காவேயில் கண்ணம்பேட்டைக்கு நாலு பேரில் ஓர் ஆளாகத் தோள் போட்ட வலி! எந்தப் புண்ணியவானோ? நல்ல கனம்! அறுபதைத் தாண்டிய வயதில் அந்தக் கனத்தைச் சுமப்பது எளிதல்ல! ஆனால் வெறும் வயிற்றைச் சுமக்க முடியவில்லையே!

அதற்குக் கூலியாகத் 'தட்சிணை' என்ற பெயரில் கிடைத்தது எட்டணா! அதை வைத்துத்தான்....

நடந்து நடந்து போனார். பங்கல் பார்க் வெளியேயுள்ள பெஞ்சி ஒன்றில் 'அப்பாடா' என்று அமர்ந்தார். எவ்வளவோ கார்கள் போய்க் கொண்டிருந்தன. போன அளவு கார்கள் வந்து கொண்டுமிருந்தன. மழைக் காலத்து ஈசல் பூச்சிகள்! எல்லாரும் எங்கே போகிறார்களோ? எங்கே வருகிறார்களோ? அவர்களுக்கு ஏதோ வேலை இருக்கத்தான் வேண்டும்.

தளர்ந்தும் முதிர்ந்தும் கிடந்த தன் அசுர வேக வாழ்க்கையை எங்கேயாவது மற்றவர்களுடன் இணைத்து ஓட்ட முடியுமா?

பசி....அதிகப் பசி! பசியே பசியைத் தின்று பசி மந்தித்து விட்டது. நேராகச் சாப்பிட்டு மாதங்கள் ஆகிவிட்டன.

எதிர்க் குறட்டில் ஒரு பெண் போய்க் கொண்டிருந்தாள். அப்பு உற்றுக் கவனித்தார். கழற்றி அடித்த பின்னலுடன் விறுவிறென்று அவள் போய்க் கொண்டிருந்தாள்.

அவர் நினைவு அமிர்தத்தைத் தொட்டது. அமிர்தம் இருந்தால்...இதே வயதுதான். இதே உயரந்தான் இருக்கும்; நடையில் இதே மிடுக்குத்தான் இருக்கும்.

கசிந்த நீர் அவர் கண்களை அடைத்துக் கொண்டது.

மலை போல் துணையாக இருந்திருப்பாள். ஆனால் மலை போல் பிரச்னையாகவும் இருந்திருப்பாளோ?

அவர் நினைவு சுழன்றுகொண்டிருந்தது.

அமிர்தம்!

அவள் மொழி அமிர்தம்! விழியோ அமிர்தக்கடல்!

தழையத் தழையத் தொங்கும் சிற்றாடையுடன் நடந்து வருவாள். இடுப்பைக் கடந்து தொங்கும் கூந்தல் உடுக்கை நாகைப் போல் இரு விலாக்களிலும் மாறி மாறிப் புரண்டு கொண்டிருக்கும்! இமை மொய்த்த இரு விழிகளிலும் இருள் மொய்த்துக் கொண்டிருக்கும்!

மாஞ்சோலை, நீர்த்துறை, நந்தவனம், குளம், கோயில் இவை போன்று ஊருக்கு அவளாலும் ஒரு தனி அழகு!

ஸ்ரீவேணுகோபாலன்

வீதியில் அவள் வந்தால் தெருவின் இருமருங்கும் அசைந்து கொடுக்கும். மருளும் விழியுடனும், புரளும் கூந்தலுடனும், மேனி முழுதும் தெளியும் எழிலுடனும் அவள் நடந்து வந்தால் ஊரில் மரத்த உள்ளங்களெல்லாம் 'அமிர்தம்' உண்டாற் போல் உயிர்த்தெழுந்து விடும். பார்ப்பவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கண்.

பெரிய பண்ணை பையன் நியாகுவுக்குப் 'பெரிய' கண். அதன் முன் அமிர்தத்தின் உரு எப்போதும் ஆடிக் கொண்டிருந்தது!

ஒரு தினம்....

விளக்கு வைத்தாகி விட்டது.

அமிர்தம் எண்ணெய்க் கிண்ணத்துடன் புறப்பட்டாள். ஊருக்குக் கிழக்கே செல்லும் ஒற்றையடிப் பாதைக்குப் புள்ளி வைத்தாற்போல் சிவன் கோவில்.

மதிலுள் நுழைந்தவுடன் தோட்டம். நந்தியாவட்டையும் சங்கு மலர்களும் சிரித்துக் கிடந்தன. அருகே கிணற்றடி! நீர் இறைத்துக் கடல்நுரை போன்ற தன் வெண்மைப் பாதங்களைக் கழுவிக் கொண்டாள். கிண்ணத்தை எடுத்துக் கொண்டு மீண்டும் தலைநிமிர்ந்தபோது எதிரே நியாகு! வாய் கோணச் சிரித்துக் கொண்டிருந்தான்!

அவனைப் புறக்கணித்துக் கொண்டு கோவிலுள் காலை வைத்தாள். கர்ப்பக் கிருகத்தில் விளக்கு நுனிகளிலெல்லாம் எரிந் சொட்டுக்கள். சர விளக்குகளில் கிண்ணத்தை வழித்து விட்டாள். பிறகு பிராகாரத்துள் பிரவேசித்தாள்.

பிராகாரமும் ஓர் ஒற்றையடிப் பாதை! இரு புறங்களிலும் செடி அடர்ந்த புதர்கள். நாமமிட்டுத் தடம் விழுந்த நெற்றி போல் நடுவே வெள்ளை வெளேரென்றுதெரிந்த பாதை.

பின்னால் சருகு மிதிபடும் சத்தம் கேட்டது. அவள் திரும்பினாள். நியாகு வந்து கொண்டிருந்தான். அவளுக்கு எரிச்சலாக இருந்தது. மேலே நடக்க ஆரம்பித்தாள்.

"அமிர்தா!"

நியாகுவின் குரல் கேட்டது.

"என்னவாம்!"

"சண்டிகேசுவரர் சன்னதி பக்கத்துப் புதரிலே...."

"எனக்குத் தெரியும்!"

அவள் வாய் மூடவில்லை. சருகுகளிடையே சரசர வென்ற சத்தம் எழுந்தது.

"ஐயோ!" அமிர்தம் சாய்ந்தாள். நியாகு விரைந்து வந்து அவளைத் தாங்கி விட்டான். கண நேரத்துக்குள் தன் நிலை உணர்ந்த அமிர்தம் தன்னை விடுவிக்க உதறினாள்.

"யாருடா அங்கே?"

பின்னால் பஞ்சாமியின் குரல் கேட்டது. அவர் பார்த்த நிலையும் அவள் நியாகுவின் கையினின்று விடுபட்ட நிலையும் ஒரே சமயத்தில் நேர்ந்தன.

"என்னடா, அக்ரமம் கோவிலுக்குள்?"

"ஒன்னுமில்லே மாமா, பாம்பு!"

"சரிதான்டா போ....நீ யாரம்மா? அப்பு பொண்ணு? ரொம்ப அழகுதான்! வீட்டுக்குப் போ, சொல்றேன்!"

பஞ்சாமியின் கண்கள் அவளுக்குப் பிடிக்காது. ஏதோ பதில் சொல்ல வேண்டு மென்று நா எழுந்தது. ஆனால் வார்த்தைகள் உருவாகவில்லை. கீழே கிடந்த கிண்ணத்தை எடுத்துக் கொண்டு விறு விறென்று நடக்கலானாள்.

பஞ்சாமிதான் ஊருக்குத் 'தினப் பத்திரிகை!' நடந்த செய்தி, நடவாத செய்தி யெல்லாம் அத்துப்படி! கோவிலுள் நடந்த சம்பவத்துக்குக் கண்ணையும் மூக்கையும் வைத்துக் காற்றிலே கரைத்தார். ஊரில் புளித்த விழிக்காரர்களுக்கெல்லாம் சுவையான செய்தி கிடைத்து விட்டது. வாய்கள் அசை போட்டன!

நவராத்திரி வந்தது. ஒன்பதாவது தினத்தில் ஊர் பெரிய பண்ணையின் கட்டளை. கோவில் அமர்க்களப்பட்டது.

அப்பு வீட்டுக்கு வரும்போது இருட்டியிருந்தது. ரேழியில் பெரிய ஹரிக்கேன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

"அமிர்தா!"

உள்ளே பதிலில்லை.

அப்பு கைத்தடியை மூலையில் சாத்தினார். பிறகு கண்களைத் திருப்பிய போது அதிசயித்து நின்றார்.

"ஏம்மா, எப்படியிருக்கு?" என்று கேட்டுக் கொண்டே விளக்கு முன் குதூகலித்து நின்றாள் அமிர்தம்.

அப்புவின் கண்களில் இன்பக் கண்ணீர் சுரந்து நின்றது. அவர் வாங்கிக் கொடுத்த புடவையை முதன் முதலாக அமிர்தம் உடுத்தியிருந்தாள். கோவில் அம்மனுக்குச் சந்தனக் காப்பு சாத்தியது போல் பளிச்சென்று தன்னைச் சுற்றியுள்ள இருட்டைச் சிதற அடித்துக் கொண்டு நின்றாள் அமிர்தம். கன்னங்கள் சிரிப்பில் வழிந்து கொண்டிருந்தன.

"உங்கம்மா பார்க்கக் கொடுத்து வைக்கலியே, அம்மா!" என்றார் அப்பு.

அமிர்தம் உடல் சரித்துத் தன் இடை நோக்கியும், இடை சரித்துத் தன் சடை நோக்கியும் தன்னுள் எழுந்த பூரிப்பில் பொரிந்து வழிந்து கொண்டிருந்தாள்.

"கோவிலுக்குப் போகல்லையா, அமிர்தா!" என்றார் அப்பு.

"ஊஹூம்; நான் போகல்லே அப்பா!"

"அப்படிச் சொல்லலாமா? இன்னைக்கு விசேஷ நாளாச்சே அம்மா!"

அமிர்தம் மௌனமாக நின்றாள். பல தினங்களாக அவள் கோவிலுக்குச் செல்லவில்லை. மனத்தில் ஏதோ வீண் அரிப்பு. ஊரில் வயது வந்த பின்னைகளெல்லாம் மறைமுகமாக ஏதோ சொல்லி நகைப்பதுபோல் அவளுக்குப் பட்டது. அப்புவிடமும் இதைப் பற்றிக் கூறியதில்லை. இன்று....

கோவிலுள் அவள் காலை வைத்தபோது தீபாராதனை நடந்து கொண்டிருந்தது.

"அமிர்தா, அமிர்தா!" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டது.

அவள்மீது திரும்பிய கண்கள் மீண்டும் திரும்ப முடியாமல் திகைத்து நின்றன.





''ஏன் மகாராணிக்கு இவ்வளவு நாழியாம்?'' வாயில் முன்மண்டபத்தில் நின்றிருந்த பெரிய பண்ணை மகள் மங்களம் அமிர்தம் காது கேட்கும்படி கேட்டு விட்டாள்.

அவள் பதில் பேசவில்லே.

''பிரசாதத்துக்கு மாத்திரம் வந்து விட்டாள். வெட்கமில்லே பாரு!'' மங்களம் இடித்தாள். சுற்றியிருந்த ஸ்நே கிதிகள் கூட்டத்தில் சிரிப்புத் தவழ்ந்தது.

அமிர்தம் நீள்விழி விரித்தாள்.

''உங்கள் பிரசாதத்துக்கு ஒன்றும் ஆசைப்பட்டு வரல்லே! நான் சுவாமி தரிசனத்துக்கு வந்திருக்கேன்!''

''அதுக்கு, முன்னாடியே நீ ஏன் வரல்லே யாம்?''

''வந்திருப்பேன்; உங்க அண்ணுவைப் போன்றவர்கள் கோவில் வாசல்லே பழி யாகக் கிடக்கிறுங்களே! அதுக்காகத் தான் வரல்லே!''

அவள் வெடித்துச் சிதறிவிட்டு வேக மாகப் போய் விட்டாள்!

**ம**று தினம்!

அமிர்தம் படித்துறையில் அமர்ந்திருந் தாள். ராஜாளி விரித்த இறக்கை போல் தன் கூந்தலை விரித்து முதுகு முழுதும் பரப்பி யிருந்தாள்.

சுழித்துச் செல்லும் ஆற்று நீரில் சிரித் துச் செல்வதுபோல் நுரைக்கூட்டங்கள், புதுவெள்ளம் வந்து கொண்டிருந்தது.

''அமிர்தா!''

குரல் கேட்டுத் திரும்பினுள். தியாகு சிரித்தவாறு நின்று கொண்டிருந்தான்.

''எதுக்குக் கூப்பிட்டே?'' அவள் குரலில் கடுமை மிகுந்திருந்தது.

''ஒன்றுமில்லே..... சும்மாத்தான் .... தனிமையா இருக்கியே!''

''எனக்கொன்றும் பயமில்லே, போ!''

''கோவிலுக்கு வர்றதை இனிமேல் நிறுத்திடுவாயா?''

''அது என் இஷ்டம்.''

அமிர்தம் எழுந்தாள். தியாகு அவள் எதிரே வந்து நின்றுன்.

''பாவம்! உன் கிட்டே ஊர்ப் பெண்க ளெல்லாம் கட்சி பேசினுர்களா? எங்க மங்களம் கூட உன்னே விரட்டுறு இல்லே! நீ கொஞ்சமும் கவலைப்படாதே. நான் உன் பக்கந்தான்!''

தியாகு வாய் கோணச் சிரித்தான்.

''டேய்! தூரப் போறியா இல்லேயா?''

''முடியாது; என்ன செய்வியாம்?''

தியாகு முன்னுல் ஓர் அடி நெருங்கி னுன். அமிர்தம் தன் குடத்தைத் தூக்கி

அவன்மீது எறிந்தாள். இயாகு நகர்ந்தான். குடம் அவன் கால் விரல்களைப் பதம் பார்த்து விட்டு உருண்டது.

இயாகு கோபத்துடன் முன்னேறினான்.

"டேய், இயாகு!" குரல் கேட்டுத் திரும்பினான். பெரிய பண்ணை வந்து கொண்டிருந்தார்.

அமிர்தம் அவசரம் அவசரமாகக் குடத்தில் நீர் நிறைத்துப் படியேறிச் சென்று விட்டாள்.

இரவு சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது வாசலில் பெரிய பண்ணையின் குரல் கேட்டது. பாதிக் கலத்திலேயே எழுந்து நடை ஓரத்தில் அமிர்தம் நின்று கொண்டாள். பண்ணை அப்புவிடம் பேசிக் கொண்டிருந்தார்.

"காலம்பற படித்துறையிலே நம்ம இயாகு குளிச்சிண்டிருந்தானும். உம்ம பெண் அவன்கிட்டே போய்க் கன்னு பின்னுன்னு பேசினளாம்!"

"என்ன பேசினளாம்?"

"ஊரிலே எல்லோரும் என் கிட்டே கட்சி பேசறா. இயாகு! நாம ரெண்டு பேரும் சிநேகமா இருக்கலாமான்னு.... என்னென்னவோ சொன்னளாம். சொல்றதுக்கே நாக்குக் கூசறது. பெண்ணைக் கண்டிச்சு வையும்!"

பண்ணையார் போய் விட்டார். அப்பு வீட்டுக்குப் போகத் திரும்பினர். நிலை வாசிற் படியில் அமிர்தம் நின்று கொண்டிருந்தாள்.



"அமிர்தா! இதெல்லாம் என்ன?" அவர் குரல் கரகரத்தது.

அமிர்தத்தின் விழி பளபளத்தது.

"பொய் அப்பா! அவ்வளவும் பொய்?" துக்கம் தாளாது அவள் நிலைக்கதவில் சாய்ந்தாள். அப்பு அவளைத் தாங்கிக் கொண்டார்.

அவள் விக்கித் தவித்தாள்.

"அதை யெல்லாம் நம்பறீங்களா, அப்பா?" அவள் விசித்துக் கேட்டாள்.

"நான் நம்புவேனு, அமிர்தா?"

"ஊரிலே எல்லோரும் என்னைக் கரிச்சு வழியறா, அப்பா!"

அவள் அழுகை பெருகியது.

அன்று வானம் மூடியிருந்தது. இடையிடையே ஊசித்தூறல் விழுந்து கொண்டிருந்தது. பூமிக்கே வியர்த்து விட்டாற் போல் எங்கும் நீர் கசிந்திருந்தது.

அப்பு வெளியூரிலிருந்து வந்து கொண்டிருந்தார். கையில் பையும் கோணுமாய் விட்டு வாசலை மிதித்தவர் அப்படியே நின்றார். ஆயாசமாக வந்தது. திண்ணையில் உட்கார்ந்து வளைகல்லில் சாய்ந்து கொண்டார். கண்கள் இருண்டு கொண்டே வந்தன. பூமி எங்கும் நிழல் படர்ந்து வருவதுபோல் தோன்றியது. நினைவும் வசமிழந்து சுழன்று கொண்டிருந்தது.

மீண்டும் பார்வை வந்தபோது அமிர்தம் அருகில் நின்று கொண்டிருந்தாள். அப்புவின் முகமெல்லாம் நீர் வடிந்து கொண்டிருந்தது.

"மயக்கமா விழுந்துட்டேனு, அமிர்தா! ஒரே ஆயாசம்! வயசாயிடுத் தோல்லியோ? நடந்து நடந்து போய் எவ்வளவு நாட்கள் சம்பாதிக்க முடியும்?"

அமிர்தம் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"எனக்குப் பயமா இருக்கு அப்பா!" அப்பு அவளை ஏறிட்டார்.

"உன் வாழ்க்கை பயமில்லாமல் கழியணும்னு ஒரு துணையை தேடித் தரத்தான் போயிட்டு வந்தேன். நாளைக்கு வராம்மா!"

"யாரு?"

"உன்னைப் பார்க்க வரன் வருகிறார்."

மறுநாள் வரன் வந்தார், பார்த்தார், போய்விட்டார்.

அமிர்தத்துக்கு மனம் நிறைந்திருந்தது. வரனுக்கு உபாத்தியாயர் வேலையாம். கண்ணுக்கு அழகாய் இருந்தார். அவரும் அவளைப் பார்த்துத் திருப்திப் பட்டதாகவே தோன்றியது.

ஆறுல் கடிதம் போடுகிறேன் என்று கூறிச் சென்றவர்கள் எழுதவில்லை. ஒருநாள், இரண்டு நாட்கள், பல நாட்கள் கடிதம் வரவேயில்லை.

ஊதக்காற்றுவீசத்தொடங்கியிருந்தது.

தென்னம் கீற்றிடையும், சவுக்கைக் கிளையிடையும் நுழைந்தே ஆயிரம் கீறல் களாக வீறிக் கொண்டு முனகிக் கொண்டே வீசிக் கொண்டிருந்தது.

முகில் கூட்டங்கள் ராட்சதப் பறவைகள்போல் விண்வெளி முழுதும் பறந்து கொண்டிருந்தன.

அமிர்தம் இடுப்பில் குடத்துடன் ஆற்றிலிருந்து வந்து கொண்டிருந்தாள். வீட்டுக்குள் நுழைந்தாள். குடத்தின் புறமெல்லாம் ததும்பிய நீர்! முகத்தின் புறமெல்லாம் அவள் விசும்பலின் நீர்!

அப்பு அமர்ந்திருந்தார். குடத்தைக் கூடத்தில் வைத்தவள் புடவைத் தலைப்பால் முகத்தை மறைத்துக்கொண்டாள்.

அப்பு திடுக்கிட்டார்.

"அமிர்தா, என்ன இது?"

அமிர்தம் முகத்தைத் திறந்தாள். வெட்டிய நுங்கின் விழி நிறைந்து வழிந்தது போல் முகமெல்லாம் தெப்பமாய் நீர் படர்ந்திருந்தது.

"நான் ஏன் பிறந்தேம்பா...! ஊரிலே கண்டவா கண்டபடி பேசறா!"

அமிர்தா முகத்தை மூடிக் கொண்டாள். வீசும் காற்றில் கொடியில் துணி உதறுவது போல் அவள் உடல் உதறிக் கொண்டிருந்தது.

நடு இரவு!

அப்புவுக்குக் கண் விழித்து விட்டது. எங்கும் மூட நிசப்தம்! பூமியின் கர்ப்பத்துடிப்புக்கூட கேட்டுவிடும் போலிருந்தது.

அப்புவுக்குத் தாகம்! மூலையில் எழில் நொந்து எரிந்த விளக்கில் திரி ஏற்றினர்.

அமிர்தம் படுத்திருந்தது தென்பட்டது. விளக்கை எட்டப் பிடித்து நோக்கினர். வெறுந் தரையில் அவள் ஒருக்களித்துப் படுத்திருந்தாள்.

வெண் தண்டென நீண்டிருந்த கை தலைக்கு உயரமா யிருந்தது. இருளின் சிறு பகுதி தரையில் கொட்டிக் கிடந்தது போல் கூந்தல் புரண்டு கிடந்தது. மடிந்து மடிந்திருந்த அவள் நீலத் துகில், மடிந்து மடிந்து விழும் நீலக் கடல் அலை போலிருந்தது. கடல் நுனியருகில் கிடந்த இரு வெண் சங்குகள் போல் அவள் பாதங்கள் ஒளிர்ந்து கொண்டிருந்தன.

அப்புவுக்கு நீர் சுரந்தது.

"ஏன் பிறந்தேன், அப்பா?"

அந்தக் கேள்வியே தரையில் கிடந்தது போலிருந்தது.

நீர் உட்கொள்ளவில்லை. அப்பு மீண்டும் படுத்துக் கொண்டார். தொண்டையை விட உள் மனத்தில் வறட்சி பரந்து கொண்டிருந்தது.

விடிந்து கொண்டிருந்தது.

கொழுந்து வெயில் எங்கும் பரந்து கொண்டிருந்தது. அமிர்தம் கண்களைக் கசக்கினள். எதிரே அப்பு நின்றதைப் பார்த்ததும் ஆச்சரியமா யிருந்தது.

"அதற்குள்ளாகவா குளித்து விட்டீர்கள், அப்பா! எது வரையில்?"

"பாளையங்கோட்டை வரையில். கடைசியாகப் பார்த்துட்டுப் போனவா கிட்டே நேரிலேயே கேட்டுவிட்டு வரலாம்னு போகிறேன்."

"அப்படி நாமாகப் போய்க் கேட்கலாமா அப்பா?"

"இதிலே நடங்கல் ஒன்றும் சொல்லாதே, அமிர்தா!"

பாளையங்கோட்டையை அடைந்தபோது உச்சிவெயில் ஆகிவிட்டது. அப்புவுக்கு இளைத்துக்கொண்டு வந்தது.

சந்தையின் திருப்பத்தில் போகும் போது யாரோ கூப்பிடுவது கேட்டது. திரும்பினர். எதிரே சாம்பு அத்தான்!

"ஏதேனும் காரியமா வந்தாயா, அப்பு?" அப்பு தலையசைத்தார்.

"என்ன காரியமோ?"

"அமிர்தம் கல்யாண விஷயமாக..."

"இந்த ஊர் சுப்பையாவின் பிள்ளை வந்து பெண் பார்த்ததெல்லாம் எனக்குத் தெரியும்!"

"தெரியுமா? அங்கேதான் போய்க் கொண்டிருக்கிறேன். பெண் பார்த்து விட்டு வந்து கடிதமே போடல்லே!"

சாம்பு மௌனமாக நின்றார். பிறகு, "அப்பு நீ அங்கே போக வேண்டாம்!" என்றார். அப்பு வெலவெலத்து நின்றார்.

"உன் பெண்ணைப்பற்றிய விஷயம் இங்கெல்லாம் பரவிப் போச்சு!"

"என் பெண்ணைப் பற்றியா?"

"ஆமாம்; எனக்குந்தான் காதிலே பட்டது. நம்ப குடும்பத்திலே இதுமாதிரி நேர்ந்ததில்லேப்பா! அவளை வழியோட வீட்டிலே வைச்சிண்டிருக்கவா..."

"அத்தான் ஊரார் சொல்றதெல்லாம் அவதூறு, அத்தான்!"

சாம்பு மௌனமானார். பிறகு "அப்படியே இருக்கட்டும்! அவதூறு ஏற்படாதபடி கவனிக்கிறது நம்ப பொறுப்

புத்தானே! உன் பெண் ரொம்ப அழகு! அதிக அழகு கூடாதுன்னு பெரியவா சொல்லுவா! அப்படிப் பிறந்துட்டாள்! கவனிக்கிறது நம்ப பொறுப்பு!''

மாலை அணுகிக் கொண்டிருந்தது. அப்பு தள்ளாடித் தள்ளாடி ஊரை நெருங்கிக் கொண்டிருந்தார்.

புறக்கடை வழியாகவே வீட்டுக்குச் சென்றார். அப்பு 'வைக்கோல்' படப்பைத் தாண்டிச் செல்லும்போது அவர் கண்கள் வாய்க்கால் கரைப் பக்கம் திரும்பின. பல கணங்கள் வரை பார்வையை எடுக்காமல் அங்கேயே செலுத்தினார்.

'அது அமிர்தமா யிருக்குமா? சீ, இருக்காது. அவள் இப்படி அப்பட்டமாக ஓர் ஆண்பிள்ளையுடன் பேசிக் கொண்டு நிற்க மாட்டாள்! தர்மகர்த்தாவின் பிள்ளை பஞ்சுவைப் போல் இருக்கிறது அருகில் நிற்கும் அந்த ஆண்பிள்ளை.'

அப்பு நினைவுகளை நிறுத்திக் கொல்லைக் கதவை அணுகினார். நாதாங்கி கழன்றிருந்தது. உள்ளே விறுவிறென நுழைந்தார். எல்லாக்கதவுகளும் திறந்திருந்தன.

''அமிர்தா, அமிர்தா!''

பட்டகசாலையில் இல்லை. ரேழியிலும் அவள் இல்லை.

''அமிர்தா! அமிர்தா!''

அப்பு மீண்டும் கொல்லைப்புறம் வந்தார். அமிர்தம் வந்துகொண்டிருந்தாள்.

''அமிர்தா!''

அப்புவின் குரல் நீக்கலாய் கனன்றது.

''எங்கே போனே, சொல்லு!''

அமிர்தம் வடிந்த கண்ணீருடன் அவர் அருகில் வந்தாள்.

''பாத்திரம் தேய்க்கக் குறுமண் எடுக்கப் போனேன்ப்பா! அந்தப் பஞ்சு வந்து, 'பண்ணையார் பையன்தான் உசத்தியா? என்னைப் பிடிக்கலியா'ன்னு என்னென்னமோ பேசறான்ப்பா.''

''பேசறானா? உன்னை யார் அந்தப் பக்கம் போகச் சொன்னா? நாலு பேர்கள் பரிகாசம் பண்ணும்படி நடக்கிறியே! போ, போ! உள்ளே போ!''

அப்பு தலையில் கையை வைத்துக் கொண்டே உள்ளே போனார். வெளித் திண்ணையில் துண்டை விரித்துக்கொண்டு படுத்து விட்டார்.

இருள் விழுந்து கொண்டிருந்தது. வீடெல்லாம் சுவர்க்கோழி முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

அமிர்தம் சமையலை முடித்தாள். வாயிற் திண்ணைப் பக்கம் மெதுவாக நடந்தாள்.

''அப்பா!''

பதில் இல்லை.

உலுப்பி எழுப்ப மெதுவாக அப்புவின் மீது கை வைத்தாள். மறுகணம் திடுக்கிட்டாள். அவர் உடல் நெருப்பாய்ச்சுட்டது.

உலுப்பலில் அப்பு கண் விழித்தார்.

''உடம்பு காய்கிறதே, அப்பா!''

அவர் பதில் பேசவில்லை. எழுந்து உட்கார்ந்தார்.

''கஷாயம் வைக்கட்டுமா?''

அவர் பதில் பேசவில்லை. தூணைப் பிடித்துக் கொண்டார்.

வாந்தி வந்து விட்டது. குமட்டிக் குடலே வெளி வந்து விடும் போல் இருந்தது. வாந்தி நின்றதும் எழுந்தார். சுவரைப் பிடித்தவாறு தள்ளாடித் தள்ளாடி உள்ளே நடந்தார். பாயை விரித்துப் படுத்துக் கொண்டார்.

பதிலே பேசவில்லை!

ஒரு வாரமாக வானம் பொழிந்து கொட்டியது!

மழை நாளில் இரவும் பகலும் மயங்கிக் கிடந்தது போல் அப்புவுக்கு நினைவும் பிரமையும் மயங்கிக் கிடந்தன. காய்ச்சலின் வேகம் குறைய ஒரு வாரமாயிற்று. இப்போது நினைவு வந்து விட்டது.

அன்று வானம் சற்று வெளிவிட்டிருந்தது. ஒளியே தன்னைக் கழுவிக் கொண்டு வந்தாற்போல் எங்கும் பசைந்த வெயில்.

அமிர்தம் வெந்நீர் கொணர்ந்து வைத்தாள். வாசலில் 'ஸார்!' என்ற குரல் கேட்டது. அவள் வாசலை நோக்கிச் சென்றாள்.

''டானிக் வாங்கி வந்திருக்கிறேன். இதோ திண்ணை மேலே வைத்திருக்கிறேன்'' என்றார் வந்தவர்.

''பாவம்! உங்களுக்கு ரொம்பச் சிரமம்!'' என்றாள் அமிர்தம்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. என் கடமை! அவ்வளவுதான். வரேன்!''

பேச்சு நின்றுவிட்டது. அமிர்தம் திரும்பினாள். அப்பு அவளைக் கூர்ந்து கவனித்தார்.

''வந்தது யாரு?'' என்றார்.

அமிர்தம் அப்புவின் களைத்த புருவங்களைக் கண்டாள்.

''பண்ணையார் மருமான் பட்டணத்திலிருந்து லீவில் வந்திருக்கிறார். அவர் இல்லாவிட்டால் நீங்கள் பிழைப்பது மறுஜன்மம்தான். போன வாரம் முழுவதும் டாக்டருக்கும் டவுனுக்குமாய் ஓடிக் கொண்டிருக்கார். இன்னிக்கு டானிக் வாங்கி வந்திருக்கிறார்.''

அமிர்தம் டானிக் புட்டியை அவர் முன் வைத்தாள். அப்பு அதை எடுத்தார்; மேலும் கீழுமாகப் பார்த்தார். பிறகு தூக்கி முற்றத்தில் எறிந்தார்.

புட்டி தூள் தூளாகச் சிதறி விழுந்தது. அமிர்தம் வெலவெலத்து நின்றாள்.

''இனிமேல் வெளி ஆள் ஒருத்தர் கூடவும் பேசாதே, ஆமாம்!'' என்று இரைந்தார் அப்பு.

கார்த்திகை தினம்!

இரவில் இரு மருங்கிலும் அகல் விளக்குகள்! கோடியிலிருந்து கோடி வரை ஒளி வரிசை நெளிந்தும் வளைந்தும் ஓடிக் கொண்டிருந்தது.

அமிர்தம் கோவிலுக்குச் சென்றாள்.

கோவிலுள் வருவோர் போவோர் இருந்தனர். ஆனால் அவளிடம் பேச யாரும் வரவில்லை. ஊரே தன்னைத் தனித்து நிறுத்தி விட்டதா?

அமிர்தம் திரும்பலானாள்.

வீதியின் இரு மருங்கிலுமுள்ள விளக்குகளைக் கண்ணுற்ற போது தெருவுக்கே பல் வரிசை தோன்றித் தன்னைப் பார்த்து நகைப்பது போலிருந்தது.

பண்ணையார் வீடு முன் வந்தபோது அவள் மனம் ஒரு கணம் அடித்துக் கொண்டது. தன் மீது கனிவை வீசும் கண்கள் உலகில் உண்டென்றால்...

அமிர்தம் திரும்பிப் பார்த்தாள். அவள் நினைத்தது வீண் போகவில்லை. பண்ணை வீட்டு வாசலருகில் பட்டணத்திலிருந்து வந்த அவர் மருமான் நின்று கொண்டிருந்தான். நொந்த அவள் உள்ளத்தில் நொடியில் நகை கூடிற்று.

அவனும் மலர்ந்து சிரித்தான்.

''அப்பாவுக்கு நல்ல குணமாகி விட்டதா?'' என்று கேட்டான்.

அவள் தலையசைத்தவாறே விரைந்து நடந்தாள்.

மறு நாள் காலை.

பெரிய பண்ணை குரல் கேட்டு அமிர்தம் நடையில் ஒடுங்கி நின்று பார்த்தாள். பண்ணை, அப்புவிடம் இரைந்து பேசிக் கொண்டிருந்தார்.

''அவளைப் பார்த்துச் சிரிச்சானாம், சுவாமி! தெருவிலேயே நின்னு பேசினானாம். எங்க மங்களம் பார்த்துச் சொன்னாள். அப்படி என் மருமான் மனசைக் கலைச்சுட்டாளானால்? கொஞ்ச நாட்களாய் அவன் நடக்கிறதும் எனக்குச் சரியாகத் தோணலே! வர வாரம் பட்டணத்துக்கு அனுப்பிடப் போறேன்.''

அப்பு கலங்கி நின்றார்.

''துளுத்துப் போச்சு என்றும் பெண்ணை ஏன் கல்யாணம் பண்ணாமல் வைச்சிருக்கிறீர்? ஒன்று கல்யாணம் பண்ணும். இல்லே, ஊரைக் காலி பண்ணும்.''

''வரன் அமையவில்லே!'' அப்புவின் குரல் உடைந்திருந்தது.

''அமையவில்லையா? சொத்தையோ சொடையோ எவன் காலிலேயாவது கட்டும், சுவாமி! நம்ம பஞ்சாமி இருக்கிறார். அவருக்குக் கொடுமேன்!''

அப்பு திகைத்தார்.

''அவருக்கா?''

''என்ன அவருக்கா? கொடுக்கக் கசக்கிறதோன்னு கேட்கிறேன். மூத்தாள் போனதிலிருந்து அவரும் கிடந்து அலையறார். நான் விசாரிச்சுட்டேன். 'சரி'ன்னு குழையறார். கட்டிப் போடும். அடங்கிக் கிடப்பாள். சொல்றதைக் காதில் வாங்கினீரா?''

''யோசிக்கிறேன்'' என்றார் அப்பு.

அமிர்தம் தொழுவம் வரை சென்று கதவைத் திறந்து கொண்டு நின்றாள். தாமிரவருணியில் வெள்ளம் குமைந்து ஓடிக் கொண்டிருந்தது.

பஞ்சாமி! அவர் கண்கள் பளிக்கண்கள்! தன்னைப் பற்றிக் கிளப்பிய அவதூறெல்லாம் தன்னை மணப்பதற்குத்தானோ?

ஐம்பது வயது கடந்த அந்த அவலட்சணத்தையா மணப்பது?

அமிர்தம் நீராய்ச் சோர்ந்தாள்!

இருட்டியதும் அப்பு கோவிலுக்குப் புறப்பட்டார். அவர் துக்கத்துக்கு அது ஒரு புகலிடம்!

சிறிது நேரத்தில் அமிர்தமும் எழுந்தாள். வெளியே வந்தாள். இலேசாகத் தூறல் இருந்தது. இருட்டின் புகுந்து அவள் நடக்கலானாள்.

ஆற்றை நோக்கி அவள் நடந்து கொண்டிருந்தாள். அடிவானத்தில் பின்னல்களை வரைந்த மின்னல்கள்! ஆங்காங்கு வானம் கிழிந்து தரையில் கிடக்கிறதோ எனும்படி வெளிறிய வானத்தைப் பிரதிபலித்த நீர் நிலைகள்!

அமிர்தம் ஆற்றுள் காலை வைத்துவிட்டாள். வெள்ளத்தின் வேகம் காலை வெட்டி இழுத்துக் கொண்டிருந்தது.

முட்டளவு ஆழத்தைத் தாண்டி விட்டாள் அவள்.

இது ஒரு சக்கான் பாறையின் மேடு. இதைத் தாண்டி ஓர் அடி எடுத்து வைத்தாள்....

# அம்பீஸ் கபே

சென்னை ஜார்ஜ் டவுன் பகுதியிலேயே

தங்குவதற்கான வசதிகள் எல்லாம் ஒருங்கே அமைந்த

## முதல்தரமான இடம்

✲

- சம சீதோஷ்ணத்துடன் கூடிய 'ஏர்கண்டிஷன்' அறைகள்
- ஒருவர், இருவர் மற்றும் குடும்பத்தினர் தங்குவதற்கான குளிர்ந்த நீர், வெந்நீர் 'ஷவர் பாத்' வசதிகளுடன் கூடிய அறைகள்
- டெலிபோன், ரேடியோ முதலிய தற்கால நவீன வசதிகள்
- முதல், இரண்டாவது மாடிகளுக்குச் செல்ல 'லிப்ட்' வசதி
- குளிர்ச்சாதனம் அமைக்கப்பட்டுள்ள வரவேற்புக் கூடம்
- குளுகுளுவென்றிருக்கும் சாப்பாட்டு அறைகள்




**அம்பீஸ் கபே · 6, 7, 8, 9, பிராட்வே · சென்னை-1**

PHONE: 4747, 2453.

மேட்டின் விளிம்பு! அவன் வாழ்வின் விளிம்பு! இனி இதை உதறுவதற்கு எவ்வளவு நேரம்?

நீர்ப் பரப்பில் சலசலப்பு ஏற்பட்டது. கரையிலிருந்து யாரோ இறங்கிக் கொண்டிருந்தார்கள். "நீருள் பாய்ந்து விடலாமா?"

"அமிர்தம்!"

அவள் திடுக்கிட்டாள்.

"அமிர்தம்!" அவள் காதுகளில் அமிர்தம் விழுந்தாற் போலிருந்தது. திரும்பினாள்.

"நீங்களா?"

"இதென்ன பைத்தியக்காரச் செய்கை? வாருங்கள் இப்படி!" பண்ணையார் மருமான் இரைந்தான்.

அவள் தயங்கினாள்.

"அமிர்தம்! நான் சொல்வதைக் கேட்கவில்லையா?"

அவன் அழைத்ததின் கனிவு அவளை இழுத்தது. திரும்பினாள்.

இருவரும் கரையை அடைந்தனர்.

"சத்தியம் செய்து கொடுங்கள், இம்மாதிரி இனிச் செய்ய எத்தனிக்க மாட்டேனென்று."

அவள் அவனை ஏறிட்டாள்.

"சத்தியமா? என் போன்ற பெண்களுக்கு இதுதானே புகலிடம்?"

"அதைப் பற்றிச் சர்ச்சைக்கு வரவில்லை. எனக்காகவாவது சத்தியம் செய்யுங்கள்!" அவன் கண்கள் அவள் கண்களில் படிந்தன.

"சரி, இனிமேல் உயிரை மாய்த்துக் கொள்ள மாட்டேன்!"

அவன் மொழியின் இனிமை அவள் இதயத்தில் நிரம்பியது. மௌனமாக இருவரும் நடந்தனர்.

கீழச் சந்நிதி அருகில் வந்தனர்.

"யாரது?" அப்புவின் குரல்தான். கோவிலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார். அமிர்தம் நடுக்குற்றாள்.

அப்பு வெகு அருகில் வந்தார். வானத்தில் பெரிய மின்னலொன்று பிறி வழிந்தது. நின்ற உருவங்கள் இரண்டும் அவருக்குத் தெரிந்து விட்டன.

"அட, நாசகாரீ..."

அமிர்தத்தின் கையை அவர் இறுகப் பிடித்தார்.

"அப்பா!" அமிர்தம் கதறினாள்.

"மாமா!"

"உனக்கு எந்த முறையிலடா மாமா? போடா அயோக்கியா!"

அமிர்தத்தைக் கரகரவென்று இழுத்துச் சென்றார்.

மழை பிடிக்கலாயிற்று. மின்னல்கள் துடிக்கலாயின!

அப்பு வீட்டுக்கு வந்தார். வாயிற் கதவைச் சாத்திக் கொண்டார். மூலையில் சாத்திவிருந்த கைத்தடியை எடுத்துக் கொண்டார்.

"அடி, நாசகாரி..."

"அப்பா, அடிக்காதேப்பா! நான் சொல்றது முழுதும் கேளுங்கப்பா!"

அப்புவுக்குக் கண் மூக்கில்லை. அந்தக் கைத் தடிக்குமில்லை. அமிர்தம் சுருண்டு விழுந்தாள்.

மின்னல்கள் துடித்து ஓடின. மழை அழுது சோர்ந்தது.

விரைவில் பந்தலிட்டு வாழை நட்டார்கள். ஊர் கேட்கக் கொட்டு முழங்கினார்கள்!

அமிர்தத்துக்கும் பஞ்சாமிக்கும்....

கல்யாணத்தன்று இரவு...

சோபன அறைக்கு அமிர்தத்தை அழைத்துச் சென்றார்கள். அவளை நெட்டித் தள்ளிக் கதவைச் சாத்துமுன் உள்ளே பஞ்சாமி சுருண்டு கீழே விழுவது தெரிந்தது!

எல்லோரும் ஓடி வந்து பஞ்சாமியைத் தூக்கினார்கள். படுக்க வைத்தார்கள். வைத்தியன் வந்தான். பஞ்சாமி மீண்டும் லேசாகக் கண்ணை விழித்தார்.

"ம்...ம்....பெண்ணை அழைத்து வாருங்கள்." குரல்கள் ஒலிம்பின. அப்புவை அந்தக் குரல்கள் உலுக்கின.

"அமிர்தா, அமிர்தா!"

எல்லோரும் தேடினார்கள். அப்பு நதிவரையில் ஓடிப் போனார்.

"அமிர்தா, அமிர்தா!"

பதில் இல்லை. பயங்கர மௌனம். அவள் மறைந்தது இருளின் மௌனத்திலா, நதியின் மௌனத்திலா?

"அமிர்தா!"

பதில் இல்லை. அப்பு மீண்டும் தெருவில் நுழைந்தார்.

"அப்பு!" சாம்பு அத்தான் குரல்! அப்பு நின்றார்!

"அமிர்தத்தைத் தேடாதே!"

"என்ன?"

"பஞ்சாமி கண்ணை மூடிட்டார், போ!"

நாளும் திங்களும் தேய்ந்தோடி விட்டன. ஆனால் நினைவு...

அவளைத் தேட முடியவில்லை. ஆனால் வாழ்வைத் தேடிப் பட்டணம் சேர்ந்தாயிற்று. இங்கே வாழ்வதும் வாழ்வா?

அப்பு எழுந்தார். துண்டை உதறினார். நடக்க ஆரம்பித்தார்.

பாண்டி பஜார் தாண்டி விட்டார். அவர் கண்களுக்கு மறு பிளாட்பாரத்தில் செல்லும் பெண்களின் அணி வகுப்பு தென்பட்டது. நூறு பெண்களாவது இருக்கும். வெள்ளைப் புடவை உடுத்தி வரிசைக்கு நான்கு பேர்களாவது நடந்து கொண்டிருந்தனர். அணிக்கு முன் பின் நடுவில் ஜெருகையும் தலையணியும் தரித்த விண்டர்கள்.'

"ஜெயில்துவக் கன்னியா ஸ்திரீகள் போல் இருக்கே!"

அப்புவின் நினைவோட்டம் முடியவில்லை. அவர் கண்கள் நிலைகுத்தாக நின்றன. அந்தக் கடைசி வரிசையில் கடைசிப் பெண்...

"அமிர்தமா?"

அதே நடை! அதே ஜடைதான்!

"அமிர்தா!"

தொந்தி குலுங்க அவர் விரைவு நடையிட்டார். "அமிர்தந்தான்! அதே முகச் சாயல்தான்!"

அவசரம் அவசரமாய்ச் சாலையைக் கடந்தார்.

அணிவகுப்பு இப்போது வளைந்து ஒரு காம்பவுண்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

அப்பு இரைக்க ஓடினார். அணி வகுப்பின் வளைவில் அவள் முகம் நன்றாகத் தெரிந்தது. அவள் அமிர்தந்தான்.

"அமிர்தா!"

அவர் பலங்கொண்டு இரைந்தார். அந்தப் பெண் திரும்பித் தயங்கினாள். ஒரு விண்டர் அவளைத் தட்டி அணியுடன் சேர்த்து விட்டாள். அணி ஒரு கட்டடத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

அப்பு காம்பவுண்டுக்குள் நுழைய முயன்றார். யாரோ தடுத்தார்கள். காவற்காரன்தான்!

"அமிர்தா."

கட்டடத்துள் கடைசியாகப் பிரவேசித்துக் கொண்டிருந்த அந்தப் பெண் திரும்பினாள். ஏதோ கூவிக் கொண்டு அவரை நோக்கி வர யத்தனிப்பது தெரிந்தது. அவளைப் பிடித்து ஒரு விண்டர் பலவந்தமாக உள்ளே தள்ளிக் கதவைச் சாத்துவதும் தெரிந்தது. பிறகு அந்த விண்டரே அவரை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

"யாரு மேன், வேணும்!"

"அமிர்தம்."

"அமிர்தமும் இல்லே, விஷமும் இல்லே. போ போ!"

அப்பு தயங்கினார். அவர் உள் மனம் கூவியது. 'இப்போது உனக்கே ஒரு வேளைச் சோற்றுக்கு லாட்டரி! அவளை வேறு கட்டிக்கொண்டு.....'

அப்பு திரும்ப முயன்றார். ஆனால் மீண்டும் ஒரு சந்தேகம். கட்டடத்தைப் பார்த்தார்.

கருங்கல் கட்டடம்! ஜன்னல்கள் என்ற பெயரில் மோட்டு அருகில் காற்று புகச் சிறு சிறு துவாரங்கள்! பெரிய நிலைக் கதவு! சுற்றி வரக் காம்பவுண்டுச் சுவர்!

'சிறை வாழ்ந்து தான் அவள் நெறி காக்கிறாள்' என்று தோன்றியது.



## அதோ வருகிறது என் நட்சத்திரம்

சுற்றித்திரியும் நட்சத்திரமும் என் அன்புக்குரியவரும் வீடுதிரும்பிவிட்டனர் என் கணவர் டாடா-மெர்ஸிடஸ்-பென்ஸ் சரக்கு வண்டியொன்றை வாங்கியதிலிருந்தே, பணம் சீராக வந்துகொண்டிருக்கிறது-எங்கள் வீட்டுக்கு அத்தியாவசியமானதொரு பொருளை வாங்க உதவும் பணம், எரிபொருள் மற்றும் பராமரிப்புச் செலவிலும் டாடா-மெர்ஸிடஸ்-பென்ஸ் உதவும் சிக்கனத்தின் மூலம்தான் மேற்படி அதிகப்படி வருவாயில் பெரும்பகுதி கிட்டுகிறது. செயல் முறை சிக்கனத்திற்குப் பேர்பெற்றதல்லவா டாடா-மெர்ஸிடஸ்-பென்ஸ்?



நல் வாழ்வு நல்கும் நட்சத்திரம்

**டாடா-மெர்ஸிடஸ்-பென்ஸ்**

டாடா லோகோமோடிவ் & என்ஜினியரிங் கம். லிமிடெட், ஆட்டோமோபைல் டிவிஷன்: 148, மகாத்மா காந்தி ரோட், பம்பாய்-1.

எல்லோருக்கும் எங்கள்

மனமார்ந்த தீபாவளி



வாழ்த்துக்கள்



கலிங்கா ட்யூப்ஸ் லிமிடெட்,

33, சித்தரஞ்சன் அவின்யு, கல்கத்தா—12.

தொழிற்சாலை:

சௌத்வார், கட்டாக், ஒரிஸ்ஸா

KALPANA.TH.



சிறந்த பொருள்களைப் பெறுவது சிரமமான காரியம் அல்ல



இல்லற வாழ்வே இன்ப வாழ்வு! இல்லத்தில் இன்பம் நிலவ உதவுவது நல்ல உணவு. ருசியும், போஷாக்கும் மிகுந்த உணவு தயாரிக்க

## சூரியன் மார்க்

மைதா, சூஜி, ஆட்டா உபயோகியுங்கள்




சுத்தமும், சுகாதாரமும் மிகுந்த கோதுமைப் பொருள்கள் இவை என்பது அனைவரும் அறிந்த உண்மை

தயாரிப்பவர்கள்:

செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிட்டெட்

221, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-1

டெலிபோன்: 31241, 31242, 31243, 4165 தபால்பெட்டி எண். 1558

தந்தி: MATHOORAN

EP

---

# ராலே



75 வருஷ காலமாக சைக்கிள்களில் தலைசிறந்தது



உலகெங்கும் கோடிக்கணக்கானவர் சவாரி செய்து பாராட்டியுள்ள ராலே 1886ம் வருஷம் முதல் சைக்கிள்களில் தலைசிறந்ததாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. 75 வருஷங்களாக ராலே தொடர்ந்து அபிவிருத்தி அடைந்து வந்திருக்கிறது. இன்றைய ராலே முன்பிருந்ததையெல்லாம் விடச் சிறந்தது......தரத்தில் இணையற்றது. தொல்லையற்ற சேவையளிப்பது.

ராலே சைக்கிளுக்கு என்ன விலை கொடுத்தாலும் தகும்!

அதிகரித்த சொகுசுக்கு விட்காப் ஸாடில் பொருத்துங்கள்

## ஸென்-ராலே

SRC-65 TM



# தந்தி வந்தது

'பிளாஸ்கு' டிபன் பாத்திரம் அடங்கிய வலைப் பையும் கையுமாக ஆபீசுக்குத் தயாராகக் கனகம் வெளியே புறப்பட்டு பங்களா முன்புற வாயிலுக்கு வந்ததும் தந்திச் சேவகன் "கனகவல்லி" என்று பேர் கூறிக்கொண்டு எதிர்ப்பட்டதும் மோதிக் கொள்ளும் அவசரத்தில் நிகழ்ந்தன.

ஒரு கணம் கனகம் பிரமிப்புடன் நின்றாள்.

"கனகவல்லி, 53, சர்ச் ரோடு.... யாரம்மா?" என்றான் தந்திச் சேவகன்.

"கனகவல்லியா? நான் தான்.... எனக்கா? தந்தியா?" என்று கேட்ட கனகத்துக்கு வாய் குழறியது.

அவளுடைய விலாசம் தெரிந்து, அவளுக்குத் தந்தியடித்திருப்பவர் யார்?

முன் பங்களாவில் கனகவல்லி என்ற பெயருடையவர் எவருமே கிடையாது. பின்புறமுள்ள இன்னொரு 'அவுட் ஹவு'ஸிலும் கனகவல்லி என்ற பெயரைத் தாங்குபவர் எவருமில்லையே?

"நீங்கள்தான் கனகவல்லி என்றால், உங்களுக்குத்தான்..." என்று தந்தியை நீட்டினான் காக்கிச் சட்டைக்காரன்.

கையெழுத்திட்டுச் செய்தியை வாங்கிப் பிரிப்பதற்குள் மனத்திரையில் எண்ணற்ற மின்னற்கோடுகள் பளிச்சிட்டன.

கனகவல்லி என்று பேரிட்டு அவளுக்கு அவசரச் செய்தி கொடுக்கும் உறவு மனிதர் எவருமில்லையே? அவள் உறவில் உள்ளவர்க ளெல்லோரும் ரயில் பிரயாணச் சிநேகிதர்களைப் போல் அவ்வப்போது தொடர்பு கொண்டவராகத் தானே நினைத்திருக்கிறாள்?

என்ன ஆச்சரியம்!

கையில் தந்திக் காகிதம் நடுக்கத்தால் படபடத்தது.

'இங்களன்று மாலை வருகிறேன்; ஸ்டேஷனில் சந்திக்கவும் — சுந்தரம்.'

அவளுக்குச் சுந்தரம் தந்தி கொடுத்திருக்கிறார்!

பங்களூரிலிருந்து சுந்தரம் கனகவல்லிக்கு! அவளுக்கேதான்! 53, சர்ச் ரோடு, சென்னை-4.

சந்தோஷமா? துயரமா? நெஞ்சை அடைத்துக் கொண்டு கண்ணீர் முட்டுகிறதே! அதிக சந்தோஷத்திலும் மூச்சு நின்றுவிடக் கூடாதே!

கனகம் பையும் தந்தியுமாக மெள்ளத் தோட்டத்திலுள்ள பெஞ்சியில் உட்கார்ந்தாள்.

புதிதாகப் பிரசுரமாகி வந்த கதையைத் திருப்பித் திருப்பிப் படிக்கும் இளம் கதாசிரியனைப் போல அவள் அந்தத் தந்தி வாசகத்தைத் திருப்பித் திருப்பிப் படித்துப் பார்த்தாள்.

சந்தேகக் குளத்தில் தோய்த்துத் தோய்த்துக் கழுவினாள்.

கடைசியில் பளிச்சென்று அந்த வாசகத்தின் பொருள் அவளுக்காகவே, அவளுக்கென்றேதான் துலங்கியது.

இனி இல்லை என்று என்றோ மனக்குழியின் ஆழத்தில் புதைத்துவிட்ட நம்பிக்கை, மகத்தான கனியாகக் கண்முன் இல்லை, கையில் இருக்கிறதே! சுந்தரம் அவளுக்காக வருகிறார். அவர் வாக்கு பொய்யில்லை.

போலியாகவே நிறைந்துவிட்ட உலகில் அசலுக்கு இடமில்லை என்று முடிவாக்கி விருந்தது பேதைமை. அறிவந்த ஏமாற்றத்தில் முதிர்ந்த நிராசை, அதைச் சுந்தரம் கெல்லி எறிந்துவிட்டார்.

"என்ன கனகா, ஆபீசுக்குப் போக நேரமாகவில்லையா? என்ன! தந்தியா?"

அவளுடன் 'அவுட் ஹவுஸி'ல் குடியிருக்கும் ருக்மிணிதான் கேட்டவள். கடந்த மூன்று வருஷப் பழக்கத்தில் அவள் அறியாத அந்தரங்க இரகசியம் எதுவுமே கனகத்தின் வாழ்வில் இல்லை.

தந்தியை அவளுக்குக்காண்பித்தாளே ஒழிய, கனகத்துக்குப் பேச்சு எழவில்லை.

"அரைவிங் மண்டே ஈவினிங் மீட் அட் சென்ட்ரல் ஸ்டேஷன் - சுந்தரம்"

"யார் கனகா?"

எத்தனையோ சந்தேகங்களை ஒரு கேள்விக் குறியில் தொங்கவிட்டுக் கொண்டு பார்த்த அவளுக்கு, கனகம் தொட்டும் தொடாத அந்தப் பழக்கத்தை எப்படி எடுத்துரைப்பாள்?

கதைகளிலும் திரைக் கதைகளிலுமே நடக்கக்கூடியதாக அவள் கேள்விப்பட்டிருக்கும் சந்திப்பு, இல்லை, சங்கமம், ஐந்து வருஷங்களுக்குப் பிறகு நினைக்காத அளவில் நேரப் போகிறது. சட்டென்று விண்டு காட்டும் சேதியா?

"யார்? யாரோ கோயமுத்தூரில் அத்தை இருக்கிறாளென்றாயே? அவ இருந்தா?"

"இல்லே."

கனகா நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். புரட்டாசி

ராஜம் கிருஷ்ணன்



மாதப் புழுக்கம்: அவளுக்கே முத்து முத்தாய் வியர்வை துளிப்பது அதிகம்.

முதலில் ஆபீசுக்கு லீவு போடவேண்டுமே? இன்கட் முழுமை மாலே, அன்றேதான்! இனி எதற்கு ஆபீசும், பஸ் நெருக்கமும்? ஆனால் ஐந்து வருஷங்களாய்ச் சோறு போடும் ஆபீஸை அதற்குள் கைவிட்டு விடுவதா?

பெரிய பங்களாவின் பின்புறம், துரை மாடம் இவை எல்லாவற்றுக்கும் பின்னே கொசுவும் கூட ஏராளமாக வாசம் செய்யும் 'அவுட் ஹவுஸ்' பகுதி. பெரிய மனிதர்கள் வாழும் சர்ச் ரோடில் பதினைந்து ரூபாய் மாத வாடகையில் ஒற்றையறையில் வசிப்பதே கனகத்துக்குப் பெருமைக்குரிய விஷயமாயிற்றே?

வழக்கமில்லா வழக்கமாக மூடிய கதவு திறக்கப்பட்டு விட்டது.

பையும் பிளாஸ்கும் அப்படியே மேசையில் தங்கிவிட்டன. ஆபீசுக்குப் புறப்பட்ட நேரத்தைத் திருப்பிவிட்ட தந்தி ாகவில். காலத்தின் ஓட்டத்தையே இந்து ஆண்டுகளுக்குமுன்னே திருப்பிவிட்டதே!

திருப்பிவிடப்பட்ட அந்தப் பாதையில் கனகம் ருக்மிணியை அழைத்துச் சென்று கொண்டிருந்தாள். ப்போது இறந்த காலமாகி, உல்லாச யாத்திரை செல்லத் தகுந்த நெடுஞ்சாலையாகத் தோன்றும் பாதை. அப்போது முன்னே நடக்கக் கல்லும் முள்ளுமாக எத்தனை கடினமாக இருந்தது!

தந்தை என்ற ஒருவர் நல்லவராகத் தங்களை அரவணைத்து அன்பு செலுத்தியதாகக் கனகத்துக்குக் கொஞ்சம் கூட நினைவில்லை. ஊதாரியாய், ஒட்டாத பிறவியாய் ஊர் சுற்றும் அவரைப் பற்றி அத்தையின் வாய்மொழியில் அவள் கேள்விப்பட்டதுதான். மனைவியின் தாலி முதல் அபகரித்துச் சூதாடிப் படுகுழியில் வீழ்ந்துமாண்டவர் அவர். பெற்றவளும் தேய்ந்து மாய்ந்து ஒரு நாள் அக்காளையும் தங்கையையும் பத்தும் பன்னிரண்டுமாய் விட்டுவிட்டு அந்தப் புருஷனுடன் வேறுலகிலேனும் 'வாழலாம்' என்ற நினைப்பில் போய்விட்டாள். வளர்வதற்கு அத்தையிடம்தான் வந்தார்கள் சகோதரிகள்.

எப்படிச் சோறு போட்டாலும் சோறு சோறுதானே? தங்க நிழல் நிழல்தானே? பெண்ணுப் பிறவி எடுத்து மானம் மரியாதை என்ற கட்டுக்கோப்புக் கலையாத ஒரு வீட்டில் இருந்து பழகிவிட்டாலும், கோபித்துக் கொண்டு வெளியே அறுத்துக் கொண்டு போய்விடத் துணிவு வருமா? கண்டதைப் பற்றிப் படர்ந்துவிடப் பெண் என்ன காட்டுக் கொடியா?

அத்தையைக் குற்றமே சொல்லக்கூடாது. நிறையப் பணத்தை மட்டும் அவளுக்குக் காட்டி வாழ்வைத் தராது ஏமாற்றி விட்டவன் மீதுள்ள ஆத்திரத்தை அவள் யாரிடம் காட்டுவாள்? ரங்கநாதபுரத்தில் இருந்து அதிகாரம் செய்ய வீடு, நானிய சம்பத்துக்கள் எல்லாம் அவளுக்குக் குறைவில்லை. வடம்வடமாய்த் தங்கச் சங்கிலிகளும், அட்டிகையும் புதையப் புதையத் தங்க வளையல்களும் பூட்டிக்கொள்ளப் பாரி சரீரம் இருந்தது. நெற்றி பளைக்க மஞ்சள் குங்குமம் அணிந்து காஞ்சீபுரம் பட்டுப் புடவைதான் உடுத்துவாள். மாசா மாசம் மூன்றாந் தேதியில் டில்லியிலிருந்து இருநூறு ரூபாய் அவளைத் தேடி வந்துவிடும்.

அத்தைக்கு ஒன்றுக்குமே குறைவில்லைதான். மாசம் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கும் புருஷனிடம் ஒரு வங்காளக்காரி குழந்தையும் குட்டியுமாக வாழ்கிறாள் என்ற புகைச்சலைத் தவிர.

அத்தைக்கு ராஜேச்வரி பூஜை, பாராயணம் எல்லாம் உண்டு. அம்பாளின் பிரத்யட்ச அனுக்ரகம் தனக்கு இருப்பதாகத் தென்பட்டவர்கள் எல்லாரிடமும் சொல்லிக் கொள்வாள்.

கனகம் வாய் திறக்காமல் எல்லாவற்றுக்கும் அடிபணிந்து போவாள்.

பத்மாவுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்காது. சொல்லப் போனால் தங்கை கனகத்தின்மீது அவளுக்குக் கொஞ்சம் பொறாமையும் கூட.

படிப்பு முடிந்ததும் அவள் சிறகடித்துப் பறந்துசென்று விடுவாள். பத்மாவுக்குப் பறக்கச் சிறகேது?

கர்வமும், பொறாமையும், மூடத்தனமும் கொண்ட அத்தைக்கு விசிறிக் கொண்டும் கால் பிடித்துக் கொண்டும், ஏவின வேலையைச் செய்துகொண்டும் சோறு தின்று வாழ்வதுதானா வாழ்க்கை? ஆனால் வேறு வழியில்லையே!"

அத்தை அம்பாளின் அனுக்ரஹ சக்தியைப் பெற்று ஊருக்கெல்லாம் நல்லது நினைப்பதற்காகவே வாழ்வதாகச் சொல்



விக் கொண்டிருந்தாளே ஒழிய, ஆயிரக் கணக்கில் வாரிவிட்டுப் பத்மாவுக்குக் கல்யாணம் செய்வதாக இல்லையே?

ஏதோ தர்மக் கல்யாணம், இருநூறு முந்நூறு செலவில், அதுவும் அம்பாள் ஆக்ஞாபித்தால் முடிப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

கனகத்துக்கு ஐந்து வருஷங்களுக்கு முன்பு நடந்ததாக நினைவில்லை. கண் முன் நடப்பதாகவே பசுமையாக நினைவில் தோன்றியது.

அன்றுதான் கடைசிப் பரீட்சை எழுதி முடித்து விட்டு அவள் 'அப்பாடா' என்று வீட்டுக்கு வந்தாள். தெருக்கோடியிலேயே வாசலில் குதிரை வண்டி நிற்பதை அவள் கண்டு விட்டாள். வீட்டினருகே வருகையில்தான் 'புஸ் புஸ்' என்று மூச்சுவிட்டுக் கொண்டு ஓர் அம்மாள் வண்டியில் ஏறினாள். அவள் பின் வந்த இருவரையும் அந்த நோஞ்சல் குதிரை தாங்குமோ?

கனகம் சிரித்தாள்.

அவன் கறுப்பாக இருந்ததனால் அவளுக்குச் சிரிப்பு வந்ததென்று கொள்ளக் கூடாது. கனகமே கறுப்புத்தானே? அவனுக்குக் கட்டை குட்டை சரீரம், முகத்தில் மூக்கு இல்லை. கத்திரிபோல் மீசை மட்டுமே இருந்தது. கண்கள் பளீரென்று வெப்பாகத் தெரிந்தன. தொந்திக்கு மேல் கதர்ச் சட்டை சரிந்து விழுந்தது. அவன் தன்னை உற்றுப் பார்த்தான் என்று அறிந்தபோது, கனகத்துக்கு ஏனோ சிரிப்பு அடக்க முடியாமல் வந்தது. அத்தை வாயிற்படியில் நிற்பது கண்டு, சிரிப்பை அடக்கிக் கொள்ள முடிந்தது.

அத்தையின் அநுக்ரஹ சக்தியைக் கேள்விப்பட்டு வந்திருப்பாரோ அல்லது நிலபுலன்கள் சம்பந்தமாக வெளியூரிலிருந்து வந்திருப்பாரோ என்று மனத்துக்குள் எண்ணியவளாய், அவள் தலையைக் குனிந்து கொண்டு உள்ளே சென்றாள். கூடத்தில் வழக்கம்போல் குத்து விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நடுவில் ஒரு பாய் விரிக்கப்பட்டிருந்தது. காலியான காப்பி டம்ளர் டவராக்கள் இரண்டுடன் ஒரு தட்டில் சுண்ணாம்புடன் கூடிய வெற்றிலையுடன் நான்கு கசங்கிய வெற்றிலைகளும் இருந்தன. உள்ளே பத்மா, பொய்ப் பட்டுப் புடவையை மடித்துக் கொண்டிருந்தாள். பின்புறம் அவளுடைய நீண்ட பின்னலில் மல்லிகைச் சரம் பந்திலிருந்து பிரிந்து ஒருபுறம் தொங்கிக் கொண்டிருந்தது.

கனகத்துக்கு வந்த சிரிப்பு உள்ளேயே கருகிவிட்டது. விக்கித்தாற்போல் பத்மாவின் முகத்தைத் திரும்பிப் பார்த்தாள்.

"அக்காவுக்குக் கல்யாணமடி கனகா!" என்று சமையற்காரி லோகு, பெரிய பல்லைக் காட்டிக் கொண்டு அவளிடம் சேதி சொன்னாள்.

"அக்கா..." என்றாள் கனகம்.

பத்மா நல்ல சிவப்பு நிறம். செதுக்கி எடுத்தாற் போன்ற முகம். அவள் சிரித்தால் பார்த்துக்கொண்டே யிருக்கலாம்.

பத்மா ஏன் சிரிக்கிறாள்? இவ்வளவு அழகாக அக்கா எதற்குச் சிரிக்கிறாள்?

"நிசம்தானா அக்கா?"

பத்மா வெட்கப்பட்டு, சிரிப்பை அடக்கிக் கொண்டு முகத்தைத் திருப்பிக் கொள்கிறாளே?



'நிசம்தானா அக்கா? உனக்குக் கல்யாணமா? ஐயோ!' என்றுதான் கனகம் படபடத்தாள். ஆனால் 'ஐயோ!' வெளியே வரவேயில்லை.

"போடி, மனக்கெட்டவளே! கையிலுள்ள மசியைக் கழுவிக் கொண்டு காப்பியைக் குடி!" என்று பத்மா மடித்த புடவையுடன் வாசல் அறைக்கு வேகமாக ஓடிப் போனாள்.

கனகத்துக்குத் தித்திப்பு குமட்டியது.

அத்தை விளக்கின் முன் உட்கார்ந்து சத்தம் போட்டுப் பாராயணம் செய்கையில் கழுத்தை நெரித்து விடலாமா என்று குமுறி வந்தது. விளக்கு வெளிச்சத்தில் வைர நகைகள் டாலடிக்கின்றன. இவளுக்கு எதற்கு வைர அட்டிகை? பத்மாவுக்குப் போட்டு நிறுத்தினால் எவ்வளவு அழகாக இருக்கும்?

செல்வமும் சுகமும் பிறருக்கு பயன்பட வேண்டும் என்ற எண்ணம் லவலேசம் இல்லாதவள். எத்தனை பொய்கள் கூறிக் கொண்டு, அம்பாள் பிரத்தியட்சம் என்று ஏமாற்றுகிறாள்? அத்தையின் வாழ்வின் ஏமாற்றத்தின் அடி நெருப்பில், பிறர் வாழ்வின் நல்ல எண்ணங்கள் கருகி விட்டன என்பதைப் புரிந்து கொள்ளும் பருவமா கனகத்துக்கு அப்போது? அல்லது புரியாத நிலையா?

அன்றிரவு கனகத்துக்கு உறக்கமே வரவில்லை. போர்வையை மட்டும் இழுத்து மூடிக்கொண்டு படுத்திருந்தாள்.

பத்மா விளக்கைப் போட்டு விட்டு வழக்கம் போல் பாயை விரிக்கவில்லை.

கனகத்தின் நெஞ்சு குறுகுறுக்க அக்கா சாவதானமாகத் தலையில் தொங்கிய மல்லிகைச் சரத்தை எடுத்து அழகாகப் பந்தாகச் சுருட்டி வைத்துவிட்டுத் தலைப் பின்னலை அவிழ்த்து மீண்டும் இழைய வாரி, ஒரு சிறும்பின்றி அழகாகப் பின்னிக் கொண்டாள்.

கனகத்தின் இருதயம் சிலிர்த்து நிமிர்ந்தது.

பூப்பந்தை வைத்துக்கொண்டு கண்ணாடியில் பார்த்த வண்ணம் முகத்துக்குப் பவுடர் போட்டுக் கொள்கிறாளே.

"ஐயோ, அக்கா? இதெல்லாம் நடுராத்திரியில் எதற்குச் செய்து கொள்கிறாய்? பவுடர், மை, குங்குமம்..."

கனகம் பந்து போல் எழும்பி அவள் தோளைத் தொட்டு இனந் தெரியாத அச்சத்துடன் குலுக்கிய

போது. அவள் அந்தப் போலிப் பட்டுப் புடவையைப் பிரிக்கலானாள்.

"அக்கா.........எங்கேயடி போகப் போகிறாய்?"

கனகத்தின் பீதிக்குரல் வெளி வரவில்லை. பத்மா வாயைத் திறக்காமல் கண்களால் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"மறுபடியும் இதெல்லாம் எதற்காக அக்கா?...நீ...நீ...அந்த..."

கனகத்தின் வாயைப் பத்மாவின் தளிர்க் கை மூடியது.

"பேசாமலிரு. நான் இன்று உண்மையில் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். கனகம், நீ என்மீது நிரம்பப் பிரியமுள்ளவள்தானே?"

"இதென்னக்கா இப்படிக் கேட்கிறாய்? இந்தப் பரந்த உலகில் உனக்கு நானும் எனக்கு நீயும் தவிர நமக்கு எவருண்டு?"

பத்மாவின் சிரம் சற்றே தாழ, மொட்டு மலர்ந்தாற் போல் செவ்விதழ்கள் மெள்ள மலர்ந்தன.

"அதுதான் இல்லையடி கனகம்! நீ சின்னவள். உன்னிடம் நான் எப்படிச் சொல்வேன்?"

"நீ என்ன சொல்கிறாய், அக்கா?" என்றாள் கனகம் வியப்புடன்.

"உண்மையில் இத்தனை பாக்யசாலியாக நான் இருப்பேனென்று நினைக்கவில்லை...இந்த உலகில், நான் ஒருவரைக் காதலிக்கிறேனடி, கனகம்!..."

"அக்கா!"

"அவர் என் மனத்துக்கினிய அழகர்; என்னைப் பூவாகப் போற்றி அன்பு செலுத்துபவர்; குண நலன்களெல்லாம் கூடிய இளைஞர்; இன்றிரவு அவர் எனக்காகத் தெரு மூலையில் காத்திருக்கிறார். காசாசையும் பேராசையும் பற்றுத் தூயவராகிய அவர் என்னை மணக்கப் போகிறார். என் கைத்தலம் பற்றப் போகிறார். இந்த இரகசியத்தை நீ இப்போது வெளியிடாமல் என்னை வழி யனுப்புவாயா, கனகா?"

ஆனந்த மிகுதியால் போலும், பத்மாவின் விழியோரங்கள் கசிந்திருந்தன. கனகத்தின் நெஞ்சக் குளத்தில் அந்தச் செய்தி, பெருநெருப்பை உண்டு பண்ணி ஆயிரமாயிரம் சிற்றலைகளைப் பரவ விட்டது.

பத்மாவா? வீட்டுக்குள்ளே அத்தைக்குக் குற்றவேல் செய்யும் அக்காவா? அவர் யார்? பத்மாவுக்கு எப்படிச் சிநேகமானார்?

"என்னடி கனகம். பேசாமலிருக்கிறாயே? என்னைச் சந்தோஷமாக வழி யனுப்படீ!"

"ஆமாம், நான் எப்போது உன்னையும் அவரையும் பார்ப்பேன் அக்கா?"

"வெகுசீக்கிரம் பார்ப்பாய். இப்போது மூச்சுப் பிரியாமல் விடை கொடேன்."

புடவைக் கொசுவங்கள் நிறுத்தி வைத்தாற் போல் அமைய, பத்மா அதுவரையில் கண்டிராத அழகுடன் நின்றாள்.

இவளையா, அந்தக் கருத்தடியனுடன் ஜோடியாக அத்தை நிறுத்த நினைக்கிறாள். சை!...பத்மா, அவர் நினைப்பிலேயே இத்தனை அழகாக இருக்கிறாயே!

"தனியாகப் போவாயா அக்கா? இருட்டாய் இருக்கிறதே?"

"உஷ்! தெருவோரம் அவர் இருக்கிறாரடி. அத்தை தூங்க நேரமாகி விட்டது. நான் வரட்டுமா?"

கனகத்துக்குச் சந்தோஷமா, சங்கடமா என்று புரியாமல் நெஞ்சு முட்டியது. அக்காவைத் தழுவிக் கொண்டாள்.

வாயிற் கதவைத் திறந்து கொண்டு பூனை போல் பத்மா அடி வைத்துப் புதுப் புடவை சரசரக்கப் படியிறங்கிச் சென்றதைப் பார்த்துக் கொண்டே கனகம் வியப்புடன் நின்றாள்.

வானத்து நட்சத்திரங்கள் கண் சிமிட்டின. தெரு விளக்குகள் கண் சிமிட்டின. தெரு விளக்குகள் இந்தத் தெருவில் 'நிறைகுடம் போல் அவருடன் திரும்பி வருவாய்' என்று ஒவ்வொன்றாய் வாழ்த்தி அனுப்புகின்றனவோ!

அடி அக்கா! மனத்துக்கினியவராய், குண நலன்கள் கூடிய இளைஞராய், உன்னைப் பூவாய்ப் போற்றும் அன்பராய், காசாசை பேராசை இல்லாதவராய், இவ்வுலகில் நாம் காணக் கிடைக்க மாட்டார் என்பது எனக்குத் தெரியவில்லையே? நிலவுக்குக் கிட்டாத கனவுக் காதலனை மாலையிடப் போகிறாய், கடைசி கடைசியாக விடைபெற்றாய் என்பது புரியாத முட்டாளாக, ஜடமாக இருந்து விட்டேனே!

பரிபூரண விநாயகர் கோயில் கிணற்றிலிருந்து, உச்சி வேளையில் அவள் கனகம் பார்க்க, வாடாத பூவினளாய், புன்னகை முகத்தினளாய் அகப்பட்டு விட்டாள். பிள்ளையார் கோயிலின் முன் தேர்க் கூட்டம் கூடிவிட்டது. தலைக்குத் தலை கேள்விகள், பேச்சுக்கள், அபிப்பிராயங்கள், நிந்தனைகள், அநுதாபங்கள்... கழுகுக்கு மூக்கில் வியர்த்தாற் போல் எங்கிருந்தோ காக்கி உடுப்புக்காரர்கள் வந்து விட்டார்கள். கூடவே, கை நீள ஜிப்பாக்காரன் ஒருத்தனும் சொல்லி வைத்தாற் போல் வந்து சேர்ந்தான். 'மதிநுதி' பத்திரிகைக்காரனும்!

கனகத்துக்குப் பொங்கிப் பொங்கி வந்தன ஆத்திரமும் அழுகையும்.

'அந்தக் கடன்காரியினால்தான் பத்மா உயிரை விட்டாள். அவள்தான் இதற்குக் காரணம். எப்படிப் பழி வாங்குவது?'

போலீசு வந்து கேள்வி மேல் கேள்வி கேட்காதபடி, அக்கமும் பக்கமுமாய் ஊரே அத்தைக்குச் சப்பைகட்டு கட்ட வந்துவிட்டதே? சை! என்ன அநியாயம்? அக்காவுக்குச் சென்ற மாசம் ஜுரம் வந்ததாம்; அதிலிருந்து புத்தி நிலைவு இல்லாமல் நடப்பாளாம்!

தன்னைப் போலீசு அழைத்து ஏதேனும் கேட்கும் சந்தர்ப்பம் வரும் என்று துடிப்புடன் கனகம் காத்திருந்தாள். ஜிப்பாக்காரர்தான் அவளை நெருங்கி நெருங்கி ஏதோ விசாரிக்க வந்தார்.

"உங்கக்காவாம்மா?"

"ஆமாம்..." என்று அவள் எதுவும் பேசுமுன் மூன்றும் வீட்டுக்காரர் இடையில் புகுந்து விட்டார். கனகத்துக்கு வாய் திறக்கக்கூட வழி இல்லாதபடி அடைத்து விட்டு, பத்மாவுக்குப் புத்தி சுவாதீனமில்லாத கதைக்குக் குஞ்சலம் வைத்து ஜோடித்து, 'பாவம்' என்று முடிக்க என்ன தைரியம் அவருக்கு?

ஆனால், மதிநுதிப் பத்திரிகைக்காரர், பொய்க் கதையைக் கேட்டுத் தாம் ஏமாந்துவிடவில்லை என்று நிரூபித்து விட்டார். கனகத்தின் பரபரப்பில், துயரத் துடிப்பின் சாயை கண்ட அவன் முகத்திலிருந்து, அவர் உண்மையையே ஊகித்து விட்டார்.

இரவு ஏழு மணி இருக்கும். அவர், கனகத்தை வீட்டு வாயிற்படியிலேயே பார்த்து, அவளிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனார்.

"என்னை உன் தமையனைப் போல் நினைத்துக் கொள். பிழைப்புக்காகப் பொய்ச் சேதி சேர்க்கிறேன். உன் தமக்கையின் மரணத்துக்குக்காரணமான துயர இரகசியம் நான் ஊகிக்க முடியாததல்ல. இது போல், இந்நாட்டில் எத்தனை ஆயிரமாயிரம் இளம் பெண்களின் துயரக் கதைகள் முடிவாகின்றன? நீ என்னிடம் ஏதோ பேசத் துடித்தாய். ஏதேனும் நீ என் உதவியை வேண்டினாலும், பேச விரும்பினாலும், என் வீட்டில் - காந்தி தெரு, கணேசபுரத்தில் - சந்திக்கலாம்."

பலராமனின் அந்தக் கடிதமே அவளுக்கு எத்தனையோ ஆறுதலாகஇருந்தது.

பத்து நாட்கள் கழிந்த பின், கனகம் யாரோ சிநேகிதியைப் பார்க்கச் செல்வதாகக் கூறிவிட்டு, கணேசபுரத்தில் ஒரு நாள் பிற்பகல் பலராமன் வீட்டைத் தேடிச் சென்றாள். மூக்கிற் பிளாச்சுத் தடுப்பு வைக்கப்பட்ட திண்ணையில் 'தண்டும் தெண்டுமாக' இரு குழந்தைகள் ஒன்றை யொன்று அடித்து விளையாடிக் கொண்டிருந்தன.

"பாப்பா! அப்பா உள்ளே இருக்கிறாரா?"

கனகத்தின் குரல் கேட்டு, உட்புறமிருந்து ஓர் இளைஞன் பிரசன்னமானான். வெட வெட என்று உயர்ந்த உடல், நல்ல சிவப்பு; சற்றே நீள முகத்தில் மூக்குக் கண்ணாடி, சோடா பாட்டில் கண்ணாடியாக முதன்மை வகித்தது. முன் நெற்றியில் விழும் கிராப்புத் தலை. அரைக்கை சட்டை போட்டுக் கொண்டிருந்தான். சைக்கிள் மருத்துவம் செய்து கொண்டிருந்தான் என்பதை விளக்கும் கருப்பு எண்ணெய் படிந்த கைகள்.

"நீங்கள் யாரைப் பார்க்கவேண்டும்?" என்றான் அவளை ஏற இறங்க நோக்கிய வண்ணம்.

"நான் 'மதிநுதி' பத்திரிகை நிருபர் பலராமன் என்பவரை..."

வார்த்தைகள் நாவுக்குப் பிடிபடாமல் காற்றில் கரைந்து விட்டாற் போல் நழுவின. அக்காவின் கனவுக் காதலன் ஒரு வேளை உண்மையிலேயே உயிருடன் இருப்பவனாக இருக்கக் கூடாதா? நம்பிக்கையில்லாமல் அவசரப்பட்டு உயிரை மாய்த்துக் கொண்டாளோ என்ற எண்ணம் கோவையில்லாமல் தோன்றி மறைந்தது.

"அண்ணனையா பார்க்க வந்தீர்கள்? அண்ணா வீட்டில் இல்லை. வெளியே நிற்பானேன். உள்ளே வாருங்கள்.... மன்னி! இதோ யாரோ வந்திருக்கிறார்கள் பாருங்கள்!" என்றான் அவன்.

நடையில், அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த பெண் எழுந்து வந்தாள்.

"நான்... ரங்கநாதபுரத்திலிருந்து வருகிறேன். வந்து...."

"ஓ! நீதானம்மா? உன் அக்காள் தானே அன்று."

"ஆமாம். சொன்னாரா உங்களிடம்?"

"நீ வருவாய் என்று முன்பொரு நாள் என்னிடம் சொல்லி இருந்தார், பாவம்!"

உள்ளே வாம்மா, உட்கார்'' என்று அவன் கனகத்தை வரவேற்றான்.

வெகு நாட்கள் பழகியவளைப் போல் கனகத்தின் மனதில் குமைந்து கொண்டிருந்த செய்திகளை அன்பு விசாரணையிலேயே அறிந்து விட்டாள்.

பலராமன் வீடு வரும் முன்பே கனகத்துக்குச் சகஜமாகப் பேசும் அளவுக்குத் தெளிவு உண்டாகி விட்டது. அவர் வந்ததும், அத்தையைப் பற்றியும் நமக்கையின் கடைசி நாளைக் குறித்தும் கொட்டித் தீர்த்து விட்டு, ''தமையனைப் போல் நீங்கள் நினைக்கச் சொன்னீர்கள். எனக்கொரு வேலை மட்டும் பார்த்துக் கொடுங்கள். போதும்...'' என்றாள் கனகம்.

சைக்கிள் வேலைகளை முடித்து விட்டு அந்த இளைஞன் முற்றத்தில் கைகழுவ வந்தான். ''சுந்தரம்! நீ போய்விட்டு வந்த ஆபீசுகளில் ஏதோ 'நாங்கள் ஆண்களை வேலைக்கு எடுப்பதில்லை' என்று சொன்னார்கள் என்றாயே? அந்த ஆபீசுகளையெல்லாம் சொல்லு. இவள் போய் வரட்டும்'' என்றான் பலராமன்.

கனகம் அதைக்கூடத் தமாஷென்றுதான் நினைத்தாள். ஆனால் சற்றைக்கெல்லாம் சுந்தரம் ஒரு நீளக் காகிதத்தில் குண்டு குண்டான கையெழுத்தில் வரிசை வரிசையாக அந்தக் காரியாலயங்களின் விலாசங்களையெல்லாம் எழுதிக்கொண்டு வந்து அவளிடம் நீட்டினான்.

''இவர்களுக்கு அந்த வேலை கிடைக்குமோ என்னமோ அண்ணா. சாயம் கீயம் தடவிக்கொண்டு தலையைக் கொஞ்சம் கரடி மாதிரி மேக்கப் செய்து கொண்டு போனால் ஒருவேளை கிடைக்கலாம்!..'' என்றான் சுந்தரம் புன்னகையை நெளிய விட்டுக் கொண்டு.

கனகம் தன் தலையைக் கீழே கவிழ்த்துக்கொண்டாள்.

''பெண்கள் எங்கே போனாலும் போட்டிக்கு வருவதால்தான் உங்களுக்கு வேலை கிடைப்பதில்லை...'' என்று கமலா அலுத்துக் கொண்டாள்.

''இந்தத் தடியன்களெல்லாம் பத்தாயிரம், பன்னிரண்டாயிரம் என்று பேராசை பிடிக்காமல் இருந்தால் கும்பல் கும்பலாக வர்ணப் புடவைகள் ஆபீசுப் படிகளுக்கு ஏன் வரப் போகிறது? கிணற்றில் குளத்தில் விழுந்துதான் ஏன் சாக வேண்டும்?'' என்றார் அண்ணா.

''என்னண்ணா? நான் என்னமோ பத்தாயிரம் கேட்டாற்போல் என்மீது சீறி விழுகிறீர்கள்?'' என்று சிரித்துக் கொண்டே சுந்தரம் உள்ளே சென்றான்.

''சரிதாண்டா, பேச்சுக்குச் சொல்வாம். சமயம் வந்தால் விடுவாயா?''

''நீங்கள் மட்டும் என்ன? அதே கதை தானே?'' என்று இடித்துவிட்டுக் கமலா அப்பால் சென்றாள்.

சுந்தரம் தந்த பட்டியலில் உள்ள அலுவலகங்களுக்கெல்லாம் கனகம் விண்ணப்பம் எழுதிப் போட்டாள். வாரம் ஒரு முறை இரு முறை என்று பலராமனின் வீட்டுக்கு வந்து மாலையைக் கழித்து விட்டுச் செல்வதையும் வழக்கமாகக் கொண்டாள். பழக்கத்தால், வீட்டில் யார் இருந்தாலும் சகஜமாகப் பேசும் தன்மை அவளுக்கு வந்துவிட்டது.

ஒரு நாள் முதல் முதலாக வந்திருந்த பேட்டி அழைப்புக் காகிதத்தை எடுத்துக்

## சொன்னபடியே செய்தால்...?

















கொண்டு உற்சாகத்துடன் அவள் அவர்கள் வீடு வந்த போது, பலராமனும் கமலாவும் பெரிய குழந்தைகளும் இல்லை. சுந்தரம்தான் கைக் குழந்தை சகிதம் வீட்டில் காவல் இருந்தான்.

கனகத்தைக் கண்டதுமே, ''வாருங்கள் என்ன அது? வேலை உத்தரவு வந்துவிட்டதா? எங்கிருந்து?'' என்று அவள் கையிலிருந்த கடித உறையைக் கண்டு கை நீட்டினான்.

''பேட்டி அழைப்புத்தான் வந்திருக்கிறது...''

அவன் கடிதத்தைப் பிரித்துப் பார்த்து விட்டு, ''ஓ...? இந்தக் கம்பெனி டைரக்டர்களில் ஒருவரை அண்ணாவுக்குக்கூடப் பரிச்சயம் உண்டு. உங்களுக்கு வேலை கிடைத்து விடும்...ஆனால்... உங்களைப் பற்றி என்னுடைய அபிப்பிராயம் என்ன தெரியுமா?'' என்றான்.

கனகம் விழிகள் அகல நின்றாள்.

''நீங்கள் வீட்டை ஒட்டின பிறவி. வேலைக்கு லாயக்கில்லை...'' இதைக் கூறி விட்டுச் சுந்தரம் கலகலவென்று சிரித்தான்.

''வேறே வழி?''

கனகம் துணிவுடன்நிமிர்ந்து இரண்டே சொற்களால் அவனை மடக்கினாள். இப்போது நினைத்தால்கூட அந்தத் தைரியம் எப்படி வந்ததென்று அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவள் அந்தக் கேள்வியுடன் நிமிர்ந்த போது சவால் விடுவது போன்ற பாவமே மேலோங்கியிருந்தது அவள் முகத்தில்.

''சமுதாயம் நல்ல முறையில் வளர்ந்து சிறக்க ஓர் இளம் பெண்ணும் ஆடவனும் இணைந்து மண வாழ்வு பெறுதல் முறை. இதில் வியாபார முறையும், பேர தந்திரங்களும் ஈனம்! ஒருவர் தாழ்ந்து ஒருவர் உயர்ந்து விடவில்லை. நீங்கள் என்னை மணப்பீர்களா?'' என்று தான் அவன் கேட்காமல் கேட்டு விட்டான்.

அவனுடைய அந்தக் கேள்வியை எதிர்பார்த்துத்தான் அவள் முன்பே அவ்வார்த்தைகளை வெளியிட்டாள்போலும்!

''வாழ்வைத் துவங்க, பொருளாதார அடிப்படையில் நான் இன்னும் காலை ஊன்றிக் கொள்ளவில்லை. அன்றே நிர்மானம் செய்துவிட்டேன். நான் எத்தனை நாட்களானாலும், உரிய காலத்தில் திருமண நினைவுடனே...உன்னைத் தேடி வரலாம் அல்லவா?''

இது நிஜமா! கனகம் செவியுறுவது உண்மையாக ஓர் இளைஞனிடமிருந்து வரும் வார்த்தைகளா! அக்காவின் கற்பனைக் காதலன், தங்கைக்கு உண்மையாகி விட்டானா!

கனகம் பேச்சற்றுப் பிரமித்து நிற்கையில், அவனே தொடர்ந்து பேசினான்.

''அண்ணா விளையாட்டுக்குப் பேசுவது போலவே பேசுவார். நான் தீவிரமாகவே எடுத்துக் கொள்வேன். உன் விஷயத்திலும், நான் இப்போது அந்த விதத்திலேயே முடிவாகக் கூறுகிறேன். என் மண வாழ்வைச் சித்திக்கும் நிலை கூடி வருகையில், உன்னைத் தேடி வரலாமல்லவா?''

கனகம் பிரமிப்பிலிருந்து விடுபட்டவளாக, ''உங்களைப் போன்ற மனிதரை ஏற்க யார்தான் தயங்குவார்கள்? நிச்சயமாக என் வாழ்வில் உங்களைத் தவிர வேறொருவர் குறுக்கிட மாட்டார்.

நான் அந்நாளை எதிர்பார்த்திருப்பேன்'' என்றான்.

வாலிபத்தின் மலர்ச்சிப் பருவத்திலே, இளமை எனும் மொட்டவிழும் நாட்களிலே, ஒரு புதுமை நோக்குடன் உலகைப் பார்க்கும் எழுச்சியின் துடிப்பிலே, எத்தனை எத்தனையோ இலட்சியங்களும், கனவுகளும் சாமானியங்களாகத் தோன்றுவது சகஜம். ஒரே எட்டில் சீர்திருத்த ஆவேசக் கனவுகளை நிறைவேற்றி விடுவதாக நினைப்பவர் எத்தனை பேர்? ஆனால் மலர்ந்து சூடு உறைத்தபின், உலக நடப்புக்கு, வாழும் வாழ்வுக்கு, ஆதாரம் இன்னவென்று புரிந்தபின், லட்சியங்களும் கனவுகளும், எத்தனை பேரிடம் செயலளவில் நிறைவேற்றத்தக்கதாக முடிந்திருக்கின்றன?

இவ்வுண்மையைக் கனகம், போகப் போகத் தெரிந்து கொண்டிருந்தாள். ஓர் அலுவலகத்தில் வேலைசெய்து, தானே வாழும் வாழ்க்கையில், இளம் பெண்ணான அவளுக்கு, அநுபவங்களும் ஓரளவு உலக நடப்பைக் கற்றுத் தந்திருந்தன. ரங்கநாதபுரம் அத்தை வீட்டிலிருந்து, கணேசபுரம் நகர்த்தவள் பட்டணத்துச் சந்தைக்கு வந்து சேர்ந்து ஐந்தாண்டுகளாகிவிட்டன. பலராமனின் குடும்பம் டெல்லிக்குச் சென்றதை அவள் அறிவாள். சுந்தரமும் எங்கேனும் ஊன்றிக் கொண்டிருப்பான்.

அவன் அன்று கூறிய சொற்கள் பசுமை வெளிறி, காய்ந்து, தடம் தெரியாமலே நினைவுகளின் ஆழத்தில் கலந்து விட்டன. இந்த நிலையிலேதான்.....தந்தி!

சுந்தரத்துக்கு, அவ்வளவு சரியாக அவள் விலாசம் எப்படித் தெரிந்தது? அன்று பலராமனின் இரகசியத் தகவலோ! அவருக்கு எப்படித் தெரியும்?

அன்று மாலை வண்டிக்குச் செல்லு முன் கனகத்துக்கு ஏனோ மறைந்துபோன பத்மாவின் நினைவே வந்தது. தலைவாரிக் கொண்ட போதும், முகப்பவுடர் போட்டுக்கொண்டபோதும், அன்றைய இரவே கண் முன் நின்றது.

சை! மகத்தானதொரு மாலை, அவள் வாழ்வில் மலரா இருக்கையில், அந்த இரவு ஏன் நினைவில் வருகிறது? அட. அக்கா? நீ கனவு கண்ட இளைஞர், என் கைத்தலம் பற்ற வருகிறார். என்மீது உனக்கு அளவற்ற பிரியம் உண்டல்லவா? என் நல் வாழ்வில் நீ சந்தோஷப்படுபவள் அல்லவா? மனச் சஞ்சலத்தை மாற்றி, இனிய எண்ணங்களை வரச் செய்ய மாட்டாயா? ஏறக்குறைய அந்தக் காலத்தில் அவள் உடுத்துக் கொண்ட மாதிரியில் உள்ள ஒரு வெள்ளை வாயில் சேலையைத்தான் கனகம் உடுத்துக் கொண்டாள். சுந்தரம் அவளை இலகுவில் அடையாளம்கண்டுகொள்ளவேண்டுமே!

ஆட்டோ ரிக்ஷா அவளைப் படபடவென்ற இருதயத் துடிப்புடன் சென்டிரல் ஸ்டேஷனின் முன் கொண்டு நிறுத்தியது. அவள் பையைத் திறந்து வண்டிச் சத்தம் கொடுக்கவில்லை.

''என்னடீ கனகமா?''

அந்தக் குரலைக் கேட்டதுமே கனகத்துக்கு ஒரு குலுக்கல் உண்டாயிற்று.

பெரிய குங்குமப் பொட்டு, அரக்கு மஞ்சள் காஞ்சிபுரம் பட்டுப் புடவை, வைர அட்டிகை.... அவள் அத்தை!

''என்னடி? நான் வருவது தெரிந்து தான் ஸ்டேஷனுக்கு வந்தாயா? நீ வேண்டாமென்று ஒளிந்தாலும் அம்பாளல்லவா கொண்டு விடுகிறாள்?''

அத்தை டாக்ஸியிலிருந்து இறங்கினாள். எங்கோ ஊருக்குப் போகிறாள். பெரிய பெட்டி, படுக்கை, வெள்ளிக் கூஜா... அருகில் வெண்மை கலந்து பொன் நிற மேனியுடன் நிற்கும் பிள்ளை யார்?

''எங்கே வந்துவிட்டுப் போகிறீர்கள், அத்தை?''

''நீ வேண்டாமென்றாலும் விடுகிறதா? என் வீட்டில் வளர்ந்தவளுக்கு, ஒரு விலாசம் தெரிவிக்கக் காகிதம் போடக்கூட முடியவில்லை. அம்பாள் அனுக்ரஹத்தில் நன்றாயிருந்தால் சரி; காலையில் வந்தேன். மாம்பலத்தில்தான் இத்தனை நேரம் இருந்து, உன்னைப் பார்க்கத் தவியாய்த் தவித்தேன். அம்பாள் கொண்டு வந்துவிட்டாள்...''

''எங்கே போகிறீர்கள், அத்தை?''

''நான் எங்கே போவேனடி? டில்லியில் பெண்ணுக்குக் கல்யாணம். வரும் பதினைந்தாம் தேதி. பையன் என்னை அழைத்துப் போக ஊர்வரை வந்தான். தமிழ்க்காரர்கள்தானாலும். பிள்ளைக்கும் அங்கேயே 'வேலையாம். கல்யாணமெல்லாம் நம் வழக்கப்படி செய்ய வேணுமாம். அம்பாள் உத்தரவு கிடைத்தது; போகிறேன். ரமேஷ்! இவள் தான் கனகா, என் தம்பி பெண். நான் வளர்த்த பெண்...''

தமிழ் தெரியாத அத்தையின் பிள்ளை, கை குவித்தான்.

''அவளுக்கு ஒரு கல்யாணப் பத்திரிகை கொடு ரமேஷ்'' என்றாள் அத்தை.

அவள் நெற்றிக் குங்குமம், அத்தை அவளையும் நமஸ்காரம் செய்யச் சொல்லி விரும்பாள் என்று காட்டியது.

''எங்கே வந்தாய்? வண்டி போகும் வரை இருந்துவிட்டுப்போயேன்? வருவது தான் வந்தாய்....?''

கனகத்துக்கு ஏனோ நாவெழவில்லை? ஒரு பொய் கூறக்கூடவா தெரியாது? அத்தையுடன்கூட அவள் பேசுவதைக் கேட்டுக்கொண்டே அவன் முன்பின் தெரியாத இடத்துக்குத் தன்னந்தனியே வந்துவிட்ட ஒரு இனம்புரியா உணர்வுடன் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே, டில்லி வண்டி நிற்கும் பிளாட்பாரத்துக்குத்தான் செல்கிறாள்.

ஏதோ வண்டி வந்து விட்டதுபோலிருக்கிறது. பெட்டியும் படுக்கையும், சோர்ந்த முகங்களுமாய்.....

எந்த வண்டி! அந்த வண்டி தானா?

வண்டி மூன்றே முக்காலுக்கோ, நாலுக்கோ அல்லவா வருகிறது.

வந்துவிட்டதா? பங்களூர் வண்டியா வந்தது?

சுந்தரம் வந்து விட்டாரா?

அத்தனை பெரிய ஸ்டேஷன் கட்டிடத்தில், பாரத நாடே வந்துகூடிப் போவது போன்ற அந்தச் சந்தை இரைச்சலில், சுந்தரம் என்னைத் தேடுவாரா? தேடட்டும். தேடிவிட்டுத் தந்தி கொடுத்த விலாசத்துக்குப்போகிறார். போகமாட்டாரா?

எத்தனையோ மூக்குக் கண்ணாடிகள்; வெந்த, உயர்ந்த உடலமைப்புக் கொண்ட உருவங்கள்.

ஆனால்...சுந்தரமில்லை...அவள் கண்களில் அவன் தட்டுப்படவில்லை.

பங்களூர் வண்டி வரும் பிளாட்பாரத்தை விட்டுவிட்டு, அவள் சுந்தரம் வரமாட்டாரோ என்று சஞ்சலப்படுவது எத்தனை பேதைமை?

அத்தையிடமிருந்து குங்குமம் வாங்கி இட்டுக்கொண்டு வண்டியை அனுப்பி விட்டு அவள் வெளியே வருகையில் ஐந்தடிக்கும் தறுவாயாகி விட்டது. மறுபடியும் பங்களூர் வண்டிவரும் பிளாட்பாரத்துக்குச் செல்ல மனம் எண்ணியது. 'அசட்டுத்தனம். பாஸஞ்சர் வண்டியல்லவா வருகிறதாம்? அவர் முன்பே வீட்டுக்குச் சென்று பெட்டி படுக்கையுடன் காத்திருப்பார்! ருக்மிணியிடம் சாவி இருக்கிறது' என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

வாசற்புறம் வந்ததும் நடை விரைவாகியது.

அவுட் ஹவுஸ் பக்கம்...!

குழந்தைகள் விளையாடுகிறார்கள்; அவளுடைய ஒற்றையறை திறக்கப்படவில்லை; விளக்கும் எரியவில்லை.

ருக்மிணி இல்லையா என்ன?

''அம்மா எங்கே சாந்தா? யாராவது வந்தார்களா?''

''இல்லேயேக்கா? அம்மா கோவிலுக்குப் போனாங்க. இந்தாங்கோ சாவி...''

ஸ்டேஷனில் காணவில்லை என்று வேறிடம் சென்று, பிரயாண அலுப்பு மாறி தானே வருவாரோ?...

கதவைத் திறந்து விளக்கை ஏற்றி விட்டுக் கைகால் கழுவுகையில் வாசலில் புதிய பேச்சுக் குரல்.

கனகம் ஓடிவந்தாள்.

''யாரது?....

காக்கிச் சட்டைத் தந்திக்காரன். வரவில்லை என்று பின் தந்தியோ!

''கனகவல்லியம்மா நீங்கதானே!.... அந்தத் தந்தி...''

நெஞ்சுள் ஓங்கி நின்ற நம்பிக்கைச் சுவர் தடதடவென்று சாய்ந்து விழும் நிலையில் கனகம், ''ஆமாம்... !'' என்றாள்.

''அந்தத் தந்தி, 53 'பி'க்கம்மா. 'பி'போடலே. அஞ்சாறு வீடு தள்ளி 53, பியாம். அவங்க ரிபோர்ட் செய்திட்டாங்க. எடுத்தாங்கம்மா அதை...''

கண்கள் இருண்டாற் போலிருந்தது.

அப்படியானால் தந்தி அவளுக்கு இல்லையா? அந்தச் சுந்தரம் அவளில்லையா? அந்தக் கனகவல்லி அவளில்லையா?

உள்ளே சென்று கைப்பையைக் கவிழ்த்தாள். மடித்த தந்திக் காகிதம் விழுமுன், 'அத்தை மகள்' கொடுத்த கல்யாண அழைப்பிதழ் மல்லாக்க விழுந்தது.

மண மகன்...சுந்தரராமன் எம். ஏ...

என்னது?....பலராமன், செய்தி ஸ்தாபன நிருபர், சகோதரன்...அவளுக்கில்லையா?

நெஞ்சக்கனம் நொறுங்கி வயிற்றில் விழுந்தது. ஒன்றுமேயில்லை. நிகழ்ச்சிகளின் காரண காரியத் தொடர்புகள்... குழந்தைக் கிறுக்கல்போல் அர்த்தமின்றிமாக ஏதோ கோடிட்டு அந்தக் கிறுக்கல்களுக்கிடையே மனித இதயங்களை வைத்து ஆடும் விளையாட்டா இது? என்ன ஒற்றுமை!

''அம்மா!...'' தந்திக்காரன் கூவினான்.

அந்த ரோஜா நிறக் காகிதத்தை எடுத்துக் கொண்டு வெற்று இருதயத்துடன் அவள் வெளியே வந்தாள்.



பார் உள்ள அளவும், பரம்பொருள் உள்ள அளவும் பழந் தமிழ் இலக்கியச் செல்வங்கள் பலவும் வாழ வழி வகுத்துத் தமிழ் உள்ள அளவும் தழைத்தோங்கும் புகழை நிலைநாட்டிக் கொண்ட தமிழ்த்தாத்தாவின் சிலையின் எதிரில் சிந்தனையில் ஆழ்ந்து நின்றேன் நான். சென்னைக் கடற்கரை அந்திப் பொழுதினிலே அளிக்கும் இன்பக் காட்சிகளில் என் மனம் நிலை கொள்ளவில்லை. இருள் மிகுந்த எதிர்காலத்தின் நிழலாக எனது உள்ளத்தில் அச்சம் படர்ந்திருந்தது.

'பாரதவாணி' பத்திரிகைக் காரியாலயத்தில் உதவித் துணை ஆசிரியர்களில் ஒருவனாக இருந்தேன். பலப்பல துறைகளில் சம்பளம் வாங்கும் எல்லாரும் ஸ்டிரைக் செய்கிறார்களே என்று நாங்களும் எங்கள் காரியாலயத்தில் செய்து பார்த்தோம். அனர்த்தத்தில் நடந்தது அந்த வேலை நிறுத்தம். மக்களுக்கு அறிவு விருந்து அளிப்பதை விட அவர்கள் வயிற்றுக்கு ஈவது மேல் என்று எண்ணியோ என்னவோ பத்திரிகைக் கடையைக் கட்டிவிட்டு எங்கள் முதலாளி ஹோட்டல் தொழிலில் ஈடுபட்டு எங்களை வேலையில்லாத் திண்டாட்டத்தில் விட்டு விட்டார். சற்றுக் குடும்பத் தொல்லையை மறந்திருக்க, மனைவியையும் என் வழித்தோன்றல்களையும் கிராமத்தில் கொண்டுபோய் விட்டு விட்டு நான் மறுபடியும் சென்னையில் வேலை தேடி அலைந்து கொண்டிருந்தேன். சம்பாதித்த காலத்தில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்காததன் தவற்றை முழுக்க முழுக்க நான் எண்ணி ஏங்கிக் கொண்டிருந்த தருணம் இது.

நடை பாதையில் நான் நின்று கொண்டிருந்த இடத்துக்கு அருகில், பெரும் பாட்டையில் மோட்டார் கார் ஒன்று வந்து நின்ற அரவம் கேட்டு நான் திரும்பிப் பார்த்தேன். பளபளக்கும் பச்சை வண்ணத்தில் மெருகு குலையாத புத்தம் புதிய அந்தக் காரை ஓட்டி வந்த மனிதர் இறங்கினர். விசாலமான குளிர்ச்சிக் கண்ணாடி அணிந்த அவர் என்னைப் பார்த்தபடியே மோட்டாரின் பின்புறக் கதவைத் திறந்தார். ''கொஞ்ச தூரம் போய்த் திருப்பிக் கொண்டு வந்து கிழண்டைப் பக்கமாக நிறுத்துங்களேன். குழந்தையை எடுத்துக் கொண்டு ரோட்டைத் தாண்டி பீச்சுக்குப் போவானேன்?'' என்று உள்ளே இருந்த பெண்மணி இன்னமுத மென்மொழியில் சொன்னாள். ''ஆமாமாம்! நீ சொல்லிறதும் சரிதான்'' என்று எங்கேயோ யோசனையில் ஆழ்ந்தவர்போல் அம்மனிதர் சொல்லிக் கொண்டே, திறந்த பின் கதவைச் சாத்திவிட்டு என்னைப் பார்த்து,



# குடும்ப நட்சத்திரம்

ஆர். எஸ். குஞ்சிதபாதம்

"நீங்கள் மிஸ்டர் சுகுமாரனா?" என்று வினவினார்.

கைகுவித்தவாறு, "ஆமாம்!" என்று நானும் பதில் சொல்லிக் கொண்டே பாதாதிகேசம் வரையில் அவரை வியப்புடன் உற்று நோக்கினேன். நன்றாக உருண்டு திரண்ட கட்டுமஸ்தான உடல் அமைப்பு; முப்பதுக்குக் கொஞ்சம் கம்மி-ஜாஸ்தியான வயதுத் தோற்றம்; முன் பக்க மயிர் நெற்றியில் சுருண்டு தவழும் கிராப்பு; மழமழ வென்று குமானி மாம்பழம் போன்ற கன்னங்கள்; மூக்கின் அடியிலிருந்து மேலுதட்டின் நடுப்பாகம் வரையில் சரிந்து வந்து கடைவாய்வரை இலேசாக ஓடியிருக்கும் நவீன மோஸ்தர் மீசை! மேனியின் வனப்பை விளங்கச் செய்யும் மஞ்சள் நிறப் பட்டு புஷ்-ஷர்ட், முதலியன, முதலியன.

கூப்பிய என் இரு கரங்களையும் தாவிப் பற்றி "என்ன ஐயா, பார்க்கிறீர், பார்க்கிறீர், அப்படிப் பார்க்கிறீர்? என்னை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லையே? முகத்தில் பாதியைக்கண்ணாடி மறைக்கிறதோ? இப்பொழுது சொல்லுங்கள் ஐயா!" என்று சொல்லி விட்டு அவர் கண்ணாடியைக் கழற்றினார். அப்போதும் அவர் யாரென்று என்னால் சொல்ல முடியவில்லை.

"என்னைத்தான் மறந்து போய் விட்டது என்றாலும், பசுபதி வாத்தியாரையுமா மறந்து போய் விட்டது?"

"சுந்தரப் பெருமான்! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்! உங்களை எப்படி நான் மறப்பேன்? ஆள் அடையாளம் தெரியாமல்...."

"உருவம் மாறிப் போய் விட்டேன், இல்லையா? நீ அன்றைக்கு இருந்த மாதிரியே மரப்பாச்சிமாதிரி இருக்கிறாய்! வயிற்றுக்கு வஞ்சனை செய்கிறாயா? ஒன்றும் சரியாகச் சாப்பிடுகிறதில்லை போலிருக்கிறது. என்னைப் பார், எப்படி வளர்ந்து போயிருக்கிறேன். என்னைப் பெற்ற அம்மா பார்த்தால் அவளுக்குக் கூடத் தெரியாது."

மரியாதை யெல்லாம் பறந்து போய் விட்டது. எத்தனை வயதானாலும் பள்ளித் தோழர்கள் என்றால் 'அடா, புடா' என்று பேசிக் கொள்கிற உரிமை வந்து விடுகிறது. ஒரு ரிடையர்ட் நீதிபதியும், ஓய்வு பெற்ற வருமான வரிக் கமிஷனர் ஒருவரும் ஏக வசனத்தில் சம்பாஷித்ததைக் கேட்டிருக்கிறேன். "உன்னைப் பார்த்துஎத்தனையோ காலமாகிவிட்டது. அப்பா சௌக்கியமாக இருக்கிறாரா? அம்மா நல்லபடியாக இருக்கிறார்களா? அண்ணன் என்ன செய்கிறார்?"

"அவர்களையெல்லாம் பற்றி விசாரிக்கிறாயே சுகுமாரா? என்னைப் பற்றி விசாரிக்க வில்லையே! எனக்கு இவ்வளவு பெரிய மோட்டார் ஏது? நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்? அதைப் பற்றிக் கேட்க வேண்டாமா?"

சுந்தரப் பெருமான் ஆஜானுபாகுவாக வளர்ந்திருந்தானே தவிர, குழந்தை உள்ளத்தோடு பேசினான். அவனுடைய குதூகலப் பேச்சு அவனுடைய இளமைப் பருவத்தை ஞாபகமூட்டி விட்டது. கள்ளம் கபடம் தெரியாது. தன் மனத்துக்குச் சரி என்று தோன்றுவதைச் செய்யத் தயங்க மாட்டான். அவனுடைய தகப்பனார் பசுபதி வாத்தியாரிடம் மற்ற எல்லா மாணவர்களுக்கும் ஒரே நடுக்கம்தான்; ஆனால் அவர் கோபமெல்லாம் சுந்தரப் பெருமானிடம் பயனற்றுப் போகும். பல ஆண்டுகளுக்குப் பின்னர் எதிர்பாராத விதத்திலும் இடத்திலும் சந்தித்தோம்.

"என்ன சுகுமார்? சோக ரசத்தில் முழுகிய கதாநாயகன் மாதிரி பிரமித்து நிற்கிறாய்? ஏறி முன்ஸீட்டிலே உட்கார். கொஞ்ச தூரம் போய்விட்டு வருவோம். உன்னிடம் பேசுவதற்கு விஷயம் இருக்கிறது" என்று முதுகில் தட்டினான்.



நான் அவனுடைய கட்டளைக்குப் பணியவேண்டியதாயிற்று. நான் ஏறாமல் இருந்தால் அவன் என்னைக் குண்டுக் கட்டாய்ப் பிடித்து வண்டியில் திணித்திருக்க மாட்டானா? என் கடைக் கண் பார்வை பின் ஸீட்டில் அமர்ந்திருந்த பெண்ணின் முகத்தில் விழுந்தது. ஜலஜாவா அவள்? குங்குமப் பொட்டும், வாயில் புடவையும் என்னுடைய அனுமானத்தைச் சட்டென்று ஆமோதிப்பதாக இல்லை. சினிமா நட்சத்திரம் என்றால் எப்போதும் பகட்டான உடைகளை அணிந்து கொண்டிருக்க வேண்டும் என்ற ஏதாவது நியதியுண்டா? முகச் சாயலின் ஒற்றுமை இருப்பதனால் மட்டும் தீர்மானிக்க முடியுமா?

மோட்டாரைக் கிளப்பி ஓட்டிக் கொண்டே, "நீ எப்பொழுது மதராசுக்கு வந்தாய்?" என்று கேட்டான் சுந்தரப் பெருமான்.

"நான் இந்தச் சென்னைப் பட்டணத்திலேயேதான் பத்து வருஷங்களாக இருந்து வருகிறேன்."

"அப்படியா? என் கண்ணிலே அகப்படாமல் இந்த ஊரிலேயே தப்பித்துக் கொண்டிருக்கிறாய்! என்ன செய்கிறாய்?"

நான் என்னுடைய பூர்வோத்திரங்களைச் சொன்னேன். தோழனுடனும் ஏழைமை பேசக்கூடாதுதான். ஆனாலும் நான் என் நிலைமை மறைக்கவில்லை. மோட்டார் வளைவு திரும்பிக் மௌண்டைப் பக்கமாகச் செல்ல ஆரம்பித்தது.

"சில்லிப்பாகக் காற்று வீசுகிறது. குழந்தைக்கு ஜலதோஷம். வீட்டுக்கே போகலாம். உங்கள் நண்பரையும் அழைத்து வாருங்கள்" என்றாள் அவர் அருமை மனைவி.

"நீயே ராத்திரி டின்னருக்குச் சமைத்துப் பரிமாறினால்தான் அழைத்து வருவேன். இல்லாவிட்டால் நாங்கள் ஹோட்டலுக்குப் போவோம்."

"பெரிய காரியம்! பிரஷர் குக்கரில் சமைத்தால் பத்து நிமிஷமாகுமா?"

"சமைக்கிறது பெரிய காரியமல்ல. சாப்பிடுவதுதான் பெரிய காரியம்.ம்... சரி, ஆகையினாலே மிஸ்டர் சுகுமாரன் நீங்கள் இன்று எங்கள் கெஸ்ட்" என்றான் சுந்தரப்பெருமாள். நான் பத்தணா மிச்சம் என்று நினைத்துக் கொண்டேன்.

அடையாறு க்ஷேத்திரத்தில் ஒரு பிரம்மாண்டமான பங்களாவை மோட்டார் அடைந்தது.

பங்களாவின் உள்ளே சென்றதும் முதலில் உள்ள விஸ்தாரமான ஹால் சுவரில் பசுபதி வாத்தியாரின் படத்தையும் அவருடைய தர்மபத்தினி சாந்தநாயகி அம்மையாருடைய படத்தையும் மிகப் பெரிய அளவாக்கி மாட்டியிருப்பதைப் பார்த்தேன். நான் நேரில் பார்த்த காலத்துக்குப் பிறகு ஏற்பட்டிருந்த முதுமையை இரண்டு படங்களும் பிரதிபலித்தன. ஒரு சோபாவின் மேல் அமர்ந்து அந்தப் படங்களையே வைத்த கண் வாங்காமல் நோக்கிய வண்ணம் இருந்தேன். உள்ளே சென்று உடையைக் களைந்து வேஷ்டியும் துண்டும் அணிந்துகொண்டு சுந்தரப் பெருமாள் வந்தான். மின்விளக்கைப் போட்டு விசிறியையும் சுழல விட்டான். என்னருகில் அமர்ந்தான். நானும் பேசவில்லை. அவனும் பேசவில்லை. எவ்வளவு நேரம் அப்படி அமைதியாக இருப்பது? பள்ளிக்கூடத்தில் படித்த நாட்களே என் மனத்தில் சுழன்று சுழன்று வந்தன. சப் ரிஜிஸ்திரார் காரியாலயத்தில் என் மாமா - மாமனார் குமாஸ்தா. அவர் வீட்டிலிருந்து கொண்டுதான் நான் படித்தேன். பசுபதி வாத்தியார் இருந்த தெருவிலேதான் நாங்களும் குடியிருந்தோம். அடிக்கடி அவர் வீட்டுக்குப் போவேன். சுந்தரப் பெருமாளை நான் முதலிலேயே அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லையே என்று என் ஞாபகசக்தியைச் சபித்தேன்.

"அவர்கள் ஜீவதசையில்தான் இருக்கிறார்கள். நீ என்னவோ ஏதோ என்று நினைத்துக் கொண்டு விடாதே. என் அண்ணனும் ஸ்ரீவில்லிப்புத்தூரில் பள்ளிக்கூட உபாத்தியாயராகத்தான் இருக்கிறார். அவரிடம் அவர்கள் இருக்கிறார்கள்" என்று சொல்லிச் சுந்தரப் பெருமாள் மௌன நிலையைக் கலைத்தான்.

"அப்படியா! நான் போய் அவர்களையெல்லாம் ஒரு தடவை தரிசித்து விட்டு வர விரும்புகிறேன்."

"இன்னமும் என்னுடன் நீ தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாய் என்று சொல்லிக் கொண்டால் அப்பா உன்னை நிமிர்ந்துகூடப் பார்க்க மாட்டார்."

"ஏன்?"

"ஏனா? இப்போது நம்முடன் வந்தது யார் தெரிகிறதா?"

நான் வாய் திறந்து ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவனே பேசிக்கொண்டு போனான்.

"தெரியவில்லையா, சினிமாவுக்கே போகிறதில்லையா நீ? பத்திரிகையிலிருக்கிறாய். விளம்பரம்கூடப் பார்த்ததில்லையா? ஜலஜா அவள். முப்பது படங்களில் நடித்திருக்கிறாளே!"

"தெரியும்."

"அவளைக் கல்யாணம் செய்து கொண்டதை மன்னிக்க முடியாத தவறு என்று நினைக்கிறார் என் அப்பா!

"சினிமாக்காரர்கள் என்றால் தேவர்கள் என்று இளைஞர்கள் நினைக்கிறார்கள். அசுரர்கள் என்று வயதானவர்கள் நினைக்கிறார்கள். இரண்டும் இல்லை, அவர்களும் மனிதர்கள்.

"வருஷம் நான்கு லட்ச ரூபாய்கள் அரசாங்கத்துக்கு வரி செலுத்துகிறோம். ஆனால் அப்பாவுக்கு நானூறு ரூபாய்கூட அனுப்ப முடியவில்லையே என்றுதான் எனக்கு வருத்தம்."

"ஏன் பாக்கியெல்லாம் உன் குடும்பச் செலவு ஆகி விடுகிறதா?"

"அட அசடே! தங்கச்சி கல்யாணத்துக்கு எனக்கு அழைப்புக்கூட இல்லை. ஐயாயிரம் ரூபாய்க்குச் செக் அனுப்பினேன். அதை மாற்றவே இல்லை. மூன்று தடவைகள் இன்ஷூரன்ஸ் அனுப்பினேன். திரும்பி வந்து விட்டது. அறுபதாம் ஆண்டு நிறைவு கொண்டாடினார் அப்பா. அதற்கு அழைப்பு இல்லை. போன வருஷம் அம்மாவுக்கு உடம்பு சௌகரியமில்லை என்று கேள்விப்பட்டு நேரிலே போனேன். வீட்டிலே காலடி வைக்காதே என்று சொல்லிவிட்டாரடா சுகுமார்" என்று சொல்லிக் கொண்டே என் தோள்களைப் பற்றிக் குலுங்கக் குலுங்க அழுதான் சுந்தரப் பெருமாள். என் இதயம் நெகிழ்ந்தது. "தந்தையின் பாசம் விட்டுப் போய் விடுமா? எதற்கும் காலம் வரவேண்டும்" என்று சொல்லித் தேற்ற முயன்றேன்.

"சுகுமார்! இந்தச் சென்னைப்பட்டணத்தில் இளைப்பில் உல்லாசமாகச் சீட்டாட நண்பர்கள் கிடைப்பார்கள். சிரித்துப் பேசி மகிழச் சிநேகிதர்கள் கிடைப்பார்கள். இந்த மாதிரி கட்டிக் கொண்டு அழுவதற்கு ஓர் ஆள்கூடக் கிடைக்கமாட்டான். வாய்விட்டு அழுதால்தான் நெஞ்சின் கனம் குறையும் போலிருக்கிறது."

"மனத்தைத் தளர விடாதே, சுந்தரப் பெருமாள்! என்ன இது பச்சைப்பிள்ளை மாதிரி?"

"அம்மாவுக்குக் கூட என்னிடம் கோபம். அவர்கள் தம்பி மகளைக் கட்டிக் கொள்ளவில்லை என்று." இவ்வாறு சொல்லிச் சுந்தரப் பெருமாள் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

நான் கேட்டுக் கொண்டிருப்பதைத் தவிர எந்தவிதமான பதில் சொல்வதும் அநுசிதம். ஆகையினால் காஷ்ட மௌனமாக மரத்துப் போயிருந்தேன். எத்தனை

## விடாக்கடுக்கர்!



# போர்ஹான்ஸ் பற்பசையைப் பற்றி ஆச்சரியகரமான செய்திகள்

## இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும் தாமாகவே பலர் அனுப்பியுள்ள நற்சாட்சிக் கடிதங்கள் போர்ஹான்ஸ் பற்பசையின் இணையற்ற சிறப்பை எடுத்துச் சொல்லுகின்றன.

சமீபத்தில் நடந்த போர்ஹான்ஸ் பளிச்சிடும் புன்னகைப் போட்டியின்போது பல பேர்கள் தாங்களாகவே பல கடிதங்கள் எழுதி அனுப்பி இருந்தார்கள். போர்ஹான்ஸ் பற்பசையின் சிறப்பை அவை அனைத்தும் எடுத்துக்காட்டுகின்றன.

கீழே கொடுக்கப்பட்டுள்ள சிலர் தங்களைப்பற்றிச் சொல்லிக்கொள்ளும் விபரங்களைப் படியுங்கள்:—

"என்னுடைய வயது இப்போது 65. ஒரு பல்லாவது சொத்தை இல்லை. பொய்ப் பல்லுமில்லை. எனக்கு ஈறு கோளாறுகள் எதுவுமில்லை. பற்கள் உறுதியுடனிருக்கின்றன ... இவையனைத்திற்கும் காரணம் நான் தவறாது போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிப்பதுதான்"

"பல்வலி என்றோ ஈறுக் கோளாறு என்றோ என்னிடம் வரும் நோயாளிகளுக்கு எல்லாம் நான் எப்போதும் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கும்படி சிபார்சு செய்து வருகிறேன். இதற்காக அவர்கள் எல்லோரும் எனக்கு மிக்க நன்றி தெரிவிக்கிறார்கள்."

"1935-ம் ஆண்டு நான் முதன் முதலாக போர்ஹான்ஸ் பற்பசை உபயோகிக்க ஆரம்பித்தேன். அதற்கு முன்பெல்லாம் என்னுடைய ஈறுகளிலிருந்து ரத்தம் கசிந்துகொண்டே இருக்கும். இப்போது என்னுடைய பல்வரிசை மற்ற இளைஞர்களின் பல்வரிசைகளைக் காட்டிலும் மிகவும் உறுதியுடன் இருப்பதுமன்றி எனக்கு ஈறுகளின் கோளாறுகளே கிடையாது. இதைப்பற்றி மிகப் பெருமையுடன் கூறிக்கொள்ளுகிறேன்."

போர்ஹான்ஸ் பற்பசை டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் என்னும் அமெரிக்க பல் டாக்டரால் கண்டுபிடிக்கப்பட்டது. போர்ஹான்ஸ் பற்பசை ஒன்றில்தான் ஈறுகளுக்கு உறுதியளிக்கும் டாக்டர் போர்ஹானின் தனித் துவர்ப்புப் பொருள் கலந்திருக்கிறது.




**போர்ஹான்ஸ்**

பளபளக்கும் முத்துப்பல் வரிசைக்கும், ஆரோக்கியமான ஈறுகளுக்கும் போர்ஹான்ஸ் பற்பசை இன்றியமையாதது

S. 23

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

எத்தனையோ பெண்மணிகள் மருத்துவத் துறையிலும் கல்வித் துறையிலும் அரும் பணி புரிந்து கொண்டிருக்கிறார்கள்: நல்ல விதத்தில் உத்தியோகத்தில் அமர்ந்துபொருளீட்டுகிறார்கள். அவர்கள் எல்லாரும் நல்ல குடும்ப ஸ்திரீகளாகத் திகழ்கிறார்கள். சினிமாவில் நடிப்பதும் ஒரு லலித கலை; ஆரம்பக் காலத்தில் எப்படியிருந்த போதிலும் இன்று நன்கு திட்டமிடப்பெற்று, முதலீடு செய்யப்பட்டுச் செழித்து வளர்ந்திருக்கும் தொழில் சினிமா. நன்றாக யோசித்துப் பார்க்குமளவில் ஜலஜாவைச் சுந்தரப் பெருமாள் மணந்து கொண்டதற்காகப் பசுபதி வாத்தியார் அவனை வெறுத்து ஒதுக்குவது நியாயமாகத் தோன்றவில்லை. சினிமா நட்சத்திரம் குடும்ப நட்சத்திரமாகவும் இருக்க முடியாதா?

"குமார்! எனக்கு ஓர் உதவி செய்வாயா?" என்று கேட்டான் அவன்.

"நானா உதவி செய்ய வேண்டும்?"

"ஆம்! சாப்பாடு ஆன பிறகு மாடிக்குப் போனதும் சொல்கிறேன். எழுந்திரு" என்றான்.

வழக்கத்துக்கு மாறாக எந்த விதமான அட்டகாசமும் செய்யாமல் சமர்த்தாகச் சுந்தரப் பெருமாள் சாப்பிட்டு எழுந்தது ஜலஜாவுக்கு ஆச்சரியமாக இருந்திருக்கக்கூடும். சாப்பாடு ஆனவுடன் மாடிக்குப் போனோம். ஒரு சாய்வு நாற்காலியில் மிகவும் சுவாதீனமாகச் சாய்ந்து கொண்டு இரண்டு பக்கச் சட்டங்களின் மீதும் கால்களை நீட்டிக் கொண்டேன். தாரகை மின்னும் வானத்தையே ஜன்னல் வழியாக நீண்ட நேரம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தவன் திடீரென்று என் பக்கம் திரும்பி, "ஒரு நல்ல காரியத்துக்குப் பொய் சொல்லலாமா?" என்று ஒரு புதிர் போட்டான்.

"இந்தமாதிரிக் கேள்விகளுக்கு நேரடியான பதில் சொல்லவே முடியாது. சுற்றி வளைத்துத்தான் சொல்லலாம். பொதுவாகப் பொய் சொல்வது தவறு. பொய்யினும் கெடுதல் விளையும் என்பது இக் கொள்கைக்குக் காரணமாய் இருக்கலாம். கெட்ட காரியங்களுக்குப் பொய் சொல்வதை விட நல்ல காரியங்களுக்காகப் பொய் சொல்வது அவ்வளவு தவறு அல்ல என்ற முடிவுக்கு வரலாம்."

"எனக்காக ஒரு பொய் சொல்லியாக வேண்டும் நீ."

உணர்ச்சி வசப்பட்டுச் சிறிது நேரம் சோர்ந்து போயிருந்த சுந்தரப் பெருமாளின் மனத்திடையில் குதூகலம் மறுபடியும் பொங்கி வழிந்து விட்டது என்று எண்ணினேன். "இலேசான பொய்யாக இருந்தால் சொல்லு. விபரீதமான பொய்யாக இருந்தால் வேண்டாம்" என்றேன்.

"ஒன்றும் வேடிக்கை இல்லை. அப்பாவுக்குக் கண்ணில் சதை படர்ந்து பார்வை மங்கிவிட்டது. காடராக்ட் ஆபரேஷன் செய்ய வேண்டும். அண்ணனால் ஒன்றும் செய்வதற்கில்லை. அப்பாவுடைய அனுமதி இல்லாமல் பண உதவி பெற்றுக் கொள்ள அண்ணன்மறுதளித்துவிட்டார். நீ போய் அப்பாவையும் அம்மாவையும் சென்னைக்கே அழைத்து வந்துவிட வேண்டும். எல்லா வைத்திய உதவிகளையும் நீயாகச் செய்வதுபோல் செய்ய வேண்டும்."

"நான் போய்க் கூப்பிட்டால் வந்து விடச்சம்மதிப்பார்என்றுநினைக்கிறாயா?"

"நான் அனுப்பினேன் என்று தெரிந்தால் வரமாட்டார். அவர் பிடிவாதத்தை யாராலும் மாற்ற முடியாது. நாங்கள் பெங்களூருக்கும், பம்பாய்க்கும் போகிறோம். இந்த வீடு, மோட்டார் மற்றும் எல்லா ஸ்தாவர ஜங்கம சொத்துக்களும் உன்னுடையது என்று அப்பா நினைக்க வேண்டும்; அங்கே காற்றோட்டமும், வசதியும் இல்லாத சின்ன வீட்டில் அவர்கள் புழுங்கிக்கொண்டு கஷ்ட ஜீவனம் செய்வது எனக்குச் சகிக்கவில்லை. நீ உன் குடும்பத்தோடு இங்கே வந்து இரு."

"அதெல்லாம் சரிதான். பூனைக்கு மணி கட்டுவது யார்? நான் எப்படி அவரிடம் போய் அவரை இங்கே அழைத்துக் கொண்டு வருவது?"

"நீ பெரிய வியாபாரம் செய்வதாகச் சொல்லிக் கொள். அகஸ்மாத்தாக ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு வந்தபோது அவர் அங்கு இருப்பதாகக் கேள்விப்பட்டதாகச் சொல். முதலில் அண்ணனைப் பார். அவரிடம் வேண்டுமானால் உன் திட்டத்தைச் சொல். அண்ணனையும் விடு எடுத்துக் கொள்ளச் சொல்."

"இந்தமாதிரி குருபக்த சிகாமணிகள் கோடானு கோடிப் பேர்களில் ஒருவராவது இருக்க முடியுமா? எப்போதோ பள்ளிக்கூடத்திலே படித்ததை நினைவு வைத்துக் கொண்டு, ஏராளமான பணம் செலவிட்டுக் கொண்டு, தன் வீட்டிலே குரு சிசுருஷை செய்யும் மாணவ மணி யாராவது இருப்பது சாத்தியமா? இந்தக் கேள்விகள் எல்லாம் சகஜமாகப் பிறக்கக்கூடும். பொய் சொல்வதிலும் பொருத்தம் இருக்க வேண்டுமே!"

"உன்னுடைய சொல் வன்மையினால் நான் இந்தப் பொய்யை மெய்யாக நினைக்கும்படி செய்ய வேண்டும்."

தர்மசங்கடம் என்ற வார்த்தையைப் பயன்படுத்த இதைவிடத் தகுதிவாய்ந்த சந்தர்ப்பம் வேறு இருக்க முடியாது. பசுபதி வாத்தியாருக்கு ஒத்தாசை செய்வதில் எனக்கும் பரிபூரண விருப்பம்தான். ஆனால் எக்கச்சக்கமாகப் பொய் சொல்ல வேண்டியதாக இருந்தது.

"ராத்திரி யோசனை செய்து காலையில் சொல்" என்று கடைசியாகக் கூறிவிட்டு அவன் போனான். காற்றுப் பதனிட்ட அறையில் ரப்பர் நுரையாலான மெத்தை போட்ட கட்டிலின் மேல் சுகமாகப் படுத்துப் புரண்டேன். திருவல்லிக்கேணி பிள்ளையார் கோயில் தெருவில் ஐந்து குடித்தனங்கள் உள்ள வீட்டில் கூட்டில் அடைக்கப்பட்ட கோழி போலக் காலட்சேபம் செய்து கொண்டு வந்த எனக்கு இந்தச் சொகுசான இடம் இந்திர லோகமாயிருந்தது. நான் மெய்ம்மறந்து தூங்குவதற்குத் தொடங்கு முன்னர் மனச்சாட்சி உறக்கம் கலைந்தெழுந்து குதித்துப் போலிப் பணக்காரனாக வேஷம் போடப் போவதை இகழ்ந்து எச்சரித்து இந்திர போகத்தை நிர்மூலமாக்கி நரக வாதனையை உண்டாக்கி விட்டது. சுயநலம் சிறிதளவும் இல்லாமல் நண்பனின் மகிழ்ச்சிக்கு ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்ய வேண்டுமென்ற கடமை உணர்ச்சியும், நீதி நூல்கள் ஒப்புக் கொள்ளாத பொய்யைச் சொல்லி ஏமாற்றுதல் தவறு என்று விசார புத்தியும் தம்மிடையே



போராடி என் மனத்தைச் சகதியாக்கி விட்டன. எது தர்மம் என்று என் உள்ளத்தில் நிர்ணயமாகு முன்பே நான் விழிப்பு நிலையை இழந்தேன்.

சுந்தரப் பெருமாள் காலையில் என்னை எழுப்பியபோது விடிந்து வெகு நேரமாகி விட்டதை உணர்ந்தேன்.

"என்ன குமார்! கண்கள் இரண்டும் சிவந்திருக்கின்றன. ராத்திரி தூங்கவே இல்லையா? உனக்கு விருப்பமில்லா விட்டால் நான் வற்புறுத்த மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே கட்டில்மீது வந்து உட்கார்ந்தான். நானும் எழுந்து உட்கார்ந்தேன்.

"பல் விளக்கு. பலகாரம் சாப்பிடலாம்" என்றான் அவன்.

அவன் முகமும் பேயறைந்தது போலிருந்தது. அவன் கூடத்தான் சரியாகத் தூங்கியிருக்க மாட்டான் என்று எண்ணினேன். காலைச் சிற்றுண்டி முடிந்து மறுபடியும் மாடிக்கு வந்தோம்.

"நான் என்னவோ சௌக்கியமாக இருப்பதாக எல்லாரும் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். உண்மை அப்படி இல்லை. என் உள்ளத்து வேதனையை மாற்றவே குதூகலமாக இருக்க என்னை நிர்ப்பந்தப் படுத்திக் கொள்கிறேன். தமாஷாக இருப்பதற்கு இதயத்தையே கசக்கிப் பிழிந்து கொண்டிருக்கிறேன். வலுவிலே சிரித்துச் சிரித்து எப்பொழுதுமே சிரித்துக் கொண்டிருக்க என்னைக் கட்டாயப்படுத்திக் கொண்டிருக்கிறேன். தனிமையில் இருக்கும்போது என் உறுதி சிதறி, முயற்சி தளர்ந்து போகிறது. என் உள்ளும், புறமும் தென் துருவமும் வட துருவமுமாயிருக்கின்றன. இது யாருக்குத் தெரியும்? குமார், உன்னிடம்தான் ஒளிக்காமல் சொல்கிறேன்."

"இனிமேல் சொல்லவேண்டாம். இன்றிரவு ஸ்ரீவில்லிப்புத்தூர் போகிறேன்."

தர்ம தேவதையே என் முன் பிரசன்னமாகித் தடுத்திருந்தால்கூடக் கேட்டிருக்க மாட்டேன். என் மனம் புரட்சி செய்தது. இந்தக் காலத்தில் இவ்வளவு மாத்ரு பக்தியும், பித்ரு பக்தியும் உள்ள மனிதனுக்கு உதவி செய்யும் புண்ணியத்தை அடைய ஒன்று அல்ல, நூறு பொய் சொன்னாலும் பாவம் இல்லை என்று அந்தத் தேவதையைச் சமாதானம் செய்து அனுப்பி விடுப்பேன்.

"அப்படியானால் எழுந்து வா என்னோடு" என்று சொல்லிக் கிளம்பினான் அவன். பின்னோடு போகாமல் போனேன். மாடிப் படிகளைக் கடந்து ஓர் அறைக்குள் போனான். விளக்கு ஏற்றிக் கொண்டது. ஒரு பெரிய இரும்புப் பெட்டியை மூன்று நான்கு சாவிகளால் திறந்தான். புத்தகம் புத்தகமாகத் தொகுக்கப்பட்ட கரன்ஸி நோட்டுக்கள். அவ்வளவும் ரூபாய் நோட்டுக்களாக இருந்தன. லக்ஷ்மிதேவியின் விசுவரூப தரிசனத்தைக் கண்டதுபோல் மலைத்துப் போனேன். வெடவெட என்று சரீரம் எனக்கு நடுங்கியது.

"எவ்வளவு செலவுக்கு வேண்டுமோ, எடுத்துக்கொள்" என்று அவனிடமிருந்து உத்தரவு பிறந்தது.

"முதலில் தயவுசெய்து கதவைப்பூட்டி விட்டு மாடிக்கு வா. எனக்கு இங்கே நின்றால் தலையைச் சுற்றுகிறது."

"பயப்படாதே. இந்த இருபது லட்ச ரூபாய்களும் என் பணம்."

"இருபது லட்சம் ரூபாய்களா!" நூறும். ஆயிரம் ரூபாய்கள் என்னிடம் இருந்து விட்டால் குபேரனுக்கு எதிரில் ஏறுபோல நடை நடக்க மாட்டேனா? அண்ணங்கராச்சாரியார் வெண்ணெய்க் கடைக்கு நெய் வாங்கிய வகையில் பதினேழு ரூபாய் சொச்சம் நான் கொடுக்க வேண்டும். முத்தையா செட்டியார் மளிகைக்கு இருபத்து எட்டு. சலவைத் தொழிலாளிக்கு நாலரை ரூபாய் பாக்கி. இந்தக் கடன்களை யெல்லாம் தீர்த்துவிட்டு மணிபர்ஸில் கொஞ்சம் இருந்தாலும் என்னைக் கட்டிப் பிடிக்க முடியுமா? இஷ்டப்பட்ட தொகையை எடுத்துக் கொள்ளும்படி சொல்லச் சுந்தரப்பெருமாளுக்குப் பைத்தியமா? பணத்தின் அருமை எனக்கல்லவா தெரியும்!

"வட்டி நஷ்டமாக இந்தத் தொகையை ஏன் இப்படியே போட்டு வைக்க வேண்டுமென்று நீ நினைக்கலாம். எனக்கு எதற்கு மேலும் மேலும் பணம்? தான தர்மமாவது செய்யலாமே என்று நினைக்கலாம். அப்பா கண் தெரியாமல் தவிக்கிறார். அம்மா தள்ளாத வயதில் தண்ணீர் மொண்டு கொண்டு திண்டாடுகிறாள். அண்ணன் சம்சாரியாகக் குடும்பத்தைப் பெருக்கிக் கொண்டிருக்கிறார். இவர்களுக்கு உதவாத பணத்தை எந்த தான தருமத்துக்கு வாரி வாரிக் கொடுப்பேன்?"

"உன்னோடு இன்னும் ஒருநாள் இருந்தால் எனக்கு மூளை கலங்கிப் போகும். நான் ரயிலுக்குக் கிளம்புகிற வரையில் என்னோடு பேசாதே."

சுந்தரப்பெருமாள் பணியாட்களிடம் எல்லாம் சொல்லி வைத்தான்; தன் வீட்டை நடத்துவதுபோல் என்னிடமும் நடந்துகொள்ள வேண்டும் என்று. என் குடும்பத்தை அழைத்துவர ஊருக்கும் கடிதம் எழுதி ஏற்பாடு செய்தேன். ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போய்ப் பசுபதி வாத்தியாரையும் சாந்தநாயகி அம்மையாரையும் அழைத்து வந்தேன். விவரித்துக் கூறவேண்டிய விசேஷ சம்பவம் ஏதும் நிகழவில்லை. என்னுடைய உருக்கமான வேண்டுகோளைப் புறக்கணிக்க முடியாமல் பசுபதி வாத்தியார் வர இசைந்து விட்டார். பசுபதி வாத்தியாரின் மூத்தமகனை இந்தக் கபடநாடகத்தில் ஒத்துழைக்கச் செய்வது முதலில் பிரம்மப் பிரயத்தனமாகத் தானிருந்தது. ஆனால் தகப்பனார் படும் பாட்டைக்கண்டு இரங்கி ஒத்துக் கொள்ள வேண்டியவனானான். சென்னையில் உள்ள வைத்திய வசதி அங்கு இல்லைதான்.

"இரண்டு பிள்ளைகளில் ஒருவனால் உதவி செய்ய முடியவில்லை; ஒருவன் உதவியை நான் விரும்பவில்லை; இந்த வேளையில் தெய்வம்தான் உன்னை இங்கு அனுப்பி வைத்தது" என்று சொன்னார் பசுபதி வாத்தியார்.

"ஆமாம், தெய்வம்தான் என்னை இங்கு அனுப்பி வைத்தது" என்று நான் அர்த்தபுஷ்டியுடன் சொன்னேன். அதன் உட்பொருளை அவர் எப்படி அறிவார்? சின்னப் பிள்ளையைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது என்று நினைத்துக் கொண்டு தாறுமாறாகத் திட்டினார் அவர். தங்கமான மகனைப் பிள்ளையைத் தகப்பனாரே நியாயமில்லாமல் திட்டுவதை எப்படித்தான் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தேனோ?

சென்னையிலுள்ள பிரசித்தி பெற்ற கண் வைத்தியரான டாக்டர் ஆதித்தன் அவர்களின் திறமை மிக்க சஸ்திர சிகிச்சையினால் பசுபதி வாத்தியாரின் கண் முன் இருந்த திரை மறைந்து. சில காலத்தில் கண்ணாடி பணிந்து குண்டூசி கீழே விழுந்தாலும் பொறுக்கி எடுத்து விடக்கூடிய திட்சண்யமான பார்வையைப் பெற்றார் அவர். ஆனால் அவருடைய அகக் கண்களின் திரையை எந்தச் சிகிச்சையினால் அகற்றுவது என்பதே இப்பொழுது அடுத்து ஏற்பட்ட பிரச்னை. அடிக்கடி டிரங்கால் செய்து சுந்தரப் பெருமாளிடம் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன் நான்.

ஆனாலும் என் மனத்தில் இன்னும் குழப்பமிருந்தது. நன்றாக அமைந்துவிட்ட ஒரு கதைக்கு ஏற்ற கச்சிதமான முடிவைக் காண்பதில் முனைந்து நிற்கும் ஒரு கதாசிரியருடைய நிலையில் இருந்தேன்.

வினையைக் கருதி கட்டுவதுபோன்று என் மனத்தைப் பக்குவப்படுத்தித் திடப் படுத்திக் கொண்டு ஒருநாள், "ஸார்! இங்கே இப்படி இருப்பது தங்கள் ஆசி பலத்தினால்தான்" என்றேன்.

"அப்பா, குமாரா! நீ செய்த உதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?" என்று அவர் நன்றி நவிலலானார்.

"ஒரு சந்தேகம். நல்ல காரியத்தை உத்தேசித்து ஒரு பொய் சொல்லலாமா? சொல்லுங்கள்!"

"பொதுப்படைக் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாது. விஷயத்தை விவரமாகச் சொல்."

"சுந்தரப்பெருமாளும் நானும் சதியாலோசனை செய்து உங்களுக்கு வைத்தியம் செய்தோம். இந்த இடம் அவனுடையது. என்னை மன்னிக்க வேண்டாம் நீங்கள். அவனை மன்னித்தேன் என்று சொல்வதுதான் நீங்கள் எனக்குச் செய்யும் கைம்மாறு."

"ஓகோகோ! அப்படியா சமாசாரம்! அவனை எப்பொழுதோ மன்னித்து விட்டேனே! இந்திருமணம் நீடித்திருக்குமா என்றே முதலில் சந்தேகித்தேன். நம்பிய பெண்ணை நட்டாற்றில் அவன் விடாமலிருக்க வேண்டுமே என்று அஞ்சினேன். அவள் அம்மாவும் சுற்றத்தினரும் அவனுக்குப் போதனை செய்து, புத்தியைக் கலைத்து விடுவார்களோ என்று கலங்கினேன். எங்களுடைய தலையீடுஇல்லாமல், கணவனும் மனைவியும் அன்னியோன்னியமாக இருக்க வேண்டுமே என்று ஏங்கினேன். உண்மைக் காதல் எல்லாச் சோதனைகளையும் வென்றுவிட்டது."

அடேயப்பா! பொல்லாத மனிதர் இந்தப் பசுபதி வாத்தியார். பேரக் குழந்தையை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சட்டும் அவர் என்று உடனே வருமாறு சுந்தரப்பெருமாளுக்கு அழைப்பு விடுத்தேன். சினிமா நட்சத்திரமாகப் பிரகாசிக்கும் லலிதா தமது இல்லத்தில் குடும்ப நட்சத்திரமாகவும் விளங்கி ஒளி வீசுவதைப் பசுபதி வாத்தியார் ஆவலுடன் காண்பதற்குக் காத்துக் கொண்டிருக்கிறார் என்று சுந்தரப்பெருமாளுடன் போனில் பேசினேன். மகிழ்ச்சியினால் என் நண்பன் சிரித்த குதூகலச் சிரிப்பொலியைக் கேட்டு என் உள்ளமும் பூரித்தது.



# Divali

marks the victory of Lord Krishna over the demon Narakasura. It is the festival of lights; and the one photographic medium that will capture the colourful festivities is Agfacolor film. It is fast, sharp, brilliant and natural. Your Agfa dealer will tell you how to obtain bright prints, enlargements and transparencies in full colour or black-and-white, from your Agfacolor negative.



**Agfacolor**

NEGATIVE FILM

**AGFA INDIA** PRIVATE LTD. BOMBAY • NEW DELHI CALCUTTA • MADRAS





## பாரதத்தின் வீரங்காத்த பெண்மணிகள்

**ஜான்ஸி ராணி:** 1857... குமுறிக் கொண்டிருந்த எரிமலை வெடித்தது. தேசமெங்கும் புரட்சிப் பூக்கள் பூத்தன. ஆங்கிலேயர் எட்டுத் திசைகளிலிருந்தும் ஜான்ஸியை நெருக்கினர். ராணி லக்ஷ்மிபாய் காட்டிய வீரத்துக்கு ஈடு இணையே கிடையாது. ஆனாலுமென்ன? அக்கிரமம் வென்றது. போர் வீரனைப்போல மாறுவேடம் பூண்டு தம் ஸ்வீகாரக் குழந்தை தாமோதர ராவை முதுகிலே பட்டுத் துணியால் கட்டிக்கொண்டு வெளியேறி, குவாலியர் நகரைக் கேந்திரமாகக் கொண்டு சுதந்திரப் போரைத் தொடர்ந்து நடத்தினர். குவாலியர் மைதானத்திலே நடந்த போரில் லக்ஷ்மி பாய் விளைந்த வீரத்தை எழுத வார்த்தைகளே கிடையாது. அவரது முதுகிலே குண்டு பாய்ந்தது. ஓர் ஆங்கிலேயன் கத்தியால் வெட்டினான். தலையின் வலதுபுறம் சிதைந்து ரத்தவெள்ளம் பெருகியது. ஒரு கண் இந்த அதிர்ச்சியால் தெறித்து விழுந்தது. மற்றொரு சிப்பாய் லக்ஷ்மிபாயின் மார்பிலே ஓங்கி வெட்டவே மகாராணி படுகாயமடைந்தார். அந்த நிலையிலும் தம்மைக் காயப்படுத்திய இருவரையும் ஒரே மூச்சில் வெட்டி வீழ்த்தி விட்டுத்தான் வீர சுவர்க்கமடைந்தார்.

Λ **ராணி பத்மினி :** அவள் அழகின் அவதாரம். அவளது சௌந்தர்யத்தின் புகழ் இந்துஸ்தானமெங்கும் பரவி யிருந்தது. நாடாசை பிடித்த அல்லாவுதீன் கில்ஜி அழகி பத்மினியைத் தன் பத்தினியாக்கிக் கொள்ள ஆசை கொண்டான். ஆசை வெறியாயிற்று. சித்தூர் முற்றுகை தோல்வியில் முடிந்ததும் கில்ஜி, ராணா பீம்சிங்குடன் சமரசம் பேசினான். அந்த ஒப்பற்ற அழகைக் கண் குளிரப் பார்த்து விட்டுப் போக அனுமதி கேட்டான் அந்நியன். அதற்கு இணங்கிய ராணாவைக் கைதியாக்கித் தன் பாசறைக்கு இழுத்துச் சென்றான். வஞ்சகனை வஞ்சகத்தாலே வென்று தன் கணவனை மீட்டு வந்த கற்பரசி பத்மினியின் கதை உலகப் புகழ் பெற்றது. ஏமாற்றத்தினால் வெகுண்டெழுந்த மூர்க்கன் அல்லாவுதீன் சித்தூரைத் தாக்கிக் கைப்பற்றி அந்தப்புரத்துக்குள் நுழைந்தவனுக்கு அவள் உயிரற்ற சடலம்கூடக் கிடைக்கவில்லை. ஆயிரமாயிரம் ரஜபுத்திர அழகிகள் தீக்குளித்த சாம்பல் குவியலிலே பத்மினியின் சாம்பல் எதுவென்று கூட அவனால் இனம் காண முடியவில்லை.

V **துர்க்காபாய் :** சாந்தல வம்சத்து வீர ரமணி துர்க்காபாய். கணவனை இழந்த கைம்பெண்ணானாலும் தன் ஒரே அருமை மகன் பீர் நாராயணனின் பிரதிநிதியாக கோண்ட்வானாவைச் சிறப்பாக ஆண்டு வந்தாள். இளமை வெற்றிகளிலே சாம்ராஜ்ய ஆசையை வளர்த்துக் கொண்டிருந்த அக்பர் கோண்ட்வானாவின் சுதந்திரத்தைப் பறிக்க முடிவு கட்டினார். மாபெரும் மொகலாயப் படையை எதிர்த்து நின்றாள் அஞ்சா நெஞ்சம் கொண்ட அரசி துர்க்காபாய். அற்புதமான சாகஸத்துடன் போராடினாள். பகைவனின் அம்பு ஒன்று வலது நெற்றியிலும் மற்றொன்று கழுத்திலும் தைக்கவே அவைகளைத் தம் கையாலேயே பிடுங்கி வீசிவிட்டு அப்படியே யானைமீது மூர்ச்சையாகி விழுந்தாள். மூர்ச்சை தெளிந்து கண் விழித்தபோது மொகலாயப் படைகள் வெற்றி வாகை சூடிவிட்டதை அறிந்து மனம் பொறாத துர்க்காபாய் குத்துவாளை எடுத்துத் தன் மார்பிலே பாய்ச்சிக் கொண்டு வீர மரணத்தை விருப்புடன் ஏற்றுக் கொண்டாள்.

Λ **சாந்த் பீபி:** மொகல் பாதுஷா அக்பர் தம் ஆதிக்கத்தைத் தக்காணத்திலும் நிலை நிறுத்த ஆவல் கொண்டார். அகமது நகரின் ஆட்சிப் பொறுப்பேற்று நடத்தி வந்தாள் சாந்த் பீபி என்ற வீரமாது. மொகல் ஆட்சிக்கு அகமது நகரை அடிமையாக்க விரும்பவில்லை அவள். எதிர்த்து நின்றாள். மொகல் பீரங்கிகள் கோட்டையைத் துளைத்த போதும், அஞ்சா நெஞ்சமுடன் தானே போர்த் தலைமை தாங்கி தம் படை வீரர்களுக்கு உற்சாகமூட்டி மொகலாயரின் முற்றுகையை முறியடித்தாள். சாந்த் கல்தானுவின் சாகசத்தை அக்பரே வியந்து பாராட்டிச் சமரசமும் செய்து கொண்டார். ஆனால் அந்தோ! அந்த வீரப் பெண்மணியை உள்நாட்டு அரசியல் சூழ்ச்சி உயிரோடு விட்டு வைக்கவில்லை. விஷமிட்டுக் கொன்று விட்டனர் துரோகிகள். மறுபடியும் அக்பர் அகமது நகர்மீது படையெடுத்து வந்தபோது எதிர்த்து நின்று கோட்டையைக் காக்க சாந்த் பீபி இல்லை. அகமது நகரும் அக்பருக்கு அடிமையாயிற்று.

V **தாராபாய்:** மகாராஜா சிவாஜியின் மகன் சாம்பாஜி ஔரங்கசீப்பினால் படுகொலை செய்யப் பட்டான். சிவாஜியின் மற்றொரு மகன், சாம்பாஜியின் சகோதரன் ராஜாராம் தப்பிச் சென்று ஔரங்கசீப்பை எதிர்த்துப் போராடினார். பத்து ஆண்டுகள் மொகலாயப் படைகளைப் படாதபாடு படுத்தி விட்டுப் போர்க்களத்திலே மாண்டார் வீரர் ராஜாராம். அத்துடன் மராத்தியர் ஒடுங்கி விடவில்லை. ராஜாராமின் விதவை மனைவி தாராபாய் போர்த் தலைமை பூண்டு ஔரங்கசீப்பின் அமைதியைக் குலைக்கும் வகையில் போராடினாள். 'ஒரு கோட்டையைப் பிடித்தோம்' என்று மொகலாயர் பெருமை கொள்ளுவதற்குள் கைப்பற்றப்பட்ட வேறு இரண்டு கோட்டைகளைத் தாராபாய் மீட்டுவிட்டாள் என்ற செய்தி அவர்களுக்கு அதிர்ச்சியைத் தரும். கடைசிவரையில் தாராபாயை அடக்கி ஒடுக்க முடியாமலேயே ஔரங்கசீப் இறந்தார். சிவாஜிக்குப் பிறகு மங்கிவிட்ட மராட்டியரின் பெருமை சுடர் விடுவதற்குத் தாராபாயின் சாகசமும் ஒரு காரணமாக இருந்தது.

A அச்சதரங்கம்மாள்: சுமார் முந்நூறு ஆண்டுகளுக்குமுன் தஞ்சையை விஜயராகவ நாயக்கர் ஆண்டார். அதே சமயத்தில் மதுரையை முதலாம் சொக்கநாத நாயக்கர் ஆண்டார். சொக்கநாதர், விஜயராகவ நாயக்கரின் பேத்தியாகிய அச்சதரங்கம்மாளை மணக்க விரும்பித் தூது விடுத்தார். அச்சதரங்கம்மாள் அழகு, அறிவு, வீரம் ஒருங்கே அமைந்தவள். தம் பேத்தியைச் சொக்கநாதருக்கு மணம் புரிவிக்க விஜயராகவ நாயக்கருக்கு விருப்பமில்லை. அச்சத ரங்கம்மாளை அடைய முடியாத ஆத்திரத்திலே சொக்கநாதர் வெகுண்டு தஞ்சைமீது படையெடுத்தார். தஞ்சைக் கோட்டை வீழ்ந்தது. ஆனால் உட்கோட்டை வாயிலில் கையில் வாளேந்தி நின்றாள், இருபது வயதே ஆன அச்சதரங்கம்மாள். அவள் தந்தையும் தாயும் தமையனும் கூட இருந்தனர். நால்வரும் மதுரைப் படைகளை எதிர்த்துப் போராடி வீர சுவர்க்கம் அடைந்தனர். கட்டழகி அச்சத ரங்கம்மாள் எதிரிகளில் பலரை மாய்த்துத் தன் மானங் காத்துக்கொண்டாள்.

V ராணி மீனாட்சி: மதுரையில் இரண்டாம் சொக்கநாத நாயக்கரின் மரணத்துக்குப் பின், அவர் மனைவி ராணி மீனாட்சியின் ஆட்சி தொடங்கியது. இதை விரும்பாத பங்காரு திருமலை என்பவன் ஆர்க்காட்டு நவாபின் உதவியை நாடினான். நவாபின் பிரதிநிதியாக சாப்தர் அலி ராணியைக் காண வந்தான். தனக்கு உதவுவதாகக் குரான்மீது ஆணையிட்டுச் சொன்னால் நவாபுக்குக் கப்பம் கட்டுவதாக ஒப்புக் கொண்டாள் மீனாட்சி. சாப்தர் அலி இரண்டு செங்கற்களைப் பட்டுத் துணியிட்டு மூடி, குரான் புத்தகம் என்று அதன்மீது சத்தியம் செய்தான். இதை அறிந்த ராணி மீனாட்சியும் கப்பமாகச் செங்கற் பொடிகளையே அனுப்பி வைத்தாள். பலன் மதுரை முற்றுகை விடப்பட்டது. அஞ்சா நெஞ்சமுடன் எதிர்த்து நின்றும் மீனாட்சிக்குத் தோல்வியே கிட்டியது. அன்னியனிடம் அவமானமடைவதை விரும்பாத ராணி மீனாட்சி தன் உடலுக்குத் தானே தீயிட்டுக் கொண்டாள். உள்ளே புகுந்த சாப்தர் அலி அறை வாயிலில் மண்டியிட்டு அவளுக்கு வீர வணக்கம் செலுத்தினான்.

# விமானப் பயணத்திற்குத் தலைசிறந்த டி டபிள்யூ ஏ மூலம் பறந்துசெல்லுங்கள்



டி டபிள்யூ ஏ மூலம் பறந்து செல்லும்போது நீங்கள் பண்புடன் கூடிய மிகச் சிறந்த சேவையையும் நல்ல கவனிப்பையும் பெறுகிறீர்கள். டி டபிள்யூ ஏ யுடன் தூரகிழக்கு நாடுகள், ஐரோப்பா....அல்லது அமெரிக்காவுக்குப் பறந்து செல்லுங்கள். போகும் வழியில், பார்க்கவேண்டிய பல இடங்களையும் அதிகப்படியான செலவில்லாமல் நீங்கள் பார்க்க முடியும். எல்லா டி டபிள்யூ ஏ பயணங்களிலும் உங்களுக்கு 'ஸ்லீப்பர் ஸீட்' வசதியுண்டு. பிரயாண ஏற்பாடுகளுக்கு உங்களுக்கு விருப்பமான போக்குவரத்து ஏஜெண்ட் அல்லது டி டபிள்யூ ஏ வைக் கலந்து கொள்ளுங்கள்.

டி டபிள்யூ-ஏ இன்டர்காண்டினென்டல் போயிங் 707 மூலம் ஐரோப்பாவிலிருந்து அமெரிக்காவுக்கும் அதைத் தாண்டியும் பறந்து செல்லுங்கள்.

**TWA**

பம்பாய் · கல்கத்தா · நியூடெல்லி · மதராஸ்

---






சிறப்பின் சிகரம்

சிக்கனத்தின் சின்னம்

*The World Famous*



# QHL
## TIE ROD ENDS
for automobiles



Manufactured by:
**RANE (MADRAS) LTD.,**
(Manufacturing Division)
MADRAS

*under technical arrangement with*
**QUINTON HAZELL LTD.,**
Colwyn Bay, North Wales.

EP



## கூந்தல் வளர்ச்சியில் எவ்வாறு புது வனப்பை காண்பது!

காந்தரிடைன் கூந்தல் தைலத்தை இனசரி தவறாது உபயோகித்தால் கூந்தல் மிக செழுமையாகவும் புத்தம் புதிய சோபையுடனும் வளருவதை நீங்கள் காணலாம்

கூந்தலை செழிப்பாக வளர்க்கிறது

# காந்தரிடைன்
## கூந்தல் தைலம்



**பெங்கால் கெமிகல்**
கல்கத்தா - பம்பாய் - கான்பூர்

ஆர். எல். கௌடர் & கோ.
69. பந்தர் தெரு. சென்னை -1

# சினிமாப் பித்துக்கள்



"நீங்கள் ரொம்ப நன்ருக அந்தச் சினிமாவிலே வக்கீலாக வாதாடினீங்க. என் கேஸுக்கு நீங்கள் தான் கோர்ட்டில் ஆஜராகணும்...."



"காதலன் கண்ட கனவில் வந்து நீங்கள் வெகு நன்ருக நடித்தீர்கள். உங்களுக்கு ஒழிஞ்சதுன்னு என் கனவிலேயும் கொஞ்சம் வர முடியுமா?"



"பக்த பிரஹலாதவில் நரசிம்மனுகத் தூணில் தோன்றினுரே, அவர் இப்போது எங்கே சார், இருக்கிருர்? அவரைப் பார்க்கணும்!"

"கடன் காரர்களுக்குப் பயந்து எங்காவது ஒளிந்து கொண்டிருப்பார், போய் பாருங்க!"



"நம்ம வீட்டில் கல்யாணம் வருகிறது. நீங்கள் வந்து உங்கள் இரவல் குரலில் கச்சேரி செய்யணும்."



பண்டாரம்: நீங்கள் தானே பட்டினத்தாராக நடித்தது?

நடிகர்: ஆமாம். என்ன வேணும்?

பண்டாரம்: கொஞ்சம் விபூதி இருந்தால் கொடுப்பீர்களா?




காரில் போகிறவர்: நான் யமலோகத்துக்குப் போகிறேன்.

பாதசாரி: சரிதான் ஐயா, கொஞ்சம் மெள்ளத்தான் போமேன்."







சாமா

# அமுதமாகும் விஷம்

வைத்திய உலகில் கடுமையான நோய்களைக் குணப்படுத்த விஷத்தையே மருந்தாகக் கொடுப்பதைக் காண்கிறோம். ஆனால் அன்றாட வாழ்க்கையில் நாம் ஒருவகை விஷத்தையே உணவுடன் சேர்த்து உண்டு வருகிறோம் என்ற உண்மை அநேகருக்குத் தெரியாது. அந்த விஷம் நம் உடல் உறுப்புக்களை வளர்க்க இன்றியமையாததொரு பொருளும்கூட. ஜீவராசிகள் இந்த உலகில் தோன்றிய காலத்திலிருந்து இந்தப் பொருள் உயிர்களை ரட்சிக்கப் பயன்பட்டு வருகிறது. இது இல்லாமல் வாழவே முடியாது. ஆனால் இதுவோ விஷம்! விந்தையான வாதமானாலும் உண்மை.

ஒரு காலத்தில் - மனிதன் பண்டமாற்று மூலம் வாழ்க்கை நடத்திவந்த காலத்தில்-இந்தவிஷம்; பணமாகப்பயன்பட்டு வந்தது. பொன்னுக்கும் மேலான மதிப்புடன் திகழ்ந்தது. ஆனால் இன்றோ இது உலகிலேயே மிகமிக மலிவானதொரு பொருளாகி விட்டது. ஆனால் விஞ்ஞான உலகமோ இந்த மலிவான பொருளின் மதிப்பை வெகுவாக உயர்த்திக் கொண்டு வருகிறது. இதனால் ஆகாத காரியமே இல்லை என்று இதன் சாதனைகளுக்குப் பட்டியல் தயாரித்துக் கொடுக்கிறது.

இந்த விஷ உணவுப் பொருள்தான் என்ன என்று அறிய உங்களுக்கெல்லாம் ஆவலாக இருக்கிற தல்லவா? ஆனால் இதைச் சொன்னதும், 'பூ. இவ்வளவு தானா? இந்த உப்புச் சப்பில்லாத விஷயத்துக்குத்தானா இந்த ஆர்ப்பாட்டம்!' என்பீர்கள்.

உப்பு சப்பில்லாத விஷயம் என்று சொன்னேன்? ஆமாம். நாம் சப்புக் கொட்டிக் கொண்டு உணவை ரசித்துச் சாப்பிடும்படி செய்யும் பொருள் எது? உப்புத்தானே? அந்த உப்பைப் பற்றித்தான் இங்கே நான் குறிப்பிட்டது. உணவுக்கு ருசியைச் சேர்க்கவும் உணவுப் பொருள்களைப் பாதுகாக்கவும், உடல் உறுப்புக்களை வளர்க்கவும், உலகத்தில் நடக்கும் பல்வேறு தொழில்களுக்கு மூலகாரணமாக இருந்து இயக்கி வருவதும் இந்த உப்புத்தான். சாதாரண மலிவான சாப்பாட்டு உப்பு. நீங்கிழைக்காத வெண்மையான படிகங்களைாலிய இந்த உப்பு இரண்டு கொடிய விஷப் பொருள்களின் சேர்க்கையிலே பிறந்ததாகும். வெள்ளியைப் போலப் பளபளக்கும் விஷ உலோகம் ஒன்று. அதன் பெயர் சோடியம். பாசிப் பச்சை நிறமான ஒரு விஷ வாயு. அதன் பெயர் குளோரின். நாம் சாப்பிடும் உப்பிலே இந்த இரண்டு பொருள்களும் உள்ளன. உப்பின் ரசாயனப் பெயர் சோடியம் குளோரைடு என்பதுதான்.

உப்பு சாதாரணமானதுதான். ஆனால் அதைப்பற்றிய விஷயங்கள் மிகவும் ரசமானவை. உலகிலே முதன்முதலில் உப்பை அறிந்து, அதை உபயோகித்தவர்கள் ஆசியாக்காரர்கள்தான். கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கடல் நீரைச் சூரிய வெப்பத்தினால் ஆவியாக்கி உப்பைச் சேகரிக்கும் முறையைச் சீனர்கள் அறிந்திருந்தனர். அதற்கும் முன்பே நாம் உப்பை உபயோகிக்கத் தெரிந்து கொண்டிருந்தோம். வேத காலத்து நூல்களில் உப்பைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஹீப்ருஸ் என்ற இனத்தவர்கள், பிறந்த குழந்தை ஆரோக்கியமாக வளர்வதற்காக உப்பை உடலில் தேய்ப்பார்களாம். ஒரு ஹீப்ரு ஆண்



உப்பளத்தில் உப்பு சேகரிக்கிறார்கள்

மகனுக்கு அவன் மனைவி உணவில் உப்பிடாமல் அலட்சியமாக இருப்பாளாகில் அவளை அவன் விவாகரத்து செய்து விடலாமாம்.

இன்றும் கிறிஸ்தவர்கள் தங்களுக்குக் குழந்தை பிறந்ததும், பிறந்த ஏழாம் நாளன்று ஞானஸ்நானம் என்ற நாமகரணம் செய்யும் சடங்கின்போது மதகுருவானவர் வெள்ளை உப்பைத் தமது விரலின் நுனியில் தொட்டு, 'சர்வேசுவரனுடைய ஞானமாகிய உப்பு உன்னை நித்திய ஜீவியத்துக்குக் காப்பாற்றக் கடவது' என்று லத்தீன் மொழியில் ஜபித்து விட்டுப் பிறகு குழந்தையின் நாக்கில் தடவுவார். இச்சடங்கு கிறிஸ்து பிறந்த பிறகு உண்டானது. புதிய ஏற்பாட்டில் மத்தேயு அதிகாரம் 13ம் வசனத்தில் 'நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள். உப்பு சாரமானது. சாரமற்றுப் போனால், என்ன ஆகும்? வெளியே கொட்டப்படுவதற்கும் மக்களால் மிதிக்கப்படுவதற்குமே ஒழிய வேறொன்றுக்கும் உதவாது'' என்று இயேசு தமது மலைப் பிரசங்கத்திலே உப்பை உபமானமாக எடுத்துக் குறிப்பிட்டுள்ளார். கிறிஸ்துவ நூல் பழைய ஏற்பாட்டில் ஆதியாகமம் 19, அதிகாரம் 26ம் வசனத்தில் ''உன் ஜீவன் தப்ப ஓடிப்போ,பின்னிட்டுப் பாராதே'' என்று கூறியதை மறந்து திரும்பியதால் 'லோத்'தின் மனைவி உப்புத்தூண் ஆனாள்'' என்று கூறப்பட்டிருக்கிறது.

கீழ்த்திசை நாடுகளில் பண்டைக்காலத்திலும் சரி, தற்போதும் சரி விருந்துகளில் நட்பின் அடையாளமாகவும் மணமுவந்த கூட்டுறவின் அறிகுறியாகவும் உப்பைக் கலந்திடும் வழக்கம் இருந்து வருகிறது. அராபியர்களிடையே நட்பின் இறுக்கத்தை விளக்குவதற்கு 'நமக்கிடையே உப்பு இருக்கிறது' என்று ஒரு பழமொழி வழங்கிவருகிறது. ஒருவன் உப்பைத் தின்று அவனுக்குத் துரோகம் செய்யக்கூடாது என்ற கருத்து நம் நாட்டில் மட்டுமல்ல, அராபியர்களிடமும் இருக்கிறது. உயர்ந்த ஸ்தானத்தில் உள்ளவன் என்பதைக் குறிக்க



கோவளம் கடற்கரையில் புதைந்து கிடக்கும் நங்கூரத்தின் ஒரு பகுதி



மாடுகளுக்கு உப்புத் தினம்

அராபியர்கள் 'உப்பின்மேல் உட்கார்ந்திருக்கிறான்' என்று சொல்லுவார்கள். இதிலிருந்து உப்பை அவர்கள் தங்கள் வாழ்வில் எத்தனை உயர்ந்த பொருளாக மதிக்கிறார்கள் என்பது தெரிகிற தல்லவா? அராபியரிடையே ஒருவருக்கொருவர் மனத்தாங்கல் ஏற்பட்டுப் பின் பெரியவர்களால் சமாதானம் செய்து வைக்கப்பட்டால் அதன் அடையாளமாக ஒருவருக்கொருவர் உப்பைக் கொடுத்து நட்பை உறுதிப் படுத்திக் கொள்வார்களாம். பண்டைக் காலத்தில் அராபியரோடு தமிழர்கள் வாணிபம்செய்தகாரணத்தினால்தானோ என்னவோ, உப்பைப் பற்றிய சில பழமொழிகள் நம் வழக்கில் இருந்து வருகின்றன. ''உப்பிட்டவரை உள்ளளவும் நினை'' என்ற பழமொழியை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இதைத் தவிர உப்பைப் பற்றி நம்மிடையே ஏராளமான பழமொழிகள் வழங்கி வருகின்றன.

துரோகம் செய்தவனை ஈரான் தேசத்தில் 'உப்புக்கு நேர்மை யற்றவனாக நடந்து கொண்டான்' என்று சொல்லுவார்கள். ரோமானிய சரித்திராசிரியர்கள் தங்கள் வரலாற்று நூலிலே ஜெர்மானிய ஜாதியார் உப்பு நீர் ஊற்றுகளைத் தங்கள் ஆதிக்கத்துக்குட்படுத்திக் கொள்ளப் போரிட்டதாகக் குறிப்பிட்



டுள்ளார்கள். ஏனென்றால் உப்பு நீர் ஊற்றுக்களைப் புனிதமாகக் கருதினார்களாம் ஜெர்மானியர்.

பண்டைக் காலத்தின் உலகப் பொருளாதாரத்தில் உப்பு ஓர் உன்னத ஸ்தானத்தை வகித்திருக்கிறது. பழங்காலத்தில் தரை மூலமாகப் பல வியாபார மார்க்கங்களை உப்பு ஏற்படுத்தி யிருக்கிறது. அந்தக் காலத்தில் இந்தியநாட்டு உப்புக்கு உலகம் முழுதும் மிகுந்த கிராக்கி இருந்தது. மகா அலெக்ஸாந்தர் காலத்துக்கு முன்னாலிருந்தே வட இந்தியாவிலுள்ள உப்புக் கனிகள் பிரபல வியாபாரக் கேந்திரங்களாக விளங்கி வந்திருக்கின்றன.

சாரிசாரியாக ஒட்டகங்கள் ஏராளமான உப்பு மூட்டைகளைச் சுமந்துகொண்டு ஸஹாரா பாலைவனத்தைக் கடந்து வருஷத்துக்கு இரண்டு தடவை 'டிம்பக்டு' என்ற நகரத்தை அடைந்தன. உப்பு வியாபாரத்தினாலேயே ஆப்பிரிக்காவிலுள்ள அந் நகரத்துக்குப் பெருமை ஏற்பட்டது.

உப்பு எல்லா இடங்களிலுமே சிரமமில்லாமல் கிடைக்கிறது என்று சொல்லுவதற்கில்லை. சில இடங்களில் உப்பு தங்கம் வெள்ளிக்கும் மேலாகக் கருதப்படுகிறது. சீசர் என்ற ரோமானிய மன்னரின் காலத்தில் போர்வீரர்களுக்குச் சம்பளத்தின் ஒரு பகுதியாக உப்புக் கொடுக்கப்பட்டதாம். சம்பளத்தின் ஒரு பகுதியாக உப்புக் கொடுத்ததை சாலேரியம் - உப்புப் பணம் என்று வழங்கினார்கள். இதிலிருந்து இன்று 'சாலரி' (சம்பளம்) என்ற சொல் பிறந்திருக்கிறது. லத்தீன் பாஷையில் 'ஸால்டேர்' என்றால் உப்பைக் கொடுத்தல் என்று பொருள். உப்பைப் பெற்றுக் கொண்ட ராணுவத்தினருக்குப் பிற்காலத்தில் 'ஸோல்ஜர்' என்ற பெயரும் இந்தக் காரணத்தினாலேயே ஏற்பட்டது.

இப்போது நம்மிடையே எப்படி நாணயம் வியாபாரத்துக்குப் பயன்படுகிறதோ அதே போல் ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய தேசங்களின் பல பகுதிகளில் ஒரு சமயத்தில் உப்பு உருண்டைகள் நாணயங்களாகப் பயன்பட்டு வந்தன. இன்றுகூட ஆப்பிரிக்காவின் சில பகுதிகளில் தங்கள் மனைவியைக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதில் உப்பைப் பெற்றுக் கொண்டு போகும் ஜாதியினரும் இருக்கின்றனர்.

கடந்த மகாயுத்தத்தின் போது பர்மாவின் மூன்று கதேசிகள் ஒரு ராணுவப் பாதிரியாருக்கு ஒரு மாதா கோயிலைக் கட்டிக் கொடுத்தார்கள். அதற்குக் கூலியாக அவர்கள் கேட்டது என்ன தெரியுமா? சம்பளமாக ஆளுக்கு இரண்டு பவுண்டு உப்புக் கொடுத்தால் போதும் என்றார்களாம்.

வட அமெரிக்கச் செவ்விந்தியர்கள் உப்பை 'மந்திர வெள்ளை மணல்' என்று அழைக்கிறார்கள். உப்பு நீரூற்றுக்களின் ஆதிக்கத்துக்காக



உப்பு அம்பாரமும் கோவளத்தில் ஒருவர் வீட்டில் இருக்கும் சீனர்களின் ஜாடியும்

பிலோ இருதயநாத்

இங்குள்ள ஜாதியாரிடையே எத்தனையோ போர்கள் நிகழ்ந்திருக்கின்றனவாம். இப்படி எல்லாம் மதிப்புடைய உப்பை மனிதன் முதன்முதலில் எப்படி அறிந்தான்?

ஆதி மனிதன் மிருகங்களோடு மிருகமாகச் சேர்ந்து வாழ்ந்த காலத்தில் அவனுக்குத் தோழனாக முதலில் நாய்களும் பிறகு ஆடுமாடுகளும் வசப்பட்டன. அப்போது இவை சமீபத்திலுள்ள மண்ணையும் பாறையையும் நக்கிய பின் நாக்கைச் சப்புக் கொட்டிக் களிப்பதைக் கண்ட மனிதன் தன் தோழனான மிருகங்களை மகிழ்விக்கும்படியான ஏதோ ஒன்று மண்ணிலும் பாறையிலும் இருக்கிறது என்று நிர்மானித்துத் தானும் மண்ணை, பாறையை ருசித்துப் பார்த்திருக்கிறான். இப்படி ருசித்துப் பார்க்கும்போது ஒரு மண்ணுக்கும் பாறைக்கும் மற்றொரு மண்ணுக்கும் பாறைக்கும் ருசியில் வித்தியாசத்தை உணர்ந்திருக்கவேண்டும், கடற்

கரைப் பகுதி மண்ணுக்கு உள்ள ருசி உள்நாட்டு மண்ணுக்கு இல்லை என்பதைக் கண்டான். அதேபோல் சில பாறைகள்தான் ருசியாக இருந்தன. ருசிக்கும் (கரிக்கும்) மண், பாறைகளை நக்கிய வாயால் பச்சை இறைச்சியைக் கடித்துத் தின்றபோது, தன் உணவில் ருசி கூடு வதை உணர்ந்திருக்க வேண்டும். கடல் நீர் அருகிலுள்ள கால்வாய் வழியாகவோ, அல்லது அருகிலுள்ள பள்ளங்களில் வந்து தங்கியோ அந்த நீர் சூரிய வெப்பத்தினால் ஆவியாகிக் கடைசியில் தங்கும் பொருள்தான் ருசிக்குக் காரணம் என்று தீர்மானித்து ருசியைக் கொடுக்கும் பொருள் கடல் நீரில்தான் இருக்கிறது என்ற முடிவுக்கு வந்தான் அவன்.

கடல் நீர் உப்பாக இருப்பதற்குக் காரணம் என்ன? பல்லாண்டுகள் ஆராய்ச்சி செய்து எழுபது ஆண்டு களுக்கு முன்புதான், அயர்லாந்து நாட்டைச் சேர்ந்த திரு ஜோலி என் னும் விஞ்ஞானி ஒரு முடிவுக்கு வந்தார்.

"நெடுங் காலமாகப் பூமியை அறுத்து ஓடும் ஆறுகள் மண்ணி லுள்ள உப்புக்களைக் கரைத்துக் கடலில் கொண்டு போய்ச் சேர்ப்ப தினால்தான் கடல் நீர் உப்பாக இருக் கிறது. இதில் முக்கியமாக சோடியம் அதிகமாக உள்ளது. ஒவ்வோராண் டும் கடலில் வந்து கலக்கும் உப்புக் களில் அடங்கிய சோடியத்தின் எடை சுமார் பதினைந்தரை கோடி டன்" என்று ஜோலியின் ஆராய்ச்சி கூறுகிறது.




"நல்ல நாடகத்திலே ராஜ பார்ட் போடறவளைப் போய் மரப்பாச்சியை பிடிச் சீங்க! இருந்த என்னெல்லாம் அவரு நிலக்கே சரியாப் பேசிடுச்சே!"

உப்பு கடல் நீரிலிருந்து மட்டுமா கிடைக்கிறது? ஏரிகள், நீர் ஊற்றுக்கள், சுரங்கங்கள் இவைகளிலிருந்தும் கூட உப்பு எடுக்கப்படுகிறது. ஆனால் கடல் நீரி லிருந்து எடுக்கப்படும் உப்புத்தான் சுத்தமான உப்பாகக் கருதப்படுகிறது.

ஒரு காலன் கடல் நீரில் ஏறத்தாழக் கால் பவுண்டு உப்பு இருக்கிறதென்று கணக்கிட்டிருக்கிறார்கள். ஒரு கன மைல் பரிமாணமுள்ள (க்யூபிக் மைல்) கடல் நீரிலிருந்து 130 மில்லியன் டன் உப்பு கிடைக்கும். மொத்தக் கடல் நீரின் அளவு 300,000,000 கனபரிமாண மைல்கள். உலகிலுள்ள கடல் நீரையெல் லாம் வற்ற அடித்தால் 4,419,300 க்யூபிக் மைல்கள் உப்பு கிடைக்குமாம்.

பரந்த கடல்களுக்குள், மத்தியதரைக் கடல் நீரும், கரீபியன் கடலிலுமே அதிகமான உப்பு கரைந்திருக்கிறது. இதைவிட அதிகமான உப்பு, நிலம் சூழ்ந்த சிறிய கடல்களான கருங்கடல், செங்கடல், காஸ்பியன் கடல், செத்த கடல், (டெட் ஸீ) பெரிய உப்பு ஏரி (க்ரேட் ஸால்ட் லேக்) ஆகியவைகளில் கரைந்திருக்கிறது.

கடல் நீரை வாய்க்கால்களில் பாய்ச்சிச் சூரிய வெப்பத்தினால் நீரை ஆவியாக்கி உப்புத் தயாரிக்கும் முறை இப்போது உலகின் எல்லாப் பாகங்களிலுமே பழக் கத்தில் இருக்கிறது.

கடற்கரையை அடுத்து, உப்பு தயாரிக் கும் உப்பளத்துக்குச் சென்று பார்த்திருக் கிறீர்களா? உப்பு வயல்களைத் தூரத்தி லிருந்து பார்த்தால் நூற்றுக்கணக்கான ஏற்றங்கள் வேலை செய்வதைப் பார்க்க லாம். அங்கு அனேக ஆழமான குழிகளை வெட்டி அவற்றில் கடல் நீரை ஏற்றத் தின் மூலம் இறைத்துத் தேங்க வைக்கி றார்கள். முதல் நாள் தேக்கி வைத்திருந்த பாத்தியிலிருந்த நீரை இரண்டாம் நாள் இன்னொரு பாத்திக்கும் அதிலிருந்து மூன்றாம் நாள் இன்னொரு பாத்திக்கு மாகப் படிப்படியாக மாற்றிக் கொண்டு வருவார்கள். கடைசியில் ஒரு குறிப் பிட்ட பதம் வந்ததும் உப்பு ஸ்படிகங்க ளாகப் பாத்தியினடியில் தங்கி இருக் கும். இந்த உப்பை வயலிலிருந்து பலகையின் மூலம் சுரண்டி வாரிக் குவியல் குவியலாகச் சேகரிக்கிறார்கள். இதற்கு முன்பு எடுத்தால் உப்பு பதமாக வராது.

இந்த உப்பு வயல்களை அடுத்துத் திருத்திச் சமப்படுத்தப்பட்ட 'களத்து மேடு' ஒன்று இருக்கிறது. கூலிகள் வயல் களில் குவித்துள்ள உப்பைக் கூடைகளின் மூலம் இந்தக் களத்து மேட்டில் கொண்டு வந்து அம்பாரமாகக் குவிக்கிறார்கள். மழையினால் சேதமாகாதபடி உப்பு அம்பாரங்களைப் பனையோலைகளினாலும் ஓடுகளினாலும் மூடி வைப்பார்கள். இந்த அம்பாரங்களைப் பார்க்கும்போது சிறு சிறு குடிசைகள்போலக் காட்சியளிக்கும். பிறகு இதைச் சாக்குகளில் நிரப்பி வியா பாரத்துக்கு அனுப்புகிறார்கள்.

நம் நாட்டு உப்பளப் பாத்தி ஒவ் வொன்றும் 144 சதுர அடி விஸ்தீரணம் கொண்டது. ஒரு பாத்தியிலிருந்து இரண்டு இரயில்வே மணங்கு உப்பைத் தயாரிக்கலாம். நம் மாகாணத்திலே கோவம்பாக்கம், பழவேற்காடு, என் னூர், குனும்பேட்டை, வில்லிவாக்கம், மரக்காணம் முதலிய இடங்களில் உள்ள உப்பளங்கள் பிரபலமானவை.

அனேகமாக உலகின் எல்லாப் பாகங்களிலுமே பூமிக்கு அடியில் சுரங்கங்களில் உப்பு கிடைக்கிறது. சில இடங்களில் வெகு ஆழத்தில் உப்புக் கனிகள் இருக்கின்றன. பூமிக்கு மேல் பரப்பிலேயே கிடைக் கும் உப்புப் பாறைகள் மிருகங்களின் உணவுப் பொருளாகப் பயன்படு கின்றன. நிலக்கரியை எப்படித் தோண்டி எடுக்கிறோமோ, அப்படியே தான் உப்புக் கனிகளிலிருந்தும் உப்பை எடுக்கிறார்கள். பூமியைக் குடைந்து வெடிகள் வைத்துத் தகர்த்து உப்புப் பாறைகளை மேலே கொண்டு வந்து சுத்தம் செய்து விற் பனைக்கு ஏற்றதாகச் செய்து அனுப்பு கிறார்கள்.

உப்புக் கிணறு குடைந்து உப்பை எடுக்கும் முறை அமெரிக்க நாட்டில் பிரபலமானது. உப்புப் பாறைப் படிவங்கள் இருக்குமிடத் தைக் கண்டு பிடித்து அங்கு பூமியைக் குடைந்து அந்தத் துவாரத்தில் குழா யைச் செலுத்துவார்கள். குழாய்க் குள் குழாயாக இரண்டு குழாய்கள் இருக்கும். இதில் வெளிக்குழாயின் மூலமாகத் தண்ணீரைச் செலுத்து கிறார்கள். இந்தத் தண்ணீர் உப்புப் பாறைகளில் மோதி உப்பைக் கரைத்து, பூமியின் அடியில் உப்புக் கிணற்றை உண்டாக்கி விடுகிறது. உப்புக் கரைந்த நீர் சுத்த நீரை விடக் கனமானது. ஆகவே அடியில் தங்கிவிடும். இந்த உப்புக் கரைந்த நீரை அழுத்தும் சக்தியினால் நடுக்குழாய் மூலம் மேலே கொண்டு வரு கிறார்கள். பிறகு கடல் நீரிலிருந்து உப்புத் தயாரிப்பதுபோல அந்த நீரிலிருந்து உப்பு தயாரிக்கிறார்கள்.

நம் நாட்டில் வடமேற்கு மாகாணத் தில் உப்பு வயல்களும் சிந்துவுக்கும் ஜீலத் துக்கும் இடையே உப்புக் கனிகளும்இருக் கின்றன. இங்கிருந்து ஆண்டுதோறும் ஐம்பதினாயிரம் டன் உப்பு எடுக்கப்படு கிறது. 1948ம் வருஷத்துக் கணக்கெடுப்பின் படி நம் இந்தியாவின் மொத்த உப்புத் தயாரிப்பு 22,64,536 டன்கள்.

1670ம் வருஷத்தில் வில்லியம் மார்பரி என்ற ஆங்கிலேயர் நிலக்கரி கிடைக்குமா என்று பார்க்க நார்த்விச் அருகே பூமி யைக் குடைந்தார். ஆனால் அவர் கண்டு பிடித்ததோ உப்புப்பாறைப் படிவங்களை. அவர் இங்கிலாந்தில் உப்புச் சுரங்கத் தொழிலுக்குஅடிகோலினார். நிலக்கரியை எதிர்பார்த்தார். ஆனால் உப்புச்சுரங்கம் அவர் பண்ணையிலே பணத்தைக் குவித் தது. இதைத் தொடர்ந்து ஆங்கிள்ஸி, மிடில்ஸ்பரோ, பிரிஸ்டல்வாஷ் ஆகிய இடங்களிலும் உப்புக் கனிகள் கண்டு பிடிக்கப்பட்டுப் பிரபலமடைந்தன. வின்ஸ்போர்டு சுரங்கத்திலிருந்து கிடைக் கும் உப்பு மட்டுமே பிரிட்டனின் உப்புத் தேவையைப் பூர்த்தி செய்து விடுகிறது.

உலகத்தின் மொத்த உப்புத் தேவை யில் பத்தில் ஒரு பாகமான 20,080,000 டன்களை பிரிட்டன் தயாரிக்கிறது. பிரிட்டனின் பூமிக்கடியில் உள்ள உப்புப் படிவங்கள் எடுக்க எடுக்கக் குறையாததாக இருக்கிறது. அப்படி அது வற்றிப் போனாலும் கூடக் கடல் நீர் இருக்கவே இருக்கிறது.

ஐரோப்பாவிலேயே மிகப் பிரபலமானவை ஆஸ்திரியா நாட்டிலுள்ள கார்பதியன் உப்புச் சுரங்கங்கள்தான். பூமி மட்டத்துக்குக் கீழே முப்பது சதுர மைல் பரப்பில் இந்த உப்புச் சுரங்கங்களில் ஒரு நகரமே உருவாகியிருக்கிறது. வீதிகள், வீடுகள், கடைகள், பிரும்மாண்டமான தூண்கள் எல்லாம் உப்பு மலைகளைக் குடைந்து ஆக்கியவை. உலகிலேயே மிகப் பெரிய உப்பு மலைச் சுரங்கம் போலந்து நாட்டிலுள்ள வெலிஸ்கா என்ற இடத்தில் இருக்கிறது.

## உப்பின் உபயோகம்

மனிதன் உயிர் வாழ உணவு அவசியம். அந்த உணவை ருசித்துச் சாப்பிட வேண்டுமானாலும் அதில் உப்புக் கலந்திருக்க வேண்டும். 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்ற பழமொழி ஒன்றே உப்பின் உயர்வையும் உபயோகத்தையும் எடுத்துக் காட்டப் போதுமானது.

உயிரினங்கள் உப்பில்லா விட்டால் என்ன கதியை அடையும் என்று ஆராயப் புகுந்தார்கள் விஞ்ஞானிகள். வெள்ளெலி, முயல் போன்ற பிராணிகளுக்கு உப்புக் கலவாத உணவைக் கொடுத்து வளர்த்தார்கள். ஆராய்ச்சியின் முடிவில் முயல்களும் வெள்ளெலிகளும் நோய் வாய்ப்பட்டு இறந்தன. எனவே உயிரினங்களுக்கு உப்புக்களும் அத்தியாவசியமானவை என்று முடிவு கட்டினார்கள்.

அப்படியானால் உப்பென்ற பொருளைக் கண்டறிவதற்கு முன் ஆதி மனிதன் எப்படி உயிர் வாழ்ந்தான் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஆதிமனிதன் சமைக்காத இறைச்சிகளையும், பச்சைக் காய்கனி கிழங்குகளையும் தின்று உயிர் வாழ்ந்தான். பச்சைப் பாலைக் குடித்தான். பச்சை உணவில் உப்பு உண்டு என்பது இன்றைய ஆராய்ச்சியின் மூலம் நாம் அறிந்து கொண்டிருக்கிறோம். இந்தச் சமைக்காத பச்சை உணவிலிருக்கும் உப்பு ஆதிமனிதனின் உயிரைக் காப்பாற்றி வளர்த்தது. இன்றுங்கூட நகரத்தை விட்டு நாகரிகத்திலிருந்து ஒதுங்கிக் காட்டிலும், மலையிலும் வாழும் மனிதர்களும், பாலைவனங்களில் வாழும் நாடோடிகளும் காய்கறிகளையும் இறைச்சியையும் பச்சையாகவே புசிப்பதினால்தான் உயிர் வாழ்ந்திருக்க முடிகிறது.

உப்பு நீரில் வாரம் ஒரு முறை நீராடுவதால் உடல் நலக் குறைவு, தீராத வியாதிகள், நரம்புத் தளர்ச்சி, கருகருப்பில்லாத் தன்மை முதலியவை நீங்கிவிடும் என்று வைத்திய சாஸ்திரம் கூறுகிறது.

உப்பளங்களில் வேலை செய்வோருக்கு ஜலதோஷம், கீல் வாயு, நரம்புத் தளர்ச்சி முதலிய வியாதிகள் வருவதில்லை.

உப்பு என்றதுமே சமையலுக்குப் பயன்படும் ஒரு பண்டம் என்று மட்டும்தான் நமக்கெல்லாம் தெரியும். ஆனால் 1,400 வகைகளில் உப்பு உலகத்தின் பல்வேறு தொழில்களுக்கும் பயன்படுகிறது என்ற உண்மை உங்களுக்குத் திகைப்பை உண்டாக்குகிறது இல்லையா? இறைச்சியைப் பக்குவம் செய்து டின்களில் அடைப்பதற்கு உப்பு அத்தியாவசியமானது. மீன்களைப் பதனம் செய்ய உப்பைப் பயன்படுத்துவது நமக்கெல்லாம் தெரியுமே. ரஸாயனப் பொருள்களின் உற்பத்தியில் உப்பு ஒரு முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. தோல் பதனிடும் தொழிலுக்கு உப்பு ஒரு வரப்பிரசாதம். பால் பண்ணைத் தொழிலில் வெண்ணெய் பாலடைக் கட்டி முதலியவைகளை உப்பில்லாமல் தயாரிக்க முடியாது. ரொட்டி, பன், கேக் முதலியவற்றுக்கெல்லாம் உப்பு இல்லாமல் நடக்குமா? கமகமவென்று மணம் வீசும் சோப்பைக் குபுகுபுவென்று நுரை பொங்கக் குழைத்துக் குளிக்கிறீர்களே, அது இந்த உப்பில்லா விட்டால் உருப் பெறுமா? விதம் விதமான வண்ண ஆடைகளை வாங்கி அணிந்து கொண்டு கண்ணாடியில் பார்த்துப் பெருமிதம் அடைகிறீர்களே, அந்த ஆலைத்தொழிலில் சாயத்தின் தரங்களை உருவாக்கித் தருவதும் இந்த உப்புத்தான்.

சோக்கள், கண்ணாடிச் சாமான்கள், மருந்துப் புட்டிகள், மூக்குக் கண்ணாடி, முகம் பார்க்கும் கண்ணாடி, ஜன்னல் கண்ணாடி - இப்படி இந்த நவீன உலகில் கண்ணாடிச் சாமான்களுக்குள்ள மதிப்பு உங்களுக்குத் தெரியும். இந்தக் கண்ணாடித் தொழிலுக்குக் கண் போன்றது ஓரணுவுக்கு ஒரு படி கிடைக்கிற இந்தச் சாதாரண உப்புத்தான்.

விவசாயத் தொழிலில் உப்பின் உபயோகத்தைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தால் இங்கு இடம் போதாது. வாணம், வெடி மருந்துகள், மத்தாப்பு முதலியவற்றுக்கும் உப்புச் சேர்த்தாக வேண்டும்.

இப்படி ரஸாயன உலகிலும் தொழில் துறைகளிலும் வாழ்க்கையிலும் உப்பு எண்ணற்ற விதங்களில் பயன்படும் ஒரு மந்திரப் பொருளாகத் திகழ்கிறது.

பாலக்காடு, வயநாடு, நீலாம்பூர், கோழிக்கோடு ஆகிய பகுதிகளில் வாழும் ஆதிவாசிகள் தேள் கொட்டிய இடத்தில் உப்பு விலயனத்தைத் தோய்த்துக் கடுப்பையும் வலியையும் நீக்க உபயோகிக்கின்றனர்.

மழைக் காலங்களில் காட்டில் பிரயாணம் செய்யும் மலைவாசிகள் இரத்தத்தை உறிஞ்சும் அட்டைகள் உடலில் ஒட்டிக் கொண்டால் அதன் பிடியிலிருந்து விடுபடத் தயாராக மூங்கில் குழாயில் வைத்திருக்கும் உப்பு விலயனத்தை அதன் மீது ஊற்றுகிறார்கள். உடனே அட்டை சுருண்டு விழுந்து விடுகிறது.

குளிர் தேசங்களில் பாதைகளில் மூடிக் கிடக்கும் பனிக்கட்டிப் பாறைகளை அப்புறப்படுத்த உப்பைத் தூவுகிறார்கள். சிறிது நேரத்தில் பனிப் பாறைகள் உருகி நீராக ஓடிவிடுகின்றன.

### பாட்டுக்கு அர்த்தம் இப்படியும் இருக்கலாம்



அம்பா, நீ இரங்காவிடில்.....



வேலவனே உனைத் தேடி....



எப்போ வருவாரோ..எந்தன் கலிதீர..



வழி மறைத்திருக்குதே....

உப்பைப் பற்பொடியாக உபயோகித்தால் பல் சுத்தமாக இருக்கும். தந்த நோய்கள் அணுகாது. வாயில் நாற்றம் இருக்காது. தினம் படுக்கைக்குப் போகு முன் உப்பு நீரால் வாயைக் கொப்பளிக்கும் பழக்கம் மிகுந்த ஆரோக்கியமானது. அதனால் பல் வியாதிகள் வராது என்று தமிழ் வைத்திய நூல்கள் கூறுகின்றன.

உஷ்ணப் பிரதேசத்தில் வாழுபவர்களுக்குக் கோடையில் அதிக வறட்சியையும் களைப்பையும் போக்குவதற்குக் குடிக்கும் தண்ணீரோடு சிறிது உப்பைச் சேர்த்துச் சாப்பிடுவது மிகவும் நல்லது என்றும் வைத்திய நூல்கள் சொல்லுகின்றன.

ஹாலந்து, ஸ்வீடன் தேசங்களில் கொடிய குற்றம் செய்து தண்டனை அடைந்த கைதிகளுக்கு உப்பில்லா உணவைக் கொடுக்கும் பழக்கம் இருந்திருக்கிறது.



"டேய் மணி, உன்னைத் தலை தீபாவளிக்கு வரச்சொல்லி உன் மாமனார் லெட்டர் போட்டிருக்காரா?"
"ஓ. போட்டிருக்காரே! 'நாலு நாட்கள் முன்னாடியே வந்து தீபாவளி பக்ஷணங்களையும் செய்து கொடுத்து விடவும்'னு எழுதியிருக்கார்!"

தொண்டையில் புண் ஏற்பட்டு உணவை விழுங்கமுடியாத நிலையில் உப்பு நீரால் தொண்டை வரை செல்லும்படி வாயைக் கொப்பளிப்பதால் குணமாகிறது. கண்நோய், பல்வலி, மூக்குப் புண் முதலியவற்றுக்கும் உப்பு நீர் மருந்தாகப் பயன்படுகிறது. குழந்தைகளுக்கு ஏற்படும் சிறு காயங்களை உப்பு நீரால் கழுவி மருந்திடுவது நல்லது. கைக் குழந்தைகளின் துணிகளை உப்பு நீரில் ஊற வைத்துத் துவைப்பது நல்லது.

வீட்டைக் கழுவ வாரத்துக்கு ஒரு முறை உப்பு நீரைப் பயன்படுத்தினால் எறும்பு பூச்சிகள் வீட்டில் இருக்காது. சொறிசிரங்கு உள்ளவர்கள் கடல் நீரில் தொடர்ந்து சில நாட்கள் கழுவி வந்தார்களானால் அவை இருந்த இடம் தெரியாமல் பட்டுப்போகும்.

ஊறுகாய் போன்ற உணவுப் பொருள்களைக் கெடாமல் பல நாட்கள் வைத்திருக்க உப்பிட்டு வைக்கும் பழக்கம் நம்மிடையே இருந்து வருகிறது.

இனிமையான ருசியை உடைய இளநீரைத் தரும் தென்னை மரத்தைப் பயிர் செய்ய முதலில் குழியில் உப்பைக் கொட்டித்தான் பிறகு அதில் தென்னங் கன்றை வைப்பார்கள். கடற்கரையோரத்திலே தென்னை அதிகமாகவும் செழிப்பாகவும் வளருவது இதனால்தான்.

மனிதனுக்குமட்டுமல்லாமல் மிருகங்களும் உப்பில்நாட்டம் உடையவைதான். ஆடு மாடுகளுக்குக் கழுநீரில் உப்பைக் கரைத்துக் கொடுப்பதை இன்றும் காணலாம். கழுநீரை ருசியுடன் அவை குடிக்கும். பாலும் ருசியாக இருக்கும், அதிகமாகவும் சுரக்கும் என்பதே இப்படிச் செய்வதன் நோக்கம்.

கடந்த இருபது ஆண்டுகளாகத் தென்னாட்டின் ஆதிவாசிகளைப்பற்றி ஆராய்ச்சி நடத்திவரும் நான் அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பை அடைந்திருக்கிறேன். அவர்கள் பல சந்தர்ப்பங்களில் குலதெய்வங்களுக்குப் படையல் இடும் போது காட்டு வாழை இலையில் முதலில் உப்பை வைத்துத்தான் மற்றப் பொருள்களை வைப்பதைக் கண்டிருக்கிறேன்.

நீலகிரியில் வாழும் மலைவாசிகள் 'மாடுகளுக்கு உப்புத் தினம்' என்று ஒரு நாளைக் கொண்டாடுகிறார்கள். அன்று எல்லா மாடுகளுக்கும் பிடிப்பிடியாக வெறும் உப்பை அள்ளி வாயில் கொடுக்கின்றனர். இந்தப் பழக்கம் இந்தியாவில் வேறெங்குமில்லை. ஆப்பிரிக்காவில் வாழும் சில ஜாதியார்களிடையே திருமணத்தின் போது பிள்ளை வீட்டார் சீர்வரிசைகளில் மூட்டைக் கணக்கில் உப்பு வந்திருக்கிறதா என்றுதான் கவனிப்பார்களாம்.

அராபியில் சில வகுப்பார் நாற்பது நாட்கள் உபவாசமிருப்பதற்காக இந்தியாவில் சென்னைக்கு அருகில் கோவளத்திலிருக்கும் முகம்மதியர்களுடைய புண்ணிய இடத்துக்கு இன்றும் வருகிறார்கள். அந்த விரதத்தைக் காலை 3-30 மணிக்குத் தொடங்கி மாலை 6-மணிக்கு முடிப்பார்கள். உப்புக் கலந்த நீரின்மூலம் சடங்குகள் செய்கின்றனர். இதற்கு அராபிய மொழியில் 'சில்லா' விரதம் என்று பெயர்.

சீனாவில் சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, 'மன்னன், மந்திரிக்கும் குடி மக்களுக்கும் உப்புக் கொடுக்க வேண்டும்' என்று ஒரு சட்டம் இருந்ததாம். முதன் முதலில் உப்புக்கு வரி விட்ட நாட்டினர் சீனர்கள்தான்.

சீன நாட்டுக்கு நம் பாரதத்திலிருந்து கூட உப்பு ஏற்றுமதியாகிப் போயிருக்கிறது என்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் கோவளம் துறைமுகமாக இருந்திருக்க வேண்டும். அங்கு கடற்கரையில் இன்றும் மணலில் புதையுண்டு கிடக்கும் பெரிய நங்கூரத்தின் ஒரு பகுதியைக் காணலாம். உப்பு ஏற்றுமதி செய்துகொண்டு போகச் சீன நாடுகளிலிருந்து கப்பல்கள் வந்து நங்கூரமிட்டுத் தங்கி இருக்க வேண்டுமென்று தெரிகிறது. மற்றும் இங்குள்ள ஒருவர் வீட்டில் இரண்டு மூன்று பெரிய ஜாடிகள் இருக்கின்றன. இது சீனர்கள் தங்கள் கப்பலில் குடிநீர் நிரப்பி வைத்துக்கொள்ளும் ஜாடிகளாம். இதன்மீது 'டிராகன்' சித்திரம் பொறிக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து சீனக் கப்பல்கள் இந்திய உப்பை ஏற்றிச் செல்ல பாரதத்துக்கு வந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க இடமிருக்கிறது.

பண்டைக் காலத்தில் எகிப்து நாட்டில் இறந்தவர்களின் உடலை, அவர்களுடைய உறவினர்கள் வருவதற்கு இரண்டொரு நாட்கள் தாமதமானாலும் கடல் நீரில் ஊற வைத்திருப்பார்களாம். உடலைப் புதைக்கும்போது பணத்துடன் உப்பையும் கொட்டி அடக்கம் செய்ததாக எகிப்தியச் சரித்திரம் கூறுகிறது. இந்தப் பழக்கம் நம் நாட்டில்கூட இருந்து வருகிறது.

திபேத்திய லாசா நக வாசிகள் இறந்தவரின் வயிறைக் கிழித்துக் குடல் முதலியவற்றை நீக்கி விட்டுச் சுத்தம் செய்து அதில் உப்பைக் கொட்டி ஒன்று முதல் இரண்டாண்டுகள் வரையில் தங்கள் வீட்டிலேயே பிணத்தை வைத்திருப்பார்களாம்.

நீலகிரியில் வாழும் தோதுவர் கோத்தர்களிடையேகூட இறந்தவர்களை இம்மாதிரியான முறையில் ஒரு வாரம் வரை வைத்திருக்கும் பழக்கம் இருந்து வருகிறது. ஏனென்றால் காடு மலைகளைக் கடந்து உறவினர்கள் வரும்வரை இறந்த உடல் அழுகித் துர்நாற்றம் எடுக்காதிருக்க உப்புப் பதன முறையைப் பின்பற்றுகிறார்கள்.

உலகிலேயே மிகப் பெரிய உப்புச் சுரங்கமான போலந்து நாட்டிலுள்ள வெலிஸ்கா பூமி மட்டத்துக்குக் கீழே பல ஆயிரம் அடிகள் ஆழத்தில் இருக்கிறது. பாதாளத்திலேயே ஓர் அற்புதமான சுரங்க நகரத்தையே சிருஷ்டித்திருக்கிறார்கள். இந்தச் சுரங்கத்தின் சுற்றளவு அறுபத்தைந்து மைல்கள். பதிமூன்றாம் நூற்றாண்டிலிருந்து இந்தச் சுரங்கம் வற்றாமல் உப்பை வழங்கிக் கொண்டிருக்கிறது. பூமி மட்டத்துக்குப் பல ஆயிரம் அடிகளுக்குக் கீழே இந்தச் சுரங்கத்தில் பல நகரங்களையே சிருஷ்டித்துள்ளார்கள்.

இப்படி யெல்லாம் புகழ் படைத்த உப்புக்கு, ஏழையின் உணவான கூழுக்கு ருசியைக் கொடுக்கும் உப்புக்கு நம்மை அடிமைப்படுத்தி இருந்த ஆங்கில அரசாங்கம் வரி விதித்ததை எதிர்த்துக் காந்தியடிகள் 'தண்டி' என்ற இடத்துக்குச் சென்று தடையை மீறி உப்பெடுத்ததை நம்மால் மறந்துவிட முடியுமா?

காந்தி வழிவந்த ராஜாஜியும் தென்னாட்டில் உப்பு சத்தியாக்கிரகத்துக்குத் தலைமை தாங்கித் தொண்டர்களுடன் வேதாரண்யம் சென்று உப்பெடுத்துத் தமிழ் நாட்டின் தேசிய உணர்ச்சியைத் தூண்டிய அந்த நிகழ்ச்சியைத்தான் மறக்க முடியுமா?



### "வேதாந்தம்"

"சீச்சீ! இந்த உலகமே அநித்யம்டா!"

"ஏண்டா பாவி! தீபாவளி அட்வான்ஸெல்லாம் அதுக்குள்ளேயா செலவழிச்சுட்டே!"



### புலிக்குப் பிறந்தது

"அந்தப் பையன் வெடிச்சதெல்லாம் புஸ்வாணமாகப் போறது — ஆனாலும் வாயாலே டபார் டபாருன்னு கத்தறானே!"

"இரவல் குரல் இந்திராதேவியின் பிள்ளையாச்சே அவன்!"

# ஹாஸ்ய



### "ஆள்-ஓடு-கடன்"

மனைவி: தீபாவளிக்கு எனக்கு ஒரு பட்டுப் புடவை எடுக்கப்போறேன்-குழந்தைகளுக்கு உசத்திச் சட்டை எடுக்கப் போறேன்! - நீங்க என்ன எடுக்கப் போறேள்?

கணவன்: இந்த வீட்டிலிருந்து ஓட்டம் எடுக்கப் போறேன்!



### "தள்ளுபடி"

ஆள்: (ஓட்டை மோட்டார் வண்டிக்காரரிடம்) வாடிக்கையா நான் உங்க வண்டியைத் தள்ளறவனாச்சுங்களே! நமக்குத் தீபாவளி எனாம் கிடையாதுங்களா?

# மருந்து



### "பின்னுரை"

"நம்ப டாக்டர் தன் மாப்பிள்ளைக்கு தீபாவளிக்கு என்ன கொடுத்தார்?"

"தீபாவளி முடிஞ்சு போறபோது அஜீர்ணத்துக்கு நாலு மாத்திரை கொடுத்தாராம்!"



### "சிலவிழிப்பு"

மனைவி: தீபாவளின்னு காலம்பர நான் ரொம்பச் சீக்கிரம் முழிச்சுண்டுடுவேன்!

கணவன்: எனக்கு அந்தக் கஷ்டமே இல்லே! செலவு ஆன கவலையிலே எனக்கு முதல்லே தூக்கமே வருவதில்லே!

எஸ். விஜயலக்ஷ்மி



### "மல்யுத்தம்"

அவன்: உங்கப்பா வெறும் மல் வேஷ்டி வாங்கித் தந்ததற்காக அவரோட சண்டை போடப்போறேன்!

அவள்: அவசியம் போடுங்க! பத்து வருஷமா தவறாம தீபாவளிக்கு வர மாப்பிள்ளையை இப்படி அவமானப் படுத்தலாமான்னு கேளுங்க!



### "கல்தடுக்கி"

"இதோ பாரு, நீ பண்ணின மைசூர் பாகைக் கண்ட இடத்திலே வைக்காதே!"

"ஏன்?"

"எங்கேயானும் மாப்பிள்ளை அதுலே தடுக்கி விழுந்து அவர் கைகால் முறியப் போகிறது!"





# மாமனார் வேட்டை

காட்சி 1

[பஞ்சாபகேசன் வீட்டுக்கூடம். 'பெண் பார்க்கும்' படலம் கழிந்து டிபன் சம்பிரதாயமும் முடிந்த கட்டம். கோகிலாவைப் பார்க்க வந்த ராகவனும் அவன் தோழன் நடேசனும் நாற்காலிகளில் அமர்ந்திருக்கிறார்கள். எதிர்த்தாற்போல் கோகிலாவின் தந்தை பஞ்சாபகேசன் உட்கார்ந்திருக்கிறார்.]

பஞ்சாபகேசன்: ஹி ஹி! எங்க குடும்பத்திலேயே பாருங்கோ! பெண் குழந்தைகளுக்கும் பாட்டுன்னா உயிர்!

ராகவன் (மெதுவாக): அதுதான் கேட்கிறவர்கள் உயிர் போனாலும் பரவாயில்லை என்று 'கஜன ஜீவனு' கீர்த்தனையைச் சொந்தி மாதிரி ஜெறிஞ்சுவாக்கும்?

பஞ்சாபகேசன் (காதில் சரியாகப் போட்டுக் கொள்ளாமல்): ஆமா! 'கஜன ஜீவனு' அவளுடைய 'பேவரைட்' கீர்த்தனை.

நடேசன் (சமாளிக்கும் வகையில்): ஆமாம்! ஆமாம்! உள்ளத்துக்குக் கிளுகிளுப்பையும் சொகுசையும் ஏற்படுத்தியது என்கிறேன் சார்! ராகவன் பெரிய சங்கீத 'கிரிட்டிக்'காக்கும்.

ராகவன் (நடேசனை முறைத்துப் பார்த்து விட்டுப் பஞ்சாபகேசன் பக்கம் திரும்பி): ஏன் சார்! நீங்க ரொம்ப நாட்களாகக் குடுமி வைத்துக் கொண்டிருக்கிறீர்களோ?

பஞ்சாப: ரொம்ப நாட்களென்ன? பிறந்ததிலிருந்தே குடுமிதான். அது பரம்பரை வழக்கம்.

ராகவன்: குடுமியை மாற்றிக் கிராப் வைத்துக் கொள்ளும் உத்தேசமே இருக்காது இல்லையா?

பஞ்சாப: சரியாகப் போச்சு! அப்புறம் என் தாத்தா என்னைப் பிரியைக் கட்டி இழுத்து விடுவார்.

ராகவன்: வாட்? உங்க தாத்தா இன்னும் உங்களை அடக்கி ஆள்கிறாரா?

பஞ்சாப: என் அப்பா படும் பாட்டில் நான் எந்த மட்டு? நான் கிராப் வெட்டிண்டு வந்தால் அவர் என் தலையையே வெட்டி விடுவார். வயசு தொண்ணூற்றி ஏழு ஆகிறது! ஆனால் மனுஷன் இன்றைக்கும் துர்வாசர்! ஹரம்! அந்தக் காலத்து மனிதர்!

ராகவன்: உடம்பு திடமாக இருக்கிறாரா?

பஞ்சாப: இன்னும் ஐம்பது வருஷங்கள் இருப்பார் சார் அவர்! கிராமத்திலே காலையிலே வாய்க்காலிலே போய் ஸ்நானம் செய்து விட்டு வரும் முதல் நபர் அவர்தான்.

நடேசன் (பஞ்சாபகேசனிடம்): உங்களைக் கூப்பிடறாப்பலே இருக்கு!

பஞ்சாப: இதோ ஒரு நிமிஷத்திலே அவரை என்னன்னு கேட்டுட்டு வந்து விடுகிறேன்.

[உள்ளே போகிறார்]

நடேசன் (கடுமையாக): ஏன்டா, ராகவா! இங்கே பெண் பார்க்க வந்தியா? இல்லே குடுமி ஆராய்ச்சி பண்ண வந்தியா? உன்னை ஒரு 'நாஸ்' பேர்வழின்னு நினைக்கப் போறான் அந்த மனுஷன். ஒழுங்காகப் 'பெண் பிடித்திருக்கிறது' என்று சொல்லி விட்டுக் கிளம்பு! பஸ்டு கிளாஸ் இடம். ஆசாமி பசை உள்ளவன். பெண்ணும் படித்த நாகரிக யுவதி.

ராகவன்: இடியட்! என்னை முழுப் பைத்தியம்னு அவர் நினைச்சண்டாலும் எனக்கு அக்கறை யில்லை. பெண் நன்றாக இருந்தால் மாத்திரம் போதுமா?



நடேசன்: இந்த வீடு லட்சணமாக அழகாக இருக்கிறது. கொல்லைப் பக்கம் கட்டியிருக்கும் எருமைக் கன்றுக் குட்டி கூட அழகாக லட்சணமாக இருக்கிறது. நான் பின் பக்கம் போய் வந்த போது பார்த்தேன். அப்புறம்...

ராகவன்: நிறுத்துடா! மாமனார் என்று சொல்லிக் கொள்ளும் பிரகிருதியும் பார்வைக்கு 'டிப்டாப்'பாக இருக்கணும்! அது என் பிரின்ஸிபல்! 'இவர் என் மாமனார்' என்று சொல்லிக்கொள்ள நான் ஒருநாளும் கூசக் கூடாது. இந்த ஹைதர் காலப் பேர்வழியை, கட்டுக் குடுமி ஆசாமியை...

நடேசன்: அட வேண்டாம்! நீயும் குடுமி வைத்துக் கொண்டு வைரக் கடுக்கனை மாட்டிக் கொள்ளேன்! அப்போ சரியாகப் போகுமல்லவா? ஒரே டைப்!

ராகவன்: அட பாவி! நீ மாப்பிள்ளைத் தோழன் இல்லே! மாப்பிள்ளைத் துரோகி. இவர் வீட்டு அற்ப டிபனை இப்படி உன்னை அவர் பக்கம் சாய்த்தால் ஒரு வேளைச் சாப்பாடு உன்னை எப்படி ஆட்டுவிக்குமோ! நீயே கத்தியை எடுத்துக் கொண்டு எனக்கு ஒரு குடுமி வைத்தாலும் வைத்து விடுவாய் பாவி! வெளியே வா நீ! உதைக்கிறேன்.

நடேசன்: அப்படின்னா நீ பெண் பார்க்க வரவில்லே. மாமனார் வேட்டைக்கு வந்திருக்கிறாய்.

ராகவன்: வைத்துக் கொள்ளேன்! உஷ்! அவர் வருகிறார்!

[பஞ்சாபகேசன் வந்து உட்காருகிறார்]

பஞ்சாப: மன்னிக்கணும்! தாமதமாகி விட்டது. எங்க அப்பா கிராமத்திலிருந்து நாளை வருவதாகச் சொல்லியனுப்பியிருக்கிறாராம். அதைச் சொல்லத்தான் அவள் கூப்பிட்டாள்.

ராகவன்: உங்க தாத்தா வரலியோ?

பஞ்சாப: அவர் கல்யாணத்துக்கு இரண்டு நாட்கள் முன்னாலே வருவார். இந்த மாசத்திலேயே இரண்டு முகூர்த்த நாட்கள் இருக்கு! உங்களுக்கு எது சௌகர்யமாக இருக்குமோ...?

ராகவன் (திடுக்கிட்டு): யாருக்கு சார் கல்யாணம்?

பஞ்சாப: என்ன சார், தமாஷ் பண்ணுகிறீர்கள்? உங்களுக்குத்தான்.

ராகவன்: ஆமாம்! ஆமாம்! நான் அப்பாவுக்குக் கடுதாசி எழுதுகிறேன். அவர் உங்களுக்கு....

பஞ்சாப: அப்படின்னா உங்களுக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லே!

ராகவன்: ஆட்சேபணை நிறைய இருக்கு!

நடேசன் (குறுக்கிட்டு): அவன் தமாஷ் பண்றான் சார். டிபனுக்கு வைத்த பஜ்ஜியில் ஒரு உப்புக்கல் குறைவாம்! அதற்கு ஈடு செய்யக் கல்யாணத்தின்போது பத்து மூட்டை உப்பு வாங்கித்தர முடியுமா



கோமதி சுவாமிநாதன்



என்றுஹாஸ்யம் பண்ணறுன். அவனுக்குச் சம்மதத்தை நேரடியாகச் சொல்ல வெட்கமாக இருக்காதா? பெரியவர் மூலமாகவே உங்களுக்குத் தகவல் வரும்' ..ராகவா!...கிளம்புவோமா? நேரமாகிறது. (எழுந்திருக்கிறுன்)

பஞ்சாப: அதுவும் சரிதான்! நான் இதோ போய் வண்டி கொண்டு வரச் சொல்கிறேன். (போகிறர்)

நடேசன்: ஏண்டா, மடையா! 'உம் குடுமிதான் என் பிரதான ஆக்ஷேபணை' என்று சொல்லித் தொலைத்துவிடுவாயோ என்று நடுங்கித்தான் நான் குறுக்கே விழுந்தேன். நீ இல்லேன்னு அவருக்கு இன்னொரு மகாமேதை மாப்பிள்ளேயாக வந்து சேருவான்! அதற்காக அவர் தலையை மாற்றிக் கொள்வாரா என்ன?

ராகவன்: அம்மாடி! எனக்கு வேண்டாம்டா! அந்தப் பொண்ணோட கொள்ளுத் தாத்தா — அதுதான்டா அந்தத் துர்வாசர்! திடீர்னு வந்து ''ஏய்! கொள்ளு மாப்பிள்ளே! அப்பனக்குடுமி வைத்துக்கொண்டு அத்தனை பேரையும் நமஸ்காரம் பண்ணு!'' என்பார்! இதோ பாரு! எனக்குப் பணக்கார மாமனாராக இருந்தால் மாத்திரம் போதாது. பாஷன் மாமனாராகவும் இருக்க வேண்டும். பெண்ணைப் பத்தி நான் அதிகமாக அலட்டிக்கொள்ள வில்லே.

[கிளம்புகிறர்கள்]

காட்சி 2

[ராகவனின் அறை. ராகவன் பத்திரிகை பார்த்துக் கொண்டிருக்கிறுன். நடேசன் சற்றுத் தள்ளி உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறுன்.]

ராகவன் (பத்திரிகையை ஒதுக்கிவிட்டு): குடி கெட்டது போ!...

நடேசன் (எழுதுவதை நிறுத்தி): என்னடா? மறுபடியும் ஏதாவது பாங்கு கதவை இழுத்து மூடிட்டதா?

ராக: அடேயப்பா! பெரிய பிரபு! நாலு லட்ச ரூபாயை அலட்சியமாக பாங்கிலே போட்டு வச்ச நபர் மாதிரி அல்லவா நீ திடுக்கிட்டுப் போயிருக்கிறுய்!



நடேசன்: நமக்கு எதற்கப்பா அந்த வம்பு! கையிலிருக்கும் ரூபாயை ஹோட்டல் கிருஷ்ணனந்த பவனில் போடுவோம். அவன் ஹோட்டல் முழுகாது. அவன் கொடுக்கிற தண்ணிக் காப்பியிலே நாம் முழுகுவோம்! விஷயத்தைச் சொல்லு!

ராகவன்: யாரோ ஒருத்தி ஒரே பிரசவத்திலே நாலு குழந்தைகளைப் பெற்ருளாம்! அவள் குடித்தனம் எப்படிடா உருப்படும்!

நடேசன்: ஏண்டா! நீ கட்டைட்டும் கட்டை பிரம்மச்சாரிக் கட்டை! உனக்கேண்டா இந்த அனுபவமெல்லாம்?

ராகவன்: ஏண்டா! நான் இப்படியே இருந்து விடுவேன்னு நினைக்கிறுயோ? எனக்குக் கல்யாணம் இல்லாணம் ஆகாதா? எனக்குன்னு எவளாவது பிறந்திருப்பாள்.

நடேசன்: எனக்குத் தோணலே! உனக்குன்னு ஒருத்தி பிறந்திருக்கலாம். ஆனால் அவளை உன்னிடம் ஒப்படைக்க ஒரு 'மாமனர்' பிரகிருதி பிறந்திருப்பானு என்பது சந்தேகம்தான்! சர்க்காரிலே டெண்டர்கள் கோருவது மாதிரி நீதான் ஏதோ 'ஸ்பெஸிபிகேஷன்' 'ஸ்டாண்டர்டு' எல்லாம் குறிப்பிடுகிறுயே, ஒரு மாமனர் பொறுக்க!

ராகவன்: இது என் சொந்த விஷயம். பிறர் கேலியை நான் விரும்பவில்லே.

நடேசன்: டேய்! பேசாமல் 'வான்டட்' காலத்திலே ஒரு விளம்பரம் போடேன். 'கம்பீரமாக, நாடக ராஜ பார்ட் தோற்றத்தில், தாராள மனப்பான்மையும் தற்கால மனேபாவமும் உள்ள ஒரு தனவந்த மாமனர் தேவை. குடுமி கோத்திரக்காரர்கள் விண்ணப்பம் செய்ய வேண்டாம்! பெண்ணின் அழகு, தகுதிப் பிரச்னைகள் முக்கியமானதல்ல. படங்களுடன் எழுதவும் (பெண் புகைப் படமல்ல, மாமனர் ஸ்தானத்தை ஏற்பவரின் படம் என்பது நினைவிருக்கட்டும்.) என்று விளம்பரம் போட்டால் உனக்குத் தேவையான ஒரு ஸ்டாண்டர்டு மாமனர் கிடைக்காமலா இருக்கப் போகிறர்?

ராகவன் (கோபத்துடன் எழுந்து): நடேசா! உன்னைப் போன்ற இலட்சியமே இல்லாத ஆட்டு மந்தையிலே ஒரு ஆடாக இருக்க நான் விரும்பல்லே! அறிவாளிகளுக்கு வாழ்க்கையிலே எப்போதும் ஒரு லட்சியம் இருக்கும்.

நடேசன்: ஆஹா! ஆக்ஷேபணை என்ன? நீ என்ன சாதாரண அறிவாளியா? மகா மேதையான அறிவாளி! உனக்கு மனைவி அலட்சியம். மாமனர் லட்சியம்! அப்படியே ஒரு காலத்திலே உனக்குக் கல்யாணம் நடக்கும் என்று வைத்துக் கொண்டால்கூட அப்போது சம்பிரதாயமாக உன் படமும் உன் மனைவி படமும் பத்திரிகைகளில் வராது. 'திருவாளர்...இன்னரும் அவருடைய மாப்பிள்ளே ராகவனும். இவர்கள் உறவு சென்ற மாதம் நாலாம் தேதி நிகழ்ந்தது. வாழ்க, மாமனர் மருமகன்' என்ற குறிப்புடன் வெளியாகும்.

ராகவன்: இடியட்! ரோக்! நீ என் நண்பனுடா? நீ அந்தப் பஞ்சாபகேசன் கிட்டே லஞ்சம் வாங்கின பயல்! பஞ்சாபகேசன் பெண் வேண்டாம் என்று எழுதினது முதலே நீ என்னைக் கேலி செய்ய ஆரம்பித்திருக்கிறுய்.

நடேசன்: பிரதர்! பஞ்சாபகேசனுக்கு நான் லஞ்சம் கொடுப்பேன், உன்னை மாப்பிள்ளேயாகத் தேர்ந்தெடுக்காமல் இருக்க! அத்தனை அழகான பெண்ணுக்கு உன்னைப் போல் அரை லூஸ் மாப்பிள்ளே உதவாதுதான்.

ராகவன்: நானும் பார்க்கப் போகிறேன்டா! சோளக் கொல்லையிலே காக்காய் விரட்ட வைத்திருக்கும் பொம்மை மாதிரி உனக்கு மாமனர் வரப் போகிறன்!

நடேசன்: சோளக்கொல்லே பொம்மை மாதிரி இருந்தாலும் சரி; புது வீடு கட்டுகிறபோது தொங்க விடும் பூசணிக்காய் மாதிரி இருந்தாலும் சரி! உன் கல்யாணத்தின் போது நானும் என் மாமனரும் சேர்ந்து வந்து ஆசிர்வதிக்கிறேம். அநேகமாக நான் என் குழந்தை களைக்கூடக் கூட்டி வருவேன்.

ராகவன்: இந்தக் கணம் முதல் நீ என் பரம விரோதி! என் லட்சியத்தைப் பழிக்கும் பாதகன். நான் உன்னுடன் இந்த அறையில் தங்கியிருக்க விரும்பவில்லே. நான் வேறே அறை பார்த்துக் கொள்கிறேன்.

நடேசன்: பிரதர்! இன்னும் முகமே பார்த்தறியாத மூன்றும் மனுஷனுக்காக நீயும் நானும் விரோதித்துக் கொள்வது முறையில்லே. நீ இந்த அறையிலேயே சௌக்கியமாக எத்தனை நாட்கள்வேண்டு மானுலும் இரு. நான்தான் வேறு அறை பார்த்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறேன். என் காரியாலயத்தை இடம் மாற்றித் தொலைத்து விட்டார்கள். பல இடங்களுக்கு உன் கூடத் தோழனுகவந்து பத்தியும்சொத்தியும் தின்ன முடியாமற் போகுமே என்று



நினைக்கும் போதுதான் வருத்தமாக இருக்கிறது!

[ராகவன் நடேசனை முறைத்துப் பார்த்துக் கொண்டே வெளியில் போகிறான்.]

காட்சி 3

தெரு. ராகவனும், அவனுடைய அறையில் புதிதாக வந்து சேர்ந்திருக்கும் நண்பன் சங்கரனும் சந்தித்துக் கொள்கிறார்கள்.

**சங்கரன்:** அடடே! ஊரிலிருந்து வந்துட்டியா? போன விஷயம் என்ன ஆச்சு?

**ராகவன்:** பிரயாணமெல்லாம் சௌகர்யமாக இருந்தது.

**சங்கரன்:** அது கிடக்கட்டும்! மாமனார் திருப்திகரமா?

**ராகவன்:** சங்கரா! உனக்கும் அந்த நடேசன் பயல் வாசனை அடித்து விட்டதா?

**சங்கரன்:** சே சே! நானு மாசங்கள் கழித்து நேற்றுத்தான் அவனைச் சந்தித்துப் பேசினேன். அவனுக்குக் கூடக் கல்யாணப் பேச்சு நடக்கிறதாம்.

**ராகவன்:** பண்ணிண்டு தொலையட்டும்! யாரும் கையைப் பிடிக்கவில்லை!

**சங்கரன்:** உன் விஷயம் என்ன ஆச்சு?

**ராகவன்:** பிரயோசனமில்லை! அந்த மனுஷன்...

**சங்கரன்:** ஸ்கூட்டர் வாங்கித் தராமலிருக்கச்சாக்குப் போக்குச் சொல்கிறாரோ?

**ராகவன்:** நோ! நோ! காரே வாங்கித் தரேன் என்கிறார்! ஆனால் ஆசாமி நாலடி இரண்டு அங்குலம். நான் ஐந்தடி பதினோரங்குலம். என் பக்கத்திலே நின்றால்...

**சங்கரன்:** பெண் அவ்வளவு குட்டை என்றால் கஷ்டம்தான்!

**ராகவன்:** அட நீ ஒண்ணு! பெண் நோரா இருக்கா! நான் சொல்றது பெண்ணின் அப்பாவை! என் மாமனார் என்று சொல்லிக்கொள்ள...

**சங்கரன்:** அப்படின்னு உனக்கு இன்னும் பழைய வியாதி தீரலை! நடேசன் சொன்னதுசரிதான். நாலு மாதங்களுக்கு முன் வரையுள்ள புள்ளி விவரம் கொடுத்தான். நீ பதினேழு இடத்திலே போய்க் காப்பி டிபன் சாப்பிட்டாயாம்! ஒரு இடத்திலேதான் பெண்ணும் மாமனாரும் சுகமில்லை என்றாயாம்! மீதி பதினாறு இடங்களிலே மாமனார் பிடிக்கவில்லை என்றாயாம்! நான் வந்த பிறகு ஐந்து கேஸ் மொத்தம். இருபத்திரண்டு!

**ராகவன்:** நிறுத்து! உன் யோசனை எனக்குத் தேவையில்லை. எனக்குக் கல்யாணம் அவசியமில்லை.

**சங்கரன்:** மாமனார்தான் அவசியம்! விட்டுத்தள்ளு! உனக்கு ஏதோ கடுதாசி வந்தது. பையிலேயே போட்டுண்டு வந்தேன். இந்தா!

[ஒரு கடிதத்தை எடுத்துக் கொடுக்கிறான்]

**ராகவன்:** (கடிதத்தைப் பார்த்து) அடடே! அப்பாதான் எழுதியிருக்கிறார்.

**சங்கரன்:** இலவச டிபன் காப்பி நிலையம் எதையாவது புதிதாகக் குறிப்பிட்டு எழுதியிருக்கிறாரா?

**ராகவன்:** அதென்னடா அப்படி கரெக்டா சொன்னே? நாளைக்கு மறுநாள் மாலை ஒரு இடத்துக்குப் போய் வரும்படி எழுதியிருக்கிறார். நீதான் மாப்பிள்ளைத் தோழன்.

**சங்கரன்:** இப்போதைக்கு டிபன் தோழன் என்று சொல்லிவை, போதும்! அந்தப் பாவிப்பயல் பெண்ணைப் பெற்றவன் உனக்குப் பிடித்திருக்க வேண்டுமே!

**ராகவன்:** சங்கரா! உனக்குக் கேலியாக இருக்கிறது! இப்படித்தான் போன வருஷம் வேறு ஒரு காரியாலயத்திலே



உத்தியோகம் பார்த்தேன். குப்புசாமின்னு ஓர் ஆபீஸ் நண்பன். ஒருநாள் நட்டநடு ஆபீஸிலே ஒரு பட்டிக்காட்டு ஆசாமி கையிலே டிபன் பாக்ஸோடு உள்ளே நுழைந்து நேரே குப்புசாமி கிட்டே போனார்.

**சங்கரன்:** அப்புறம்?

**ராகவன்:** போனாரா? "மாப்பிள்ளே! நம்ப வீட்டு எருமை கன்று போட்டிருக்கு. திரட்டுப்பால் காச்சினு. உங்களுக்குப் பிடிக்குமேன்னு எடுத்துண்டு பஸ்ஸிலே ஓடிவந்தேன். குழந்தை உங்க நினைவாகவே இருக்கா. நீங்க ஒருதடவை ஊருக்கு வரப்படாதா?" என்று திருவல்லிக்கேணி திலகர் கட்டத்தில், அரசியல் பிரசங்கி பேசும் பாணியில் ஆரம்பித்து விட்டார். குப்புசாமியை எல்லாரும் சேர்ந்து கேலி பண்ணியதில் அவன் இரண்டு மாதங்கள் லீவு போட்டுவிட்டு ஆபீஸ் பக்கம் தலைகாட்டாமலிருந்தான். அப்புறம்தான் நான் இந்த மாமனார் 'ஸ்டாண்டர்டு' நிர்ணயித்தேன். டிப்டாப் பாஷன் மாமனார் வாழ்க்கைக்கு அவசியம் என்று முடிவு செய்தேன்.

**சங்கரன்:** பேஷ்! பேஷ்! நாளைக்கு மறுநாள் எங்கேயோ போக வேண்டுமென்றாயே?...எங்கே?

**ராகவன்:** மாம்பலத்திலே யாரோ அட்வகேட் ராமசாமியாம்! சாரங்கபாணி தெருவாம். அமெச்சூர் நாடகங்களிலெல்லாம் நடித்துச் சக்கைப்போடு போடுபவராம்!

**சங்கரன்:** அடடே! நான்கூடக் கேள்விப்பட்டிருக்கிறேன்! ராவண ராமசாமின்னு சொல்லுவா! சரியான ராஜ பார்ட். அவர் ராவண வேஷப் படம் எல்லாம் பார்த்திருக்கிறேன்! ராகவா! உனக்கு நிச்சயம் இந்த இடம் செட்டாகும் என்று தோன்றுகிறது.

**ராகவன்:** ஆகட்டும்! அந்த நடேசன் பயல் மூக்கை அறுக்க ஒரு சந்தர்ப்பம்! நாளைக்கு மறுநாள் மாலை. மறந்திடாதே!

**சங்கரன்:** மத்தியானச் சாப்பாட்டுக்குப்பிறகு தண்ணீர்கூடக் குடிக்க மாட்டேன்! இலவச டிபனுக்கு வயிற்றில் இடம் வேண்டாமா?

[போகிறார்கள்.]

காட்சி 4

[சாரங்கபாணித் தெருவில் ஒரு சிறு வீடு. ராகவனும் சங்கரனும் உள்ளே நுழைகிறார்கள். அங்கு வழிய ஒரு வழக்கறிஞர் ஆசாமி. அவர்களை வரவேற்கிறார்.]

**வழக்கைத்தலைவர்:** வாங்கோ! வாங்கோ!... உட்காருங்கோ! அரைமணி நேரமாக உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். (உள்ளே பார்த்து) சரோஜா!...அவாள் எல்லாம் வந்துட்டா அம்மா! நீ உன் மேக் அப்பை யெல்லாம் முடித்துக் கொண்டாச்சா?

**ராகவன்:** (சங்கரன் முதுகைச் சுரண்டி மெதுவாக) இவர் தான் ராமசாமியா? அப்படின்னு இவரைப் பார்த்ததே போதும். கிளம்பி விடலாம். வழியிலே ஹோட்டலிலே டிபன் வாங்கித் தருகிறேன் உனக்கு.

**சங்கரன்:** (மெதுவாக) சும்மா இரு! இப்போ நான் தெரிஞ்சுண்டேறேன். (உரைத்து) சார்!...இவர்தான் ராகவன்! மாப்பிள்ளைப் பிள்ளையாண்டான்! அப்புறம் நீங்க என்னே உபசாரம் பண்ணிக் குழப்பம் வரக்கூடாது, பாருங்கோ!

**வழக்கைத்தலைவர்:** அதென்ன அப்படிச் சொல்லிட்டேள். கும்பகோணம் கோபாலன் பிள்ளை என்றுதான் அவர் முகத்திலே எழுதி ஒட்டியிருக்கிறதே. கோபாலன் எங்க பாமிலி பிரண்டு சார்!

**ராகவன்:** (மெதுவாக) நாசமாய்ப் போச்சு! இப்பவே இந்த மனுஷன் உறவு கொண்டாடுறானே! இவன்தான் ராமசாமியாக இருக்க வேண்டும்! வேண்டாம்டா வேண்டாம்! நாம் வழுக்கிண்டு ஓடுவோம்!

**வழக்கைத்தலைவர்:** என்ன? மாப்பிள்ளை பெண்ணைப் பார்க்க அவசரப்படுகிறாராக்கும்! சகஜம்தானே?என்னையே பார்த்துண்டு இருந்தால் போதுமா?... (உள்ளே பார்த்து) சரோஜா...வாம்மா!

**சங்கரன்:** நீங்க நாடகங்களிலே கனமான ராட்சத வேஷங்கள் போட்டுண்

டாலும் வீட்டிலே தமாஷாகத்தான் பேசுகிறீர்கள் போலிருக்கிறது.

**வழக்கைத்தலைவர்:** அடடா! நான் என்னை இன்னும் அறிமுகப்படுத்திக் கொள்ளவில்லையா? நான் ராமசாமி இல்லே!...நான் ராமசாமி மைத்துனன் கோவிந்தராஜன். ராமசாமிக்கு இன்றைக்குத் திடீர்னு ஒரு நாடகம் பக்கத்து ஊரிலே ஏற்பாடாயிடுத்து. கிருஷ்ண லீலாவிலே கம்சனா ஆக்ட் பண்றான். பொறுப்பையெல்லாம் என்னிடம் ஒப்படைச்சுட்டுப் போயிட்டான்...அதோ! அந்தப் படம்தான் அவனுடைய கம்ச வேஷ போட்டோ!

**ராகவன்** (பெருமூச்சுடன்): பிழைத்தேன்!...(இரைந்து) அந்தப் படம்?

**வழக்கைத் தலைவர்:** அது பிரஹலாதனில் ஹிரண்யன் பார்ட்! ஐம்பது வயசாயியும் இன்னும் அவன் ராஜ பார்ட் போடறவன் எங்க ராமசாமி தான்! ஆள் எலுமிச்சம் பழம்மாதிரி இருப்பான். பௌடரே வேண்டாம்! அதையும் சேர்த்து அவன் பெண் போட்டுக் கொள்கிறாள் இப்போது!

**சங்கரன்:** கலை மீது அவருக்கு அத்தனை ஆசை போலிருக்கிறது.

**வழக்கைத் தலைவர்:** கொலைக் கேசாக இருந்தால்கூட வாயிதா வாங்கிண்டு நாடகத்திலே நடிக்கப் போயிடுவான். பைத்தியம்! நான் உள்ளே போனால்தான் டிபன் வரும் போலிருக்கிறது! நாடகக் குடும்பமோல்லியோ! கோதுமை அல்வா மேலே முந்திரிப் பருப்பை ஒட்ட வைத்து 'மேக்அப்' பண்றாளோ என்னவோ?

[உள்ளே போகிறார்]

**சங்கரன்:** என்னப்பா ராகவா! இந்த மாமனார் எப்படி?

**ராகவன்:** இந்த மாமனார் பரீட்சையிலே பாஸ்!...அதுதான் ஒன்னரை டஜன் படம் தொங்குகிறதே! மனுஷன் பயலே ராக்ஷசன் போலிருக்கு!

**சங்கரன்:** எக்ஸ்-பார்ட்டி தீர்ப்பாக இருந்தாலும் ஜட்ஜ்மெண்ட் அவருக்குச் சாதகமாகப் போச்சு! யோகசாலி.

[சரோஜா பின்தொடர வழக்கைத் தலைவர் வருகிறார்.]

**வழக்கைத் தலைவர்:** மாப்பிள்ளே! இவள்தான் எங்க சரோஜா. சுமாராப் பாடுவா! சுமாராகச் சமையல் செய்வாள். ஆனால் பிரமாதமாக அரட்டை அடிப்பாள். சரோஜா! வந்திருக்கிறவாளைப் பயமுறுத்தாத வகையில் ஒரு பாட்டுப் பாடு அம்மா.

**ராகவன்:** வேண்டாம், சார் வேண்டாம்!

**வழக்கைத்தலைவர்:** அவள் சாரீரநயம் உங்களுக்குத் தெரிய வேண்டாமா? பாட்டு வேண்டாம்னு அவளுக்கு ஏதாவது கேள்வி போடுங்கோ! பதில் சொல்லட்டும்.

**சரோஜா:** மாமா! நீங்க சும்மா இருக்க மாட்டீர்களா?

**ராகவன்:** சரி! குரல் இனிமையாக இருக்கிறது. சர்டிபிகேட் போதுமா?

**வழக்கைத் தலைவர்:** மாப்பிள்ளை தாராள மனப்பான்மை உள்ளவர்தான். சார், ராமசாமி எனக்கு எல்லாப் 'பவரை'யும் கொடுத்திருக்கிறான். உங்களுக்குப் பெண் பிடித்தால் போதும். மற்றப்படி சீர் வரிசை நீங்க கேட்டதெல்லாம் கொடுக்கத் தயாராக இருப்பதாக ராமசாமி உங்க அப்பாவுக்கு எழுதிவிட்டான்! என்னம்மா சரோஜா! இந்தப் பையனை உனக்குப் பிடிச்சிருக்கா?...

**சரோஜா:** (உள்ளே போய்க் கொண்டே)...போங்க மாமா!...

[போகிறாள்]

**வழக்கைத் தலைவர்:** சரி! அவளுக்கும் பிடிச்சுப் போச்சு! நீங்க என்ன இப்பவே சொல்லப் போறீங்களா? அப்புறம் கடுதாசி எழுதப் போகிறீர்களா? ஜூரிகளெல்லாம் கொஞ்சநேரம் உள்ளே போய் உட்கார்ந்து விட்டு வந்து சொல்லும் மாதிரி சொல்லப் போகிறீர்களா? அதோ ஒரு ரூம் இருக்கிறது.

**ராகவன்:** நல்ல தமாஷ் பேர்வழி சார் நீங்கள்! இப்பவே என் தீர்ப்பைச் சொல்லிடறேன் சார்! திருப்தி.

**வழக்கைத் தலைவர்:** வெரிகுட்! ராமசாமி வந்ததும் உங்களைச் சந்திக்கச் சொல்கிறேன்.

**ராகவன்:** வேண்டாம், சார்! வீண் சிரமம்! என்னைப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லே!...என் அப்பாவை ஊரில் போய்ப் பார்த்து மேற்கொண்டு ஏற்பாடுகள் செய்தால் போதும்!

[டிபன் வருகிறது. சாப்பிடுவதில் ஈடுபடுகிறார்கள்.]

### காட்சி 5

[ஒரு மாதம் கழித்து ஒருநாள். சரவணபவனித் தெருவில் ராமசாமி வீட்டில் ஒரு ஹால். நிச்சயதார்த்தத்துக்குச் சந்தர்ப்பம். ராகவன் அவன் தந்தை கோபாலன் சங்கரன், கோவிந்தராஜன் எல்லோரும் நிற்கிறார்கள்.]

**ராகவன்:** முடியாது அப்பா! முடியாதுன்னா முடியாது.

**கோபாலன்:** போடா மண்டையா! நீதானேடா பெண் பிடித்திருக்கிறது என்று எழுதினாய்? எல்லா ஏற்பாடும் ஆனபிறகு இது என்ன கலாட்டா?

**ராகவன்:** நான் ஏமாந்து போனேன்! நான் கல்யாணத்துக்குத் தயார் இல்லே. இந்த இடம் கான்ஸல் ஆகணும்!

**கோபாலன்:** இடியட்! மண்டுப் பயலே! நான் மானஸ்தன். அவர்கள் கொடுத்த ரூபாயிலேகூடப் பாதி செலவாயிடுத்து! இப்போது ஏன் திடீர்னு வக்கரிக்கிறே? பெண் விளையாட்டமா இருக்காடா!

**சங்கரன்:** பெண் பிரச்னையே இல்லே சார்! உங்க பையனுக்கு மாமனார் 'அலெர்ஜி'...

**கோபாலன்:** ராமசாமி தங்கம்னு தங்கம்டா! இந்த நாட்டிலேயே அவனைப் போல் ஓர் ஆசாமியைப் பார்க்க முடியாதுடா!

**ராகவன்:** ஏன் எத்தனையோ பேரைப் பார்க்கலாம்! இவர் மாத்திரமா குடுமி வைச்சுண்டு இருக்கார்? இவருடைய டோபாத் தலைப் போட்டோ படங்களையெல்லாம் பார்த்து ஏமாந்து போனேன்!

**கோபாலன்:** அடபாவி! உன் மாமனார் குடுமி வச்சுண்டா என்ன? சவுரி வச்சுண்டா என்ன? இதற்கா இப்படிக் கலாட்டா! நான் ஏற்பாடு பண்ணறேன்! ...ராமசாமி! ராமசாமி!...

**சங்கரன்** (ராகவனிடம் மெதுவாக): உனக்கு வெற்றி! உன் மாமனாரும் உன் கிராப் கோஷ்டியில் சேர்ந்து விடுவார்!

**ராமசாமி** (வந்து கொண்டே): .... கோபாலா! என்ன விஷயம்! மேளக்காரன் வந்துண்டு இருக்கான்!

**கோபாலன்:** இந்தா ராமசாமி! ஒரு முக்ய பிரச்னை. உன் பெண்ணை என் பிள்ளை கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமல்லவா?

**ராமசாமி:** பேஷ்! இப்போ என் கல்யாணத்துக்கும் உன் கல்யாணத்துக்குமா மேளக்காரன் வரப்போகிறான்?

**கோபாலன்:** விஷயத்தைக் கேளு! கல்யாணம் நடக்க ஒரு நிபந்தனை.

**ராமசாமி:** கூட ஒரு ஆயிரம் ரூபாய் வேணுமா?...வாங்கிக்கோ.

**கோபாலன்:** அட சீ! அது இல்லே! இனிமேல் நீ எப்போது என் பிள்ளை முன்னாலே வந்தாலும் ஒரு ராவணனாகவோ, கம்சனாகவோ, ஹிரண்யாட்சனாகவோ நாடக டோப்பாவுடன் வர வேண்டும்! சம்மதமா?

[கண் சிமிட்டிச் சிரிக்கிறார்]

**ராமசாமி:** ஓ! மாப்பிள்ளை ஆண்டி குடுமி ஆசாமியோ? சரி! நான் கோர்ட்டுக்குப் போகிறபோது தலைப்பா வச்சுப்பேன்! இனிமேல் வீட்டிலேயும் வச்சுக்கறேன்!...ஓ! மேளக்காரன் வந்துட்டான்! நான் நடக்கிற காரியத்தைப் பார்க்கிறேன்.

[போகிறார். ராகவனுக்குத் தலை சுற்றுகிறது. நடேசனும் கூட ஒரு நபரும் வருகிறார்கள்]

**சங்கரன்:** வாப்பா நடேசா!...என்னப்பா உன் கல்யாணத்தை எங்கேயோ ஒரு ரூமிலே நடத்திக் கொண்டு விட்டாய் போலிருக்கிறது. அழைப்பு அனுப்பக்கூட அவகாசமில்லையோ?

**நடேசன்:** நிஜமாகவே அவகாசம் இல்லேயப்பா! திடீர்னு நடந்தது! திடீர்னு நிச்சயம் ஆச்சு! அடுத்த வாரம் ஒரு ரிசெப்ஷன் வச்சு ஜமாய்க்கிறேன். ராகவா!...நான் என் வாக்குறுதியை நிறைவேற்றி விட்டேன். உன் நிச்சயதார்த்தத்துக்கு என் மாமனாரோடேயே வந்துவிட்டேன்!

**ராகவன்:** என்ன? இது உன் மாமனாரா? எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கே!

**நடேசன்:** பார்த்த மாதிரி இருக்கேவா? பாவி! அவர் வீட்டிலே போய் ஒருநாள் நீயும் நானும் டிபன் கொட்டிக்கலே? மிஸ்டர் பஞ்சாபகேசன்டா!

**ராகவன்:** வாட்! வாட்!...அந்தத் தாத்தா பேரன் பஞ்சாபகேசனா? ...அப்போ...

**நடேசன்:** ஏன்டா திணறுகிறே!... இரண்டு மாசங்களுக்கு முன்னால் பிரார்த்தனைக்காகத் திருப்பதி போயிட்டு வந்தாராம்!...தலை டைப் மாறிடுத்து!...இனிமேல் தாத்தா தொந்தரவு செய்தால் இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை திருப்பதி போய்விட்டு வருவதாக பிராமிஸ் பண்ணிவிட்டார்! இப்போ அவர் என் மாமனார்!

**ராகவன்:** அடபாவி! நீ அதிருஷ்டசாலிடா! ஏமாந்தவன் நான்!

[தலை சுற்றிக் கீழே உட்காருகிறான். மேளச் சத்தத்தில் அவனை ஒருவரும் கவனிக்கவில்லை.]

# தீபாவளி மங்கள வாழ்த்துக்கள்!

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா.

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்: சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்



மேட்டூர் சந்தன சோப்




காவேரி சூபர் சோப்



காவேரி பார் சோப்



காமதேனு வனஸ்பதி



# குழந்தைகள் நூல்நிலையம்

அழ. வள்ளியப்பா

எங்களூர் மத்தியிலே — நல்ல
எழில்மிகு சோலையுண்டு.
அங்கொரு கட்டடமாம் — அதன்
அழகினை என்சொல்வேன்.

சிறுவன் படிப்பதுபோல் — முன்னால்
சிலைகள் இரண்டிருக்கும்.
"வருக, வணக்க"மென்றே — அங்கே
மற்றோர் சிலை அழைக்கும்.

குழந்தைகள் நூல்நிலையம் — என்றே
கொட்டை எழுத்தினிலே
அழகுடன் ஓர்பலகை — முன்னால்
அவசியம் காட்சிதரும்.

உள்ளே புகுந்ததுமே — பார்த்தோர்
உள்ளம் குளிர்ந்திடுவார்.
பிள்ளைகள் அவ்விடத்தை — விட்டுப்
பிரியவும் சம்மதியார்.

கட்டட மத்தியிலே — தூய
கலைமகள் வீற்றிருப்பாள்.
சுற்றுச் சுவரிலெல்லாம் — பல
சுந்தர ஓவியங்கள்!

பஞ்ச தந்திரத்தில் — உள்ள
பற்பல கதைகளுக்கே
நெஞ்சைக் கவருகின்ற — பல
நிகரிலாச் சித்திரங்கள்.

உலகப் புகழுடைய — சில
உயர்ந்த கதைகளுக்கும்
பலப்பல வண்ணங்களில் — அங்கே
பளிச்சென ஓவியங்கள்.

வண்ணப் படங்களுடன் — பல
வகைவகைப் புத்தகங்கள்.
கண்ணைக் கவர்ந்திடுமே — மிக்க
களிப்பில் ஆழ்த்திடுமே.

ஆனையும் ஒட்டகமும் — இன்னும்
அழகுக் குதிரையுமே
மானும் மயிலுடனே — நல்ல
மரத்தில் செய்திருக்கும்.

ஆனை முதுகினிலே — பல
அற்புதப் புத்தகங்கள்
ஆனையின் மீதேறி — ஒருவன்
அமர்ந்து படித்திடுவான்.

இப்படி வாகனங்கள் — மேலே
ஏறிப் பலசிறுவர்
அப்படி இப்படியும் — சற்றே
ஆடிப் படித்திடுவான்.

அண்ணன் கதைபடிப்பான் — தம்பி
ஆசையாய்க் கேட்டிடுவான்.
சின்னஞ் சிறுவரிலே — சிலர்
சேர்ந்து படித்திடுவார்.

புல்லிலே ஓர்சிறுமி — சாய்ந்து
புத்தகம் தான்படிப்பாள்
கல்லிலே ஓர்சிறுவன் — அமர்ந்து
கதைகள் படித்திடுவான்.

சிறுவர் எல்லோரும் — உலகைத்
தெரிந்து கொண்டிடவே
அறிவு நூல்களெல்லாம் — கதைபோல்
ஆனந்தம் ஊட்டிடுமே.

சிறுவர்க் குதவிடவே — என்றும்
சிரித்த முகத்துடனே
அருமை தெரிந்தவரு — நல்ல
'அக்கா'வும் அங்கிருப்பாள்.

விடுமுறை நாட்களிலே — சிறுவர்
வீட்டை மறந்திடுவார்
குதிகுதி என்றுவந்தே — அங்கே
கூடிப் படித்திடுவார்.

பாட்டுக் கதைகளுடன் — இன்னும்
பற்பல நற்கதைகள்
நாட்டமாய்க் கூறிடுவார் — ஒருவர்
ஞாயிறு மாலையிலே.

எங்களூர் நூல்நிலையம் — போலே
இன்பத் தமிழகத்தில்
எங்கும் அமைந்திடுமோ? — அந்நாள்
என்றுதான் வந்திடுமோ?

# "உங்களுக்கு புது டயர்கள் எப்படி கிடைக்கின்றன?"



## "அவை புது டயர்கள் அல்ல...எல்லாம் உபயோகித்த பழைய டயர்களே. அவை டி. வி. எஸ். ரீடிரெட் செய்து புதுப்பித்தவை"

புது டயர்களுக்காகக் காத்திருக்க வேண்டாம்—டயர்கள் கிடைக்காமலே திண்டாட நேரிடலாம். புது டயர்கள் மிக மிகக் குறைவு. எனவே, வேண்டும்போது, அவை உங்களுக்குக் கிடைக்காமலே போய் விடலாம். உங்கள் கார் டயர்களை டி. வி. எஸ்ஸில் ரீடிரெட் செய்யுங்கள். புதுடயரைப் போலவே, புதுப்பித்த டயரும் நன்றாக உழைக்கும்.

டி. வி. எஸ். ரீடிரெட் செய்வதால் உண்டாகும் நன்மைகள்:

1. வெட்டு, ஆணி முதலியவற்றால் டயர்களுக்கு ஏற்பட்டுள்ள சேதங்களைச் சரியான முறையில் பழுது பார்த்தல்.
2. காலாகாலத்தில்—அதாவது டயர் வழுக்கையாகத் தேயும் பொழுது—புதுப்பித்தால், ஒவ்வொரு டயரையும் இரண்டு முறை ரீடிரெட் செய்து புதுப்பிக்கலாம்.
3. ரீடிரெட் செய்த டயர்கள், புது டயர்களைப் போலவே பார்வைக்குத் தோன்றும்; புது டயர்கள் எப்படி உழைக்கும் என்று எதிர்பார்க்கிறீர்களோ, அதைப்போலவே ரீடிரெட் செய்த டயர்களும் உழைக்கும்.
4. வழுக்காமல் இருக்கும் வண்ணம், டயர்களின் இரு ஓரங்களையும் அமைக்கிறார்கள்.
5. பழைய டயர்களை 24 மணி நேரத்திற்குள் ரீடிரெட் செய்யலாம்.
6. டயர்கள் சாலைகளில் கெட்டியாகப் படிந்து, பத்திரமாகச் செல்ல வேண்டும்; அதற்கு ஏற்ற வண்ணம், டி. வி. எஸ். ரீடிரெடிங் செய்வதில் தனிடிசைன்களைக் கையாளுகிறார்கள்.





ரீடிரெடிங் செய்வதில் சிறந்தவர்கள்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

புதுக்கோட்டை – மதராஸ் – கோயமுத்தூர் (டி. வி. எஸ். ஸ்தாபனம்)

## சதர்ன் ரோட்வேஸ்
## பார்சல் ஸர்விஸ் உங்கள்
# நம்பிக்கைக்குப்
## பாத்திரமானது

விலை உயர்ந்த, நுட்பமான கருவிகளை நீங்கள் ஓர் இடத்திலிருந்து, மற்றோர் இடத்திற்கு அனுப்ப வேண்டுமானால், அதற்கு ஏற்ற வழி சதர்ன் ரோட்வேஸ்தான். சாமான்களைக் கவனத்துடன் ஏற்றி இறக்குவது ஒரு கலை. அதில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவர்களே இதனைச் செய்கின்றனர். சாமான்கள் அசையாமலும் குலுங்காமலும் இருப்பதற்காக லாரிகள் அனைத்தும் ஒரே சீரான வேகத்தில் ஓடுகின்றன.

## கவனத்துடன் கையாளுதல்




**டி.வி.எஸ். சதர்ன் ரோட்வேஸ் பார்சல் ஸர்விஸ் கீழ்க்கண்ட இதர சௌகரியங்களையும் அளிக்கிறது:**

- புறப்படு முன் ஒவ்வொரு லாரியும் பூட்டப்படுகிறது — பாதுகாப்பிற்காக.
- கால அட்டவணையை அனுசரித்து லாரிகள் ஓடுகின்றன.
- 129 லாரிகள் 57 மார்க்கங்களில் தினந்தோறும் 19,254 மைல்கள் செல்லுகின்றன.
- 307 பண்டகசாலைகள், சாமான்களை உங்களுக்கு டெலிவரி ஆகும் வரையில் மிகப் பத்திரமாகப் பாதுகாக்கின்றன.
- உங்களுக்கு அவசியமான போது ஒரு முழு லாரியை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளலாம்.

தென்னிந்தியாவில் மிகப்பெரிய ரஸ்தா போக்குவரத்து ஸ்தாபனம் டி.வி.எஸ். ஒன்றே




**சதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை**

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)

JWT-TVS-SR 934a

# சாந்தாராம் சர்க்கஸ்

ராஜி

பட்டணத்துக்குப் பெரிய சர்க்கஸ் வந்திருக்கிறது என்று தெரிந்தவுடன் சிறுவர்களும், சிறுமிகளும், அவர்களின் தாய் தந்தையர்களும் மிகவும் சந்தோஷப் பட்டார்கள். அதுவும் சாதாரண சர்க்கஸ் அல்ல. நிரம்ப துஷ்ட மிருகங்களும், மற்றைய மிருகங்களும் அடங்கிய கீர்த்திவாய்ந்த சாந்தாராம் சர்க்கஸ். சாந்தாராமுக்கு வயதாகி விட்டபடியால் சர்க்கஸ் விளையாட்டில் அவர் கலந்து கொள்ளுவதில்லை. ஆனால் அவருடைய மேற்பார்வையில்தான் சர்க்கஸ் நடந்துகொண்டு வந்தது.

அந்த சர்க்கஸில் எல்லா விதமான காட்சிகளையும் விட மோகன் என்ற ஒரு பதினைந்து வயதுச் சிறுவன் மிகுந்த உயரத்தில் பொருத்தியிருந்த ஒரு மெல்லிய இரும்புக்கம்பியின்மீது வெகு சுலபமாக ஒருவித உதவியுமில்லாமல் நடப்பதும், ஓடுவதும் யாவரும் ஆச்சரியப் படும்படியாக இருந்தன. மோகன் நல்ல தைரியம் கொண்ட சிறுவன். அவன் அப்படித் தைரியமாக இருப்பதற்கு அவனது தகப்பனாரும், சர்க்கஸுக்குச் சொந்தக்காரருமாக இருக்கும் சாந்தாராம்தான் காரணம். தாம் எப்படிச் சிறு வயதிலிருந்து தைரியமாக இருப்பதற்குப் பயிற்சி அடைந்தாரோ அப்படியேதான் தமது பையனுக்கும் பயிற்சி யளித்திருந்தார். சாதாரணமாகச் சர்க்கஸில் உயரத்தில் அபாரமாக விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது தவறிக் கீழே விழுந்தால் அடிபடாமல் இருப்பதற்குச் சர்க்கஸ் சிப்பந்திகள் பெரிய வலையைக் கீழே நின்று பிடித்துக் கொண்டிருப்பார்கள் அல்லவா! தான் கம்பியில் சர்க்கஸ் வேலை செய்யும்பொழுது அது மாதிரியான ஒரு வலையை உபயோகப்படுத்தக் கூடாது என்பது மோகனின் விருப்பம். அதனால் மோகன் உயரப் பொருத்தப்பட்டிருக்கும் கம்பியில் விளையாடிக்கொண்டிருக்கையில் அவன் தவறிக் கீழே விழுந்தால்கூட அவனைத் தாங்க ஒரு வசதியும் கிடையாது.





மோகனுக்கு ஏழு வயதுள்ள ஒரு தங்கை இருந்தான். அவன் பெயர் இந்திரா. அவன் பார்ப்பதற்கு மிகவும் அழகாகவும், எப்பொழுதும் சிரித்த முகத்துடனும் காட்சி அளிப்பான். அவன் இரட்டைப் பின்னலுடன் அவனுக்காகப் பழக்கப்பட்ட ஒரு குதிரைக் குட்டியின் மேல் ஏறிக்கொண்டு சர்க்கஸ் கூடாரத்தில் சுற்றிச் சுற்றி வருவதே அழகாக இருக்கும். யானைகளிடத்திலும், யானைக் குட்டிகளிடத்திலும் அவனுக்கு மிகுந்த அன்பு. யானைகள் வேடிக்கை செய்ய வரும்பொழுதெல்லாம் துதிக்கையினால் இந்திராவைத் தடவிக் கொடுக்கும். யானைகள் வரிசையாக நின்று தும்பிக்கைகளை நீட்டும்பொழுது இந்திரா ஒவ்வொரு தும்பிக்கையிலும் திரும்பித் திரும்பி நடப்பான். அதைப் பார்க்கும் ஜனங்கள் சந்தோஷத்தினால் ஆரவாரம் செய்வார்கள். யானைகளின் மீது வெகு சுலபமாக ஏறுவான். கரடி சைக்கிள் விடும்பொழுது கரடியின்மீது ஏறி உட்கார்ந்து சவாரி செய்வான். நல்ல தைரியமாக வளர்ந்த அவன் சிங்கம் புலிகள் வேடிக்கை செய்யும் இடத்துக்குக் கூடக் கூச்சமில்லாமல் சென்று சுற்றிச் சுற்றி வருவான். கோபத்தினால் பற்களைக் காட்டும் சிங்கமும், புலியும்







கூட இந்திராவைப் பார்த்ததும் சாதுவான பிராணியைப் போல் தோற்றமளிக்கும்.

சர்க்கஸில் யானைகள் ஒன்றன் பின் ஒன்ருகப் பீப்பாய்களை உருட்டுவது உண்டு; குதிரைகளைச் சுற்றிச் சுற்றி விளையாடுவதும் உண்டு. மற்றைய சர்க்கஸில் நடக்காத விசித்திரமான விளையாட்டுகளும் இருந்தன. ஆனல் அங்கு நடந்த ஒவ்வொரு விளையாட்டிலும் இந்திரா எப்படியாவது கலந்து கொள்வாள். அப்படிக் கலந்து கொள்ளாவிட்டால் வேடிக்கை பார்க்க வந்தவர்கள், "இந்திரா, இந்திரா!" என்று கத்துவார்கள். சர்க்கஸ் ஆரம்பமாவதற்கு முன் சர்க்கஸ் முழுதும் ஒரு முறை வந்து வணக்கம் தெரிவித்து விட்டு வருவாள். அப்படி அவள் செய்வதை வேடிக்கை பார்க்க வந்த ஜனங்கள் விரும்பினர்கள். எல்லா வேடிக்கைகளிலும் பங்குகொண்ட அவள் தன் அண்ணன் உயரக் கம்பியில் சர்க்கஸ் வேலைகள் செய்யும்பொழுது சும்மா இருப்பாளா? அல்லது ஜனங்கள்தான் அவளைச் சும்மா விட்டு விடுவார்களா? அண்ணன் மேலே கம்பியில் இருக்கும் சமயத்தில் 'விடு விடு' என்று கயிற்று ஏணியில் ஏறுவாள். அவள் மேலே வந்து சேர்ந்ததும், மோகன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு அவளையும் கம்பியில் நடக்கச் செய்வான். பிறகு மெதுவாக அவளைத் தூக்கித் தனது தோளில் வைத்துக் கொண்டு நடப்பான். பிறகு அவளைப் பின்புறமாக இறக்கி அவளது கைகளைப் பிடித்து அழைத்துக் கொண்டே கயிற்று ஏணியில் இறங்கி விடுவான். அதைப் பார்க்கும் ஜனங்கள் கைகொட்டி ஆரவாரம் செய்வார்கள்.

தீபாவளி சமயம். சர்க்கஸ் கொட்டகையில் நல்ல கூட்டம். எல்லோரும் மோகன் தைரியமாக நூறு அடி உயரத்தின் மேல் பொருத்தப்பட்டிருக்கும் கம்பியில் ஒரு வித உதவியுமில்லாமல் வேடிக்கைகள் செய்யப் போவதைப் பார்க்க மிகுந்த ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தனர். கம்பியின் நடுவில் நின்றுகொண்டிருந்த மோகன் தன் தங்கை இந்திரா கயிற்று ஏணியின் வழியாக மேலே வருவதைப் பார்த்தான். கம்பியின்மீது வேகமாக நடந்து வந்து அவளது கையைப் பற்றினுன் இந்திரா. ஒரு நாளுமில்லாமல் அவனுக்கு ஒரு பயம் உண்டாயிற்று. கீழே பார்த்தான். இவ்வளவு உயரத்திலிருந்து என் தங்கை இந்திரா விழுந்தால் அவள் கதி என்ன ஆகும் என்று யோசித்தான். இது மாதிரியான யோசனையை அவன் இதற்குமுன் செய்தது இல்லை. அதனுல் அவனது மனத்தில் ஒரு குழப்பமும் ஏற்படாமலிருந்தது. குழப்பம் ஏற்பட்ட சமயத்தில் சர்க்கஸ் கூடாரத்துக்குப் பக்கத்தில் பலத்த சத்தத்துடன் யாரோ ஒரு சிறுவன் வெங்காய வெடியை வெடித்தான். இந்திராவைப் பிடித்திருந்த கை நழுவியது. அடுத்த விநாடியில் மோகன் கீழே விழுந்தான். "ஐயோ, அண்ணு!" என்று சொல்லிக் கொண்டே அவளும் கீழே விழும் சமயத்தில் சர்க்கஸ் சிப்பந்திகள் நொடிப் பொழுதில் பக்கத்திலிருந்த கயிற்று ஏணியை அந்தச் சிறுமியிடம் நகர்த்தினர்கள். இந்திரா கயிற்று ஏணியைத் தாவிப் பிடித்துக் 'விறுவிறு' என்று கீழே இறங்கினுள். அடுத்த நிமிஷம் கீழே விழுந்து மூர்ச்சையற்றிருந்த மோகன் அப்புறப் படுத்தப்பட்டான்.

மோகன் பல நாட்கள் ஓய்வு பெற வேண்டியிருந்ததால் அவன் செய்து வந்த மாதிரி கம்பியில் வேடிக்கை செய்ய ஒருவரும் முன் வரவில்லை. அண்ணனின் பக்கத்திலேயே இந்திரா இருந்ததினுல் அவளும் சர்க்கஸ் கூடாரத்துக்கு வரவே இல்லை. அதனுல் நாளுக்கு நாள் கூட்டம் குறைந்து வர ஆரம்பித்தது. தன் படுக்கைக்கு அருகிலிருந்த தன் தகப்பனர் சாந்தா ராமை மோகன் அருகில்

கூப்பிட்டான். "அப்பா, நான் கீழே எப்படி விழுந்தேன் என்று எனக்கே தெரியவில்லை. நல்லவேளையாக இந்திரா உயிர் தப்பினாள். உயரக் கம்பியில் ஒருவித உதவி இல்லாமல் தைரியத்துடன் நீங்கள் பயிற்சி அளித்ததின் காரணமாக நல்ல பெயருடனும் புகழுடனும் இருந்தேன். சமீபத்தில் நான் கீழே விழுந்தது எனக்குத் தீராத அவமானத்தைத் தேடிக் கொடுத்துவிட்டதே! நான் இனிமேல் உயரக் கம்பியில் முன்போல் வேலைகள் செய்ய முடியாது. கீழிருந்தே ஏதாவது "பார்" வேலை செய்யத்தான் என்னால் முடியும். அல்லது விதூஷகனைப் போல் ஏதாவது வேடிக்கைகள் செய்வதுதான் பொருந்தும் என்று என் சிநேகிதர்கள் சொல்லுகிறார்களே; இனிமேல் என் கதி அப்படித்தானா அப்பா?" என்று கூறி மோகன் விம்மி விம்மி அழுதான்.

"மோகன்! எதற்காக இப்படி அழுகிறாய்? ஏதோ எதிர்பாராத விதமாகத் தவறி விட்டாய். உனக்குப் பலமுறை நீ செய்யும் வேலைக்கு மனோதைரியம் தான் தேவை என்று வற்புறுத்தியிருக்கிறேன். உன்னிடத்தில் எப்பொழுதும் உள்ள பலம்தான் இப்பொழுதும் இருக்கிறது. அதைரியமாக மனத்தைத் தளர விடாதே. என்னைப் போல் நீயும் தைரியமுள்ள பையன் என்று ஜனங்களுக்கு நிரூபித்துக் காண்பிப்பதுதான் உன் வேலை. நாளை சாயங்காலம் உன்னை மறுபடியும் கம்பியின்மீது பார்க்க வேண்டும்" என்று மோகனைத் தட்டிக் கொடுத்து விட்டுச் சென்றார் சாந்தா ராம்.

மோகனுக்கு அதிகக் காயம் ஏற்படவில்லை, சீக்கிரம் கம்பியில் விளையாடுவதற்கு வரப் போகிறான் என்ற செய்தியைக் கேட்ட ஜனங்கள் மோகனை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். மறு நாள் மாலை மோகன் சர்க்கஸ் வேலை செய்வதற்குத் தகுந்தபடி உடைகளை அணிந்து கொண்டான். அங்கு வந்த தாயாரிடம், "அம்மா! வழக்கம் போல் இன்று கம்பியின் மீது ஏறி விளையாட்டுகள் செய்து காண்பிக்கப் போகிறேன்" என்றான் குதித்துக் கொண்டே.

"ஏன் மோகன் அவசரப்படுகிறாய்? இப்பொழுதுதான் ஓய்வு பெற்று எழுந்திருக்கிறாய். அதுவும் தீபாவளிக்கு இன்னும் சில நாட்கள்தான் இருக்கின்றன. அன்றுமாதிரி இன்றும் தவறி விழுந்தால்....? இன்று மாத்திரம் நீ கீழே விழுந்தால் அடிபடாமல் இருப்பதற்கு வலையைப் பிடித்துக் கொள்ள ஏற்பாடு செய்யட்டுமா?" என்று கேட்டாள்.



"முடியவே முடியாது. வழக்கத்துக்கு மாறாக ஒன்றும் வேண்டாம். இன்று நான் கம்பியின் மீது ஏறத்தான் போகிறேன்" என்று கூறி இந்திராவை அழைத்துக் கொண்டு கயிற்று ஏணிக்கு அருகில் சென்றான். ஜனங்கள் அவர்கள் இருவரையும் கண்டு ஆரவாரம் செய்தார்கள். "இந்திரா சற்று இரு. நான் மேலே போன பிறகு வரலாம்" என்று ஏணியின் உச்சியை அடைந்தான். 'என் சிநேகிதர்கள் நான் விதூஷக வேலைகள் செய்வதற்குத்தான் தகுதி என்று சொன்னார்களே. அம்மா சொல்லியபடி நான் தவறி விழ நேரிட்டால்?' என்று நினைத்தான். அவனைப் பயம் பிடித்துக் கொண்டது. வேகமாக ஏணியில் ஏறியவன் அதைவிடப் பதின் மடங்கு வேகமாகக் கீழே இறங்கினான். இந்திராவை அழைத்துக் கொண்டு தன் அறைக்குச் சென்றான். தன் அண்ணனின் நிலையைப் பார்த்து, இந்திராவின் கண்களிலிருந்து நீர் ததும்பியது. தங்கையை அணைத்துக் கொண்டே மோகன், "நான் வாழ்க்கையில் தோல்வி அடைந்தவனாக ஆகிவிட்டேன்" என்று மனத்தில் நினைத்தபடி படுக்கையில் படுத்துக் கொண்டான். 'நல்ல பையன். தைரியத்தை இழந்துவிட்டான். இருக்கட்டும், பார்க்கலாம்' என்று சாந்தாராம் சொல்லிக் கொண்டே மோகனைத் தடவிக் கொடுத்தார்.

இரண்டு மூன்று நாட்கள் சென்றன. மோகன் தன் வீட்டு மூன்றாவது மாடியில் உட்கார்ந்திருந்தான். அவன் பக்கத்தில் அவனது தாயார் நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது அவர்கள் வீட்டுக்கு எதிரில் பல வீடுகளில் தீப்பிடித்து எரிவது போல் நெருப்பு அளவளாவியது. எங்கு பார்த்தாலும் நெருப்பு, நெருப்பு என்ற சத்தம். நெருப்பின் வேகம் அதிகமாகிக் கொண்டு வந்தது. "இந்திரா எங்கே? இந்திரா எங்கே? எதிர் வீட்டுக்கு அல்லவா விளையாடப் போனாள். அந்த வீடும் தீக்கிரையாகி விடும்போல் இருக்கிறதே. சீக்கிரம் போகாவிட்டால் இந்திராவின் கதி?" என்று மோகனின் தாயார் அலறினாள். அந்தச் சமயத்தில் எதிர்வீட்டில் இருந்த இந்திரா மூன்றாவது மாடிக்கு ஓடிவந்து, 'அண்ணா! அண்ணா!' என்று அலறினாள். இந்திராவைப் பார்த்த மோகன் துள்ளிக் குதித்து எழுந்தான்.

அங்கே வந்த சாந்தாராம், "என்ன மோகன் யோசிக்கிறாய்? அவளைக் காப்பாற்ற ஒரே வழிதான் இருக்கிறது" என்றார். "இந்திராவைக் காப்பாற்றுவதற்கு நான் எதை வேண்டுமானாலும் செய்யத் தயார்" என்று அறைகூவினான் மோகன்.

"இதோ பார், நம் வீட்டுக்கும் எதிர் வீட்டுக்கும் போகும் தந்திக் கம்பிகள் இருக்கின்றன. அவைகளை உபயோகப்படுத்திக் கொண்டு இந்திராவை மீட்டுக் கொண்டுவா" என்றார் சாந்தாராம். தன் சட்டைகளையும், மற்றையத் துணிகளையும் அகற்றினான் மோகன். அரைக்கால் சட்டையுடன் தந்திக் கம்பியின்மீது வேகமாக ஓடினான். அடுத்த விநாடி அதே தந்திக் கம்பியின் வழியாக இந்திராவைத் தூக்கிக் கொண்டு வந்தான்.

சாந்தாராம் மோகனைக் கட்டிக் கொண்டார். "மோகன்! உன்னிடத்திலுள்ள பலமும், தைரியமும் உன்னிடத்திலேயேதான் இருக்கின்றன. நீ ஏதோ பயந்தாய், அவ்வளவுதான். இனிமேல் தைரியமாக உனது சர்க்கஸ் வேலைகளைச் செய்து வா!" என்றார்.

அன்று மாலை மோகன் தன் தங்கை இந்திராவுடன் பிரமாதமாகக் கம்பியின் மீது வெகு நேரம் விளையாடினான். ஊரில் இந்தச் சம்பவத்தைப் பற்றிப் பல மாதிரியாகக் கூறினார்கள். "தீபாவளியானதால் வெடிகளினால் நெருப்பு ஏற்பட்டிருக்கும்" என்று சிலர் சொல்லிக் கொண்டார்கள். பலர் சாந்தாராம் தம் பையன் மோகனுக்குத் தைரியத்தைக் கொண்டு வர வேண்டும் என்று தன் வீட்டுக் கருகிலுள்ள ஒரு கீற்றுக் கொட்டகையைக் கொளுத்தி விட்டுப் பிறகு மோகன், இந்திராவை அழைத்துக் கொண்டு வந்தவுடன் தீயை அணைக்க ஏற்பாடு செய்ததாகவும் சொல்லிக் கொண்டார்கள். அதைப் பற்றி நமக்கென்ன கவலை? அதற்குப் பிறகு மோகனும் இந்திராவும் 'ஜாம், ஜாம்' என்று சர்க்கஸில் வேலை செய்து கொண்டு வருகிறார்கள். அவ்வருஷம் தீபாவளியை எல்லா வருஷங்களையும்விட மிகவும் சந்தோஷமாகக் கொண்டாடினார்கள்.


உங்கள் குழந்தைக்கு இந்நிலை ஏற்பட்டால்


MANNERS
GRIPE MIXTURE
மானேர்ஸ்
கிரைப் மிக்சர் கொடுத்து.




அது சிரித்து
மகிழ்வதைக் கண்டு
அனுபவியுங்கள்.


MANNERS
GRIPE MIXTURE


உன்னத தரத்தின் இந்த
சின்னத்தைக் கவனியுங்கள்.
இது ஒரு மானேர்ஸ்
தயாரிப்பு
GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. BOMBAY • DELHI • CALCUTTA • MADRAS

ரயில் வழியாகவும், சாலைகள் வழியாகவும் அனுப்பும் சாமான்களை நாங்கள் இன்ஷூர் செய்கிறோம்.

# மதராஸ் மோட்டார் அண்ட் ஜெனரல் இன்ஷூரன்ஸ் கம்பெனியில்

## நீங்கள் இன்ஷூர் செய்தால், நஷ்டத்திற்குரிய ஈடு தொகைகளை விரைவில் பெற்றுக்கொள்ளலாம்

உங்கள் சொத்தும், சாமான்களும் மதிப்பு வாய்ந்தவை. அவற்றைத் தீ விபத்து, உள்நாட்டு போக்குவரத்து விபத்துக்களின் நஷ்டாட்டிற்கு மதராஸ் மோட்டார் அண்ட் ஜெனரல் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் இன்ஷூர் செய்யுங்கள்.




மதராஸ் மோட்டார் அண்ட் ஜெனரல் இன்ஷூரன்ஸ்
கம்பெனி லிமிடெட், மதராஸ் (டி. வி. எஸ். ஸ்தாபனம்)

JWT/TVS/MMG/1106a

# சப்பாத்திப் பழம்

ஏன்?

ஜனங்கள் அப்படித்தான் பேசிக் கொண்டார்கள்: ''அவளாவது, ஒருவனை ஒழுங்காகக் கல்யாணம் செய்துகொண்டு குடியும் குடித்தனமுமாக வாழ்க்கை நடத்துகிறதாவது! அப்படி ஆசையுள்ளவளா யிருந்தால், நாளைக்கு நடக்கவிருந்த கல்யாணத்தைத் திடீரென வேண்டாம் என்று சொல்லுவாளா? சரியான வாய்ப்பட்டி ராங்கிக்காரி!''

இந்தப் பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசவும் இரண்டொருவர் இல்லாமல் இல்லை: ''கடைசி நேரத்திலே அவள் அப்படி முரண்டு செய்தது நியாயம் தானே? என்ன பொல்லாத கடமையைக் கண்டுவிட்டான் அவன்? கலெக்டர் உத்தியோகம் பார்க்கிறதாக அவனுடைய நினைப்பு. இல்லையென்றால், அந்த ஆபத்தான வேளையில் அவன் அப்படி நடந்து கொண்டிருப்பானா? கேவலம், அறுபது ரூபாய் சம்பள வேலைக்காக கொஞ்சங்கூட இரக்கமோ, மனச்சாட்சியோ இன்றி ஓர் உயிரின் மரணாபத்தான நிலைமையில் அத்தனை கொடூரமாகவா நடந்துகொள்வது? அவனுக்கென்ன, இவள் இல்லையானால் வேறு மாப்பிள்ளையே கிடைக்க மாட்டானா?''

அந்த ரயில்வே லெவல் கிராஸிங்கேட்டுக்கு மேற்கே விசாலமான சாலையின் இடது பக்க நடை பாதையோரம், காய்கறிக் கடைபோட்டு உட்கார்ந்திருந்த பொன்னம்மாளின் காதுகளிலும் அங்கிருந்து சுமார் முப்பது கஜ தூரத்துக்கு இப்பால் லெவல் கிராஸிங் கதவுகளுக்கு உட்பக்கம் ஏதோ வேலை செய்துகொண்டிருந்த 'கேட் கீப்பர்' தங்கப்பனின் செவிகளிலும் இந்தக் கருத்துரைகள் விழவே செய்தன.

ஆனால், அவர்கள் இரண்டுபேருமே அந்தப் பேச்சுக்களில் எவ்வித அக்கறையும் காட்டிக் கொள்ளாமல் அவரவர் தொழிலில் நாட்டமாயிருந்தனர்.



ஜெகசிற்பியன்

வடக்கே தொலைதூரத்துக்கு அப்பால் பச்சைப் பரிய மரக் கூட்டங்களுக்கு மேலே, நீலம் பாரித்துக் கிடந்த வானவெளியில், கரிய புகை திரிதிரியாக எழும்பிப் பரவுவது தெரிந்தது. அதைத் தொடர்ந்து லெவல் கிராஸிங் இரும்புக் கதவுக் கருகில் பொருத்தப் பட்டிருந்த மின்சார மணிப் பொறி கணகண வென முழங்க ஆரம்பித்தது.

சாலையின் இரு திசை முனைகளிலும் நின்றிருந்தசிக்னல்கம்பங்களில் சிவப்பு விளக்குகள் எரியத் துவங்கின.

லெவல் கிராஸிங்கிலிருந்து சற்றுத் தள்ளி, ரயில் பாதையோரமாக சதுர வடிவிலே—தாழ்வாகவும் உறுதியாகவும் வெள்ளை கறுப்பு வர்ணங்கள் பூசப் பெற்றும் அமைந்திருந்த 'காபி னு'க்குப் பக்கவாட்டில் செழிப்புடன் வளர்ந்திருந்த கருநொச்சி, நந்தியா வட்டை முதலான செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதில் கவனமாயிருந்த தங்கப்பன் மணிச் சத்தம் கேட்டுச் சட்டென்று நிமிர்ந்தான்.

'கூட்ஸ் வண்டி வருது போலிருக்கே! மணி என்ன ஆச்சு?' தனக்குள் முணுமுணுத்துக் கொண்ட அவன், இரும்புக் குடத்தை வைத்து விட்டுக் கைவிரண்டையும் தட்டித் தேய்த்தபடி கடிகாரத்தைப் பார்ப்பது போல் காபின் பக்கம் திரும்பிப் பார்த்தான்.

ஜனநடமாட்டமும் வாகனாதிகளின் போக்குவரத்தும் மிகுதியான சாலை அது. ஓர் ஐந்து நிமிஷ நேரம் அந்த ரயில் பாதை கதவுகளைச் சாத்திப் போட்டு வைத்திருந்தால் சாலையின் இரண்டு பக்கமும் ஜனக் கூட்டம் நெரிசல் கண்டு விடும். வாகனங்களோ ஒன்றன்பின் ஒன்றாக அநுமார் வால் போல் நீண்டு போகும். அப்போது அங்கே மூலைக்கு மூலை கிளம்பும் பேச்சுக்களைக் கேட்கவேண்டுமே! ஜனநாயகம், பேச்சுரிமை முதலான தத்துவங்களைக் கண்டு பிடித்தவன் அங்கு இருந்தால் தூக்குப் போட்டுக் கொண்டு செத்து விடுவான்!

மண்ணுளிப் பாம்புபோல் வெயிலில் பளபளத்துநீண்டுசென்ற தண்டவாளப் பாதையின் கடைகோடியில் புகை மண்டலமாகத் தெரிந்த இடத்திலே இப்போது ரயில் எஞ்ஜினின் பூதாகாரமான கரிய முகம் காணப் பட்டது. வழக்கமான ஜபர்தஸ்துகளுடன் ஜனங்களையும் வண்டிகளையும் தடுத்து நிறுத்தி அவசர அவசரமாக இரும்புக் கதவுகளைச் சாத்திவிட்டுத் திரும்பிய தங்கப்பன் விரைந்து போய் 'லாக்கிங் ஹாண்டிலை' இழுத்துத் தள்ளினான். மணிச் சத்தம் நின்றது.

சிவப்புக் கொடியைப் பச்சைக் கொடிக்குள் வைத்துச் சுற்றிய சுருளையைக் கட்கத்தில் இடுக்கிக் கொண்டு கதவருகில் போய் நிற்கத் திரும்பிய அவன் ஏனோ தயங்கி நின்றான். இத்தனை நாட்களாக இம்மாதிரி கதவைச் சாத்தி வைத்திருக்கும் சமயங்களில், ரயில் வண்டி வந்து அந்த லெவல் கிராஸிங்கைக் கடந்துசெல்லும் வரை, இரும்புக் கதவுக்கும்

தண்டவாளத்துக்கும் இடைவெளியில் ராஜநடை போட்டு உலாவுவது அவனுடைய வழக்கம். காக்கிக் கால்சராயும் பச்சைக் கொடியுமாக நின்று, தொலைவில் கம்பீரமாக ஓடி வரும் ரயிலை அவன் அலட்சியமாகப் பார்ப்பதே ஓர் அழகுதான். ஆயிரக்கணக்கான கண்கள் அவன் மீது மொய்த்திருக்க, யாராவது சில அவசரக்காரர்கள் சாத்தியிருக்கும் இரும்புக் கதவின் அடியில் புகுந்து வண்டி வருவதற்குள் பாதையைக் கடக்க முயலும்போது அவர்களை அவன் விரட்டியடித்து அதிகாரம் செய்யும் காட்சி இதைவிட இன்னும் அழகாயிருக்கும். இதென்ன பிரமாதம்! இதோ. இரும்புக் கதவுக்கு அப்பால் இரு பக்கமும் நூற்றுக் கணக்கான ஜனங்களை, மடக்கிப் போட்டு நிற்க வைத்துவிட்டிருக்கிறானே! பெரிய பெரிய மனிதர்களின் பெரிய பெரிய கார்கள்கூட அவனுடைய 'தயவை' எதிர்பார்த்து வரிசையாய் நிற்கின்றனவே.

ஆனால், இன்று ஏனோ வழக்கத்துக்கு மாறாகத் தயங்கி நின்றான் தங்கப்பன். எதிரே வரும் கூட்ஸ் வண்டியையோ, இரு பக்கமும் நின்று அவனையே பார்த்துக் கொண்டிருக்கும் ஜனங்களையோ அவன் கவனிக்கவில்லை. மெள்ளத் தலைநிமிர்ந்து ரயில்வே மதில் சுவருக்கு அப்பால், சாலையின் நடைபாதை மேல் காய்கறிக் கடை போட்டு உட்கார்ந்திருக்கும் பொன்னம்மாளை ஏக்கத்துடன் பார்த்தான். அவளும் அந்த ஒரு கண நேரத்தில் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அடுத்த விநாடியே வெறுப்புடன் முகத்தைச் சுளித்து, அலட்சியமாகக் கழுத்தை ஒரு வெட்டு வெட்டித் திருப்பிக் கொண்டு தன் வியாபாரத்தில் கவனம் செலுத்தலானாள்.

தங்கப்பனின் முகம் கறுத்துச் சிறுத்தது. கண்களில் துக்கத்தின் செவ்வரி படர்ந்தது. அவன் தலைகுனிந்த வண்ணம் காபினை நோக்கி நடந்தான்.

இதற்குள், கூட்ஸ் வண்டி அந்த லெவல் கிராஸிங்கை அதிரடித்துக் கடந்து சென்றது. அப்புறம் ஓர் ஐந்து நிமிஷம் கழித்து, தெற்கிலிருந்து வந்த மின்சார ரெயில் வண்டி ஒன்று ஓடி மறைந்ததும், 'ஃப்ரீ-வேட்' என்றவே, தங்கப்பன் திரும்பி வந்து 'லாக்கிங்- ஹாண்டிலை'த் தள்ளி விட்டான். செப்பு விளக்குகள் அணைந்தன. சிறிதும் உற்சாகமின்றிச் சாவதானமாகப் போய், சாத்தியிருந்த கதவுகளைத் திறந்தான்.

மறுகணம், இரண்டு பெரிய அலை கடல்கள் அணை உடைந்து ஒன்றுடன் ஒன்று முட்டி மோதி ஐக்கியமாவது போல், இருபெரும் ஜனக் கூட்டங்கள் எதிரெதிராகப் பாய்ந்து நெருக்கியடித்து நகர்ந்து, பிறகு தனித் தனித் துளிகளாகக் கரைந்து மறைந்தன. காது செவிடு படத் துளைத்த வாகனங்களின் ஹாரன் ஒலிகளும் தேய்ந்து கரைந்தன.

திறந்துவிட்ட கதவுகளுக்கு முட்டுக் கொடுத்து விட்டு நிமிர்ந்த தங்கப்பன், மீண்டும் அந்த நடை பாதையின் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினான். காய்கறி வாங்க வந்த ஒரு கிழவியிடம், இரண்டணாவுக்குப் பதின்மூன்று நயா பைசா வேண்டுமென்று சண்டை போட்டுக் கொண்டிருந்தாள் பொன்னம்மாள்.

நீண்டதொரு பெருமூச்சு விட்ட தங்கப்பன், பழையபடி செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதில் முனைந்தான்.

"பொன்னம்மா! எழுந்திரு, எழுந்திரு! முதல்லே இந்த இடத்தைக் காலி பண்ணிட்டு எழுந்திரு!"

நீர் நிறைந்த குடத்தைக் கைநழுவ விட்ட தங்கப்பன் அவசரமாகத் தலை நிமிர்ந்து ரயில்வே மதிலுக்கு அப்பால் பரபரப்புடன் பார்த்தான்.

சோனிக் குதிரைபூட்டிய ஜட்கா வண்டியொன்று பொன்னம்மாளின் கடைக்கெதிரே வந்து நின்றது. கடிவாளத்தைக் குதிரையின் முதுகில் வீசி எறிந்துவிட்டு, உற்சாகமாகக் குதித்து இறங்கினான் வண்டிக்காரவடிவேலு.

வெய்யிலில் வாடி வதங்கும் தக்காளிப் பழங்களின் மேல் தண்ணீர் தெளித்து



கூறு கட்டிக் கொண்டிருந்த பொன்னம்மாள் நாணத்துடன் அவனை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தலை குனிந்தவாறு, "எதுக்கு இந்த இடத்தைக் காலி பண்ணச் சொல்றே?" என்றாள்.

கட்டம் போட்ட சட்டை, கயிலி வேட்டி, கழுத்தில் குட்டை, அடுக்கடுக்காக உயர்ந்து பரவிய கிராப்புத் தலை, கத்திபோல் இறங்கிய கிருதா, புல்தி மீசை, வாயில் பீடி—இத்யாதி கோலத்துடன் விளங்கிய வடிவேலு, லுங்கியைக் கணுக்கால்வரை தூக்கி ஒரு நிஜாராக இடுக்கிக் கொண்டு குதிரை கனைப்பது போல் சிரித்தான். "எதுக்கா?.... மார்க்கட் உள்ளே உனக்குன்னு ஒரு கடையை வாடகைக்குப் பிடிச்சு அட்வான்சும் கட்டிப் பிட்டேன். கடை ரொம்ப வசதியாகவும் பார்வையாகவும் இருக்கு. இப்பவே போய் அங்கே கடையைப் போடு. இந்தப் பேஜார்ப் புடிச்ச ரயில் கேட்டுப் பிளாட்பாரத்தைக் காலி பண்ணு. நீ இங்கே உட்கார்றது எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கலே!" என்று பெருமையும் கண்டிப்பும் நிறைந்த குரலில் சொன்னான்.

பொன்னம்மாளுக்கு ஒரே மகிழ்ச்சி. மார்க்கெட்டுக்குள் ஒருகடையைப்பிடிக்க அவள் எத்தனையோ நாட்களாக முயன்று கொண்டிருந்தாள். அப்புறம் அங்கு ஒரு கடை காலியானபோது அதை வாடகைக்கு எடுத்துக் கொள்ளாமல் விட்டு விட்டாள். அதற்குக் காரணம், தங்கப்பன்தான். அவன் அவளைப் போகவிடாமல் தடுத்துவிட்டான். தன் சக கடைக்காரிகள் கேட்டபோது "இந்த ரயில்வே கேட் பிளாட்பாரம் ரொம்பவும் ராசியானது" என்று சொல்லி மழுப்பி விட்டாள். ஆனால் அவர்களுக்கு அதன் உண்மைக் காரணம் நன்கு தெரியும்.

"அப்படியா? நான் இப்பவே இந்தத் தரித்திரம் புடிச்ச இடத்தைக் காலி பண்ணி விடறேன்!" என்று கூறிக் கொண்டே நாணப் புன்னகையுடன் எழுந்தாள் பொன்னம்மாள். இத்தனை நாட்களாய் 'ராசியான இடமாக' இருந்த இடம் இப்போது தரித்திரம் பிடித்த இடமாகி விட்டது.

வடிவேலு பொன்னம்மாளைப் பார்த்து, "அப்போ, நான் வரட்டுமா? அச்சாபீஸ்காரனைக் கண்டு இந்த நோட்டீசை அச்சடிக்கக் கொடுக்கணும். இன்னும் சரியாக எண்ணி ஏழு நாள்தானே இருக்கு?" என்று குறுநகையுடன் கூறினான்.

பொன்னம்மாளின் முகம் வெட்கத்தால் கன்றிக் கறுத்தது.

"சரி; அப்பறம் வந்து பார்க்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே ஜட்காவில் ஏறி அமர்ந்த வடிவேலு, ரயில்வே மதில் சுவருக்கு அப்பால் நின்றிருந்த தங்கப்பனைப் பார்த்து அவனுக்கு நேரே பீடிப் புகையைக் குப்பென்று ஊதிச் சுழலவிட்டு விட்டு, "ஹாய்ய்" எனக் குரல் கொடுத்தவாறு வண்டியை ஓட்டிச் சென்றான்.

கூறுகட்டி வைத்திருந்த காய்கறிகளையெல்லாம் வாரிக் கூடையில் நிரப்பிக் கொண்டு மார்க்கெட்டை நோக்கி நடந்தாள் பொன்னம்மாள். லெவல் கிராஸிங்கைத் தாண்டிச் செல்லும்போது அவளையறியாமலே அவளுடைய கண்கள் தங்கப்பன் நிற்கும் திசையில் திரும்பின. தன்னையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் அவனை வெறுப்புடன் விழித்து நோக்கிய அவள் தன் முகத்தை வெடுக்கென வேறு பக்கம் திருப்பிக் கொண்டு ஓர் அலட்சிய ஒய்யார நடை நடந்து அங்கிருந்து விரைந்து சென்றாள்.

ஓங்கிப் பெருமூச்சுவிட்ட தங்கப்பன் தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு காபினை நோக்கித் தள்ளாடி நடந்தான். அவன் மனம் ஒரேயடியாக வெடிப்புற்றுப் பிளந்ததுபோல் வலிகண்டு



விட்டது. காபின் கட்டைச் சுவர்மேல் சோர்வுடன் போய் உட்கார்ந்து கொண்டான்.

அந்தச் சின்னஞ் சிறு சம்பவம் தன் வாழ்க்கையில் இத்தனை சீக்கிரம் இவ்வளவு பெரிய இடியைக் கொண்டு வந்து போடும் என்று அவன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அவன் என்ன? பொன்னம்மாளே கூட இப்படி எண்ணியிருக்க மாட்டாள்.

நேற்று மாலை வரை தங்கப்பனும் பொன்னம்மாளும் எத்தனை நெருக்கமான இதயப் பிணைப்புடன் இருந்து வந்தார்கள்! காதல் என்னும் கரன்சி நோட்டு, உயர்ந்த கட்டிடங்களில் செயல்படும் பாங்கிகளிலே மட்டுமல்ல, நடைபாதையில் விரிக்கப்படும் அங்காடிக் கடைகளிலும் செலாவணியாகக் கூடியதே என்பதை அவர்கள் நிரூபித்து வந்தார்கள்.

நாளெல்லாம் லெவல் கிராஸிங் கதவுகளைச் சாத்திச் சாத்தித் திறக்க வேண்டிய வேலை அவனுக்கு; அவளோ நாள்முழுவதும் ஒரே இடத்தில் உட்கார்ந்து ஒன்றரையணா கத்திரிக்காயை விற்றெடுக்க ஓராயிரம் பேச்சுப் பேச வேண்டியவள். இந்தச் சலிப்பான வேலைகளில் சலிப்படையாமலிருக்கவே, அவர்கள் வெறும் வாய்ப் பேச்சுப் பழக்கத்தை முதலில் ஏற்படுத்திக் கொண்டார்கள். காலை முதல் மாலைவரை ஒரே இடத்தில் அருகருகே இருக்க வேண்டிய அவர்கள், ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளாமலோ பேசிக் கொள்ளாமலோ இருக்க முடியுமா? நாயும் பூனையும் கூட இப்படிப்பட்ட சூழ்நிலையிலிருந்தால் சிநேகமாகிக் கொள்ளுமே.

பட்டும் படாததுமாக ஆரம்பித்த வெறும் பேச்சு, பிறகு தமாஷ் பேச்சாக மாறி, அப்புறம் மனத்தை நோக வைக்காத குத்தல் மொழியும் கிண்டல் சிரிப்பும் நாணச் சிணுங்கலுமாக வளர்ந்தது.

பொன்னம்மாள் அழகியோ அழகற்றவளோ தெரியாது. தங்கப்பனும் அப்படித்தான். ஆனால் அவ்விருவரின் பருவக் கண்களுக்கும் ஒருவரொருவர்மீது ஒரு விதக் கவர்ச்சி தோன்றியே இருக்கவேண்டும். இல்லையானால், அவளையொத்த வயசுப் பெண்கள் இருவர், அதே பிளாட்பாரத்தில் சட்டிப்பானைக் கடையும் தேங்காய்க் கடையும் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தும், தங்கப்பன் அவர்களை ஏறெடுத்தும் பார்ப்பதில்லையே, ஏன்? பொன்னம்மாளும் அப்படித்தான். அங்கு எந்நேரமும் வட்டமிட்டுக் கொண்டிருக்கும் பழக்கடைக்காரன் சிங்காரத்தையோ, ஐஸ் - சர்பத் விற்கும் மாணிக்கத்தையோ, ஜட்கா வண்டிக்காரன் வடிவேலுவையோ சட்டை பண்ணுவதில்லை! வடிவேலுவுக்கு மட்டும் பொன்னம்மாள்மீது ரொம்ப நாளாகவே ஒரு 'கண்'. அவன் அவளுடைய வீட்டுக்கும் பக்கத்து வீட்டில் குடியிருப்பவனும் கூட. சவாரி கிடைக்காமல் இருக்கும்போது அவளிடம் வலுவில் வந்து பேச்சுக் கொடுப்பான். பொன்னம்மாளோ அவனைத் தூக்கி யெறிந்து பேசி விரட்டி விடுவாள். இயற்கையிலேயே அவள் முரட்டுக் குணம் மிக்கவள். யாரிடமும் துடுக்கும் வெடுக்குமாகவே பேசுவாள்.

ஆனால் தங்கப்பனோ அவளுக்கு நேர் எதிரான குணமுள்ளவன். பரமசாது. அவனை ஓர் அசடு என்றும் சொல்லலாம்.

று பின்னேபோல் அச்சமின்றி தமாஷாகப் பேசுவான். எதற்கெடுத்தாலும் வாய்விட்டுக் கலகலவெனச் சிரிப்பான். இவனுக்கு எப்படித்தான் ரயில்வே வேலை கிடைத்ததோ? ஆயினும் இவ்விருவரின் இந்தக் குண வேறுபாடுகள்தான் அவர்களுக்குள் ஒரு பிணைப்பை உண்டு பண்ணின எனலாம். மின்சாரத்தின் மாறுபட்ட இரு சக்திகளால்தானே விளக்கு எரிகிறது?

பேசப் பழக்கம் ஏற்பட்டுப் பல மாதங்களுக்குப் பின், தங்கப்பனும் பொன்னம்மாளும் காதலர்களானார்கள் என்பதைவிட, கல்யாணம் செய்து கொள்ளும் முடிவுக்கு வந்தார்கள் என்று சொல்வதுதான் பொருந்தும். பெண்ணின் தாயார்க்காரியும் இதற்குச் சம்மதம் அளித்து விட்டாள், ரயில்வேயில் வேலை செய்யும் மாப்பிள்ளை கிடைப்பது அத்தனை எளிதா என்ன? கல்யாணத்துக்கு நாளும் குறித்தாகிவிட்டது.

இந்நிலையில்தான் நேற்றிரவு அந்தச் சம்பவம் நடந்தது—

இரவு மணி ஒன்பது இருக்கும். ஜன நடமாட்டமும் வண்டிகள் போக்குவரத்தும் அதிகமில்லை. ஆனால் இரவு நேரப் பரபரப்பு வேகம் மிகைத்துக் காணப்பட்டது. அங்காடிக் கடைகள் ஏறக் கட்டப்பட்டு நடைபாதை வெறிச் சோடிக் கிடந்தது. ரிக்ஷா, ஜட்கா வண்டிகள் ஒன்றைக்கூடக் காணோம்.

லெவல் கிராஸிங் மணி அடித்தது. மணிச் சத்தம் கேட்டதும் தொலைவில் வந்து கொண்டிருந்த கார்களும் சைக்கிள்களும் இரட்டிப்பு வேகமெடுத்தன. பாதசாரிகள் ஓட்டமும் நடையுமாக ஓடி வந்தனர். கதவு சாத்தப்படுவதற்குள் ரயில் பாதையைக் கடந்துவிட வேண்டுமென்னும் பரபரப்பு அது.

தங்கப்பன் எழுந்து வந்தான். அவனுடைய மனம் மட்டுமே உற்சாகத்துடன் இருந்தது; உடல் ரொம்பவும் சோர்வுற்றுவிட்டது. நாள் முழுவதும் நடையாய் நடந்து இரும்புக் கதவுகளைச் சாத்திச் சாத்தித் திறப்பது சாமான்ய வேலையா என்ன? ஆனாலும் அவன் மிகுந்த பொறுமையுடன் வண்டிகளையும் ஜனங்களையும் போகவிட்டான், அப்படியும் நடமாட்டம் ஓயவில்லை. அதோ மிகத் தொலை தூரத்தில் மின்சார ரயில் வண்டியின் விளக்கு சூரியனைப்போல் தெரிகிறது. தங்கப்பன் விரைந்துபோய்க் கீழண்டைக் கதவைச் சாத்தினான். பிறகு அதே வேகத்துடன் வந்து மேலண்டைக் கதவை இழுத்தான்.

"போல்! போல்! கொஞ்ச நேரம் இரு. என் வண்டி போனப்புறம் சாத்திக்குவே." என்ற அதிகாரக் குரல் கேட்டது.

கதவைப் பாதிவரை கொண்டு வந்துவிட்ட தங்கப்பன் எரிச்சலுடன் நிமிர்ந்து பார்த்தான். வடிவேலுவின் குதிரை வண்டிதான் லெவல் கிராஸிங்கைக் கடக்க வந்து கொண்டிருந்தது.

"போல்! கதவைச் சாத்தாதே!" வடிவேலு மீண்டும் கத்தினான்.

தங்கப்பன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டான். இந்தப் பயலின் வண்டியையா போக விடுவது? ஆறு மாதங்களுக்கு முன் ஒரு நாள் அப்படி விட்டுத் தான் அந்த ஆபத்து வந்தது. அதைத் தங்கப்பன் மறந்து விடுவானா?

இன்றுபோல் அன்றும் இப்படித்தான் கதவைச் சாத்தும் வேளையில், வண்டியுடன் பாதையைக் கடக்க வம்பு பண்ணினான் வடிவேலு. தங்கப்பனும் போனால் போகிறான் என்று கதவைத் திறந்து வழி விட்டான். அது பகல் நேரம்தான். ஆனால் அவனுடைய சப்பாணிக் குதிரைக்கு என்ன வந்ததோ; தெரியவில்லை. தண்டவாளங்களின் நடுவில் போய் நின்று கொண்டு அப்படி இப்படி நகராமல் முரண்டு பண்ண ஆரம்பித்து விட்டது. தெற்கே ஒரு கூட்ஸ் வண்டியும், வடக்கே ஒரு மின்சார ரயிலும் வந்து கொண்டிருந்தன. பரபரப்படைந்த தங்கப்பன் கத்தினான். வடிவேலுவோ குறும்பாகச் சிரித்துக் கொண்டு தன் குதிரையுடன் கொஞ்சிக் குலாவி அதைச் சமாதானப்படுத்த ஆரம்பித்தான்.



ரயில் வண்டிகளோ சிக்னல் போஸ்ட் வரை நெருங்கி வந்து விட்டன. பிரமித்து நின்ற தங்கப்பன் திடீரென ஆவேசம் வந்தவன் போல் ஓடித் தண்டவாளத்தின் குறுக்கே நின்ற ஜட்கா வண்டியைப் பிடித்துத் தன் பலங்கொண்ட மட்டும் தெட்டித் தள்ளினான். மறுகணம், அந்தக் கலகலத்த வண்டி, குதிரையுடன் கட கடவென உருண்டுபோய்ச் சாத்தியிருந்த கதவண்டை தொபீரெனக் குடை சாய்ந்து விழுந்தது.

இன்னும் சற்றே தாமதித்திருந்தாலும் தங்கப்பனுடைய வேலை போய்விட்டிருக்கும். அவன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். எதிரும் புதிருமாக வந்த ரயில் வண்டிகள் லெவல் கிராஸிங்கைக் கடந்து சென்று விட்டன.

வடிவேலு தங்கப்பனை வாயில் வந்தபடி திட்டிக் கொண்டு சென்றான். அவனால்தான் பொன்னம்மாள் தன் வலையில் விழாமலிருக்கிறாள் என்ற கடுப்பு வடிவேலுவுக்கு நீண்ட நாட்களாக உண்டு. அந்தக் குரோத உணர்ச்சியைத்தான் இப்போது அவன் காட்டிக்கொண்டான். ஆனால் தங்கப்பனோ அன்று முதல் அவனுடைய வண்டியின்மேல் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கலானான்.

"அதெல்லாம் முடியாது. அதோ, வண்டி வந்துடிச்சு. கொஞ்ச நேரம் அப்படியே நில்லு" என்று சொல்லிக் கதவைச் சாத்த முயன்றான் தங்கப்பன்.

வடிவேலு நிற்கவில்லை. "அட, இருப்பா. அவசரமா ஆஸ்பத்திரிக்குப் போகணும்" என்று சொல்லிக் கொண்டே வண்டியை முரட்டுத்தனமாக முன்னே செலுத்தினான். குதிரையும் கழுத்தை நீட்டிக் கொண்டு உள்ளே புக முயன்றது.

தங்கப்பனுக்குக் கோபம் வந்து விட்டது. "முடியாதுன்னா முடியாது!" என்று கத்திக் கொண்டே குதிரையின் முகத்தைப் பிடித்துப் பின்னுக்குத் தள்ளி விட்டுக் கதவைப் படீரெனச் சாத்தினான்.

அடுத்த கணம்?

"நீ என்ன, ஒரு மனுசன்தானா? ஆபத்து சமயத்திலேகூட அதிகாரம் பண்றயே" என்ற சீற்றமான குரல் கேட்டுத் திரும்பினான் தங்கப்பன். ஜட்கா வண்டியிலே இருந்து பொன்னம்மாள் தான் இறங்கி அவனிடம் ஓடிவந்தாள்.

"நீயா பொன்னம்மா? என்ன விஷயம்? எங்கே போறே?" என்று திகைப்புடன் கேட்டான் தங்கப்பன்.

"முதல்லே கதவைத் திறந்து விடு. ஆஸ்பத்திரிக்குப் போகணும். சீக்கிரம்" என்று ஆத்திரமும் அழுகையும் அடைக்கச் சொன்னாள் பொன்னம்மாள்.

"ஆஸ்பத்திரிக்கா? எதுக்கு?"

"சற்று முன்னாலே என் அம்மா திண்ணைத்தடியிலே சறுக்கி விழுந்துடிச்சு. மூச்சுப் பேச்சு இல்லே. அதைத்தான் வண்டியிலே போட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கிட்டுப் போறேன். கொஞ்சம் சுருக்கா கதவைத் திறவேன்."

பொன்னம்மாள் விம்மலும் பொருமலுமாகக் கெஞ்சினாள். தங்கப்பன் பதற்றமடைந்தான். இதை வேடிக்கை பார்த்தவாறு பீடி குடித்துக்கொண்டிருந்தான் வடிவேலு.

"கொஞ்சம் இரு, பொன்னம்மா. ரயில் போனதும் கதவைத் திறக்கிறேன்...."

"ஐயோ, நேரமாவுதே. நான் என்ன பண்ணுவேன். போறதுக்கு வேற வழிகூட இல்லியே..... உனக்குப் புண்ணியமாய்ப் போவும்; கொஞ்சம் கதவைத் திறவேன்."

பொன்னம்மாள் துடித்தாள். ஓடிப்போய் வண்டியில் பிணம்போல் கிடக்கும் தன் தாயைத் தொட்டுப் பார்த்தாள். மூச்சு இருக்கிறது; ஆனால் பிரக்ஞை தெரியவில்லை. அவள் 'ஓ'வென அழவே ஆரம்பித்து விட்டாள்.

தங்கப்பன் நெருப்பில் நிற்பதுபோல் தவித்துக் கொண்டு நின்றான். எதிரே வந்தவண்டி லெவல்கிராஸிங்கைக்கடந்து சென்றது. ஆயினும் பின்னாலிருந்து இன்னொரு ரயில் வண்டி வருவது தெரிந்தது.

'ஸ்பீர் - லைட்' எரியவில்லை. அதனால் கதவைத் திறக்க முடியவில்லை. தங்கப்பன் விரும்பினாலும் திறக்க முடியாது. சாத்துவது மட்டும் தான் அவன் பொறுப்பு. இது என்ன சோதனை?

நெருப்பின்மேல் நிற்பதுபோல் நின்றான் தங்கப்பன். ஐந்து, பத்து, பதினைந்து நிமிஷங்கள் கழித்து அந்தப் பாழாய்ப் போன வண்டி கடந்து சென்றது. தங்கப்பன் அவசரமாக ஓடிப் போய் இரும்புக் கதவுகளைத் திறந்து விட்டான். வடிவேலு ஜட்கா வண்டியை ஓட்டினான்.

கீழே நின்ற பொன்னம்மாள் ஜட்காவின் பின்னால் விறைப்புடன் ஏறி உட்கார்ந்து தங்கப்பனை எட்டிப் பார்த்து, "ஓஹோ! நீ இப்படிப்பட்ட ஆளா? எனக்குத் தெரியாமப் போச்சே. உன்னோட அதிகார ஜபர்தஸ்தை யெல்லாம் வேணுமின்னே என்கிட்ட காட்டிப் பார்த்தாயா? சீ! நீயும் ஒரு மனுசனா?" என்று உரத்த குரலில் கூவிக் கூவினாள். வண்டி தொலைவில் சென்று மறைந்தது.

தங்கப்பன் அடித்துவைத்த சிலைபோல் அப்படியே திகைத்து நின்று விட்டான்!

மறுநாள் பொழுது விடிந்ததும் பொன்னம்மாளின் வீட்டுக்கு ஓடினான் தங்கப்பன். அவனுடைய தாயார் நல்லபடியாக வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தாள். தங்கப்பனைக் கண்ட அவள் திடீரென எழுந்து நின்று வசை பாட ஆரம்பித்து விட்டாள். இச்சமயம் காய்கறிக் கூடையுடன் அங்கு வந்த பொன்னம்மாளும் தன் தாயுடன் சேர்ந்து கொண்டு அவனை வையத் துவங்கினாள். தங்கப்பன் உண்மை நிலையை எப்படி யெல்லாமோ எடுத்துச் சொல்லியும் அவள் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை. "இனிமேல் உன் முகத்திலே விழிக்கமாட்டேன்" என்று கூறி அவனை விரட்டியே விட்டாள் பொன்னம்மாள்.

பலத்த அதிர்ச்சியுடன் தங்கப்பன் திரும்பினான். ஆனாலும் அவன் நம்பிக்கை இழக்கவில்லை. பொன்னம்மாள் முன்கோபக்காரி என்பது அவனுக்குத் தெரியும். சிலநாட்கள் கழிந்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று எண்ணினான்.

ஆனால் சற்று முன் வந்த வடிவேலு, அவளுக்கு மார்க்கட்டில் கடை பிடித்துக் கொடுத்ததுமல்லாமல், கல்யாணப் பத்திரிகை அச்சடிக்கப் போவதாகவும் சொன்னானே!....

மணிச் சத்தம் கேட்டுச் சிந்தனை கலைந்த தங்கப்பன் கதவுகளைச் சாத்த எழுந்தான்.

ஏழு நாட்கள் எப்படியோ ஓடி மறைந்தன. அன்று மாலை ஏழு மணியிருக்கும். வழக்கம்போல் ஜன நடமாட்டமும் வண்டிகளின் போக்குவரத்தும் அதிகமா யிருந்தன.

தங்கப்பனுடைய கண்கள் அடிக்கடி அந்த நடைபாதைப் பக்கமே சென்று திரும்பிக் கொண்டிருந்தன. ஆனால் அந்த இடம், கடந்த ஏழு நாட்களாக வெறிச்சோடிக் கிடந்தது. அது தெரிந்திருந்தும், பழக்கத்தின் காரணமாக அவனது கண்கள் அப்படி அலைபாய்ந்து கொண்டிருந்தன.

இந்தச் சமயத்தில், பாண்டு வாத்தியங்கள் - நாதஸ்வரம் முதலானவற்றின்


"டக்மாஸ்டர்! பட்டாசு கொளுத்துகிறீர்!"

ஒலிக் கலவை காதைத் துளைக்கவே, அவன் மெள்ளத் தலைநிமிர்ந்தான்.

எதிரே லெவல் கிராஸிங்கை நோக்கி, ஒரு கல்யாண ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. ஏழைகளின் கல்யாணம்தான். ஆனால் கூட்டம் அதிகமாயிருந்தது. ஊர்வலத்தின் நடுவில் நன்றாக ஜோடிக்கப்பெற்ற வண்டி யொன்று வந்தது. பெண்ணும் மாப்பிள்ளையும் அதில் உட்கார்ந்திருக்கிறார்கள் போலும்.

தங்கப்பன் அசுவாரஸ்யமாகச் சற்று ஒதுங்கிப் போய் நின்று கொண்டான். அவனுடைய மனம் அப்போது எதையெதையோ எண்ணிப் புலம்பியது. அன்றிரவு அந்தச் சம்பவம் நடந்திராவிட்டால் இந்நேரம் அவன்?

கல்யாண ஊர்வலம் ரயில்வே கேட்டினுள் வந்து நுழைந்தது. முன்னால் வந்த பாதி ஜனக்கூட்டம் ரயில் பாதையைக் கடந்து விட்டது.

இந்தச் சமயத்தில்தானா மணி அடிக்க வேண்டும்? திருநெல்வேலி எக்ஸ்பிரஸ் வரும் நேரம் அது!

தங்கப்பன் சற்று கலவரமடைந்தான். ஊர்வலத்தினரைச் சீக்கிரம் போகச் சொல்லிக் கத்தினான். ஜனக் கூட்டம் அதிகமிருந்ததால் விரைவில் நகர்வதாயில்லை. எக்ஸ்பிரஸ் வண்டி அதோ வருவது தெரிகிறது. தங்கப்பன் உரக்கக் கத்தினான். பயனில்லை. பாதிக்கூட்டம் கூட வெளியேறவில்லை. கல்யாண வண்டி அப்போதுதான் இரும்புக் கதவருகில் நெருங்கிக் கொண்டிருந்தது. என்ன செய்வது? ஊர்வலத்தை இரண்டாகப் பிரித்து, அந்தப் பக்கம் பாதியும் இந்தப் பக்கம் பாதியுமாக நிறுத்திவிட்டுக் கதவைச் சாத்த வேண்டியதுதான். அதுவரை, பெண்ணும் மாப்பிள்ளையும் நிற்க வேண்டியதுதான், நிற்கட்டுமே!...

உரத்த குரலில் சத்தம் போட்டுக் கொண்டே கதவைச் சாத்த ஓடிய தங்கப்பன், ஏதோ ஒன்றால் தடுத்து நிறுத்தப்பட்டவன் போல் திடுக்கிட்டு நின்று பரபரப்புடன் எதிரிட்டுப் பார்த்தான்.

பூக்களால் அலங்கரிக்கப் பெற்றிருந்த பெட்டி வண்டியில் பொன்னம்மாள் மணப்பெண்ணாய் வீற்றிருந்தாள்! அவளருகில் வடிவேலு மாப்பிள்ளைக் கோலத்தில் கம்பீரமாக அமர்ந்திருந்தான்! ரயில்வே கதவைச் சாத்திவிட்டால் அரை மணி நேரம் இங்கே காத்துக் கிடக்க வேண்டுமே என்ற கலக்கம் அவ்விருவர் முகத்திலும் கப்பி யிருந்தது!

தங்கப்பன் கண்ணிமைக்காமல் பொன்னம்மாளையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய நெஞ்சு தீப்பற்றிக் கொண்டதுபோல் எரிச்சலெடுத்தது. உடல் கிடுகிடுவென அதிர்ந்து நடுங்கியது.

எக்ஸ்பிரஸ் ரயில் வண்டி அதோ, வந்து கொண்டிருக்கிறது. கதவு இன்னும் சாத்தப் படவில்லை. மணி இன்னும் அடித்துக் கொண்டிருக்கிறது. ஜனங்கள் பீதியடைந்து ஓடுகின்றனர். பெண்ணும் மாப்பிள்ளையும் அமர்ந்திருந்த வண்டி இரும்புக் கதவைத் தாண்டி வந்து விடுகிறது!...

தொலைவில் வரும் ரயில் வண்டியையும், கல்யாணக் கோலத்திலிருந்த பொன்னம்மாளையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றான் தங்கப்பன். இதுவரை நெருப்பாகக் கொதித்துக் கொண்டிருந்த அவன் உள்ளமும் உடலும் ஏதோ ஓர் எண்ணத் தாக்குதலால் திடீரெனப் பனிக் கட்டியாகச் சில்லிட்டு உறைந்தன.

உடம்பை ஓர் உலுக்கு உலுக்கிக் கொண்டு ஊர்வலத்தை ஊடுருவி மறுபக்கம் பாய்ந்து சென்றான் தங்கப்பன். அப்படி ஓடிய அவன், ரயில் பாதையின் நடுவில் ஏறி நின்று, வண்டி வரும் திசையில் திரும்பி, தன் கையில் இருந்த விளக்கைச் சிவப்பாக்கித் தூக்கி ஆட்டி அசைத்தான்.

வாயு வேகமாக வந்து கொண்டிருந்த எக்ஸ்பிரஸ் வண்டி ஒரு நீண்ட விசில் அடித்துக் கொண்டே கரும்புகையைக் கக்கியது. லெவல் கிராஸிங் கதவுகள் சாத்தப் படாததால் அரை பர்லாங்கு தூரத்திலிருந்த சிக்னல் கம்பத்தில் பச்சை விளக்கு எரியவில்லை. அதனால் வண்டி தன் வேகத்தைக் குறைத்து அந்தக் கம்பத்தின் அருகில் வந்து நின்றே விட்டது!

தங்கப்பன் சிவப்பு விளக்கு காட்ட வேண்டிய அவசியமே இல்லை. ஆனாலும் அவன் சிவப்பு விளக்கை அசைத்தவாறே கல்யாண ஊர்வலத்தினரைப் பார்த்து, "பயப்படாதீங்க! மெள்ளப் போங்க! நிதானமாவே போங்க!" என்றான் கரகரத்த குரலில்.

லெவல் கிராஸிங்கைக் கல்யாண ஊர்வலம் கடந்து விட்டது. மாலையும் கழுத்துமாக வண்டியில் உட்கார்ந்திருந்த பொன்னம்மாள் மெதுவாகப் பின்னால் திரும்பித் தங்கப்பனைப் பார்த்தாள். ஆனால் தங்கப்பன் அவளைப் பார்க்கவில்லை. தன் கண்களைத் துடைத்துக் கொண்டு சாவதானமாகப் போய்க் கதவுகளைச் சாத்தினான்.

இந்தச் செய்கையினால், அவனுடைய வேலைக்கு வரவிருக்கும் வில்லங்கத்தைப் பற்றி அவன் கொஞ்சமும் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை..

அவனது இந்த விசித்திர மனப் போக்கை என்னென்பது? கூரிய முட்கள் நிறைந்த சப்பாத்திப் பழம் பார்ப்பதற்கு அருவருப்பாகத்தான் இருக்கிறது; ஆனால் அதன் உள்ளே என்ன அழகான வர்ணம்! எவ்வளவு இனிய சுவை!. ஒவ்வொரு மனிதனின் உள் மனமும் இப்படிப் பட்டது தானோ?

# தென்னாட்டுக் கவிஞர்கள்

[ஆந்திரம், தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு தென்னக மொழிகளுக்கும் தங்கள் புலமையால் வளமூட்டி, புவியரசர்களும் புகழ்ந்துபோற்றிப் பணிந்த கவியரசர்களின் வாழ்க்கை வரலாறுகளைச் சித்திரவடிவிலே அழகுபெற அமைத்துக் காட்டி இருக்கிறார்கள் புகழ்பெற்ற ஓவியர்கள் நால்வர்]

**ஆந்திர மகாகவி அல்லஸானி பெத்தனா:** அல்லஸானி பெத்தனா என்றதும் சீரும் சிறப்புமாக விளங்கிய விஜயநகர சாம்ராஜ்யமும், கிருஷ்ணதேவராயரும்—அவரது அவையை அலங்கரித்த அஷ்டதிக்கஜங்களும் தான் நம் நினைவுக்கு வரும். ராயரின் அவைக் கவிஞர்களின் தலைவராக விளங்கியவர் பெத்தனா. அல்லஸானி என்பது குடும்பப் பெயர். பெத்தனா பெல்லாரி ஜில்லாவைச் சேர்ந்தவர். ராயருக்குப் பெத்தனாவிடம் அளவு கடந்த அன்பும் மதிப்பும் உண்டு.

ஒரு சமயம் பெத்தனா இருபத்தொன்பது வரியில் வடமொழியும் தெலுங்கும் சமமாக வரும்படி 'உற்பல மாலா' என்ற விருத்தத்தைப் பாடினார். அதன் சொற்சுவை, பொருட் சுவையில் மெய்மறந்து போன ராயர் தம் சிங்காதனத்தை விட்டு இறங்கி ஓடி வந்து பெத்தனாவின் காலில் தம் கைகளாலேயே நவரத்தினக் கழலை அணிவித்துப் பெருமை செய்தார்.

ஆந்திர மொழியிலே பிரபலமானது 'மநு சரிதம்' என்ற நூல். ஆந்திர நாட்டிலே மநு சரிதம் அறியாத மனிதர்களோ இந்த நூல் புகாத வீடோ கிடையாது.

பெத்தனா மநு சரித்திரத்தைப் பாடி முடித்துவிட்டார். அதை மன்னரிடம் சமர்ப்பணம் செய்ய நாளும் குறித்தாகி விட்டது. நகரம் அன்று விழாக்கோலம் பூண்டிருந்தது. கவிஞரை அரண்மனைக்கு அழைத்துச் செல்ல அவர் வீட்டு வாயிலில் பல்லக்குக் காத்திருந்தது. கவிஞர் களிப்போடு வெளியில் வந்து பல்லக்கில் ஏறி அமர்ந்தார். பல்லக்கைத் தூக்கப்போகும் சமயத்தில் திடீரென்று எங்கிருந்தோ வந்தார் கிருஷ்ணதேவராயர். கவி பெத்தனா அமர்ந்துள்ள பல்லக்கைத் தாமே தம் தோளில் தாங்கிச் சுமந்தபடி அரண்மனைக்கு அழைத்து வந்தார். அற்புதமான நூலான மநு சரித்திரத்தைப் பாடிய பெத்தனாவைத் தகுந்த முறையில் கௌரவித்து அந்த நூலைப் பெற்றுக் கொண்டார்.

**தமிழ்க்கவி ஒட்டக்கூத்தர்:** தமிழ்த் தாய்க்குத் தம் பாமாலைகளால் அழகு செய்த புலவர்களுள் ஒட்டக்கூத்தரும் ஒருவர். உலாவும், பரணியும் பாடுவதில் நிகரற்றவர் கூத்தர். அமானுஷ்ய அம்சங்களை வருணிப்பதில் வல்லவர். இவர் பாடியது பதினொரு நூல்கள். தக்கயாகப் பரணி என்ற நூல் இவர் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

கூத்தருக்குக் கலைத்தெய்வமான சரஸ்வதி 'சகல கலா நிலயம்' என்ற ஒரு தெய்வீக நூலைக் கொடுத்து மறைந்தாள். அப்பொழுதுதான் சரஸ்வதியந்தாதி என்ற நூலைக் கூத்தர் இயற்றியதாகக் கூறுவர்.

ஒட்டக்கூத்தர் செங்குந்த மரபைச் சேர்ந்தவர். பந்தயம் வைத்துப் பாடுவதில் பெயர் பெற்றவராதலால் (ஒட்டம் - பந்தயம்) ஒட்டக்கூத்தர் என்று அழைக்கப்பட்டாராம். விக்கிரமசோழன், குலோத்துங்கசோழன், இராசராசன் ஆகிய மன்னர்களின் ஆஸ்தான கவியாகத் திகழ்ந்தவர் ஒட்டக்கூத்தர். 'ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்' என்று நம் தமிழ்நாட்டில் வழங்கும் பழமொழி நமக்கெல்லாம் தெரியுமே.

இரண்டாம் இராசராசன் காலத்தில் கூத்தருக்கு மிகவும் வயதாகிவிட்டது. முதுமையின் காரணமாக அவர் தடுமாறித் தளர்வுறுவது கண்டு இராசராசன் புலவரைத் தாங்கிப் பிடித்துக் கைகொடுத்து உதவுவானாம். இதனால் மன்னருக்கு இந்தப் புலவர்பாலுள்ள அன்பும் மரியாதையும் அபிமானமும் விளங்குகின்றன.

**துஞ்சத்து எழுத்தச்சன்:** முன்பு வெட்டத்து நாடு என்று வழங்கிவந்த மலபார் மாவட்டத்தில், பொன்னானி நதிக்கரையில், திருக்கண்டியூர் என்றொரு சிவ க்ஷேத்திரம். அங்கு, 'துஞ்சன் பறம்பு' என்றொரு புனிதமான இடம் இன்றும் பிரபலமாக உள்ளது.

அங்குதான், 16ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மலையாள எழுத்துக்கும் கவிக்கும் தந்தையெனப் போற்றப் பெறும் குருநாதன் துஞ்சத்து எழுத்தச்சன், சக்கால நாயர் குடியில் பிறந்தார். இவர் பிரசித்தமான 'ராமாயணம் கிளிப்பாட்டு' என்ற காவியத்தை சமஸ்கிருதத்திலுள்ள 'அத்யாத்ம ராமாயண'த்தை அடிப்படையாகக் கொண்டு இயற்றினார்.

சோகநாசினி நதிக்கரையில் ஒரு சிவாலயத்தையும், ஸ்ரீராமர் கோயிலையும் நிறுவி, ஸ்ரீராமர் கோயிலுக்கு எதிரே, இருசாரிகளிலுமாகப் பன்னிரண்டு வீடுகளைக் கட்டி, அவைகளில் தமிழ் நாட்டிலிருந்து மறையோதிய நெறியாளர்களான பன்னிரண்டு சைவ வேளாளக் குடும்பத்தாரை வரவழைத்துக் குடியிருத்தினார்.

மலையாள மொழிக்கு இன்றுள்ள எழுத்துக்கு முதல் வடிவம் தந்தவர் எழுத்தச்சனேதான். கன்னலிய கவிக்கும், கவியின் வரிவடிவமான எழுத்துக்கும் ஆசான் ஆனதால் 'எழுத்தச்சன்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார். முதல் முதலாகக் குழந்தைகளைப் படிக்க வைக்கும் போது, 'துஞ்சன் பறம்பு'த் தோட்டத்திலிருந்து மண் கொண்டு வந்து, அதில் எழுத்தெழுதிக் கற்பிப்பது இன்றும் கேரளத்தில் பெருவழக்காக உள்ளது.

**கவி கனகதாசர்:** பழங்காலப் பள்ளிக்கூடம் ஒன்று; வகுப்பில் பாடம் நடந்து கொண்டிருந்தது. உபாத்தியாயர் திடீரென்று, 'உங்களுள் யார் சுவர்க்கத்துக்குப் போகிறீர்கள்?' என்று கேட்டார். ஒரு சிறுவன் மட்டும் தயங்காமல் எழுந்திருந்து 'நான் போகிறேன்!' என்றான்.

இந்தச் சிறுவன்தான் பிற்காலத்தில் பிரசித்தி பெற்ற, 'தாசர பதகளு' எனப்படும் கன்னட இலக்கியத்தைப் படைத்த பரம பக்தர் ஆனார்.

தார்வாடா ஜில்லாவைச் சேர்ந்த பங்காபூர் தாலூக்காவில் 'பாட' என்னும் கிராமத்தில் இவர் பிறந்தார். இவர் வேடர் வகுப்பைச் சேர்ந்தவர் என்றும் குறும்பர் குலத்தில் பிறந்தவர் என்றும் இரண்டு கொள்கைகள் இருக்கின்றன. தாய்தந்தையற்ற அநாதையாக இவர் அலைந்து கொண்டிருந்தபோது ஒரு சமயம் இவருக்குப் பொன் புதையல் அகப்பட்டதாம். சந்நியாசிக்குப் பொன்னால் பயன் என்ன? இவர் பொன்னை ஏழை எளியவர்களுக்கு வாரி வழங்கினார். அதுமுதல் இவருக்குக் கனகதாசர் என்ற பெயர் வந்தது.

உடுப்பி கிருஷ்ணன் கோயிலில் ஏதோ விழா. உள்ளே பூஜை நடக்கிறது. குளித்து மடியுடுத்துப் பல வைதிக விற்பன்னர்கள் உள்ளே போன வண்ணமாய் இருக்கிறார்கள். ராஜ கோபுர வாயிலில் ஓர் ஆசாமி நிற்கிறான். அவரே கனகதாசர். தாசன் ஒருவன் குறுக்கே நிற்பது ஆசார சீலர்களுக்குப் பிடிக்கவில்லை. ''தூரப் போய்த் தொலை!'' என்று சீறி விழுந்தார்கள்.

கனகதாசர் மனம் துன்புற்றது. யாரிடமும் பதில் பேசாமல் அங்கிருந்து கோயிலின் கர்ப்பக் கிருகத்துச் சுவருக்குப் பின் பக்கத்தில் போய் நின்றார். கண்ணீர் ஆறாகப் பெருக, ''அப்பனே! என் ஆண்டவனே! நான் சாதியில் வேடனானதால் உனக்கும் வேண்டாதவன் ஆகிவிட்டேனா? உன்னை விட்டால் எனக்குப் போக்கேது!'' என்று கதறிப் பாடினார்.

என்ன அதிசயம்! இடிமுழக்கத்தோடு அந்தச் சுவர் பிளந்தது! பிளந்த சுவரின் இடைவெளியில் கண்ணன் சிலை தெரிந்தது. வாயிற்புறம் திரும்பி நின்ற கண்ணன் பின்புறமாகத் திரும்பி, பக்தனை அருள் நோக்கால் ஆண்டபடி நின்று கொண்டார்.

கனகதாசர் வெகுகாலத்துக்கு ஆசைதீர, அருகில் இருந்து, கண்ணன் திருவுருவைக் கண்களால் பருகியபடி அசைவற்று நின்றார். கனகதாசரது பக்தியின் சின்னமாக இன்றும் முதலில் இந்தக் கனகன் வாசல் வழியாகவே கண்ணனைக் காணும் வழக்கம் உடுப்பியில் உண்டு.

## தாளம் தவறியது !




"நீ இப்ப எந்தத் தாளத்துக்கு ஆடிண்டு இருக்கே ?"



The Holy Tank, Chidambaram

Photo: M. K. Rangaswami Aiyangar

"ஷண்முகம் பிராண்டு"



REGISTERED TRADE MARK

டெலிபோன் நெ. 3094 தந்தி: "SUITCASE"

## எமது மனமார்ந்த தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

"ஷண்முகம் பிராண்டு" ஸ்டீல் டிரங் ஒர்க்ஸ் ஸ்தாபனத்தார் சென்ற 31 ஆண்டுகளாக சீரிய முறையில் சேவையளிக்க வாய்ப்பளித்த அன்பர்கள், ஆதரவாளர்கள், வாடிக்கையாளர்கள், வியாபாரிகள் மற்றும் பொதுமக்கள் யாவருக்கும் இத் தீபாவளி நன்னாளில் எமது மனமார்ந்த வாழ்த்துக்கள்!

உயர்தரமான எஃகுத் தகடுகளினால் பல வருஷம் அனுபவம் வாய்ந்த தொழில் விற்பன்னர்களால் எங்கள் சொந்த தொழிற்சாலையில் உருவாக்கப்பட்டு பல வர்ணங்களில் ஸ்ப்ரே செய்யப்பட்ட ஸ்டீல் டிரங்குகள் - டேபிள் பிக்லிங் கேஷ் பாக்ஸ்-கோல்டு ஸேஃப் கேஷ் பாக்ஸ்-சூட் கேஸ்கள்-பேன்ஸி கேஷ் பாக்ஸ் - ஜுவல் பாக்ஸ் யாவும் தயாராகக் கிடைக்கும்.

ஆர்டர்களின்பேரில் ஸ்பெஷல் ரகங்களையும் தயாரித்து அளிக்கிறோம்.
தங்கள் தொடர்ந்த ஆதரவை மேன்மேலும் கோரும்,

C. ஞானசுந்திர நாயகர், உரிமையாளர்

# ஷண்முகம் பிராண்டு ஸ்டீல் டிரங்க் ஒர்க்ஸ்

341, எஸ்பிளனேட், சென்னை-1. ஷோ ரூம்: 1/14, பேக்கர் தெரு, சென்னை-1

பிராஞ்சு: 22, பொற்றாமரை வடகரை, கும்பகோணம் (தஞ்சை ஜில்லா)
பாக்டரி: 25, கச்சாலீஸ்வரர் தோட்டத் தெரு, மதராஸ்-1

# தி பாங்க் ஆப் காரைக்குடி லிமிடெட்

ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்: காரைக்குடி ஸ்தாபிதம்: 1936

மதராஸ் கிளை ஆபீஸ்: 2/38, கிடங்கு தெரு, மதராஸ்-1

பிராஞ்சுகள்: மதுரை, காரைக்குடி, திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, தேவகோட்டை, கரூர், ஆத்தூர் (சேலம்)

சேர்மன்: ஸ்ரீ M. S. M. M. மெய்யப்ப செட்டியார்

**சேவிங்ஸ்:**

அன்றாட நிலுவையின்பேரில் ரூ. 25000/- வரை 3% வட்டி கொடுக்கப்படும்.

**3 வருஷ காஷ் சர்ட்டிபிகேட்:**

இன்றைய முதலீடு ரூ. 86/- மூன்று வருட காலத்தில் ரூ. 100/- ஆகப் பெருகும்.
5¼% கூட்டு வட்டி தேறும்.

**ரெக்கரிங் டிபாஸிட்:**

பிரதி மாதம் மீத்து வைக்கும் ரூ. 1/-, 45 மாதங்களில் ரூ. 50/- ஆகப் பெருகும்.
இதேபோல்
ரூ. 450/-க்கு ரூ. 500/- ஆகவும்
ரூ. 4,500/-க்கு ரூ. 5000/- ஆகவும்
திரும்பப் பெறலாம்.
வட்டி ரேட் 5¼% தேறுகிறது.

**பிக்ஸட் டிபாஸிட்:**

ரூ. 5000/-மும் அதற்கு மேற்பட்ட தொகைகளும் ஸ்பெஷல் ரேட்டுக்கு ஏற்றுக் கொள்ளப்படும்.

பூரா விவரமும் நேரிலோ தபால் மூலமாகவோ பெற்றுக் கொள்ளலாம்

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் நடத்தப்படும்

T. K. N. PANIKKER, C.A.I.I.B., செகரட்டரி



ளைச்சு இன்னும் மூணு இலை விடவில்லை; கூப்பிடறேன், திரும்பிப் பார்த்துவிட்டு ஓடறதே..அந்தக்குட்டி!''

''எந்தக் குட்டி லக்ஷ்மி? உன்னிடம் கூடவா முறைக்கிறது? ஆச்சரியமாக இருக்கிறதே!''

''இருக்கும்! ஆச்சரியமா யிருக்கக் கேட்பானேன்? சொல்லி வைத்தாற் போல் இந்தப் பெண் பேரும் கமலம்!''

''என்னது, கமலமா?''

''இது வேறே கமலம்! புதுக் கமலம். புதுசா எதிர்வீட்டு அவுட்ஹவுஸிலே குடி வந்திருக்கிறவர்களோட கமலம் போலிருக்கு! உங்க மனசிலே குடியிருக்கிற கமலம் இல்லே! அவள் மூல விக்கிரகமாக அல்லவா உங்க மனசிலே வேரோடி யிருக்காள்! இந்தப் பேச்சு வந்தால்...''

நான் சிரிப்பேன். இப்பொழுதும் என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

''சிரிப்பு! இந்தச் சிரிப்பு இல்லாத போனால் வியாக்கியானம்! 'என் கண்ணைத் திறந்தவள் அவள்' என்பீர்கள்!''

''ஆமாம், உண்மைதான். அவளை மறந்து விட்டேன் என்று பொய் வேண்டுமானால் சொல்லலாம். அப்படிச் சொல்ல எனக்கு விருப்பமில்லை.''

''விருப்பமில்லாத போனால் பூஜை பண்ணிக் கொண்டிருங்கள். 'என் கண்ணைத் திறந்தவள், மூக்கைத் திறந்தவள்...!' என்று. எனக்கு உள்ளே வேலை இல்லாமல் இல்லை. போகிறேன்.''

★

அன்று நான் முதன் முதலில் கமலத்தைக் கண்டபோது, அறியாப் பருவம் தெரிய ஆரம்பித்த நிலை. கண்டதும் கமலம் என் கண்ணைத் திறந்துவிட்டாள். அதாவது பருவம் எட்டிப் பார்க்கையில், பருவத்தைப் பருவம் நுகரத் துடிக்கும் ஓர் உணர்வு வாலையின் வாழ்வில் எழும் முதல்குருத்துப்போல் என்வயதில் எனக்கு ஏற்படுகையில் ஏதோ என்னுள் மூடி கழன்றதுபோல் தோன்றுகிறது. அதை ஒரு கண்ணெனக் கருதி, 'அந்தக் கண்ணைத் திறந்தவள் கமலம்' என்கிறேன்.

திடீரென்று ஒருநாள் காலையில், சூரியோதயத்துக்கு இணையாக ஏதோ உதயம் ஆனதுபோல் என் வாழ்வில் முதன் முதலாகத் தரிசனம் தந்தாள் அவள்.

இப்போதுபோல் அப்போது நான் சென்னைவாசியல்ல; ஆறு கழித்தோடி, குளம் அலைமோதி, பச்சை சூழ் பயிர்கள் வளர்ந்தோடிக் கிடந்த சூழ்நிலையில் உயிர் கொண்டு விளங்கியதோரு ஊரில் இருந்தேன். அந்த ஊரின் மண்ணை முதன் முதலில் மிதித்து, அசப்பில் நான் ஏறிட்டுப் பார்த்தபோது பூமியினின்று தோன்றிய ஒரு மாய உருவம்போல் காட்சியளித்த அவள் என்னுடைய மனத்தைச் சொடுக்கிவிட்டாள்.

நான் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவளும், அவள் தாயாராகத் தோன்றிய ஓர் அம்மாளும் என் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். அவர்களைக் கொண்டு வந்து இறக்கிய ஜட்கா வண்டி வட்டமொன்று அடித்துப் பறந்து சென்றது. அந்தத் தெருவின் குருத்துக்களில் நான் ஒருவன்; தலைமைக் குருத்து என்று சொல்லலாம். ஏனெனில், அதோ....தெருச் சந்தியில் நிற்கும் நாலைந்து குருத்துக்களும் எனக்கு எங்கும் எப்போதும் நிழல்களாக அமைந்து விடுகிற வழக்கம். இப்போது நான் அவர்கள் நின்றிருந்த இடத்துக்குப் போகும் போது இத்தனை நாட்களாக இல்லாத முறையில், நிர்மலமான மனத்தில் ஒரு நினைவைத் தாங்கிச் செல்கிறேன். அது அவள் நினைவுதான். வண்டியில் வந்து இறங்கிப் பூமியில் புதைத்து எழுந்தாற்போல், புதுமையாக எழுந்து நின்ற தோரணை என் மனத்தில் வந்து புகுந்து விடவே விறுவிறுத்தது. வண்டும் சுனையும் துளைத்த தம் கூட்டைத் தேடி நுழைய விறுவிறுக்கும் நிலையில் அந்த நினைவு விறுவிறுத்தது.

''நாங்க புதுசா பக்கத்து வீட்டுக்குக் குடி வந்திருக்கோம். வர்றதுக்கு முந்தி விறகு வாங்கப்படாதுங்கறதனுலே இரண்டு விறகு கடனு வாங்கிண்டு வரச் சொன்னு எங்க அம்மா. எங்க வீட்டுக்கார அம்மாளைக் கேட்டதுலே அவா வீட்டு விறகு ஈரம்னு சொன்னு...''

''அந்தம்மா நெஞ்சிலே மில்லாத ஈரம் அவாளுடைய வீட்டு விறகிலே யாவது இருக்கே, அதைச் சொல்லு...! இரண்டு என்ன, நாலாத் தரேன்; எடுத்துப் போ. நீங்க யாரார் குடி வந்திருக்கிறீர்கள்? உங்கப்பா....?''

# கண்திறந்தாளென் கமலம்

வை. சுப்ரமண்யன்

"எனக்கு அப்பா இல்லே. என் ஒரு வயசுலே காலமாயிட்டாராம். எங்கம்மா சமையல் பண்ணிப் போட்டுக் கொண்டிருக்கா. இங்கே யாரோ 'சப் ரிஜிஸ்ட்ரா'ராமே அவர் வீட்டிலே சமையலுக்கு ஏற்பாடு ஆகியிருக்கு..."

உடம்போடு விறகை அணைத்துக் கொண்டு வெளி வந்து என்னைத் தாண்டிச் சென்றாள் கமலம். தாண்டிய போது எங்கள் பார்வைகள் கலந்தன. பார்வையை வீசிய அவள் அவளது கண்களையும் என்னுள் வீசி எறிந்து விட்டாற் போல் தோன்றியது. சந்தனத்தை மூக்கில் இடுக்கியபடி தன் குண்டுமணிக் கண்களால் ஏறிட்டுப் பார்க்கும் குருவியைப் போல் அவள் பார்த்தாள். என்னை எதிர்பாராமல் அங்கே கண்டதில் ஏற்பட்ட மருட்சியோ, அதிர்ச்சியோ, எதுவென அப்போது தெரியாது. இப்போது தெரியும் — அந்தப் பார்வையில் தேங்கியிருந்தது. அப்படிப் பார்த்த அவளது கண்களை என்னுள் விழித்துக் கொண்டு என்னை உற்சாகப்படுத்தின.

என் உற்சாகம் என்ன வகை என்று தெரியாத என் தாயார் எனக்குப் பழையதைப் பிசைந்துபோட்டபடி, "இப்போ வந்துவிட்டுப்போறதே இந்தப்பொண்ணு உன் வயதாகத்தான் இருக்கும். பார்த்தால் ரொம்பப் புத்திசாலின்னு தெரியறது. எப்படி வெடுக்கு வெடுக்குனு பேசறது பார்த்தியா? நீயும் இருக்கியே!"

நெஞ்சில் இறங்குவது குளிர்ந்த பழையதுதான்; ஆனால், கமலத்தைக் கண்டது முதல் வந்து படிந்த ஒரு கடலைத் தாண்டித்தான் அந்தக் குளுமை செல்கிறது. அதனிடையிலும் அம்மாவின் வார்த்தைகளால் கிளறிவிட்ட அந்தச் சுடர் ஆடுவது எனக்கு நன்றாகத் தெரிகிறது. நானே கமலத்தைப் பற்றி வியந்து கொண்டுதான் இருக்கிறேன். அவளைப் பற்றிய நினைவுகளெல்லாம் தெளிவின்றனவே தவிரப் புரிவதானவல்ல. பார்வைக்குப் பொருள் தெரியவில்லை; பேச்சுக்கு உதாரணம் தெரியவில்லை. இப்போ தெளிவில், அவள் பேச்சுக்கு வீணை தோற்றதென்றுதான் முதலில் வரும்.

அப்போது ஒன்றும் தெரியவில்லை. ஒன்றும் தெரியவில்லையென்றும் சொல்ல முடியாது; ஒவ்வொன்றும் தெரிந்து கொள்ளும் முறையில் நான் பெரியவனானேன்.

★

பெரியவனாவதற்கு அடையாளம் எனக்கு வெளியூர்ப் படிப்பு நேர்ந்தது. உள்ளூரில் எட்டாவதற்குமேல் வகுப்புக் கிடையாது. ஒரு மாதப் பழக்கத்துக்குப் பின் கமலத்தைப் பிரிந்துவர நேர்ந்தது. அவள் பழக்கத்தின் மூலம் ஏற்பட்ட நினைவுகள் மனம் கொள்ளாமல் நிரம்பி வழிபவை; அல்லது நூலில் கோக்கக் கோக்கத் தரையில் குறையாமல் கிடக்கும் பவழங்கள் போன்றவை.

அவளை நினைப்பதற்கே எனக்குப் பொழுது சரியாயிருக்கும். வகுப்பில் பாடத்தைப் படிக்கும்போது, 'மங்கோலியர்களின் நிறம் மஞ்சள்' என்று வந்துவிட்டபின் தொடர்ந்து மஞ்சளில் மின்னிய முகத்துடனும் கால்களுடனும் கமலம் தோன்றுவாள். காவிரியில் குளித்து விட்டுக் கரையேறும்போது எதிர்ப்படும் பெண்களில் யாருடைய முகத்துக்குப் பதிலாகவாவது கமலத்தின் முகத்தை ஒட்டவைத்துப் பார்க்க முயன்றால் தோல்விதான். அவள் முகம் தனி முகம்; யாருடனும் ஒட்டாது. யாரைப் போலும் அவள் இல்லை. அவள் வழி தனி வழி. உருவம் தனி உருவம்.



பள்ளிக்கூடம் விட்டபொழுது, லீவு நாட்களில் என் நேரமெல்லாம் அவளைப் பற்றி நினைப்பதில் போகும்.

என் தாயாரிடத்தில் நன்றாக ஒட்டிக் கொண்டு விட்டாள் கமலம். குடிவந்த சில நாட்களில், விறகைத் தொடர்ந்து சமையல் சம்பந்தப்பட்ட சாமான்களுக்கென்று வருகிற போகிற சாக்கில் அந்த ஒட்டுதல் ஏற்பட்டது. அம்மாவுக்கும் அவளிடம் ஒரு பாசம் வேறு. பெண்ணில்லாத தன் குறையை எண்ணிக் கொண்டோ என்னவோ, அவளை இழுத்து வைத்துத் தலை பின்னுவாள்; பழையதைப் பிசைந்து போடுவாள்.

என்னிடம் அவள் முதல் முறை பேசிக்கொண்டு வந்த சமயம் என்னுள் ஒரு பரவசத்தை ஏற்படுத்திய மறக்க முடியாத சமயமாகும். "அம்பி, ஒர் இந்தியா படம்போட்டுத் தருவியா? உன்கிட்ட போட்டு வாங்கிக் கிட்டுமா என்று மாமிகிட்டகூடக் கேட்டுட்டேன். இயற்கையமைப்புப் படம் போடணும்."

என்னை இந்த விஷயத்தில் அவள் பெரியவனாக்கி வந்து பணிந்து விட்டாலும், நான் அவளது நெருக்கத்தினால் அடைந்த அதிர்ச்சியில் சின்னவனாகிக் கொண்டிருந்தேன். அந்த அதிர்ச்சி ஒரு வகையில் என்னுள் திருப்தியை உண்டுபண்ணிய உணர்வுதான். அது போன்ற எதற்காகவோ காத்துக்கூட இருக்கிறேனே.

'ம்' என்ற ஒரெழுத்து இசைவுக் குறிப்போடு படம் போடுவதில் இறங்கிவிட்டேன். படங்கள் போடுவதில் நான் நிபுணன் என்று பெயர். பள்ளிக்கூடப் படங்களில் மலைகளுக்குப் பழுப்பு நிறமும், நதிகளுக்குப் பச்சை நிறமும், கடல்களுக்கு நீல நிறமும் இழைத்து, அந்த நிறங்கள் கண்ணில் அடிக்கும்படி மெழுகி விடாமல், லாகவமாய்ச் செய்வதில் எனக்கு நானே இணை என்று பெயர்.

படத்தை வாங்கிக் கொண்டுபோன பெண் ஒரு 'தாங்க்ஸ்' கூடச் சொல்லாமல் போய்விட்டதே என்று நினைத்திருக்கையில் அவள் சாயங்காலம் வந்து, "அம்பி, இன்னிக்கு நீ போட்டுக் கொடுத்த படம் ரொம்ப நன்னயிருந்தது. டீச்சர் அந்த நோட்டை எல்லாரும் பார்க்கும்படி ஒரு 'ரவுண்ட்' அனுப்பினாள்" என்றாள்.

என் உள்ளத்தில் எழுந்த குளிர்வு உச்சிக்கு ஏறி விறுவிறுத்தது. படம் நன்றாக அமைந்து விட்டதற்காக அல்ல; கமலம் என்னுடன் பேசியதில் நான் கண்டதொரு இன்பம்தான் அதற்குக் காரணம்.

"எங்க டீச்சர் சொன்னதை விட நான் இன்னொரு தரம் ஸ்பெஷலாகச் சொல்றேன்: அம்பி, உன் படம் ஜோர்னு ஜோர்தான்!"

இந்த 'ஜோ'ரைக் கேட்டு என் முதுகு நிமிர்ந்தது. முன்பு குன்றிய உணர்வை ஒடித்துப் போட்டுக் கம்பீரமாக அவளுடன் பேச நினைத்தேன். அந்த 'ம்'க்குப் பிறகு நான் அவளிடம் இன்னும் வாயைத் திறக்கவே யில்லையே! அவள் வாய் மீண்டும் திறந்தது.

"டேய், அம்பி!"

நிமிர்ந்த முதுகு சரிந்தது. என்னை ஏதோ ஒடுக்கியது. 'என்ன இது! டேயா?' கூப்பிட்ட குரலுக்கு நான் நிமிர்ந்து மட்டும் எதிரொலி காட்டினேன்.

அவள் சரளமாய் ஓடினாள், வார்த்தைகளிடையே. "நீயே எனக்கு இனிமேல் ஸ்கூல் டிராயிங் பூரா போட்டுக் கொடுத்து விடுடா! பாடம்கூட எல்லாம் சொல்லித் தா. எங்க வீட்டிலே அடுப்பங்கரை மினிமினி விளக்கைத் தவிர வேறே விளக்குக்கூட இல்லே. அதோட சப் ரிஜிஸ்ட்ராராத்துலே சமையல் வேலே, சாப்பாட்டுக் கடை முடிஞ்சு எங்கம்மா வருகிறவரைக்கும் என்னாலே ஒண்டியா இருக்க முடியலே. பயமாயிருக்கு..."

நீரோட்டத்தின் மேல் கழிப்பைத் தொடர்ந்து கழிப்பு போகிறாற் போல் போயிற்று அவள் பேச்சு.

"ஓ! அதற்கென்ன! சொல்லித் தருகிறேன். ஆனால், லீவு முடிஞ்ச நான்



மேல் படிப்புக்கு மாயவரம் போகப்போறேனே அடுத்த மாசம்!'' நானும் வெள்ளத் தோடு செல்லவே துடிக்கும் துரும்பு போல் இப்படிப் பேசிவிட்டேன்.

''போகிறவரையில் சொல்லிக் கொடேன். சொல்லிக் கொடுத்தவனாயில் லாபம்!''

பெரிய மனுஷி மாதிரிதான் பேசினாள். அவளுடைய இந்த மேவும் தன்மைதான் என்னுள் ஆராய்ச்சியைக் கிளப்பிவிட்டது. 'அவள் பெரியவளா, நான் பெரியவளா?'

வேலி ஓரத்தில் படர ஆரம்பித்த ஓணான் கொடி விரைவில் மதர்த்து மண்டி விடுவதைப் போல் அவள் தாயாருக்கும் என் தாயாருக்குமிடையே சிநேகம் மலிந்து விட்டது. உண்மையாகவே எங்கள் வீட்டுக் கொல்லையில் வேலி யோரம் படர்ந்திருந்த ஓணான் கொடி பண்டை வேலிக்கு இருபுறமும் நின்று பேசிப் பேசி நிறைவு கண்டார்கள்.

ஒரு நாள் பேசினிடையே நான் சென்று விட்டேன். அப்போது, ''...அப்படின்னு நீங்க கமலத் தைப் பிரசவிச்சப்போது நான் எங்க அம்பியை உண்டாகி யிருக் கேன்...சரிதான் இப்போ புரி யறது...'' என்றாள் என் தாயார். ஒரு தொடர்பு பேசினிடையே வெட்டி ஒட்டுக் கேட்ட பேச்சு இது..... அம்பாவுக்கு என்ன புரிந்ததோ, கமலம் என்ன



# மகிழ்வூட்டுவதில் இணையற்றது!

பழங்கால பெருமைகளுக்கு சிறப்புற்றுத் திகழும் இடத்தின் மத்தியிலே நிறுவப் பட்ட, சகல நவீன வசதிகளையும் உடைய இந்த ஹோட்டல் உள்நாட்டு அயல்நாட்டு உல்லாசப் பிரயாணிகளுக்கு மனோ ரம்மியமான வாசஸ்தலம். சேர்த்தியான அறைகள், ருசிமிக்க உணவு, அன்பான உபசரணை முதலியவைகளுக்கு இணை யற்றது. ஒருவர் தங்கும் அறைக்கு ரூ. 25; இருவர் தங்கும் அறைக்கு ரூ. 48. உலகப் புகழ்பெற்ற அஜந்தா, எல்லோரா குகை களைச் சென்று பார்க்க அவுரங்காபாத் ரயில்வேஸ்டேஷனில் இறங்க வேண்டும்.

# Aurangabad Hotel





ரிசர்வேஷன் மற்றும் இதர விவரங்களுக்கும் எழுதவும்

சூப்பர்வைஸர், அவுரங்காபாத்
ஹோட்டல், அவுரங்காபாத்
தந்தி: "Rail Hotel", அவுரங்காபாத்
போன் நெ. 29, அவுரங்காபாத்

அல்லது

டிவிஷனல் சூப்பரின்டெண்ட்,
சென்ட்ரல் ரயில்வே, செகந்திராபாத்
(டெக்கான்)

அல்லது

சீப் கமர்ஷியல் சூப்பரின்டெண்ட்,
சென்ட்ரல் ரயில்வே, பம்பாய் V. T.

விடப் பேச்சில், அதட்டலில் உருட்டலில் மட்டும் பெரியவளல்ல, வயதிலும் ஒரு வயது பெரியவள் என்று எனக்குப் புரிந்தது. எனக்கு ஏனோ இது கசந்தது.

★

மூன்று மாதங்களுக்குப் பின்வந்த விடுமுறையொன்றுக்கு ஊருக்குவந்தேன். என் வீட்டில் இருந்தபடிதான் என்னை வரவேற்றாள் கமலம்.

"வாங்கோ ஸார், வாங்கோ! வெளியூர்ப் புள்ளி!.... மாமி, இன்னைக்கு வடை பாயஸம் எல்லாம் பண்ணனும்" என்று சிரித்த முகத்துடன் சொன்னாள் அவள். கழக்கோடிக் காய்கள் நாலைந்தைச் சேர்த்துக் குலுக்கினாற் போலிருந்தது அவளது பேச்சொலி.

முன்னைக்கிப்போது கமலம் என்னுடன் நெருங்கிப் பழகியதால், இந்தப் பத்து நாளை விடுமுறையை விரும்பி ரசித்தேன். சித்திரக்காரரின் மனத்தில் செதி விட்ட கற்பனை சிறிது சிறிதாக உருக்கொண்டு வருவதுபோல் முன்னைய ஒரு மாதப் பழக்கத்திடையே தோன்றினாள் கமலம். இப்போது முழுமை பெற்ற சித்திரத்துக்குப் பார்த்துப் பார்த்துப் பூச்சு அளிக்கிற நிலையில் நான் இருந்தேன். கமலம் அழகானதொரு சித்திரமாக இருந்தாள்.

எங்கள் குடும்பங்கள் இரண்டும் குழைந்தன. கமலத்தின் வீட்டில் சமயத்துக்குத் தக்கபடி எனக்கு ஒரு நாள் விருந்து நடக்கும்; ஒரு நாள் பழையதை 'இறக்குவேன்'! கமலமும் இங்கேயே குடியிருப்பாள். எங்கள் வீட்டிலேயே சமைப்பாள், சாப்பிடுவாள்; என் அம்மாவை மெல்ல மெல்லத் துரும்பு அசைக்க முடியாத நிலைக்குச் செய்வதில் ஈடுபட்டிருந்தாள்.

அரைப் பரீட்சை லீவில் நான் வர முடியவில்லை; கோடை விடுமுறைக்குத் தான் வந்தேன். ஒரு சின்ன அட்டைப் பெட்டி நிறைய அவளுக்காக ரிப்பன் வாங்கிக் கொண்டு வந்திருந்தேன். ஆனால் நான் வந்த அன்று முழுதும் கமலம் என் கண்ணில் தென்படவில்லை. பாவாடை, தாவணித் துணி வாங்குவது என் எல்லையை மீறின விஷயம். ஆனால் எனக்கு ஆசைதான்.

அவைகளுக்கெல்லாம் அவசியமில்லை என்று அன்று சாயங்காலம் தெரிந்து கொண்டேன். திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். இடுப்பில் இடதுகை அணைத்த குடத்துடன் வலதுகையை வீசி வாசலில் வந்தாள் கமலம். அவள் இப்போது ஒரு சிற்றாடையில் மின்னினாள்! முற்றிலும் மாறிய புதுக் கமலம் இவள்! என்னைக் கண்டதும் ஏறிட்ட அவள் கண்கள் தாழ்ந்தன. முகம் ஒருக்களித்துக் கொண்டது. அழகும் அருளும்கூடியதொரு நீண்ட மென்பூவாகத் தரையில் நின்றிருந்தாள் அவள். என்னைக் குனிந்து பார்த்துக் கொண்டேன். அவள் வளர்ச்சி என் மனத்தில் வேலை செய்தது. வளமான மண்மேல் வாளித்து வளர்ந்த செடிபோல் அவளும், வளர்ச்சி வற்ற வெறும் மண்போல் நானும் இருப்பதாக எனக்குப் பட்டது.

"கமலம்!" என்று அழைத்தேன்.

அவள் பேசாமல் திரும்பி மட்டும் பார்த்து விட்டுப் போய் விட்டாள். ஏற்கெனவே ஊமைக் கனவு கண்டுகொண்டிருப்பவன் நான். இவளது இந்தத் திடீர் மௌன நாடகம் மிகவும் சங்கடத்தை விளைவித்தது. பெரிய நஷ்டம் ஏதோ அடைவதை என் மனம் எதிர்பார்க்கிற மாதிரி கஷ்டப் பட்டேன்.

நாலைந்து நாட்கள் இப்படித்தான் நடந்தது. இன்னும் நாலைந்து தினங்கள் இப்படிப் போனால் என்னால் தாள முடியாது. ஒரு சீட்டை எடுத்து இப்படி எழுதினேன்: 'கமலம், என்னமோ உன் ஞாபகம் இருந்தால் சரிதான் என்று சொன்னாயே. என்னோடு பேசாமல் கழுத்தை அறுக்கிறாயே, ஏன்? உனக்கு நான் வாங்கி வந்திருக்கிற ரிப்பன், பெட்டிப் பாம்பு போல் அட்டைப் பெட்டிக்குள் தூங்குகிறது. என்மேல் ஏதாவது கோபமா?'

அன்று மாலை அம்மாவே சொன்னாள்: "அம்பி! அந்தப் பெண் பெரிய மனுஷியாயிட்டா. இங்கே முன்னைப் போல் ரொம்ப சுற்ற மாட்டாள். நீயும் அடிக்கடி அங்கே போகாதே!"



அவள் உண்மையில் பெரியவள்தானா? நான் சின்னவன்தானா? என்னால் அவளுக்கு மேல் பெரியவனாக முடியாதோ? இப்போது ஐந்தாவது பாரம் படிக்கிறேன். அப்புறம் அடுத்த வருஷம் ஆறாவது பாரம். அப்புறம்...

அப்புறம் எனக்குக் காலேஜ் படிப்பு என்று கூட ஏற்பட்டது. பி. ஏ. வகுப்பில் வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தேன். இப்போது நான் உண்மையிலேயே பெரியவன்தான். வேலங்குச்சி ஒடிப்பதில் பேர்போன சிச்சுகூட என்னோடுதான் படிக்கிறான். அவனும் பெரியவனாக, ஒரு மாமா போலத் தடித்துக் கிடக்கிறான். நான் அப்படியில்லை. நான் கண்ணாடி முன் நிற்கும்போது, அதனுள் அழகான ஒரு வாலிபனைத் தோற்றுவிக்கிறேன்.

கமலம் இப்போது எப்படி இருப்பாள்? அவள் அழகு கொள்ளை அழகு. படைக்கும் பிரமன் அழகில் நிகரில்லாத ஒரு பெண்ணைப் படைக்கும் வெறி கொண்டிருந்திருப்பான் போலும்! செம்பொன் குழம்பை வாரி வாரிச் சிலையாகச் செய்து உயிரும் ஊட்டி மண்ணுலகுக்குத் தட்டிவிட்டுத் திருப்தி யடைந்திருக்கிறான். அவளைப் பார்த்து இரண்டு வருடங்களுக்கு மேலாகின்றன. காலேஜ் படிப்புக்கென்று சென்னையில் ஒரு ஜாகையைப் போட்டுக் கொண்டு அம்மாவும் வந்து விட்டாள்.

இரண்டு வருடங்களுக்கு முன் கண்ட கமலத்தை நினைவுபடுத்திக் கொண்டேன். கோவிலில் வஸந்த உற்சவம். ஸ்வாமி புறப்பாடு பதினொரு மணிக்குத் தொடங்கி எங்கள் வீதிக்கு இரண்டு மணிக்கு வரும். முதல் இரண்டொரு நாள் தூக்கக் கலக்கத்தில் வேண்டா வெறுப்பாகச் சென்ற நான் கமலமும் அங்கு வருவதறிந்து தினமும் உற்சாகத்துடன் செல்லத் தொடங்கினேன். ஸ்வாமி தரிசனமும் அவளது தரிசனமும் எனக்கு ஒன்றாகத் தான் இருந்தன. அவளைத் திருட்டுத்தனமாகப் பார்ப்பது ஒன்றே இப்போது அமைந்து விட்டதோர் அலுக்காத அலுவல். எனவே அந்த இடத்தைவிட இதற்கு எந்த இடத்தில் வாய்ப்பு அதிகம்?

கையில் பிடித்த ஒரு கோலை இறக்கி மத்தாப்பு ஒன்றைக் கொளுத்தி உயரத் தூக்குவான் வாண வேடிக்கை காட்டுபவன். பெண்கள் வரிசையில் உள்ள கமலத்தின் முகம் திடீரென்று ஊதா நிறத்தில் மாறும். மத்தாப்பு எரிந்து முடிந்த பின் இருளில் அவள் முகத்தைத் தேட நேரிடும். திடீரென்று நீலத்தில் மின்னும் அவளது முகம். பிறகு மஞ்சள், சிவப்பு....

எது மறந்தாலும் இப்போது அவளது வண்ண முகம் மறப்பதில்லை.

ஊரிலிருந்து கடிதம் ஒன்று வந்தது. கமலத்தின் கையெழுத்து. எனக்கல்ல; அம்மாவுக்கு அடிக்கடி எழுதுவாள். கொஞ்ச நாட்களாகக் கடிதம் வராதது கண்டு கவலை கொண்ட அம்மா எதையோ பெரிதாக எதிர்பார்க்க ஆரம்பித்தாள். நல்லதோ பொல்லாததோ ஏதோ நடக்கும் என்பது அவளது அனுமானம். கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். கமலத்தின் தாயாருக்குக் கடுமையான உடல் நலக் குறைவாம்.

அம்மாவுடன் நானும் கூடப்போனேன். எங்களைக் கண்டதுமே கமலம் சிற்றாடை நுனியை வாயில் அடைத்துக் கொண்டு அலறிவிட்டாள். அம்மாவைக் கட்டிக் கொண்டு, "மாமி! எங்கம்மா என்னைத் தனியா நிறுத்திவிட்டுப் போயிடுவா போலிருக்கு, மாமி!" என்று கதறினாள். என்னிடம் பேசாதிருந்த அவள் இப்போது பேச நேரிட்ட அவலம் என்னுள் துக்கத்தைக் கிளறியது.

"அம்பி, அம்பி! எங்களை விட்டு விட்டு நீங்களெல்லாம் ஏண்டா பட்டணம் போனேள்?... நான் இனிமேல் அநாதையாயிடுவேன் போலிருக்குடா அம்பி!"

அம்மாவும் நானும் அவளைத் தேற்றினோம். அப்போதைக்கு அது முடிந்தது. ஆனால்... ஒரு வாரத்துக்குப் பிறகு அவளை என்ன தேற்றியும், அம்மா எப்படிக் கட்டிப் பிடித்தும் பயணம் போய்விட்ட அவளது தாயாரை எண்ணி அவள் தவித்துத் தவித்து அரற்றினாள்.

அம்மா நிரந்தரமாக அவனைத் தேற்ற அங்கே தங்கி விட்டாள்; துணைக்குத் துணையாகவும் கூட. நான் மட்டும் சென்னைக்குப் புறப்பட்டேன்.

அதன் பிறகு கொஞ்ச காலம் எல்லா வற்றிலும் வறட்சி தட்டியது. படிப்பி லும் பிடிப்பு இல்லை. கமலத்தை நினைத் தாலும், துக்கத்தில் விம்மிய முகத்துட னும் நெஞ்சடனும் பஞ்சையாய்க் கண் முன் வந்தாள். ஆனால், நாளடைவில் இந்த உருவைப் பழைய உரு வெற்றி கொண்டது. எத்தனை நாட்களுக்குத் தான் இப்படி இருக்க முடியும்? ஆனால், என் நிலைதான் இப்போது வெயிலில் காம்பு நைந்த இலையைப் போலிருக்கிறது.

என்னைப் பெரியவனுக்கிவிட்டு அதே சமயம் என்னுள் ஓர் இடியையும் இணைத்துவிட்டுப் போய்விட்டாள் கமலத் தின் தாயார். கண் மூட இரண்டு நாட்களிருக்கும்போது ஒரு நாள் நான் மட்டும் அவள் தலைமாட்டில் இருந்த போது, "அம்பி, நான் கண் மூடறது நிச்சயம். நீ வயசிலே சின்னவனானாலும் வியாபகத்திலே பெரியவன். கமலத்தை நீதான் யார் கையிலேயாவது பிடித்துக் கொடுத்துப் பேருக்குக் கல்யாணம்னு பண்ணி வைக்கணும். உன் கையிலேகூட அவளைப் பிடித்துக் கொடுத்துவிட்டுப் போயிடுவேன் நான். அவள் உன்னைவிட ஒரு வயசு பெரியவள். அதை நினைப்பதற் கில்லை. இந்தப் புண்ணியத்தை ஏற்றுக் கொள்" என்றாள். ஏற்றுக்கொண்டேன்.

ஆனால், கமலத்தைக் கைப்பிடிக்கிற விஷயமாக ஒரு சிறு பொறியைத் தாண்டிவிட்டதே அவள் தாயார்தான். இதுநாள்வரை இந்த வினைவுக்குத்தான் என் கருத்து நெஞ்சில் கமலம் அப்படி சரத்தில் எரிகிற சக்தி படைத்த ஒரு தீபமாய் அமர்ந்திருக்கிறாளா? அது பற்றித்தான் அவளைச் சின்னவளாக அடித்து மேல என் நெஞ்சம் பரபரத் ததா? இப்போது என் கரம் நீள வேண் டியதற்குப் பதில் கட்டுப்படுத்தப்பட்டது.



"என்ன ஸார், இது! வேடிக்கை யான்னு இருக்கு? மாப்பிள்ளைக்கு இரு நூறு ரூபாயிலே புடவை வாங்கினதாகச் சொல்றேன்?"

"அவர்தான் டிராமாவிலே ஸ்திரீபார்ட் போடறவராச்சே!"

படிப்பு முடிந்து ஊரோடு வந்து சேர்ந்தேன். ஊரில் வால்கள் என்று பெயர் பெற்றிருந்த எங்களில் நான்தான் இப்போது என் பேரோடு உண்மையில் 'பி. ஏ.' என்றொரு வாலுடன் வந்து சேர்ந்திருக்கிறேன்.

ஊரில் எல்லாம் பழையபடிதான் இருந்தன. கமலமும் பழைய கமலமாய்...

"வாங்கோ ஸார், வாங்கோ மிஸ்டர் அம்பி, பி. ஏ.... அப்படிச் சொல்லக் கூடாது. முழுப் பெயரோடல்லவா பட்டத்தை ஒட்டணும்? அம்பி! உன் பேர் என்னடா? இத்தனை நாட்கள் என் ஜன்மத்தில் உன் பேர் தெரியாமலே உன்னை விரட்டி ஆண்டு கொண்டிருக் கேன் நான்!" என்றாள்.

மறுபடியும் சொல்கிறேன். என்னை அவள் கட்டி ஆள்வதா? என்னுள் அப் போதே ஒரு வெறி ஊறியது. அவளை மனைவியாக அடைந்துவிட வேண்டும்.

கமலத்தை ஒரு நாள் தனியே கண் டேன். அவளுடைய நூறு 'டா'க்களுக்கும் 'டேய்'களுக்கும் பிறகு, கட்டத்திடையே புகுந்து குறிக்கோள் வைத்த இடத் தன்னை வருபவனைப்போல், "கமலம்!" என்று விஷயத்தை ஆரம்பித்தேன். அவளைவிட ஒரு வயது சின்னவன் நான் என்பது அவளுக்குத் தெரியாது. இதை அவளுடைய அம்மா அன்றே சொல்லி யிருக்கிறாள். அதை மறைக்க எண்ணி னேன். அவளிடம் கல்யாணத்துக்குச் சம்மதம் வாங்கி விடுவது என்பதுதான் அன்று பிறந்த வெறியின் கூறி. 'உண் மையாகவா?' என்று உதைத்துக் கொண்டு கேட்டது, மனத்தின் ஒரு மூலைப் பகுதி.

"உண்மையாகவே ஒரு விஷயம் இன் னைக்கு உன்னுடன் பேசியாக வேண்டும், கமலம்!"

"பேசேன். படிப்பையும் முடித்துக் கொண்டு வந்துவிட்டே. இனிமேல் பொழுதுள்ள வரை பேசேன். நடுவில் கட்டுப்பாட்டின்பேரில் கொஞ்ச நாட்கள் மௌன நாடகம் போட்டேன். அம்மா வோடு போச்சு அது; அதுக்கெல்லாம் வட்டி போட்டுப் பேசறேன். நீ பேசு."

"கமலம்! உனக்கு இப்போ என்ன வயசு ஆகிறது?"

"ஓ! உனக்குக் கல்யாணம் குறியா? அதுதான் நீர்த்து கிடக்கிறதே!" அவள் கரம் கொஞ்சம் இறங்கியது.

"என்ன?"

அவள் என்னை நிதானமாக ஏறிட்டுப் பார்த்தாள். அருள் சுரக்கும் அமுதம் தாங்கிய கண்கள். ஆனால், அவை யிரண்டும் இப்போதைக்கு அகல் விளக் கின் நெய்த்திரிகளில் தங்கிய இரு துளிக் கனிவைக் காட்டின.

"அம்பி! வாஸ்தவத்தில் நீ என்னைவிட இரண்டு வயசாவது பெரியவனாக இருக் கணும்என்றுதான் நினைக்கிறேன். ஆனால் நான் இத்தனை நாட்களாகப் பழகின விதம் ஒரு பாழாய்ப்போன விதம். என்னை அநாவசியமாகப் பெரியவளாக்கிக் கொண்டு உன்னோடு பழகி விட்டேன். அதனால் உன்னை நான் அந்த வகையில் நினைப்பதாகவே இல்லை. எனக்கு நானே ஏற்படுத்திக் கொண்ட நஷ்டம்! இது என் வாழ்க்கையில் அக்கறை கொண்ட நீ உனக்கு முன் இருக்கிற கடமைக்காக எப்படி எனக்கொரு ஏற்பாடு செய்கிற தென்று கேட்க வருகிறது எனக்குத் தெரிகிறது. உன் அம்மாவைக் கேள், சொல்வாள். என் மனசில் புகுந்த ஒரு வரைப் பற்றி அம்மாவுக்கு நாலு வருஷங் களாய்த் தெரியும்!" சிவப்பு கப்பிய முகத்தைத் தாழ்த்திக் கொண்டு எங்கோ பார்த்தாள் அவள்.

என்முன் சுற்றும் பொருள்கள் எல்லாம் சுற்றின. வழிகாட்டி மடியில் நின்று பேசுவதுபோல் மனத்தைத் திறந்த நானும் கமலமும் இரு வெவ்வேறு திசை களைப் பார்த்துவிட்டோம்.

விரைவில் கமலத்தின் திருமணம் நிறை வேறியது. எங்கள் ஊர்க் குருக்களின் மைத்துனன் முன்பு அவள் மனத்தைப் பற்றி, இப்போது கரம் பற்றினான்!

ஆயினும் அவள் என் கமலம்! என் வாழ்வில் எனக்கு லக்ஷ்மி வந்தாள். கமலத்தின் கதையை அவளுக்கு நான் விண்டு சொல்லியும் என் மனம் அவளுக்கு நல்லதாகப் பிடிபடவில்லை.

கமலம் என்னுள் உருவாகத் தங்க வில்லை; அவள் நினைவு மட்டும் ஒரு வேரோடிய செடியாகிவிட்டது. வெளியி லுள்ள அவள் உருத்தான் என் மனத்தில் இதயத்தில் மூடி கழற்றிய திருவுருவம். அவளை மறந்தேன் என்பது எதையோ மறைத்தேன் என்றாகும்.

மழையை ஒதுக்கிடும் மண் வாசனை யைப் போல் ஆசையை ஒதுக்கிய பெண் வாசனையை என்னுள் ஏற்படுத்தினள் அவள். சரிமைகளில் பெண்மையைப் புரிய வைத்த பங்கு மட்டும் அவளுடை யது. மனிதப் பிறவியில் துருவனாக இருந்தவனை நட்சத்திரமாகத் தினமும் கண்டு ஒப்புக் கொள்ளும் லக்ஷ்மிக்கு இதை ஒப்புக்கொள்ள விருப்பமில்லை. அவள் எனக்குப் புரிய வைக்கும் பெண் மைத் தன்மை அது!



"ஹா! விஷ்ணு சக்கரம் போன்ற உன் விழிகள், கேப்பு போன்ற உன் திலகம், மத்தாப்பைப் பழிக்கும் உன் வதனம், கம்பி மத்தாப்பைப் போல் ஜ்வலிக்கும் உன் பல் வரிசை, பாம்பு வாணம் போன்ற உன் பின்னல், எல்லாம் என்னைக் கவர்ந்து விட்டன என் கண்ணே!"

# இன்பம் பொங்கும் தீபாவளிக்கு

உல்லாசம் பொங்கும் தீபாவளித் திருநாள் நெருங்கிவிட்டது. இந்த மகிழ்ச்சிகரமான நன்னாளில், பலவிதமான சுவைமிக்க இனிப்புப் பண்டங்களையும், உணவுப் பதார்த்தங்களையும் பிரஸ்டிஜ் உதவியால் ஒரு சில விநாடிகளிலேயே தயாரித்து, உங்கள் குடும்பத்தினரை மிக்க மகிழ்ச்சியடையச் செய்யலாம். பிரஸ்டிஜ் உபயோகப்படுத்துவதன் மூலம் நீங்கள் எரிபொருள், வீண்செலவு, இவற்றைத் தவிர கிடைத்தற்கு அரிய உங்கள் பொன்னான நேரத்தையும் மிச்சப்படுத்தலாம். விசேஷ நாட்களுக்கு மட்டும் அன்றி, உங்களுடைய அன்றாட சமையலுக்கும் பிரஸ்டிஜ் உபயோகப்படுத்தி திருப்திகரமான முறையில் சிறந்த உணவைத் தயாரிக்கலாம் என உறுதிகொள்ளுங்கள்.



**Prestige**

**PRESSURE COOKER**

**ஒவ்வொரு குடும்பத்திற்கும் பிரஸ்டிஜ்**

ஸ்தல விநியோகஸ்தர்கள் :

மெஸர்ஸ் முஹம்மது இப்ராஹிம் & கோ. (பிரைவேட்) லிட்.,
விக்டரி ஹவுஸ்: 7/8, மவுண்ட் ரோடு, மதராஸ்-2.

# Quick Transit Service

## On WESTERN RAILWAY

## SPEEDED Up



6 DAYS BELANGANJ (AGRA)



2 DAYS JAIPUR



3 DAYS AJMER



DELHI

மேற்கு ரயில்வேயில் தற்போது அமுலில் உள்ள, சாமான்களை துரிதமாக எடுத்துச் செல்லும் சர்வீஸ் மக்களிடையே நாளுக்குநாள் அதிக முக்கியத்துவம் அடைந்து வருகிறது.

துரிதமாக எடுத்துச் செல்லும் சர்வீஸின் முக்கியத்துவம் என்னவெனில் ஒரு சிறிது கூடுதலான கட்டணத்தை வசூலித்துக் குறிப்பிட்ட காலத்தில் பட்டுவாடா செய்வதற்காகவே சரக்குகளை எக்ஸ்பிரஸ் கூட்ஸ் மூலம் அனுப்பப்படுகின்றன.



BOMBAY



5 DAYS NEW DELHI

கீழ்க்கண்ட இடங்களுக்கும் தற்போது சரக்குகளை துரிதமாக எடுத்துச் செல்லும் சேவை உள்ளன

கர்னக் பிரிட்ஜ் (பம்பாய்) முதல்
அமிர்தசரஸ் வரை 8 நாட்கள்

கர்னக் பிரிட்ஜ் (பம்பாய்) முதல்
லூதியானா வரை 8 நாட்கள்

கர்னக் பிரிட்ஜ் (பம்பாய்) முதல்
ஜலந்தர் சிட்டி வரை 10 நாட்கள்

அஹமதாபாத் முதல்
பெஜவாடா வரை 6 நாட்கள்



4 DAYS INDORE



3 DAYS AHMEDABAD





3 DAYS SURAT



3 DAYS BARODA




WESTERN RAILWAY

# ஏழாவது பாவை

தாரிணி விம்மினள். ராஜவேலு அவளை இரக்கத்தோடு பார்த்துப் பெருமூச்செறிந்தான்.

"சேச்சே! அசடாக இருக்கிறாய், தாரிணி! நான் அந்த நரிக்குறவனை அடித்து விட்டதற்காகவா அழுகிறாய்? இதோ பார். எனக்கு அந்தக் கூட்டத்தினரைக் கண்டாலே வெறுப்பு! திருட்டுப் பயல்கள்! பிச்சையெடுப்பது போல் வருவார்கள்; அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு ஓடி விடுவார்கள். எங்கள் போலீஸ் இலாகாவிலே இதைப் போல் எத்தனை புகார்கள் தெரியுமா?"

இதற்குள் டெலிபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துப் பேசினன். "ஆமாம், இன்ஸ்பெக்டர் ராஜவேலு தான். ஆ! கொள்ளைக்காரன் தப்பி விட்டானு? இதோ வந்து விட்டேன்!" அவன் கிளம்பி விட்டான். அவளது பதிலைக் கேட்பதற்குக்கூட அவனுக்கு நேரமில்லை.

தனது விசும்பலின் உண்மைக் காரணத்தை அவள் அவனிடம் எப்படிச் சொல்லுவாள்?

காலையில் வேடிக்கையாக வராந்தாவில் நின்று கொண்டிருந்தாள். நரிக்குறவன் ஒருவன் குரங்குக் குட்டியோடு தோட்டத்துக்குள் நுழைந்தான்.

"அம்மாவுக்குச் சலாம் போடுடா, ராமா!" என்று அவன் ஆரம்பிக்கவும், குரங்குக் குட்டி சலாம் போட்டது; 'லங்கை' தாண்டியது; மாடு மேய்த்தது. இன்னும் தன் எசமானன் ஆட்டி வைத்தபடியெல்லாம் ஆடியது.

தாரிணி கைகொட்டிச் சிரித்தாள். அவளது அஞ்சனம் தீட்டிய அழகு விழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன.

"இதை எங்கே பிடிச்சே?"

"நீர்ணு மலே காட்லே! ஆறு மாசத்துக்கு மின்னே புட்ச்சேன் தாயீ! கொழந்தை மாதிரி வளக்கறேன்!"

அவனது கொச்சைப் பேச்சு அவளது உள்ளத்தில் குறுகுறுப்பைக் கிண்டியது. மீண்டும் கெக்கலி கொட்டிச் சிரித்தாள்.

அந்தக் கள்ளம் கபடமற்ற சிரிப்பு அவனது இரு உள்ளத்தைத் தொட்டிருக்க வேண்டும். முகத்தில் அசட்டுப் புன்னகையோடு அவளதுஅன்பு முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அவன் அவளது தகரக் குவளையையும் எண்ணிலடங்காத ஒட்டுகள் போட்டுத் தைத்திருந்த ஜோல்ப் பையையும் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்ன அப்படிப் பாக்கறே தாயி?... காசி வேணுமா காசி?"

"....."

"துட்டு வாணும் மவராசி! சொம்மாத் தரேன்!"

இப்போதும் தாரிணி சிரித்தாள். ஆனால் அதில் குறும்புக்குப் பதில் இரக்கம் கலந்திருந்தது.

கிழவன் பையைத் துழாவி நாலு காசிகளை எடுத்துத் தாரிணியிடம் நீட்டினன். ஆனால் அவள் அதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாள். குருவிக்காரக் கிழவனின் முகம் ஏக்கத்தால் வாடியது.

"காசி வாங்க மாட்டே? ஒங்களைப் போல் மவராசங்களுக்குக் கொடுக்க இந்த ஏழைங்கிட்டே வேறே என்ன இருக்குது ராசாத்தி! இந்தா நரிப்பல்லு! இதையாவது வைச்சுக்கோ!.....காத்து கருப்பு அண்டாது. ஒன் அழகு முகத்துக்குக் கண்ணுப்பட்டுத் தோசம் நாம்காம இருக்கும்!"

கெஞ்சுகின்ற குரல், ஒட்டிய வயிறு, சுருங்கிய சருமம், வெள்ளை நரைத்த மீசைக் கற்றை, சற்றே நீலம் படர்ந்த அன்பு விழிகள்! ஐயோ பாவம்!...

"இந்த வயதில் உன்னைக் காப்பாற்ற உனக்குப் பிள்ளைகுட்டிகள் இல்லையா?"

"இல்லே, தாயே! மூணு புள்ளே பொறந்திச்சி! மூணையும் காளியாத்தா எடுத்துக் கிட்டா!....எங்க சாதிலே புள்ளைங்க சோறு போடாது! ஒன்னெப் போல பொண்ணு இருந்தா எப்பவாவது ஒரு வாய் கஞ்சி ஊத்தும்."

இச்சமயத்தில் எங்கிருந்தோ ஒரு விசித்திரமான கூக்குரல் கேட்டது, பல நரிகள் கூட்டமாகக் கூடி ஊளையிடுவது போல, பங்களா ஊரோரத்திலிருந்தது. மேற்கே சற்றுத் தொலைவில் அடர்ந்த காடு. தாரிணியின் புருவங்கள் நெரிந்தன. கிழவன் சிரித்தான்.

"(ஒண்ணு)மில்லே அம்மா! அது என் அக்கா மவன் சின்னமேக்கா! நரியெக் கூப்புடுறான். கண்ணி வச்சிப் புடிக்க! அவன்தான் இப்ப என் புள்ளே மாதிரி!"

"அப்ப உனக்குப் பெண்கூட இல்லையாக்கும்!"

"ஒரே ஒரு பொண்ணு இருந்தா!... வேண்மணி அவ பேரு!" கிழவன் பெருமூச்சு விட்டான்.

"சச்ச சச்ச!...அவ கூட....."

"இல்லே மவராசி! அவ சாவலே! ரெண்டு வயசா இருக்கிறப்பவே இந்தப் பாவி அவளெ

ஏ.கே.பட்டுசாமி

உசிரோடத் தூக்கிக் குடுத்துட்டேன்...''

தாரிணி புரியாமல் விழித்தாள்.

''ஆமா தாயி! அஞ்சு ரூபாய்க்கு வித்து விட்டேன்!''

''விற்று விட்டாயா?... அடக் கடவுளே!...''

இருளன் குரல் இடறப் பேசினான்.

''என் லேல்மணி என்னை விட்டுப் போனப்பறம் என் மனசே இடிஞ்சு போச்சு! அவளோட என் பெருமையே பூடிச்சு! 'சவாத் லெரு'ன்னு கேட்டுப் பாரு! எங்க கூட்டத்துக்கே நான்தான் பெரியவன். என்னைக் கேக்காமே கலியாணம் காரியம் ஆவாது. காளியாத்தா பூசையின்னு 'நான்தான் சாமியாரு. எனக்கு மரியாதை பண்ணும் பூசை நடக்காது. ஆறு இந்தப் பதினெட்டு வருசமா பூசையிலே சாமி குத்தம் வந்துடுச்சு...''

''தெய்வக் குற்றமா?''

''ஆமா, இன்னிக்கு ஆடி அம்மாவாசை இல்லே? காட்டிலே வந்து பாரு! இந்த வருசம் இந்தக் காட்டிலேதான் பூசை நடக்குது. ஒண்ணு மேலே ஒண்ணு ஏழு பானைங்க வச்சுப் பொங்கல் போடுவாங்க! கீழே இருக்கிற பானை மாத்திரம்தான் நெருப்பிலே இருக்கும். அதுக்கு மேலே ஆறு பானையும் அந்தச் சூட்டிலேயே வேகணும்! அதிலே ஒரு பானை வேகலேன்னாலும் அது சாமி குத்தம் தாயி! என் லேல் மணியே வித்தப்பறம் பதி



னெட்டு வருசமா ஏழாவது பானை பொங்கலே இல்லே!''

வீதியில் குரல் கேட்டது.

''ராசாத்தி மணியே! பால மணியே! கிரே மணியே! பவள மாலே கட்டுதோ! அம்மி பொளியத்தோ!...''

சவாத் லெ உரத்துக் கூப்பிட்டான்; ''ஏ...கடம்பாடியா!...''

''ஓஹோ...ய்!'' என்றது பதில் குரல். முதுகிலே ஒத்தாள் பையும் கையிலே மணிச்சரங்களுமாக ஒரு குறக் கிழவி பங்களாக் கேட்டுக்குள் நுழைந்தாள்.

''இவதான் எங்க ஊட்காரி - என் பொஞ்சாதி!'' என்று அறிமுகம் செய்து வைத்தான் இருளன்.

இருளி தாரிணியைப் பார்த்துத் தன் காவிப் பற்களைக் காட்டிக் கெஞ்சினாள்.

''ஏ, ராசாத்தியே!...ஒன் தங்கக் கையாலே கொஞ்சம் பழைய சோறு இருந்தாப் போடு!''

தாரிணி உள்ளே ஓடிப் போய்ச் கறி சோறும் குழம்பும் கொண்டு வந்தாள். தங்க வளையல்கள் குலுங்கும் தன் தங்கக் கரத்தினால் தகரக் குவளையில் சோற்றை அள்ளிப் போடவும் கடம்பாடியாளின் முகத்தில் நன்றி ததும்பியது.



''தங்கம் தங்கமாப் புள்ளேங்களேப் பெத்து நீ நல்லா இருக்கனும்...'' என்று வாயார வாழ்த்திக் கொண்டே விருந் தவன் திடீரென்று எதையோ கண்டு திடுக்கிட்டவள் போல் 'ஐயோ' என்று வீரிட்டுக் கத்தினன். பிறருக்குப் புரியாத லம்பதர் பாஷையில் படபடவென்று ஏதோ பொரிந்து தள்ளினன். ரெயவனின் முகத்தில் அதிர்ச்சியும் அவநம்பிக்கையும் போட்டி போட அவன் பயம் கலந்த குரலில் ஏதோ குமுறிய வண்ணம் தாரிணியை ஏற இறங்கப் பார்த்தான்.

தாரிணி கலவரம் அடைந்தாள். சவாத் சிங் ஆவலோடு கேட்டான் :

''உன் கையிலே இந்தப் பச்சை யாரு குத்தினது கொயந்தே?''

தாரிணியின் கலவரம் நீங்கியது. ப்பூ! இவர்களுக்குக் குலதெய்வம் காளி என் நல்லவா சொன்னன்! அந்த உருவத் தைப் பார்த்தவுடன் உணர்ச்சிவசப்பட்டு விட்டார்கள் போலும்!

''சின்ன வயசிலேயே குத்திவிட் டார்கள்! எனக்குத் தெரியாது!''

கடம்பாடியா தன் கணவனிடம் ஏதோ கூறவும், அவன் சடக்கென்று தனது சோளிப் பையிலிருந்து ஒரு வெள் ளித் தட்டை வெளியே எடுத்தான்.

உள்ளங்கை அகலமுள்ள அந்தத் தட்டைத் தாரிணி உற்றுப் பார்த்தாள், உறுத்து நோக்கினுள். கண்களை இமைக் காமல் பார்த்துக் கொண்டே நின்றாள்.

அந்தத் தட்டிலும் ஒரு காளியின் உருவம். அவளது கையிலிருந்த வடிவத்துக்கும் அதற்கும் இம்மி யளவும் மாறுதல் இல்லே!

சவாத் சிங் குரல் அடைக்கப் பேசி னுன்.

''என் லேஸ் மணி...ஒரு வயசுக் கொயந்தையா இருக்கிறப்ப இந் தப் பாவி அதுங் கையிலே இந்த மாதிரிப் பச்சைதான் குத்தி னேன் தாயி!''

அவன் திடுக்கிட்டான். எங்கோ ஒரு திரை இலேசாக விலகியது. அவளது மூளையின் பின்புறத்தில் ஏதோ குறு குறுத்தது. அணைந்துவிட்டது போல் பாசாங்கு பண்ணிக் கொண்டிருந்த நெருப்பிலிருந்து புகை கிளம்பிக் கண நேரத்தில் காட்டுத் தீயாகப் பற்றி எரியத் தொடங்கியது.

''அடேடே, ராஜுவேலு; தாரிணி என் மகளல்ல அப்பா! விலேக்கு வாங்கினவள். விவாக விஷயமாக அவளது தகப்பனேக் கேட்காமல் நான் எப்படிச் சரி என்று சொல்லலாம்?..ஹஹ்ஹஹ்ஹஹ்ஹா!''

இது அவளது தந்தையின் 'கேலி'ப் பேச்சு! எத்தனேயோ முறை அவர் இப் படிக் கூறியபோதெல்லாம் அதை விளை யாட்டு என்றுதான் எண்ணிக் கொண் டிருந்தாள் அவள். ஆனல் விவாகத் துக்கு மறு வருடம் அவர் மரணப் படுக் கையிலிருந்தபோது மருந்துப் புட்டி யுடன் அவர் அறைக்கு விரைந்தபோது வாசற்படியிலேயே நின்று விட்டாள். ராஜுவேலுவிடம் அவர் ஏதோ கெஞ்சிக் கொண்டிருந்தார்.

''அவள் அநாதை, ராஜுவேலு! உலகம் தெரியாதவள்! அவளேக் கைவிட்டு விடாதே!'... உனக்கு நான் எவ்வளவோ உதவிகள்செய்திருக்கிறேன். அவற்றுக்குக் கைம்மாருக இவ்வுலகை விட்டுப் போகும் எனக்கு நீ செய்யக் கூடிய உதவி இது தான். என்றாவது ஒரு நாள் இது சம் பந்தமாக ஏதாவது கேள்விப்பட்டா லும் அவள்மீது வெறுப்படைவதில்லே என்று சத்தியம் செய்து கொடு!...''

கைமீது கையடிக்கும் ஓசையும் தெளி வாகக் கேட்டது.

தந்தையின் மறைவுக்குப் பிறகு கண வனிடம் இவ்விஷயத்தைப் பற்றி எவ் வளவோ கேட்டாள். அவன் ''உன்னேப் பற்றி



ஒன்றுமே பேசவில்லை!'' என்று ஒரே மடியாக மறுத்துவிட்டாள்.

நரிக்குறவனின் கூற்றுக்கும் தந்தையின் கடைசிச் சொற்களுக்கும் முடி போட முயன்றது மனம். அவன் நினைத்தான் போலும். என்றாலும் அதை வெளிக்குக் காட்டவில்லை. இதிலும் வெறுப்பும் எரிச்சலும் ஒன்று சேர அவளை நன்றாகத் திட்டி அதட்டினான்.

கிழவன் நிதானத்தை இழக்கவில்லை. அவனது கண்கள் கலங்கிவிட்டன. விக்கித்துக் கொண்டே பேசினான்.

''நான் பொய் ஏன் சொல்லப் போறேன் தொரசானி! சிரோட்டுப் பக்கத்லே....மோட்டா கார்லே போயிக்கிட்டிருந்த ஒரு பெரிய துரைவுக்குத்தான் வேல்மணியே வித்தேன்!''

'ஆம்!... அவளது தந்தையும் கூட சிரோட்டைச் சேர்ந்தவரல்லவா!...'

வாசலில் ஜீப் வந்து நின்றது. ராஜவேலு வேட்டைச் சவுக்கைச் சுழற்றிய வண்ணம் தோட்டத்தில் நுழைந்தான். அவனது முகத்தில் கோபம் கொந்தளித்துக்கொண்டிருந்தது.

''யார் இந்த நாய்களை உள்ளே விட்டது?'' அவன் சவுக்கை ஓங்கினான்.

''ஐயோ! அவரை அடிக்காதீர்கள்!...'' என்று அலறிய தாரிணியால் அவனைத் தடுக்க இயலவில்லை. கிழவனின் முதுகில் சுளீரென்று பலத்த அடி விழுந்துவிட்டது. ''ஆ...யோ...வ்'' என்று கதறிய அவனைப் பதைபதைத்த வண்ணம் தாங்கிப் பிடித்துக் கொண்டு வெளியேறினான் கடம்பாடியா.

* * *

இரவு முதல் சாமத்தைக் கடந்து இரண்டாம் சாமத்தின் இறுதியை நெருங்கிக் கொண்டிருந்தது. ராஜவேலு தனக்கு அன்றிரவு வீட்டுக்கு வர இயலாது என்று டெலிபோனில் செய்தி சொல்லி வெகுநேரமாயிற்று. வீட்டில் காவல்காரனைத் தவிர துணைக்கு வேறு எவருமில்லை. உலகில் ஜீவராசிகளே இல்லையோ எனும்படி அத்தனை அமைதி நிலவிக் கிடந்த அந்த நேரத்தில் தாரிணி உறக்கமின்றிப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள்.

பகல் முழுதும் சிந்தித்துச் சிந்தித்துச் சோருக் கலங்கிப் போயிருந்த மனம் எங்கெங்கெல்லாமோ தறி கெட்டுச் சஞ்சரித்தது. விவாகத்துக்கு முன்னும் பின்னுமான எத்தனையோ சிறு சிறு சம்பவங்கள் அவளது நினைவுச் சுரங்கத்திலிருந்து புற்றீசல்கள் போல் அலையலையாகக் கிளம்பி அவளைச் சித்திரவதை செய்தன. எல்லாமே அவளது சந்தேகத்தை வலுப்படுத்துபவைதான்! காலையில் அந்த நரிக்குறவன் தூவிய விதை நண்பகலில் முளைத்து வேர்விட்டு இரவுக்குள் வானத்துக்கும் பூமிக்குமாக ஓங்கி வளர்ந்து கப்பும் கிளையுமாகப் படர்ந்து பயங்கர விருட்சமாகக் காட்சியளித்தது. ஏக காலத்தில் பல திசைகளிலிருந்தும் நிந்தனைக் குரல்கள் கிளம்பி அவளைக் குற்றம் சாட்டுவது போன்ற பிரமை ஏற்பட்டது!

'நீ விலைக்கு வாங்கப்பட்டவள்; இழிவானவள்! அருவருக்கத் தக்க சாதியில் பிறந்தவள்; வெறுத்து ஒதுக்கப்பட வேண்டியவள்! உன் ஈனப் பிறப்பின் ரகசியம் வெளியே தெரிந்தால் உன் கண்ணியமான கணவனுக்கு எத்தனை அவமானம்! உண்மை அவனுக்குத் தெரிந்திருக்கும் என்கிறாயா? அப்படியானால் அவன் அதை வெளியே சொல்ல மாட்டாமல் உள்ளுக்குள் எத்தனை புழுங்கியிருப்பான்? இரக்கம் காரணமாக அவன் உன்மீது அன்பு செலுத்துகிறான். அதைப் பெற்றுக் கொள்ள உனக்குத் தகுதி இருக்கிறதா என்று யோசித்துப் பார்! அவனுக்கு நீ ஏற்றவளே அல்ல! இந்த இரண்டு ஆண்டுகளாக அவனது வாழ்வைப் பாழ்படுத்தியது போதும்! இனியும் வேண்டாம்! நற்குலத்திலும் நல்ல சமூகத்திலும் உனக்கு இடமே இல்லை! உனக்கு ஏற்ற இடம் காடும் மேடும் கழுகும் கூளியும் நரியும் நத்தையும்! போ! போ! போய்விடு!...'

''ஐயோ!... அம்மா!...''

பலகணி அருகில் அரவம் கேட்டது. திடுக்கிட்டெழுந்தாள். சாளரத்தில் ஓர் ஆளின் தலை தெரிந்தது. ஒரு கறுத்த உருவம் உள்ளே குதித்தது. கூச்சலிட முயன்றாள். குரல் கிளம்பவில்லை. நடுங்கும் கால்களுடன் மார்பு படபடக்க எழுந்து விளக்கைப் பொருத்திவிட்டாள்.

எதிரே இருபது, இருபத்திரண்டு வயதுள்ள நரிக்குறவன் நின்று கொண்டிருந்தான். வன்மையான உடலும் கரிய மேனியுமாகத் திகழ்ந்த அவன் அவளை வெறித்துப் பார்த்தான்.

''வேல்மணி!''

''மூடு வாயை!'' அவள் மூச்சுத் திணறக் கத்தினாள். அவன் மெதுவாகப் பேசினான். அவனது குரலில் குழைவு காணப்பட்டது.

''கூவாதே தாயி! நானு திருடனல்லே! அங்கே கெளவனுக்கு ஒடம்பு நல்லா இல்லே! அவன் இனிமேல் பொழைக்க மாட்டான்...''

கூச்சலிடவேண்டும், கள்ளத்தனமாக உள்ளே நுழைந்த அவனைக் கட்டி உதைக்க வேண்டும் என்றுதான் முதலில் அவள் நினைத்தாள். ஆனால் அவன் கேட்டது என்ன?

''கிழவனுக்கா?...''

''ஆமா அம்மணி. நானு, சின்ன மேக்கா. எனக்குப் பொய் பேசத் தெரியாது. காத்தாலே வாங்கின அடியிலே கெளவன் முதுகு வீங்கிப் போச்சு! நேரா டேராவுலே வந்து உளுந்தான். ஒரே காச்சலு! இருமலு! பொலம்பலு! கஞ்சித் தண்ணி குடிக்கலே! இன்னிக்கி அடி அம்மாசை பாரு. இப்ப பூசை நடக்கப் போவுது. இதுதான் நான் போடற கடைசிப் பூசையின்னு கத்தறான் தாயி கெளவன்! பூசையப்போது நீ ஒரு நிமிசம் வந்துட்டுப் போவணும்!''

''என்ன?''

''ஆமா மவராசி, நீ வந்தயின்னு பதினெட்டு வர்சமா பொங்காத ஏனாவது பானை பொங்கிடும்! காளியாத்தா மனசைக் குளுரப் பண்ணிட்டுக் கெளவன் சந்தோசமா கண்ணை மூடுவான்!.... அவன் ஆசையை நெறவேத்து தாயே!''

அவளுக்குத் தலை சுற்றியது. பதில் பேச மாட்டாது திக்குமுக்காடினாள். தலையைக் கையில் பிடித்துக் கொண்டு அவள் கூவினாள்.

''போ! போ இங்கிருந்து!''

காவல்காரன் விழித்துக் கொண்டு ஓடி வந்து கதவைத் தடதடவென்று தட்டினான்.

சின்னமேக்கா என்ன செய்வதென்று தெரியாது விழித்தான். கதவு இன்னும் பலமாகத் தட்டப்பட்டது. தாரிணியை ஒருமுறை ஏக்கத்தோடு பார்த்துவிட்டுப் பெருமூச்சுடன் திரும்பிச் சாளரத்தின் வழியாக ஒரே தாவலில் தோட்டத்தில் குதித்து மறைந்தான்.

''கூப்பிட்டீங்களா அம்மா?'' என்றான் வேலைக்காரன்.

''இல்லை. நீ போய்ப் படுத்துக்கொள்!'' என்றாள் அவள் விளக்கை அணைத்துக் கொண்டே.

படபடப்பு வெகு நேரம்வரையில் அடங்கவில்லை. இருளில் சின்னமேக்காவின் முகமும் பேச்சும் அவளைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டேயிருந்தன.

''நீ வந்தயின்னு பதினெட்டு வர்சமா பொங்காத ஏனாவது பானை பொங்கிடும்!'' என்றல்லவா சொன்னான்! அப்படியானால் அவள்தான் வேல்மணி என்று அவர்கள் தீர்மானித்துவிட்டார்களா? இருக்கவே முடியாது! இத்தனை அழகும் அறிவும் படிப்பும் பண்பும் கேவலம் நரிக்குறவர் குலத்தில் பிறந்தவளுக்கு எங்கிருந்து வரும்? வெறும் புரட்டாக இருந்தால்...? ஆனால் எதற்கும் அந்தக் கிழவனை மீண்டும் சந்தித்து அவளது எண்ணாயிரம் சந்தேகங்களுக்கும் விளக்கம் கேட்டுவிட்டால்?.....

வான வீதியில் வீசிய சூறாவளிக் கொடுங் காற்று மேகக் கூட்டங்களை அலைக்கழித்துக் கடகடவென்று கலக்கியது. அதன் பிரதிபலிப்பு அவள் மனத்திலும் காணப்பட்டது. தலை கனத்துப் பாரமாகியது. அலமாரியைத் திறந்து தூக்க மாத்திரை ஒன்றை எடுத்து விழுங்கிவிட்டுப் படுத்தாள்.

அரை மணி நேரத்துக்குப் பின் இலேசாக இமைகள் மூடின. அந்தச் சிறிது நேரத்துக்குள் எத்தனையோ நெஞ்சைக் கலக்கும் துர்க் கனவுகள். அவள் அலறிக் கொண்டே கண் விழித்தாள். உடல் வியர்த்து, அங்கமெல்லாம் உளைச்சல் கண்டு வெடவெடவென்று உதறியது. உள்ளத்தைத் திகில் கவ்வியது. இதயம் பலவீனமடைந்து 'திக்திக்'கென்று அடித்துக்கொண்டது. தூரத்தில் கூகை ஒன்று அலறியது. அதைத் தொடர்ந்து ஒரு மெல்லிய சத்தம் காற்றில் மிதந்து வந்தது. ''தம்...ம்...தக்! தக...தக்!''

பறையின் ஒலி! பூசை துவங்கிவிட்டது! தடுமாறிக் கொண்டே ஜன்னலருகில் போனாள். அதோ, அவ்வொலி இன்னும் தெளிவாகத் தொடர்ந்து கேட்டது. முடியாது! இனியும் முடியாது! அவளைக் காடு அழைத்துவிட்டது. மூலை மரத்துச்

சிந்தனா சக்தியை இழந்திருந்த அந்த நேரத்தில் அவள் தூக்கத்தில் நடப்பவள் போல, விசையால் இயக்கப்படும் இயந்திரம் போல் அந்த அழைப்புக்குக் கீழ்ப்படிந்தாள்.

• • •

மரச் செறிவுகளுக்கும் புதர்களுக்கும் அப்பால் தூரத்திலே ஒரு பெருந் தீ எரிந்து கொண்டிருந்தது. சின்னஞ் சிறு கூடாரங்களுக்கும் சிதறிக் கிடந்த சாமான்களுக்கும் இடையே நரிக் குறவர்களின் கூட்டம் பரபரப்போடு இயங்கிக் கொண்டிருந்தது. ஜ்வாலையின் மத்தியில் ஒன்றன் மேல் ஒன்றாக ஏழு பானைகள் அடுக்கப்பட்டிருந்தன. அவற்றில் அவர்களின் பொங்கல் வெந்து கொண்டிருந்தது போலும்!

நெருப்புக்கு வலப்புறம் சுமார் நாலடி உயரமுள்ள துர்க்கையின் சிலையொன்று நிறுத்தப்பட்டிருந்தது. கனல் பறக்கும் கண்களை உருட்டி விழித்துக்கொண்டு நின்ற அந்தத் தேவதையின் உருவை அந்த நிசி நேரத்தில் பார்க்கவே கதிகலங்கியது.

சிலையின் அருகே நடப்பட்டிருந்த சூலத்தின் பக்கலில் கழுத்தில் மாலை பணிந்து துவண்ட மேனியும் மூடிய கண்களுமாகச் சமாதி நிலையில் அமர்ந்திருந்தான் கிழவன் சவாத்சிங். அவன் தான் அன்றையபூசைக்குச் சாமியார்.

தேவியின் எதிரே கூட்டமாக ஆண்களும் பெண்களும் வெறியாட்டு ஆடி எக்காளமிட்டனர். பெரும் பறையொன்று பயங்கரமான நாதத்துடன் ஒலித்துக் கொண்டேயிருந்தது. இதயத்தில் இனமறியாத வேதனையைக் கிளறும் ஒரு தனிப் பண்ணில் பாட்டுக் கிளம்பியது. கோணல் கொம்பு விட்டு விட்டு முழங்கியது.

திடீரென்று கூட்டத்தில் சலசலப்பு. இரண்டு முரட்டு ஆசாமிகள் ஒரு சாட்டைக் கொம்பு மகிஷத்தின் தலைக் கயிற்றைப் பிடித்துத் துர்க்கையின் முன்னால் இழுத்து வந்தனர். கரங்களில் பளபளக்கும் கூரிய கோடரியோடு அவர்களுக்குப் பின்னால் பாய்ந்து வந்தான் சின்ன மேக்கா.

வெறியாட்டு நின்று நிசப்தம் நிலவியது. முரடர்கள் இருவரும் கடாவின் கொம்புகளை அழுத்திப் பற்றிக் கொள்ள சின்ன மேக்கா கோடரியைத் தலைக்கு மேல் ஓங்கினான்.

"ஜெய் காளி!" என்று முழங்கியது குறவர்களின் கூட்டம்.

"நிறுத்து சின்ன மேக்கா! வெட்டாதே நிறுத்து!"

சின்ன மேக்கா திரும்பிப் பார்த்தான். எதிரே அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்த பெண்ணுருவத்தைக் கண்டதும் அவனது முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. கோடரியைக் கீழே போட்டான்.

"லேல் மணி!"

"லேல் மாணி! ஜயேய் லேல் மாணி' என்று கூக்குரலிட்ட குறத்திகளின் கும்பல் தாரிணியை நோக்கி ஓடிவந்தது.

கிழவன் சவாத்சிங் கண்களை விழித்தான். அவனதுமுகத்தில்சோகமும்ஆனந்தமும் ஒருங்கே பிரதிபலித்தன. அவன் தன் இருக்கையை விட்டு எழ முயன்றான்.

இதே நேரத்தில் 'டுமீல் டுமீல் டுமீல்' என்று முழங்கிய துப்பாக்கி வேட்டுகள் அந்தக் காட்டையே அதிரச் செய்தன.

"ஏ காளியாத்தா!" என்று தீனமாக அலறியது ஒரு குரல். குறவர்களின் கூட்டம் பீதியடைந்து அங்கு மிங்கும் 'காகா' வென்று கூவிக் கொண்டு ஓடியது. அவர்களைத் தள்ளிக் கொண்டு குறுக்கே பாய்ந்து வேகமாக ஓடினான் ஒரு கறுத்த நெடிய மனிதன்.

"பிடி பிடி பிடி விடாதே!" என்று மரச் செறிவுக்குப் பின்னாலிருந்து அவனைத் துரத்திக் கொண்டு ஓடி வந்தது போலீஸ் படை.

ஸ்தம்பித்து நின்ற தாரிணியின் காதுகளில் திடீரென்று துப்பாக்கி வெடி



முதல் நடிகை: தீபாவளிக்குத்தான் இன்னும் ரொம்ப நாள் இருக்கே, உன் வீட்டிலே நேத்திக்குத் தீபாவளி மாதிரி பட்டாஸ், மத்தாப்பு எல்லாம் கொளுத்திக்கிட்டு இருந்தாரே, ஏன்?

இரண்டாவது நடிகை: ஓ! அது வேறே ஒண்ணும் இல்லே, ஒரு பத்திரிகை நிருபர் வந்திருந்தார். மனதுக்குச் சில போட்டோக்கள் எடுத்துக் கொண்டார்!

யோசை தாக்கவும் அவளது மரத்துப் போன மூளையை மூடியிருந்த மாயத் திரை விலகியது. உறக்கத்திலிருந்து விழிப்பவள் போல் மெதுவாகச் சுற்றிலும் ஒருமுறை பார்த்தாள். அங்கு நிற்கவே அவளுக்குக் கூசியது. போலீஸ் படையைக் கண்டவுடன் அவளுக்குக் கணவனின் நினைவு வந்தது. ஒருகால் அவனும் அதில் இருப்பானோ? அவளை அங்கு பார்த்தால் என்ன நினைப்பான்! மனத்திலே ஒரு புதிய திகில் உண்டாகியது.

இதற்குள் காளியின் சிலையருகே குழுமி விட்டகூட்டம் விதம்விதமாக ஆரவாரித்தது. உரத்த சத்தத்தில் 'ஓ'வென்று தீனமாகக் கூவி அழுதது ஒரு பெண் குரல். சின்ன மேக்கா அவளை நோக்கி வேகமாக ஓடி வந்தான்.

"தங்கச்சி! கெளவன் மேலே குண்டடிச்சு அவன் சாவப் போறான். ஒன்னே கூப்புடறான்!"

கூட்டம் அவளுக்கு விலகி வழி விட்டது. கிழவன் சவாத்சிங் மரணவேதனையில் முனகிக் கொண்டிருந்தான். கடம்பாடியா அவளைக் கண்டதும், "லேல் மாணியே!" என்று கதறிப் பிரலாபித்தாள். அத்தனை வேதனையிலும் சவாத்சிங் லம்பாடி பாஷையில் அவளைக் கண்டிப்பது போல் ஏதோ கூறினான். அவள் அடங்கினாள். சின்ன மேக்கா உறுமினான்.

சவாத் சிங் மிகுந்த சிரமத்துடன் தாரிணியை அருகில் அழைத்தான்.

"ராசாத்தி....என்னே மன்னிச்சிப் போடு...ராசாத்தி...நானு ஒங்கிட்டப் பொய் சொல்லிட்டேன்!..."

"ஆங்!...அப்படியானால்?"

"ஆமா தாயி! எனக்குப் பொண்ணே கெடயாது!.... லேல் மணி இல்லவே இல்லே! ஒன்னே ஏமாத்திப் புட்டேன் தங்கம்!"

கும்பலுக்கு வெளியே சந்தோஷ ஆரவாரம் கேட்டது.

"ஏளாவது பானே பொங்கிடுச்சி! ஏளாவது பானே பொங்கிடுச்சி! ஜெய் காளி யாத்தா!..."

கிழவனின் முகம் ஆனந்தத்தால் விகசித்தது. அவன் தாரிணியைப் பரிதாபமாகப் பார்த்தான். அவளது கண்கள்கலங்கின. குமுறிக்கொண்டே, "நீ..நீ..நல்லாயிரு!" என்றான். அவனது சிரம் கடம்பாடியாவின் மடியில் சரிந்துவிட்டது. கடம்பாடியா கதறினாள். குறக்கூட்டம் குமுறிக் கூவியது. தாரிணியும் தன்னை மறந்து அழுதாள்.

"அழுவாதே ராசாத்தி, நீ போ! கடா பலி குடுக்கலே! அதனாலே காளியாத்தா கெளவனைப் பலி வாங்கிட்டா!" என்றான் சின்ன மேக்கா.

தாரிணி தலைகுனிந்த வண்ணம் திரும்பிச் சென்றாள்.

• • •

மறுநாள் அதிகாலை. தாரிணி மேல் மாடியில் நின்று தொடு வானத்தை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள்.. அதோ தூரத்தில்...ஏரிக்கரை மீது வரிசை வரிசையாக ஒரு நெடிய கூட்டம் நகர்ந்து கொண்டிருந்தது. குறவர்களும் குறத்திகளும் குழந்தை குட்டிகளைச் சுமந்த வண்ணம் கழுதைகளின்மீது ஏற்றப்பட்ட மூட்டை முடிச்சுக்களோடு மெல்ல நடந்து கொண்டிருந்தனர்.

மாடிப்படியில் யாரோ விரைந்து வந்தார்கள். சட்டென்று கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"தாரிணி! சமாசாரம் தெரியுமா? நேற்று ராத்திரி, தப்பியோடிய கொள்ளைக்காரன் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில், குண்டு குறி தவறி, பாவம் ஒரு நரிக்குறவன் மீது பட்டு..."

அருகே வந்த ராஜுவேலு அவளது முகத்தைப் பார்த்தான்.

"அழுது கொண்டிருந்தாயா, தாரிணி?"

"இல்லே, கீழே போகலாம் வாருங்கள்!" என்று அவனை அழைத்த வண்ணம் அவளும் இறங்கினாள்.


ஆனந்தகரமான
விசேஷ
நாட்களுக்கு
சாட்டின், டபேட்டா, க்ரேப்ஸ் மற்றும்
அழகாக அச்சிடப்பட்டு
கண்கவரும் வர்ணங்களில்
ப்ராக்கேடுகளும் அநேகவித ரகங்
களில் சக்தி மில்ஸார்
தயாரிக்கின்றனர்.
Shakti Silks
சக்தி ஸில்க்குகள்
'போதார் தயாரிப்புகள்
ஸ்ரீ சக்தி மில்ஸ் லிட்.,
போதார் சேம்பர்ஸ்,
பார்ஸி பஜார் தெரு,
பம்பாய்—1









"ஏனய்யா உம்மைப் பார்த்தால் அன்னக் காவடி மாதிரி இருக்கு. இத்தனை துணிமணி களும் வீட்டுக்கு வாங்கினேன் என்கிறியே?"

"பின்னே என்னவாம்! ஏழு மாப்பிள்ளை கள் ஆறு பசங்கள், பதினாறு பேரன் களுக்குத் தீபாவளிக்குத் துணிஎடுக்கிறவன் எப்படி இருப்பானாம்?"







ஜோதி









"ஏண்டா, குழந்தை தீபாவளியும் அதுவுமா ஏண்டா இப்படிப் பனியன் அண்டர்வே ரோடே நிக்கிறே. வேஷ்டி உடுத்தல்லையோ?"

"நல்லா பாருங்கோ தாத்தா! நான் நைலான் ஜிப்பா, நைலான் வேட்டி உடுத்தி இருக்கேனாக்கும்!"

## புராண கால புருஷர்கள்











# குறைவற்ற செல்வம்



ஸ்ரீஹரி

ஆம்! அது நமது கைப்பொருளாகும். அதாவது ரொக்கமாகக் கையில் வைத்திருக்கும் பொருள். நமக்கு வேணுமானால் இதை நல்லமுறையில் நல்வழியில் லாபகரமாகச் செலவழிக்கலாம். ஊதாரித்தனமாக வீசி எறிந்து விட்டு அல்லலுக்கும் ஆளாகலாம்.

நோயற்ற வாழ்வைத்தான் குறைவற்ற செல்வம் என்பர். தீபாவளித் திருநாளன்று கல்கி நேயர்களுக்கு இந்தக் குறைவற்ற செல்வம் பெருக வேணுமென்பது என் பிரார்த்தனை.

இச்செல்வத்தை ஒருவர் இன்னொருவருக்கு ஈந்துதவ வேண்டியதில்லை. ஒருவர் இன்னொருவரிடமிருந்து இரந்து பெற வேண்டியதுமில்லை. இது ஒவ்வொருவரிடமும் ரொக்கமாக உள்ள கைப்பொருளுக்குச் சமமானது.

இந்த நோயற்ற வாழ்வை, ஆரோக்கியம், அனுமயம் என்று எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் சரி, இந்தக் குறைவற்ற செல்வத்துக்குக் குறைவே வராமல் நிறைவு பெற்ற தரத்தில் நாம் நமது சொந்தக் கைப்பொருளாகச் செய்து கொள்ளலாம். இது நமது அறிவினால் நமது முயற்சியால் நாமே சாதித்துக் கொள்ளச் சாத்தியமாகும். இதற்காக நாம் விழிப்புடன் செய்யத்தக்கவை சில. தவிர்க்கத்தக்கவை சில. இவற்றைத் தெளிவித்தல்தான் இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

ஆரோக்கியமென்பது நமது ஆகாரம், உறக்கம், இல்லறம் (இதை அப்பிரஹ்ம சர்யம் என்று சில நூல்கள் அழைக்கின்றன) நல்லறம் அல்லது ஒழுக்கம் என்ற நான்கு தூண்களின் மேல் கட்டப்பட்ட கோபுரமாகும். சிவனே நம்முள் சீவனென்ற பெயருடன் இருக்கிறான். இச்சரீரமே அச்சிவனின் திருக்கோவில் என்று கருதுபவர் ஒரு மரபு. சீவனே உயிர் என்றும் அவ் வுயிரினுக்குயிராய் நிற்பவன்தான் எங்கும் நிறைந்த சிவம் என்று கருதுபவர் வேறொரு மரபினர். இருபாலாரும் ஒப்புக்கொள்வது ஒன்று. அதாவது பரம்பொருள் ஒருவகையில் இச்சரீரத்தில் தங்கி யிருப்பதும்; ஆகவே இச்சரீரம் ஈசனின் திருக்கோவிலாகும் என்பதும்தான்.

அப்படிப்பட்ட ஈசனின் திருக்கோவிலான இச் சரீரத்தை நல்ல முறையில் வைத்துக் கொள்வது எவ்வளவு முக்கியம் என்று சொல்லவும் வேண்டுமோ!

இச்சரீரம் நல்ல நிலையில் இருப்பதையே ஆரோக்கியம் என்கிறோம். இதைக் காப்பாற்றிக் கொள்ள நாம் செய்ய வேண்டியவை சில. தவிர்க்க வேண்டியவை சில. முன் சொன்ன ஆகாராதி நான்கு விஷயங்களிலும் இந்தத் தக்கவை தகாதவை என்ற பாகுபாடு உண்டு.

ஆகாரம்:—பொதுவாக நாம் சீவிக்கத்தக்க அல்லது பழக்கப் படுத்திக் கொள்ளத் தகுந்த ஆகாரப் பொருள்கள் சில உண்டு. அப்படியே தினசரிப் பழக்கமாக ஏற்கத்தகாதவைகளும் சில உண்டு.

செந்நெல்லும் மற்றும் குறுகிய காலத்தில் பயிராகும் அறுபதாம் நாள், சம்பா, குறுவை முதலியவைகளும் கோதுமையும் பார்லியும் குறைந்தது ஒரு வருஷமாவது பழையது நல்லது. இலேசாக வறுத்து உமியைப் போக்கிய பச்சைப் பயறு - சகல வித கீரைகளும் - (முக்கியமாக முளைக்கீரையும் அரைக்கீரையும்), புடலங்காய், பிஞ்சுமுள்ளங்கி, அவரைப் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு ஆகியவற்றைப் பழக்கப்பட்ட வகையில் கறிகளாகவும் உபயோகித்து வருவது நல்லது.

புளிப்புக்காகப் புளியாரைக் கீரை, புளிப்பு மாதுளை, துரிஞ்சிப்பழம்-நெல்லிக்காய் ஆகியவற்றைக் கறிகாய்களுடன் கூட்டிச் சமைத்துண்பதும், உப்புக்காக வறுத்த இந்துப்புவையோ - அல்லது அளவோடு சோற்றுப்பையோ சேர்த்துக் கொள்வதும் நல்லது.

அசைவமான ஆகாராதிகளில் மலைப் பிரதேசங்களிலும் பீடபூமிகளிலும் உள்ள காடுகளில் வாழும் மான், முயல் போன்ற மிருகங்கள், காடை, கௌதாரி, ஆந்தை போன்ற பட்சிகளின் மாமிசங்களும் நல்லவைதான்.

இனி ஏற்கத் தகாதவைகளைப் பற்றிச் சொல்ல வேணுமா? ஸார்! கடலைப் பருப்பு - உளுத்தம் வடை, மொச்சைக் கொட்டை, சுண்டல் என்றெல்லாம் கேட்கவே நியாயமில்லை.

கிழங்குகளைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே என்கிறீர்களா? முள்ளங்கியைக் கிழங்கு என்று சொல்வதானால் பிஞ்சு முள்ளங்கியானால் மட்டும் உபயோகிக்கலாமென்று சொல்லியாயிற்று. மேலும் கேட்பீர்களானால் கருணைக் கிழங்கை வேணுமானால் ஏற்கலாம். இதைச் சிலர் சேனைக்கிழங்கு என்பர். பிடிக்கருணையா - காறும் கருணையா என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக் கடிதங்கள் வர வழியில்லை. ஏன்? கருணைக் கிழங்கு என்றதால் மற்றையது தவிர்க்கத்தக்கது. அப்படியா? பிடிக்கருணை மூல வியாதிக்குக்கூட நல்லதென்பார்களே என்கிறீர்களா? வியாதிக்காரருக்குப் பத்தியஞ் சொல்ல வரவில்லையே, அது விஷயமே வேறு. சாதாரணமாகத் தினசரிப் பழக்கத்தில் எவ்வகை ஆகாரப் பொருள்களை ஏற்பதால் அல்லது ஏற்கும் பழக்கத்தை அனுசரிப்பதால் ஆரோக்கியம் நிலைபெறும் என்றல்லவா இங்கு சொல்ல வந்தேன்.

தண்ணீர், பால், மோர், தயிர், நெய், எண்ணெய் போன்றவைகளைப் பற்றிச் சொல்லவே இல்லை என்கிறீர்களா?

மணற்பாங்கான அல்லது மணிக்காங்கற் பிரதேசங்களில் தேக்கப்பட்ட ஏரி குளம் இவைகளின் ஜலத்தைக் குடிக்கலாம். ஆனால் இவை சூர்யகிரணமும் நல்ல காற்றோட்டமும் பெறத் தக்க நிலையில் இருத்தல் வேண்டும். இலைகள் செடிகொடிகள் விழுந்து அழுகிப்போகும் நிலையிலுள்ளதும் பாசிகளால் மூடப்பட்டும் பூச்சிகளும் புழுக்களும் நெளிந்து கொண்டிருக்கும் ஜலத்தைக் குடிக்கக் கூடாது. வெந்நீரைக் குடிக்கும் பழக்கம் நல்லது. காய்ச்சின ஜலம் ஆறியிருந்தாலும் குடிக்கலாம். ஆனால் இன்றைக்குக் காய்ச்சியதை நாளைக்கும் வைத்திருந்து குடிப்பதோ..பல்லைக் கிட்டுமளவு குளிர்ந்ததைக் குடிப்பதோ கூடாது.

பால் [கிடைக்குமானால்... பசுவின் பாலானால்] எல்லோரும் குடிக்கலாம்... காய்ச்சின பால் அளவோடு சூடாக இருக்குமானால் நல்லது. அதிகம் காய்ந்து சுண்டியதோ அல்லது கொதித்துக் காய்ந்ததோ விரும்பத் தக்கதல்ல. கறந்த சூட்டோடு உள்ள பால் அமிர்தத்துக்குச் சமம் என்பர்.

மோரும் அவ்வாறே. தயிர் நல்லதுதான். ஆனால் இதை இரவில் ஏற்கவே கூடாது. பகலிலும் தினந்தோறும் சேர்த்துக் கொள்ளலாகாது. தயிரைச் சேர்த்து உண்ணும் வேளைச் சாப்பாட்டில் பச்சைப் பயறோ அல்லது நெல்லிக்காயோ அல்லது தேனோ அல்லது கற்கண்டோ எவ்விதமாகவாவது சேருவதாயிருத்தலும் அவசியம்.

நெய்யைப் பற்றின வரையில் பாலைப் போலவேதான். ஆனால் பாலைப்போல் தனித்ததாக ஓர் ஆழாக்கு குடிக்க முடியாது. உண்டிகளுடன் சேர்த்துச் சாப்பிடலாம்.

எண்ணெயைத் தாளிப்பதற்கும் அப்பளம் போன்றவைகளைப் பொரிப்பதற்கும் ஏற்றதுதான். ஆனால் கட்டெண்ணெய் கூடாது. பொதுவாக நல்லெண்ணெயை உள்ளுக்குச் சாப்பிடுவதால் உடல் மெலியுமென்றும், மேலுக்குத் தேய்த்துக் குளிப்பதால் உடல் பருமனாகும் என்றும் சாஸ்திரஞ் சொல்லுகிறது. அனுபவமும் அவ்வாறே.

இனி, பருவங்களை அனுசரித்து ஆகாராதிகளை மாற்றிக்கொள்வது ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ள அவசிய



மானதுதான். உண்ணும் பொருள்களின் சுவை, அவைகளின் நெய்ப்பு வறட்சித் தன்மை, வெப்பம் தண்மை என்ற சிறப்புக் குணம் இவைகளை அனுசரித்து ஆறு பருவங்களில் எந்தெந்தப் பருவத்தில் எவ்வெவ்விதத் தொகுப்பு நல்லதென்பதை ஓர் அட்டவணையாக வரைந்து காண்பித்தல் நல்லது.

**வஸந்தம் :** இளவேனில் - சித்திரை, வைகாசி மாதங்கள்.
**சுவை:** கசப்பு, கார்ப்பு, துவர்ப்பு.
**குணம் :** வறட்சி.
**சிறப்புக் குணம் :** வெப்பம்.

**க்ரீஷ்மம் :** முதுவேனில் - ஆனி, ஆடி மாதங்கள்.
**சுவை :** இனிப்பு.
**குணம் :** நெய்ப்பு.
**சிறப்புக் குணம் :** தண்மை.

**வர்ஷம் :** கார் - ஆவணி, புரட்டாசி மாதங்கள்.
**சுவை :** இனிப்பு, புளிப்பு, உப்பு.
**குணம் :** நெய்ப்பு.
**சிறப்புக் குணம் :** வெப்பம்.

**சரத் :** கூதிர் - ஐப்பசி, கார்த்திகை.
**சுவை :** இனிப்பு, கசப்பு, துவர்ப்பு.
**குணம் :** வறட்சி.
**சிறப்புக் குணம் :** தண்மை.

**ஹேமந்தம் :** முன்பனி-மார்கழி, தை
**சுவை :** இனிப்பு, புளிப்பு, உப்பு.
**குணம் :** நெய்ப்பு.
**சிறப்புக் குணம் :** வெப்பம்.

**சிசிரம் :** பின்பனி - மாசி, பங்குனி.
**சுவை :** இனிப்பு, புளிப்பு, உப்பு.
**குணம் :** நெய்ப்பு.
**சிறப்புக் குணம் :** வெப்பம்.

தினந்தோறும் நாம் உண்டு பழக்கப் பட்ட விதத்தில் அறுசுவையும் கூடிய ஆகாரத்தை ஏற்பதுதான் முறை. இது பொது விதியுமாகும்.

**ஓய்வு - உறக்கம் :**—ஆரோக்கிய கோபுரத்தின் இரண்டாவது தூண் ஓய்வும் உறக்கமும். உழைப்புக்குத் தகுந்த ஓய்வும் அலுப்புக்குத் தகுந்த உறக்கமும் அவசியமென்பது மறுக்க முடியாத ஓர் உண்மை.

மனிதன் சாதாரணமாக இராப் பொழுதில் இரண்டு ஜாம காலம்..... அதாவது பகுதி நேரம் சுமாருக்கு உறங்கினால் போதும். முதல் யாமத்தின் பிற்பகுதியில் அதாவது சுமார் ஒன்பது மணிக்குப் படுத்து, நான்காவது யாமத்தின் முற்பகுதியில் விழித்தெழுந்தால் போதும்; அதாவது காலை நாலு மணிக்குப் பிறகு.

தூக்கம்—அதுவும் இராத் தூக்கம் கெடுவதால் உடல் மெலிந்து விடுவதோடு பலதரப்பட்ட வாத ரோகங்களும் உண்டாகும். அவ்விதமே பகலில் உறங்குவதால் தேகம் பருமனாகும். மதுமேஹம் என்னும் டயாபிடிஸ் முதலான ரோகங்கள் உண்டாவதற்கு ஏதுவாகும்.

விஷம் கொண்டவரும் கண்ட ரோக முற்றவரும் இரவில் கூடத் தூங்கக் கூடாது. பகலில் தூங்கக் கூடாதென்பதைச் சொல்லவும் வேண்டுமா?

ஆரோக்கிய கோபுரத்தின் மூன்றாவது தூணைப்பற்றி இங்கு சொல்வது அவசியமாகும். ஆனால் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பற்றற்ற வகையில் அளவோடு கட்டுப்பாடான அப்பிரஹ்மசர்யம் அவசியம். ஆனால் குடும்பக் கட்டுப்பாடு என்று இன்று சொல்லும் அர்த்தமற்ற முறைகளைப் பின்பற்றுவதால் விபரீதங்கள்தான் விளையும். பண்பினாலும் சமூக வாழ்க்கையில் நடைமுறையிலுள்ள கட்டுத்திட்டங்களாலும் மனத் தெளிவினாலும் தானாகவே தன்னுள் எழும் மன அடக்கத்தினாலும் அப்பிரஹ்ம சர்யத்தில் அதிகம் போக்கு ஏற்படாது. அப்படி ஏற்படும் மனோ நிக்ரஹத்தால் சாதிப்பதுதான் சிறந்தது. தற்காலத்திய பிரசாரப்படி குடும்பக் கட்டுப்பாடு என்ற முறைகளால் உடலில் பல கேடுகள் ஏற்பட நியாயமுண்டு. அது ஒருபுறமிருக்க மனக் குரங்கு கட்டவிழ்த்துக் கொண்டு விடவும் மக்களின் சீலம் கெடவும் கூடும்.

நல்லொழுக்கத்தால் மனம் நன்னிலையிலிருக்கும். அதனால் உடலும் ஆரோக்கிய நிலையிலிருக்கும். துக்கத்தால் பீடிக்கப்பட்ட நபருக்குப் பசி மந்தித்துப் போவதைக் காண்கிறோம். பயத்தினால் வெளிக்குப் போகத் தொடங்கி விடுகிறது. மிரட்டினால் போதும். சில குழந்தைகள் சிறுநீரைக் கழித்துவிடும். மார்பு படபடவென்று அடித்துக் கொள்ளும். துக்கத்தினால் பீடிக்கப்பட்ட ஒரு தாயின் பாலைப் பருகும் குழந்தைக்கு வயிறு கழியத் தொடங்கும். வழக்கமாகப் பருகும் தாய்ப் பாலை வழக்கம்போல் ஜெரித்துக் கொள்ளும் குழந்தைக்கு அதே பாலை இப்போது ஏன் ஜெரித்துக் கொள்ள முடியவில்லை? ஜெரித்துக் கொள்ள முடியாத நிலைக்கு அத்தாய்ப் பாலின் இயல்பு மாறிவிட்டது. அது மட்டுமல்ல: குழந்தையின் வயிற்றுக்கு ஏற்காத ஒரு வகைப்பட்ட விஷத் தன்மையும் அப்பாலில் ஏற்படுகிறது. அதனால் பாலைக் குடித்ததும் குழந்தை அதை வாந்தி எடுத்து விடுகிறது. கூடவே பேதியும் ஆகிறது.

"வேளைக்கு ஒரு நிறமாகப் பேதியாகிறது. வாந்தியும் ஆகிறது" என்று சொல்லிக் கொண்டே குழந்தையைக் காண்பிக்க வரும் தாய்மார்களைக் காண்கிறோம். அநேக நிறமாக வாந்தியாகும், அநேக நிறத்தில் சிறுநீர் கழியும், அநேக நிறத்தில் பேதியும் ஆகும் என்ற லக்ஷணங்கள் விஷம் கலந்த ஆகாரம் குடலில் சென்றுள்ள நிலையில் ஏற்படுமென்று சாஸ்திரம் சொல்கிறது. தாய்ப் பாலை மட்டும் ஆகாரமாக ஏற்கும் குழந்தைக்கு இந்நிலை எப்படி ஏற்படக் கூடும்? விஷகுணம் தாய்ப் பாலில் உண்டாகி யிருக்க வேணும். அதெப்படி உண்டாகிறது? இதற்குத் தாயின் மனத் துயரந்தான் காரணம். துயருற்ற மனத்தின் விளைவை இவ்விதம் அறிந்த பிறகு தூய்மையான மனத்தினால் சரீர ஆரோக்கியம் நிலை பெறும் என்று தெளிவதில் என்ன கஷ்டமிருக்க முடியும்? மனம் தூய்மை நிலையில் இருக்க வேணுமானால் தர்மாசரணம் ஒன்றுதான் வழி. தர்மாசரணத்தைத் தான் நல்லொழுக்கம் என்று அழைப்பது. இதுதான் ஆரோக்கிய கோபுரத்தின் நான்காவது கற்றூண்.

இந்நான்கு வகையிலும் விழிப்புடனிருந்து இந்நான்கு கற்றூண்களையும் காப்பாற்றி வருவது நமது பொறுப்பு; நம் கையில்தானிருக்கிறது. ஆகவேதான் ஆரோக்கியம் நமது கைப்பொருள்—குறைவற்ற செல்வம், ரொக்கமாக நம் கையில் இருக்கிறது என்று ஆரம்பத்தில் சொன்னேன்.

இத்தூண்களோ கற்றூண்கள். சிற்றுளியால் நிறுவப்பட்ட நகாச வேலைப்பாடு நிரம்பியுள்ளவை. சிறிய அடிபட்டாலும் சேதமுறும் தன்மை பெற்றவை. கூழாங் கல்லல்ல. சிற்றுளி வேலைப்பாடுள்ளவை. அஜாக்கிரதையினால் கற்றூண்களுக்குச் சேதாரம் ஏற்படும். உளிபட்ட கல் எளிதில் உடைந்தேவிடும். விழிப்புடன் இவற்றைக் காக்க வேண்டும். அது நம் கைவசமுள்ளதுதான்.

அஜாக்கிரதை பற்றாமல்.....விழிப்புடனிருந்து.....என்றெல்லாம் சொல்லும் போது கவனத்தில் இருக்க வேண்டிய விஷயம் வேறு ஒன்றும் உண்டு. அதைத் தான் வைத்திய சாஸ்திரங்களில் "வேகம்" என்பர்.

"வேகம்" என்பதை இயக்கம், அல்லது இயற்கையின் போக்கு என்று சொல்லலாம். மலஜலங்களைக் கழிக்க வேணுமென்று தோன்றுவது இயற்கையின் இயல்பு. இவற்றை இரண்டு வகை வேகங்கள் என்று வைத்திய சாஸ்திரம் சொல்லும். இவ்விதமான வேகங்கள் சரீரத்தைச் சம்பந்தித்தவை பதினான்கு. பசி, தாகம், உறக்கம், தும்மல், இருமல், கண்ணீர், வாயு பிரிதல், ஏப்பம் விடுதல், கொட்டாவி, வாந்தி, விக்கல் என்று இப்படி யெல்லாம் வேகங்களுண்டு. இவற்றைத் தடைசெய்து ஒருகாலும் நிறுத்தலே கூடாது. அவ்விதமே இவைகளைப் பலவந்தமாக வெளிப்படுத்தவும் கூடாது. அவ்வாறு செய்வதால் பல வகைப்பட்ட ரோகங்கள் உண்டாகும்.

மனத்தைச் சார்ந்த வேகங்களும் உண்டு. கோபம், ஈர்ஷை, மாத்ஸர்யம், ராகம், த்வேஷம், மதம், மோஹம் என்பவற்றை மனத்தின் வேகத்துக்கு உதாரணமாகச் சொல்வர். இத்தரப்பட்ட மனோ வேகங்களைக் கட்டாயமாகவும் தடை செய்து அடக்கி நிறுத்த வேண்டும். அன்றேல் இன்னல் விளைவது நிச்சயம். சரீர சம்பந்தமான வேகங்களைத் தடை செய்யவும் கூடாது — நிர்ப்பந்தமாகப் போக்கவும் கூடாது. மானஸிகமான வேகங்களை இகத்திலும் பரத்திலும் நன்மையை விரும்புவோன் ஒருகாலும் தன் போக்கில் விடக்கூடாது. இப்படி மனோவேகத்தை அடக்கும் சாமர்த்தியம் பண்பினாலும் ஏற்படும்; பயிற்சியினாலும் ஏற்படும். பயிற்சியினாலும் உண்டாக்கிக் கொள்ளலாம். இதுவும் நம்மால் சாதிக்கக் கூடியதுதான். ஆகவே நோயற்ற வாழ்வென்னும் குறைவற்ற செல்வம் நம் கைப்பொருள். இதைக் காத்துக் கொள்வது நம்மால் முடியும். இந்நிலை அடைவதற்கான அறிவை நமக்கு ஈசன் அருளியுள்ளான். மற்றும் பற்பல நல்ல சாஸ்திரங்களையும் நமக்குக் கைவிளக்காய் தந்துள்ளான் ஈசன்.

# வேதாந்த கோபாலன்

சியாமா



ரயிலுக்குப் புறப்பட வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது. கடைசி முறையாக அப்பாவுக்கும் அம்மாவுக்கும் வணங்கி எழுந்த ராதையின் கண்கள் கலங்கி யிருந்தன.

"அழாதே, குழந்தை! கலங்காமல் சந்தோஷமாகப் போய் வா" என்று கூறிய அப்பாவின் குரலிலே கலக்கம் தொனித்தது.

துக்கம் தொண்டையை அடைக்க அம்மாவால் பேசவே முடியவில்லை. எல்லோரும் இந்நிலையில் வாசலை அடைந்தார்கள். சாமான்கள் ஏற்கனவே வண்டியில் ஏற்றப்பட்டிருந்தன. தம்பி சீனு முதலில் வண்டிக்குள் ஏறிக்கொள்ள, ராதை பின் தொடர்ந்தாள்.

"நாளைக் காலை பட்டணம் போனதும், முதல் காரியமாகக் கடிதாக போடு; மறந்து விடாதே" என்றாள் அம்மா.

தலையை மட்டும் அசைத்தாள் ராதை, வாயைத் திறந்தால் அழுது விடுவோமோ என்று பயப்படுபவள்போல்.

"கண்வர் சகுந்தலைக்குச் செய்த உபதேசத்தை நினைவில் வைத்துக் கொள், அம்மா! நல்ல பெயர் எடுத்து, ஆயிரங் காலம் நீ வாழ வேண்டும்" என்று அப்பா ஆசீர்வாதம் செய்தார்.

"சீனு, பத்திரம். ரயிலில் தூங்கி விடாமல் அக்காளைக் கவனித்துக் கொள்" என்றாள் அம்மா.

"சினிமா, கடற்கரை என்று மாப்பிள்ளை கூப்பிட்டால்கூட நீ உன் ஆவலை வெளிக் காட்டாதே. அவர் மெத்தப் படித்தவர். வேதாந்தத்திலும், தர்க்க சாஸ்திரத்திலும் எம். ஏ. பாஸ் செய்திருக்கிறார். அவருடைய அந்த யோக்கியதைக்குத் தக்கபடி உன் வெறுப்பு விருப்புகளை மூட்டை கட்டி வைத்து நீ நடந்து கொள்ள வேண்டும்" என்றார் அப்பா.

"சும்மா அதையே திரும்பத் திரும்பச் சொல்லாதேங்கோ. முதல் முதலாகப் புருஷன் வீட்டுக்குக் குடித்தனம் பண்ணக் குழந்தை போகிறாள். அங்கேயோ ஓர் ஆபத்துக்கு உதவிக்கு ஒருத்தர் இல்லை. நீங்களும் சேர்ந்துகொண்டு அவளைப் பயமுறுத்தினால்...?" என்றாள் அம்மா, சற்று உஷ்ணமாகவே.

அதைத் தனக்குக் கிளம்ப உத்தரவாகக் கொண்டவன் போல் வண்டிக்காரன் சாட்டையை ஒரு சொடுக்குச் சொடுக்கக் குதிரையும் பின்னும் முன்னும் நடந்து வண்டியை ஒரு குலுக்குக் குலுக்கிச் சலங்கை 'ஜல், ஜல்' என்று ஒலிக்க ஸ்டேஷனை நோக்கி ஓட ஆரம்பித்தது....

சுவாமிமலை ஸ்டேஷனில் அன்று கூட்டமில்லை. அதே போல் அங்கு சரியான நேரத்துக்கு வந்து கிளம்பிய திருவனந்தபுரம் பாசஞ்சரிலும் இடத்துக்குப் பஞ்சமில்லை. இருவரும் வசதியாக உட்கார்ந்து கொள்ள, ரயிலும் தன் பிரயாணத்தைத் தொடங்கியது. ஓர் ஓரத்தைப் பிடித்துக் கொண்ட சீனு, ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிக் கொண்டு வழி நெடுக, ரயில் ஸ்டேஷன்களில் நின்றதையும், அங்கு குழுமியிருந்த ஜனங்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். வெகு விரைவில் நன்றாக இருட்டி விட்டது. மாயவரத்திலிருந்து ரயில் கிளம்பியபொழுது இரவு பத்து மணி ஆகியிருந்ததைப் பிளாட்பாரத்திலிருந்த பெரிய கடிகாரத்தில் ராதை பார்த்தாள்.

"சிதம்பரம் தாண்டினால் அவ்வளவு கூட்டம் வராது. இனிமேல் நீ தூங்கேண்டா சீனு" என்றாள் தம்பியிடம்.

ரயிலுக்குக் கிளம்பும் முன் அம்மா தன்னை எச்சரித்ததை அவளுக்கு நினைப்பூட்டிய சீனு, "நீ வேண்டுமானால் தூங்கு. பத்திரமாகச் சாமான்களையும் உன்னையும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்றான்.

ராதையின் முகத்தில் ஒரு குறுநகை படர்ந்தது. சீனுவுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். ராதையைவிட எட்டு வயது சிறியவன். அவள் தூங்கவேண்டுமாம். அவன் விழித்திருந்து அவளைப் பத்திரமாகக் கண்காணித்துக் கொள்ளப் போகிறானாம்!

வெளியே இருட்டு மலைபோல் வானளாவி நின்றது. அதனால் ஜன்னலுக்கு அப்பால் சீனுவுக்குப் பார்க்க ஒன்றுமில்லை. அவனையும் மீறிக் கொட்டாவி கொட்டாவியாக வந்தது. அதை ராதை கண்டு கொள்வாளோ என்ற பயத்தில் அவன் பேச ஆரம்பித்தான்.

"கிளம்பும்போது அப்பா யாரோ கண்வர் என்று சொன்னாரே? யார் அந்த மாமா?" என்றான்.

சற்று முன்புதான் தன்னைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்வதாகச் சொல்லியிருந்த அந்தப் பெரியவனின் அறியாமை அவளைச் சிரிக்கச் செய்தது. இருந்தாலும் அவனுக்கு அவள் சகுந்தலையின் கதையைச் சொல்லி அப்பா குறிப்பிட்ட சுலோகத்துக்குச் சற்று விரிவாகவே விளக்கம் கொடுத்தாள்.

"பெரியவர்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும்; சக்களத்திகளுடன் ஓர் அந்தரங்கத் தோழிபோல் பழக வேண்டும்; கணவன் தவறு இழைத்தாலும் அவனிடம் கோபமாக நடந்து கொள்ளக் கூடாது; வேலையாட்களைப் பரிவுடன் நடத்த வேண்டும்; தன் அதிருஷ்டத்தில் அகந்தை கொள்ளக் கூடாது. இவைதான் ஒரு குடும்பத் தலைவியின் சிறந்த அணிகலன்கள்."

"சக்களத்திகள் என்றால்?" என்று கேட்டான் சீனு.

"ஒரு ராஜா என்றால் அவனுக்கு எத்தனையோ ராணிகள் இருக்க மாட்டார்களா? வீண் சண்டை சச்சரவுகளைத் தவிர்க்க அவர்களுடன் ஓர் அந்தரங்கத் தோழி போல் பழக வேண்டும் என்று கண்வர் தம் மகள் சகுந்தலைக்குச் சொல்லியிருக்க வேண்டும்." என்றாள் ராதை.

"அப்படியானால் அத்திம்பேருக்கும்-" என்று ஆரம்பித்த சீனு, மேலே சொல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவித்தான்.

"போடா மக்கு, உன் அத்திம்பேர் ராஜாவுமில்லை, நான் ராணியுமில்லை" என்று அவன் காதோடு சொல்லிச் சிரித்தாள் ராதை.

ஆனால் அடுத்த நாள் இரவு, தனிமையில், அவள் கணவன் கோபாலன் அவளை ராணி என்று அழைத்தபோது, முந்திய நாள் சம்பவம் நினைவுக்கு வந்து, அவள் தன்னையும் மறந்து இரைந்து சிரித்தாள். நல்லவேளையாகக் கோபாலனுக்கு, அவள் இருந்த மயக்க நிலையில் அவளை அந்தச் சிரிப்புக்குக் காரணம் என்னவென்று கேட்கத் தோன்றவில்லை.

பிரயாண அலுப்பில் சாப்பிட்ட உடனேயே சிறு தூங்கி விட்டாள். தன் பெட்டியைத்திறந்து ராதை, கோபாலன் காட்டிய அலமாரியில், தன் சாமான்களை அடுக்கிக் கொண்டிருந்தாள். அருகில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கோபாலன் அவளுடைய ஒவ்வொரு அசைவையும் ரசித்துக் கொண்டிருந்தான். அப்போது அவளிடமிருந்த அந்தக் கீதைப் புத்தகம் அவன் கண்களில் பட்டது.

"ஏது, இதெல்லாம் கூடப் படிக்கிறாயா நீ!" என்று சொல்லிக்கொண்டே புஸ்தகத்தைக் கையில் எடுத்தான்.

"ஏதோ கொஞ்சம் அப்பாவிடம் பாடம் கேட்டிருக்கிறேன்!" என்று அவர்கள் இல்லற வாழ்வில் முதல் பொய்யை அவள் உதிர்த்தாள். அட்டைக்கு உள்ளே அந்தப் புஸ்தகத்தை அவள் பார்த்ததில்லை. இருந்தாலும் வேதாந்த சாஸ்திரத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றிருக்கும் கணவனுக்குத் தகுதி உடையவளாக இருக்க வேண்டுமே என்ற கவலையிலும், ஆவலிலும் ஊருக்குக் கிளம்புவதற்கு முதல் நாள்தான் அப்பாவிடமிருந்து அந்தப் புஸ்தகத்தைக் கேட்டு வாங்கித் தன் பெட்டிக்குள் பத்திரப்படுத்தியிருந்தாள்.

"உங்கப்பா நான்கு வேதங்களையும் கரைகண்டவராச்சே! அதை மறந்து எப்படிப்பட்ட அசட்டுக் கேள்வியைக் கேட்டுவிட்டேன்? அவர் பெண் கீதை கூடப் படிக்காமல், பின்னே துப்பறியும் கதைகளையா படிப்பாள்?" என்றான் கோபாலன், பெருமை தாங்காமல்.

பிறகு, "நாளைக்கே சிறு ஊருக்குப் போகவேண்டுமாமே?" என்று பேச்சின் போக்கைத் திடீரென்று திருப்பினான்.

"ஆமாம். இந்த வருஷம் நான்காம் பாரத்தில் படிக்கும் அவள் கண்டபடி லீவு எடுக்க முடியாது அல்லவா? அதனால்தான் அப்பா ஒரு நாள் தங்கியிருந்து விட்டு உடனே திரும்பி வந்து விடும்படி சொன்னார்" என்றாள் அவள்.

அவள் குரலே அவனுக்கு வீணையின் இன்னிசைபோல் இருந்தது. அவளுடன் தனிமையை வேண்டித் தவம் கிடந்த அவனுக்குச் சிறு அப்படி உடனேயே ஊருக்குப் போவதில் உள்ளூற மகிழ்ச்சிதான் ஏற்பட்டது.

"அப்போ நானே சிறுவை ரயிலில் ஏற்றிய பின் நாம் ஏதாவதொரு சினிமாவுக்குப் போய் வந்தால் என்ன?" என்றான் ஆவலுடன்.

"சி னி மா வா?" என்று அவள் தடுமாறினாள். ரயிலுக்குக் கிளம்பும் கடைசி நிமிஷத்தில் கூட அது பற்றித் தன்னை அப்பா எச்சரித்தது அவள் கண்முன் வந்தது.

"ஏன், சினிமா உனக்குப் பிடிக்காது?"

வந்ததும் வராததுமாகச் சொல்லி வைத்தாற்போல் அவன் சினிமாவுக்குக் கூப்பிட்டது அவளை என்னவோ செய்தது. அப்பாவின் எச்சரிக்கையில் ஏதோ உண்மை இருக்க வேண்டும் என்று நம்பினாள். அதனால் பயந்து கொண்டு தனக்குப் பிடிக்காது என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள்.

அவளுடைய அந்தப் பதில் அவனைப் புல்லரிக்கச் செய்தது. சினிமாவை விரும்பாத ஒரு பெண்கூட உண்டா என்று வியந்தான். அந்தக் குலவிளக்கின் ஒளிக்கும், பண்புக்கும் தக்கபடி தானும் நடந்து கொள்ள வேண்டும் என்ற தீர்மானத்துக்கு அந்த விநாடியே அவன் வந்தான்.

"எனக்குந்தான் சினிமா வென்றால் பிடிக்காது!" என்றான் அசடு தட்ட.

அவனுடைய அந்தப் பதில் அவளை மூர்ச்சையே போடச் செய்தது.

"அப்போ ஸ்டேஷனிலிருந்து கடற்கரைக்குப் போவோம்!" என்றான் அவன் அரை மனத்துடன்.

"கடற்கரையா?..... உங்களுக்குக் கஷ்டமாக இல்லாவிட்டால் உங்களிடம் உபநிஷத்துக்களைக் கிரமமாகப் பாடம் கேட்க வேண்டுமென்று எனக்கு ரொம்ப நாட்களாக ஆசை. தினம் சாயங்காலம் ஆபீஸ் முடிந்தவுடன் வந்து எனக்குச் சொல்லிக் கொடுப்பீர்களா?" என்றாள் ராதை, குரல் தழுதழுக்க. தங்கத்தின் மேல் தண்ணீர் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன என்று அவள் எண்ணியிருக்க வேண்டும்.

அவனோ "உபநிஷத்துக்களா? நிஜமாமா?" என்று திணறிக் கொண்டிருந்தான்.

ஆனால் அப்படிப்பட்ட பத்தினித் தெய்வத்துக்குத் தகுதியாக அவன் மட்டும் நடந்து கொள்ள வேண்டாமா?

அடுத்த நாள் ஆபீஸிலிருந்து திரும்பும் பொழுது ஒரு பெரிய புஸ்தக மூட்டையைத் தூக்க முடியாமல் அவன் தூக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தான்.

அன்றிரவே உபநிஷத் பாடமும் ஆரம்பமாகிவிட்டது. தினம் சாப்பாட்டுக்குப் பின் எட்டரை மணிக்கு ஆரம்பமாகும் பாடம் முடிவடையக் கிட்டத்தட்ட பத்து, பத்தரை மணி கூட ஆகிவிடும். சில நாட்கள் அவனே வாசித்து விளக்கம் கூறுவான். இரவில் அவளை வாசிக்கச் சொல்லிக் கேள்விகள் கேட்பான். ஈசம், கேனம், கடோபநிஷத் — இப்படி நாட்கள் கழிந்து கொண்டிருந்தன.

அவளுக்குத் தூக்கம் தூக்கமாக வரும்; துக்கம் துக்கமாகவும் வரும். ஆனால் பல்லைக் கடித்துக்கொண்டு சமாளித்துக் கொள்வாள், அவனுடைய படிப்புக்கும் மேதைக்கும், தான் தகுதியாக இருக்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்தில்.

"அவளுக்கும் உள்ளூற ஏன் இந்தப் பகல் போல் இரவு வருகிறது என்று அலுப்



பாக இருக்கும். ஆனால் தன்னுடைய அந்தப் பலவீனத்தை நான்கு வேதங்களின் கரைகளைக் கண்டிருந்த களஞ்சியத்தின் மகனிடம் காட்ட அவனுக்குத் துணிவில்லை. அவளை மனைவியாகப் பெற்றது சாதாரண பாக்கியமா? அதற்காக அவன் எதைத்தான் தியாகம் செய்யக் கூடாது?

இப்படி நாட்கள் போய்க்கொண்டிருந்தன.

ஒரு நாள் பாடம் ஆரம்பிக்கும் முன் அறையின் ஒரு மூலையில் தொங்கிக் கொண்டிருந்த அவனுடைய டென்னிஸ் மட்டையைக் காட்டி, ''ஏன் இப்பொழுதெல்லாம் டென்னிஸ் விளையாடுவதை விட்டு விட்டீர்கள்?'' என்றாள்.

''நானா, நானா?.... அது என்னுடைய மட்டை இல்லை. என்னுடைய நண்பனுடையது. எனக்கு விளையாட்டுக்கெல்லாம் எங்கே நேரம்? கல்லூரியில் படிக்கும் நாட்களிலேயும் வீட்டுக்கு வந்தால் என்னுடைய இந்த உபநிஷத்து ஆராய்ச்சிகளுக்கே நேரம் காணாதே. விளையாட நான் எப்படிப் போவேன்?'' என்று அளந்தான்.

அவள் இதயம் வெடித்து விடும்போலிருந்தது; பெருமையினாலில்லை, துக்கத்தினால்தான். ஆனால் அதை ஒப்புக் கொள்ளத்தான் அவளுக்குக் கூச்சமாக இருந்தது. அவனுக்குத் துரோகம் பண்ணுவது போன்ற ஓர் உணர்ச்சி. அவனே அன்றிரவு அதற்குப்பின் உடற்பயிற்சி ஆன்மிகத் துறையில் முன்னேற்றம் காண்பதற்கு எவ்வகைகளில் குந்தகம் விளைக்கும் என்பதுபற்றி உபநிஷத்துக்களிலிருந்து மேற்கோள்களுடன் ஓர் அழகான சொற்பொழிவே நிகழ்த்தத் தவறவில்லை. அதோடு நிற்காமல் அடுத்த நாள் ஆபீசுக்குச் செல்லும் பொழுது அந்த மட்டையைத் தன் நண்பனிடம் திருப்பித் தந்துவிட வேண்டும் என்று சொல்லிக் கொண்டே அவளுக்குமுன் அதை அறையிலிருந்து எடுத்துச் சென்றான்.

அவன் சென்றபின், அன்று முதல் முதலாக வாய் விட்டு அழுது அவள் தன் துக்கத்தைத் தீர்த்துக் கொண்டாள். எங்கு திரும்பினாலும் தன் வாழ்க்கை சூன்யமாகத் தானிருக்கப் போகிறது என்ற பயம் அவளைக் கவ்விக் கொண்டது.

கிராமத்தில் மகளிடமிருந்து வாரந்தோறும் தவறாமல் வந்து கொண்டிருந்த கடிதங்களை அவள் அன்னை ஆவலுடன் அலசித் துருவிப் படிப்பாள். ஒருதரமல்ல, பல தரம். ஆனால் அவற்றிலிருந்து பட்டணத்தில் தன் மகள் எப்படிப்பட்ட வாழ்வு வாழ்கிறாள் என்பதை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. ''சினிமாவுக்குப் போகிறாயா, நீயும் மாப்பிள்ளையும் கடற்கரைக்குப் போவதுண்டா, எங்கெங்கே போனாய், யார் யாரைக் கண்டாய்?'' என்ற கேள்விகளுக்கெல்லாம் ராதையிடமிருந்து பதிலொன்றும் வராது. பொதுவாகச் சௌக்கியம் என்று மட்டும் எழுதியிருப்பாள். ஆனால் அக்கடிதங்களில் அவள் எழுதாத, சொல்லாத ஓர் ஏக்கம் இழையோடுவது போல் அவளுக்குத் தோன்றும். இந்த மன நிலையில்தான், ஒருநாள், தன் கணவன் என்ன தடுத்தும் கேளாமல், மாப்பிள்ளைக்கும் முன்கூட்டித் தெரிவிக்காமல் அவள் தனியே ரயிலேறி மகளைக் காணச் சென்னைக்கு வந்து சேர்ந்தாள்.

அதற்கு முதல் இரவுதான் உபநிஷத் பாடத்தில் ராதைக்கு ஒரு சோதனையான கட்டம். கிட்டத்தட்ட நான்கு மாதங்களாக, ஓரிடமும் போகாமல், ஒவ்வொரு இரவும் பாடம் கேட்டு அலுத்துப் போயிருந்த அவள் அன்றிரவு தன்னுடைய அந்தப் போராட்டத்துக்கு எப்படியாவது முடிவு கண்டு விடுவது என்ற வேகத்தில் இருந்தாள். கணவன் தன்னை எவ்வளவு கேவலமாக எண்ணிக் கொண்டாலும் சரி, தொடர்ந்து இதில் தான் ஈடுபடுவதற்கில்லை என்பதை அப்பட்டமாக அன்றிரவு அவனுக்குச் சொல்லிவிட வேண்டும் என்று அவள் துடிதுடித்துக் கொண்டிருந்தாள்.

ஆபீஸில் கோபாலனும் அன்று முழுதும் அவளுடைய மன நிலையில்தான் இருந்தான். டென்னிஸாம் விளையாடாமல், சினிமா, கடற்கரை போன்ற அவனுக்குப் பிடித்த இடங்களுக்கும் போகாமல் அவளுக்காக நான்கு மாதங்களை எப்படியோ கடத்தியாகி விட்டது. தொடர்ந்து இதே போக்கில் போய்க் கொண்டிருந்தால், ஒருநாளில்லா விட்டால் ஒருநாள் தான் கட்டாயம் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் குடிபுகும்படி நேரிடலாம் என்ற பீதி கொஞ்ச நாட்களாகவே அவனைப் பிடித்துக் கொண்டிருந்தது. தன்னை அவள் தனக்குத் தகுதியற்றவன் என்று எண்ணினாலும் எண்ணட்டும், இன்று எப்படியாவது உண்மையைச் சொல்லி விடுவது என்ற தீர்மானத்துடன் அவன் வீடு திரும்பியிருந்தான்.

இந்த மனநிலையில் சாப்பிடும்போதும் அதற்கு முன்பும் பின்பும் அவர்களிடையே ஒருவிதப் பேச்சும் எழவில்லை. சாப்பாட்டை ஒருவாறாக முடித்துக்கொண்டு வழக்கம்போல் தங்கள் அறைக்கு வந்தார்கள். அவளை நிமிர்ந்து நோக்கவே அவனுக்குக் கூச்சமாக இருந்தது. அவளோ பாடம் ஆரம்பிப்பதற்கு முன் பேச்சை எப்படித் துவங்குவது என்று தவித்துக் கொண்டிருந்தாள்.

அதற்கு முதல்நாள் இரவு முடிந்திருந்த கட்டத்தில் உபநிஷத் புத்தகம் திறந்து மேசைமீது தோற்ற மளித்தது. அந்தக் காட்சிதான், அவனுக்குத் தான் இழைக்க இருந்த பெரும் துரோகத்தை அவன் மனக்கண்முன் கொண்டு வந்து நிறுத்தியிருக்க வேண்டும். ஏதோ விஷமம் செய்து கையும் மெய்யுமாக அகப்பட்டுக் கொண்ட சிறுவன்போல் புஸ்தகத்தைக் கையிலெடுத்த அவன் திறந்திருந்த இடத்திலிருந்து வாசிக்க ஆரம்பித்தான்.

'சரீரமாகிய விருக்ஷத்தில் ஜீவனும், ஈசுவரனும் இணைபிரியாத அழகிய இரு பட்சிகளைப்போல் உறைகின்றனர். ஜீவனாகிய பட்சி சினிமா, கேளிக்கை போன்ற தித்திப்பான பழங்களை உண்டு மதிமயங்குகிறது. ஈசுவரனாகிய பட்சி உண்ணாமல் காத்துக் கொண்டிருக்கிறது. பொன் போல் ஒளிரும் ஈசுவரப் பட்சியைப் பார்க்குந்தோறும், அதை நாடி ஜீவப் பட்சி முடிவில் புண்ணிய பாவங்களாகிய பழங்களை உதறித் தள்ளி விட்டு; அத்துடன் சம நிலை எய்துகிறது....''

அதற்குப்பின் ராதைக்கு மட்டும் சொல்ல என்ன இருந்தது....

அடுத்த நாள் பிற்பகல் அம்மா கெண்டிக் கெண்டிக் கேட்க, அவள் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு நான்கு மாதங்களாகத் தன்னுள்ளே குமுறிக் கொண்டிருந்த ஏக்கங்களையும், உணர்ச்சிகளையும் கொட்டிப் பிழியப் பிழிய அழுதாள் ராதை. அடிக்கொரு தடவை ''இவரும் சாக்ஷாத் அப்பாவேதான் அம்மா, அப்பாவேதான்'' என்று விம்மினாள்.

பிற்பகல் ஆபீஸில் லீவு போட்டுவிட்டு எதேச்சையாக வீடு திரும்பிய கோபாலனை ராதையின் அழுகையும் அந்த விமரிசனமும் திக்குமுக்காடச் செய்தன. நல்ல வேளையாக அவன் வந்ததை இருவருமே கவனிக்கவில்லை. வராந்தாவிலேயே நின்று விஷயத்தை ஒருவாறு புரிந்துகொண்ட அவன், வந்த சுவடு தெரியாமலே திரும்பிச் சென்றான்.

கோபாலன் மீண்டும் வீட்டை அடைந்தபோது மாலை ஐந்தரை மணி இருக்கும். உள்ளே நுழையும் போதே, மிக மகிழ்ச்சியுடன், ''ராதா! சீக்கிரம் கிளம்பு. இன்று சேர்ந்தாற்போல் இரண்டு சினிமாக்களுக்கு டிக்கெட் வாங்கி வந்திருக்கிறேன், வீட்டைப் பார்த்துக் கொள்ள அம்மா இருக்கிறார் என்ற தெம்பில்'' என்றான்.

டாக்ஸி தியேட்டரை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

''நான் உங்களுக்கு முற்றிலும் தகுதியற்றவள்'' என்று அவள் விம்மினாள்.

''யார் சொன்னது அப்படி? நான் ஏதேதோ கற்பனை பண்ணிக் கொண்டு, சென்ற நான்கு மாதங்களாக உன்னைப் படாதபாடு படுத்தி விட்டேன்'' என்ற கோபாலன், அவள் கையைப் பற்றினான்.

விம்மலை அடக்க முடியாமல் அவள் வாயைக் கைக்குட்டையால் மூடிக் கொண்டாள்.

''சினிமா என்றால் எனக்கு உயிர்'' என்றான் கோபாலன்.

''எனக்குந்தான்....'' என்றாள் அவள், விம்மல்களுக்கிடையே.

''காலேஜில் படிக்கும்போது கிளாஸில் துப்பறியும் நாவல்களை வைத்துப் படித்ததற்காக எனக்கு எத்தனை தடவைகள் அபராதம் போட்டிருப்பார்கள் தெரியுமா?'' என்றான் கோபாலன் அளவற்ற பெருமையுடன்.

''அப்பா கீதையைப் படி என்று சொல்லிப் புஸ்தகத்தைக் கொடுப்பார். அதற்கு அடியில் துப்பறியும் நாவலை மறைத்துக் கொண்டு நான் படிப்பேன்'' என்றாள் ராதையும் சளைக்காமல்.

''இன்று மத்தியானமே ஒரு வாசகசாலைக்குச் சந்தா கட்டிவிட்டேன். நாளை முதல் உனக்கு வேண்டிய நாவல்கள் வீட்டுக்கே வந்து விடும்.''

''நான் கேட்கிறேன்னு கோபிக்கக் கூடாது. எதற்காகப் போயும் போயும் கல்லூரியில் வேதாந்தமும், தர்க்க சாஸ்திரமும் படித்தீர்கள்?'' என்றாள் ராதை கொஞ்சலாக.

''ஓ, அதுவா? அது....'' சற்றுத் தயங்கிய கோபாலன், ''வேறு ஒரு பிரிவிலும் எனக்கு இடம் கிடைக்கவில்லை'' என்று அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

அவளும் அவனுடைய அசட்டுச் சிரிப்பில் கலந்து கொண்டாள்.


பனிச்சென்று
வெளுத்த
புத்தாடைகள்
பண்டிகை
காலங்களில்
மகிழ்ச்சியை
அதிகரிக்கின்றன
இயற்கையில்
கவர்ச்சிகரமான
வெண்மையளிப்பது
ராபின் ப்ளூ
(ராபின் அல்ட்ராமரைன் ப்ளூவின்
பிரபலமான பெயர்)
அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்



## நடன விருந்து

கலைகளுக்கெல்லாம் தாயாக விளங்குவது பரத கலை; சங்கீதம், சிற்பம், சித்திரம், கவிதை ஆகிய அத்தனை கலைகளுமே பரத கலையிலிருந்தே ஊக்கமும் உற்சாகமும் பெறுகின்றன! இத்தகைய அரிய கலையில் படித்தவர்களெல்லாம் மோகங்கொள்வதில் என்ன அதிசயமிருக்கிறது? டாக்டர் ராஜகோபால், டாக்டர் சாந்தசுந்தரி இவர்கள் வைத்தியத் துறையில் எவ்வளவு புகழ் பெற்றவர்களோ, அவ்வளவு அவர்களது கலை ஆர்வமும் புகழ்பெற்றது! புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? இவர்களுடைய புதல்வி குமாரி சித்திரலேகாவும், வைத்தியக் கல்லூரியில் மிகுந்த சிறப்புடன் படித்து வருகிறார் என்று அறிகிறோம். அத்துடன் பரத நாட்டியக் கலையிலும் மிகுந்த ஆர்வம் கொண்டு நாட்டியக் கலா கேசரி காஞ்சீபுரம் ஜி. எல்லப்பா அவர்களிடம் பரதநாட்டியக் கலையை முறையாகப் பயின்று வந்திருக்கிறார். குமாரி சித்திரலேகா ஊத்துக்காடு வேங்கட சுப்பய்யரின் ஓர் அரிய பாடலுக்கு பாவம் பிடிப்பதைப் பின்வரும் பக்கங்களில் காணலாம்.
















ராகம் ஸிம்மேந்த்ர மத்யமம் — ஆதிதாளம்

பல்லவி

அசைந்தாடும் மயில் ஒன்று காணும்
நம் அழகன் வந்தா ரென்று
சொல்வது போல் தோணும் (அசை)

அநுபல்லவி

இசைபாடும் குழல் கொண்டு வந்தான் இந்த
ஏழேழ் பிறவிக்கும் இன்பநிலை தந்தான்
திசைதோறும் நிறைவாக நின்றான் என்றும்
திகட்டாத வேணுகானம் ராதையிடம் ஈந்தான்
எங்காகிலும் எமதிறைவா இறைவா
என மனநிறை அடியவரிடம்
தங்கும் மனத்துடையான் அருள்
பொங்கு முகத் துடையான்
ஒரும் பத வைத்து மறு பதம் தூக்கி


















நின்றாட மயிலினிற காட மகரக் குழையாட
மதி வதனமாட மயக்கும் விழியாட
மலரணிகளாட மலர் மகளும் பாட
இது கனவோ நனவோ என மறை
முனிவரும் மகிழ்ந்து கொண்டாட (அசை)

சரணம்

அசைபோடும் ஆவினங்கள் கண்டு
இந்த அதிசயத்தே சிலை போல நின்றதுவும் உண்டு
நிஜமான சுகம் என்று ஒன்று இருந்தால்
நிலவில் இதையன்றி வேறேதுவும் அன்று

இசைபாடும் கோபாலன் நின்று
நின்று எழுந்தெழுந்து நடமாட
எதிர் நின்று ராதை பாட.
(எங்காகிலும்.......மகிழ்ந்து கொண்டாட) (அசை)















# பொடி டப்பி உஷார்!













**T·A·S·ரத்தினம்**
**பட்டணம் பொடி**



S.R. ஞானம் பட்டணம் பொடியும் எமது தயாரிப்பே • தபால் பெட்டி 1151, மதுரை-21



# பாதுகை கண்ட மகிமை

எஸ். ரங்கநாயகி

அன்று அயோத்திமா நகரம் பூரண எழிலுடன் விளங்கியது. உப்பரிகையின் உயரத்தே இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களின் கொடி ஜெயகோஷத்துடன் பறந்து கொண்டிருந்தது. பெண் மக்கள் பூமிதேவியைக் கோல இழைகள் கொண்டு அலங்கரித்துக் கொண்டிருந்தனர். செங்காவி தீட்டிப் பாக்குற ஓரம் இழைத்தனர். வழியெல்லாம் நீர் தெளித்துக் குளுமையாக்கினர்.

புது மணம் புரிந்து கொண்ட தசரத புத்திரர்கள் மிதிலா புத்திரிகளுடன் அயோத்தி மாநகரை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை வரவேற்கவே இத்தனை கோலாகலமும்.

இதற்குள் ஆண் மக்கள் ஒருபுறம் புது மணம் புரிந்து வரும் தம்பதிகளுக்கு எவ்விதப் பரிசுகள் அளித்தால் ஏற்றதாக இருக்கும் எனத் தீவிர யோசனையில் ஆழ்ந்து விட்டனர். முத்தும், பவழமும், நவரத்தினங்களும் பலப்பல உயர்ந்த பொருள்களும் அன்று விலை போயின. தசரத புத்திரர்களுக்கு அளிக்கப் போகும் பரிசு என்ற களிப்பில் வியாபாரிகளும் அதிக லாபம் அடைய விரும்பவில்லை.

இந்நேரத்தில்தான் நகரத்தை ஒரு முறை சுற்றி விட்டு வந்த மிச்ரகேது கணக்கற்ற எண்ணச் சுழலில் தவித்தபடி இல்லத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தான்.

மிதியடிகளைத் தயாரிக்கும் தொழில் புரிபவன் மிச்ரகேது. அவனது அருமை மனைவி கபிரவை. மன்னாதி மன்னன் தசரதனிடம் இருவருக்கும் எல்லையற்ற மதிப்பு உண்டு. மன்னவரின் அருமைப்புத்திரன் ராமனிடமோ தங்களது உயிரையே வைத்திருந்தனர். அவரது திருக் கல்யாண மகோத்சவத்தில் கலந்து கொண்டவர்களில் மிச்ரகேதுவும் ஒருவன். இதோ, இன்று புதுமணப் பெண்கள் புகுந்த இடத்தை வாழ வைக்கத் தங்களது மங்கள அடிகளை அயோத்திமா நகரில் எடுத்து வைக்கப் போகிறார்கள்.

இந்நேரத்தில் தங்கள், தங்கள் காணிக்கையாக மக்கள் அனைவரும் ஸ்ரீராமனுக்கு ஏதேனும் பரிசு கொடுக்க விரும்பினர். அவ்விருப்பத்தை மிச்ரகேதுவும் அடைந்ததில் வியப்பு ஒன்றுமில்லை. அரச குடும்பத்தினருக்கே மிதியடிகளைத் தயாரிப்பவன் அவன். அதனால் இச்சமயத்தில் அழகான மிதியடிகளைத் தயாரித்து ராமபிரானுக்குப் பரிசாக அளிக்க அவன் நிச்சயித்தான். பொற்காசுகளை என்றுமே அவன் மதித்தவனல்லன். ஆயினும் காலையில் ஒரு முறை நகரத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு வந்தபோதுதான் பொற்காசின் மகிமை அவனுக்குப் புலப்பட்டது.

சோர்வுடன் இல்லம் திரும்பிய கணவனைக் கண்டு திடுக்கிட்டாள் கபிரவை. "கோலாகல வரவேற்பில் ஈடுபட்டு ஆனந்தம் எய்த வேண்டிய இந்நேரத்தில் விசனத்தின் காரணம் யாதோ?" என்று கணவரின் முகத்தை ஏறிட்டு நோக்கியபடி அவள் கேட்டாள்.

"காரணம் உண்டு, கபிரவை! பல நாட்களாகப் பாடுபட்டு ராமச்சந்திரனுக்குப் பரிசளிக்க மிதியடிகள் தயாரித்தோமல்லவா? அனைத்தும் வீண்" என்றான் மிச்ரகேது.

கபிரவை திகைத்து விட்டாள். "இவ்விதம் கூறுவதற்கான பொருள்?"

"நகரத்தில் ஒரு முறை சுற்றி விட்டு வந்ததில் நான் கொண்ட தீர்ப்பு. பொன்னும் மணியும் நவரத்தினங்களுமாக ராமனுக்கு வாரி வழங்கத் திட்டமிட்டிருக்கிறார்கள் மக்கள். நகரத்தின் பக்கம் காலடி வைக்காமல் மிதியடிகளைத் தயாரிப்பதிலேயே வீட்டோடு நான் காலம் தள்ளியது மொத்தத் தவறே நிரூபணமாகி விட்டது. மக்கள் அனைவரும் அன்புப் பரிசாக அளிக்கும் உயர் பொருள்களுக்கு முன்பு என் மிதியடிகள் எம்மாத்திரம்?"

கபிரவைக்கும் கணவன் கூறியது ஒப்புதலாகப்பட்டது. கணவனுக்குப் பணிவிடை செய்வதில் மூழ்கிக் கிடந்ததால், அவளும் நகர மக்களின் ஏற்பாடுகளைக் கவனியாமல் இருந்து விட்டாள். இம்மிதியடிகளைப் பரிசாக அளிப்பது உயர்வில்லை என அவளும் எண்ணம் கொண்டாள். ஆனால் இனி என்ன செய்வது? புதியதாக வெகுமதி தயாரிக்கக் கையில் பொருள் இல்லை; நேரமும் இல்லை.

சற்று நேரம் மௌனமாக இருந்த அவள் கணவனைச் சமாதானம் செய்யும் நோக்கத்துடன், "வீண் கவலை எதற்கு? ரகுராமனின் குணம் தாங்கள் அறிந்ததே. நீங்கள் எது கொடுத்தாலும் அவர் ஏற்றுக் கொள்வார்" என்றாள்.



"கபிரவை! நீ கூறுவதும் உண்மைதான். ஆனால் இந்த அற்பப் பொருளைக் கைநீட்டிப் பரிசாகக் கொடுக்க என் மனம் துணிய வில்லையே! அனைவரும் பொன்னும்மணியுமாகக் கொடுக்கும்போது அதன் நடுவில் இம்மாதிரி மிதியடிகள் சோபிக்

குமா?" முகத்தில் விசனக்குறி படர, ஏக்கக் குரலில் அவன் கூறினன்.

சங்கும் பேரிகையும் முழங்கின. மங்கள கீதம் எங்கும் நிறைந்தது. தசரத புத்திரர்கள் தங்கள் மணமகளிர் மிதிலை புத்திரிகளுடன் வந்து விட்டனர் என்பதன் அறிகுறி எங்கும் காணப்பட்டது. மக்கள் மலர் தூவி ஆனந்தம் காட்டி வரவேற்பு வைபவத்தில் பங்கெடுத்தனர்.

"வாப்பா ராமா! வாம்மா சீதை!" தேர்த் தட்டிலிருந்து இறங்கிய மணமக்களைக் கைகேயிதான் முதலில் சென்று வரவேற்றாள். மங்கள நீர் எடுத்து வந்து சுற்றிக் கொட்டி திருஷ்டி கழித்தாள்.

ஆனந்தத் திருக்கோலத்துடன் சீதை, மாண்டவி, ஊர்மிளை, சுருதகீர்த்தி நால்வரும் வலது காலை முன்னே வைத்து அரண்மனையின் உள்ளே நுழைந்தனர். தசரதர் லட்சுமி கடாட்சமே அயோத்திக்கு வந்து விட்டது போல் பேரானந்தம் எய்தினர்.

ராஜசபை நிரம்பி வழிந்தது. பரந்தாமன் பிரியநாயகி சீதையுடன் கொலு வீற்றிருந்தார்.. மக்கள் அனைவரும் தங்கள் தங்கள் அன்புப் பரிசுகளைப் பொன்னும் மணியுமாகத் தாசரதிக்குக் கொடுத்து ஆனந்தம் எய்தினர். ரகுநாதனும் அவர்கள் காணிக்கையை அன்புடன் ஏற்று அனைவருடனும் சரளமாகப் பழகிப் பதில் சன்மானங்கள் அளித்தார்.

அனைத்தையும் பார்த்தபடி மித்ரகேது தன் இல்லாளுடன் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான். ரகுநாதன் தன் இல்லாளுடன் கல்யாணக் கோலத்தில் அமர்ந்து அனைவருக்கும் கண்கொள்ளாத் திருக்காட்சி கொடுப்பது கண்டு அவனது உள்ளம் பூரித்தது. உடல் புல்லரிப்புக் கொண்டது. அதே நேரத்தில் அனைவரும் கொடுக்கும் பரிசைப் பார்த்து மனம் எல்லையற்ற துயரத்தில் மூழ்கியது. உயர்ந்த பரிசு கொடுக்க இயலாதது காரணமாக ராஜசபைக்கு வருவதற்கே அவன் தயங்கினன். இந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் காணவும் மனம் துடித்தது. அதனால்தான் ஓரமாக நின்று அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்தான்.;

மக்கள் ஒவ்வொருவராக விடைபெற்றுக் கூட்டம் சற்றுக் குறைந்தபோது ரகுராமனின் பார்வை மித்ரகேதுவின் மீது விழுந்தது. அவர் மனம் வியப்பில் ஆழ்ந்தது. மித்ரகேதுவின் குணத்தை அவர் நன்கு அறிவார். அடிக்கடி அரண்மனைக்கு வந்து அளவளாவுவது அவன் வழக்கம். அப்படிப் பட்டவன் ஏன் இன்று தூரத்தே மறைந்து மறைந்து நிற்கிறன்?

"மித்ரகேது, இங்கே வாப்பா!" ராமனே அவனுக்கு நேரில் அழைப்பு விடுத்தார்.

மித்ரகேது திடுக்கிட்டான். ஐயோ! இதென்ன சோதனை? ராமன் அருகில் அழைக்கிறரே! பரிசுப் பொருள் இல்லாமல் எப்படி அருகில் சென்று நிற்பது?

"மித்ரகேது! ஏனப்பா தயக்கம்? அருகில் வா." ராமன் மீண்டும் கூப்பிட்டு விட்டார்.

மித்ரகேது தயங்கித் தயங்கி அருகில் சென்றன். அவர் அடிகளைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

"மித்ரகேது, உன் முகத்தில் ஏனப்பா சஞ்சலம்? உடல்நலம் குன்றிவிட்டதோ?"

"இல்லை ராமா...." அவனுல் மேற்கொண்டு பேச முடியவில்லை. என்ன பதில் கூறுவது?

கபிரவைபோ கணவனின் நிலையில் பரிதாபம் கொண்டாள். செய்து வைத்திருந்த பிடிபடிகளை எடுத்து வந்திருந்தால், ராமராகக் குசலம் விசாரிக்கும் நேரத்திலாவது கொடுத்திருக்கலாம். அதற்கும் வழியில்லையே. கணவனின் சார்பாகக் கடைசியில் அவளே பதில் கூறினள்: "இளவரசே, பிழை பொறுக்க வேண்டும். என் கணவர் இப்பொழுது மன நோய் காரணமாக இவ்விதம் காணப்படுகிறர். அவரை மன்னித்து அருள் புரிய வேண்டும்" என்றுள்.

ராமர் சற்று யோசித்தார். அனைவருக்கும் நடுவில் மனநோயின் காரணத்தை அறிய விரும்பவில்லை. அதனுல் அச்சமயம் அவனைப் போக விட்டார். மித்ரகேது தளர்ச்சியுடன் தன்வீட்டையடைந்தான்.

கைகேயியை நாடிச் சென்றர் ராமர். எதுவாயினும், முதலில் கைகேயியிடம் தான் ராமர் கூறுவது வழக்கம்.

"அம்மா!"

"என்னப்பா ராமா? என்ன வேண்டும்? இதோ பார் ராமா, இனியும் சிறு குழந்தைபோல் 'அம்மா! அம்மா!' என்று ஓடி வந்து விடாதே. இனி உனக்குரியவள் சீதை வந்துவிட்டாள். இனி உன்பாடு, அவள்பாடு." பரிகசித்தபடியே மகனை அருகில் அமர்த்திக் கொண்டாள் கைகேயி.

"புது மணத் தம்பதிகளிடம் பெரிய பொறுப்புகளை ஒப்படைத்துவிடாதீர்கள், அம்மா!" எனச் சிரித்தபடி கூறிய ராமர் "அம்மா! இன்று பெரிய பிரச்னையாகப் போய்விட்டது" என்றுர்.

"என்னப்பா கூறுகிறுய் நீ?"

"இன்று ராஜ சபையில் அனைவரும் ஆனந்தத்துடன் குதூகலமாக இருக்க மித்ரகேது மட்டும் நான் அருகில் கூப்பிட்டதும் துயரமே வடிவமாக என் அருகில்வந்தான். காரணம் கேட்டபோது 'மனநோய் காரணம்' என அவன் மனைவி பதிலுரைத்தாள். அம்மா! நம் ரகுவம்சத்தில் மக்கள் மனநோயினுல் வாடுவதை நான் விரும்பவில்லை. இதனை எளிதில் போக்கவே நான் விரும்புகிறேன்..."

மித்ரகேதுவின் துயருக்கு யாது காரணமாக இருக்கலாம் என்று கைகேயி தனித்து சற்று யோசனையில் ஆழ்ந்தாள். காலம், இடம், பொருள் மூன்றையும் சிந்தித்தபோது பளிச்சென்று அவளுக்கு ஒரு காரணம் புலப்பட்டது. ஒருகால் அப்படியும் இருக்கலாமோ!

"ராமா! மித்ரகேது உனக்குப் பரிசு ஒன்றும் அளிக்கவில்லை அல்லவா?"

"என்னடா மறுபடியும் விஷமம் பண்ண வந்துட்டியா?"

போட்டோ: பி. குருமூர்த்தி



"இல்லே அம்மா. ஆயினும் அன்பைக் காட்டிடும் பரிசுப் பொருள்களை மேம் பட மதிக்க நான் விரும்பவில்லே."

"இருக்கலாம்...ஆனல், பொற் காசு களைச் சேர்த்து வைக்கும் குணமற்றவன் மித்ரகேது. ஆகையால் இந்நாளில் பொற் காசுகளை அனைவரும் பரிசாகக் கொடுக் கும்போது தான் ஒன்றும் கொடுக்க வில்லேயே என்ற ஏக்கம் கொண்டிருக்க லாம்...அவனிடமிருந்து பரிசுப் பொரு ளாக மிதியடிகளையாவது வாங்கிவிட இன்றே நான் வழி செய்து விடுகிறேன்" எனக் கூறிய கைகேயி, புது மிதியடிகளை இந் நன்னுளில் ராமர் தரிக்க வேண்டும். எனவே, உடனே புது மிதியடிகள் தயா ரித்து எடுத்து வருமாறு சொல்லி மித்ர கேதுவுக்குக் கட்டளை அனுப்பினுள்.

கட்டளையை அறிந்து மித்ரகேதுவும் கபிரபையும் வியந்து நின்றனர். எதிர் பாராத ஆனந்தம். எந்த நாளுக்கென மிதியடிகளைத் தயாரித்தானே, அதே நாளில் ரகுநாதனின் கால்களில் அவற்றை அணிவிக்கப் போகிறுன். கூடவே ஒரு ஆதங்கம். பரிசு முறையில் கொடுக்க வில்லேயே! இனி வருந்திப் பயனில்லே.

"மித்ரகேது! இவ்வளவு நிறம்பட மிதியடிகளை இவ்வளவு சீக்கிரத்தில் தயாரித்து விட்டாயே, அப்பா!" என்று கைகேயி புகழ்மொழி கூறினுள்.

ராமர் மித்ரகேதுவை நோக்கினுர். அவன் முகத்தில் குதூகலம் நிரம்பிக் கிடந்தது. கைகேயியின் புத்திக் கூர்மை யைக் கண்டு அவர் வியந்தார். மித்ரகேது அனுபவித்த மன நோய்க்கான காரணம் அவருக்குப் புரிந்தது. மிதியடிகளோ அவருக்குப் பொருத்தமாகப் பாங்குடன் அமைந்திருந்தன.

தம்பதிகள் அவர்களிடம் விடைபெற் றுக் கிளம்பியபோது ராமர் ஒரு தட்டில் பொற்காசுகளை வைத்து, "மித்ரகேது! சமயத்துக்கு நீ தயாரித்துக் கொடுத்த இந்தப் பரிசுக்கு இக் காசுகளை ஏற்றுக் கொள்ளப்பா" என்ருர்.

மித்ரகேதுவின் முகம் வாடியது. "மன்னிக்க வேண்டும், இளவரசே! நான் இச் சுதினத்தில் அற்பப் பொருளாகக் கொண்டுவந்துள்ள இம் மிதியடிகளுக் காகப் பொற் காசுகளைக் கொடுத்து என் மனத்தைத் துன்புறுத்தாதீர்கள்."

"மித்ரகேது! என்வரையில் யாதும் உயர் பொருளே. கொடுத்த பொரு ளுக்கு உரிய தொகை அளிப்பது மன்ன வனது கடமை அல்லவா?" என்று சீதாபதி கூறினுர்.

"இருக்கலாம். ஆயினும் நான் கொடுத் துள்ள இந்த அற்பப் பொருளை இந் நன் னுளில் உங்களுக்கு அளிக்க முடிந்ததே, அதுவே என் பாக்கியம். பொன்னும் மணியுமாக மக்கள் தங்கள் காணிக்கை யாகக் கொட்டிடும் இந் நாளில் நான்... நான்...." வார்த்தைகளை அவனுல் முடிக்க முடியவில்லே. அலேஅலேயாக வந்த கண்ணீரைச் சிரமத்துடன் அடக்கி விரை வாக வெளியேறி விட்டான். கபிரபை அவனேப் பின்தொடர்ந்தாள்.

கைகேயியும், ரகுபதியும் அவர்கள் போவதைக் கண்கொட்டாமல் பார்த்த படியே நின்றனர்.

"அம்மா! எப் படித்தான் அவன் மனநோயை நீங்கள் அறிந்தீர்களோ! தயாரித்து வைத் திருந்தும் இந்தப் பொருளைக் கொடுக் கக் கூசி நின்றிருக் கிருனே! என்ன உயர்ந்த உள்ளம்!"

"நல்ல குணம் கொண்டோரின் பொருள் என்றுமே நன்மை கொடுக்கும் பொருளாக இருக் கும் ராமா!" என்று கைகேயி கூறினுள்.

இவை அனைத்தும் தூரத்தே நின்று பார்த்துக் கொண் டிருந்த பரதன் அவர்கள் அருகில் வந்தார். மித்ரகேது வின் அன்பில் உள் ளத்தைப் பறி கொடுத்தார். தாய் கூறிய மொழிகள் உண்மையெனப் புலப்பட்டன. "அண்ணு! மித்ர கேதுவைப் போன்ற மனத்தை உடைய வர்களின் பொருள் நமக்குக் கிடைத் தால் என்றென்றும் நாம் பாக்யசாலிக ளாவோம்" என்ருர்.

காலத்தின் ஏடு களில் பருவங்கள் மாறி மாறிச் சென் றன. மிதிலே தந்த திருச் செல்விகள் காரணமாக அயோத்தி நித்ய கல் யாணமாக விளங்கி யது. மாமனது வேண்டுகோளுக் கிணங்கிப் பரதரும், சத்ருக்னரும் கேகய நாட்டுக்குச் சென்ற னர். அப்பொழுது தான் அந்த எதிர் பாராத சம்பவங் கள் நேர்ந்தன.



"இன்னும் ரொம்ப தூரம் நடக்கணுமோ?"

போட்டோ: மி. குருமூர்த்தி

திடீரென்று ஒரே இரவில் எதிர்பாராத மகிழ்ச்சியாகப் பரந்தாமனின் பட்டாபி ஷேக வைபவத்தைக் கேட்டு நகரத்தில் குதூகலம் பரவியதுபோல், ஒருவருமே எதிர்பாராமல் மறுநாள் காலே கைகேயி யின் சாசனத்தைக் கேட்டு நகரத்தில் சோக சமுத்திரம் பரவியது. குதூகலம் பொங்கி ஆனந்தக் கண்ணீருள் தெருக் கள் நனைவதற்குப் பதிலாக மக்கள் விட்ட துயரக் கண்ணீர் ஆருகப் பெருகியது. பலர் பலவிதமாகக் கூறியபோதிலும், கைகேயி தன் பிடிவாதத்தைத் தளர விடாமல் இருக்க; பலர் பலவிதமாகக் கூறியபோதும் ரகுநாதன் தந்தையின் வாக்கைக் காப்பாற்ற வனம் ஏகும் விஷ யத்தில் பிடிவாதமாக நின்ருர்.

சீதை பின்வர, லக்ஷ்மணன் முன் செல் லத் தசரத புத்திரன் தந்தை தாயிடம் அனுமதி பெற்று அரண்மனையை விட்டுக் கானகத்துக்குப் புறப்பட்ட போது, ஓடோடி வந்தான் மித்ரகேது.

"ராமா!" என அலறியவன் ரகுநந்தன னின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டான். உருகி உள்ளம் தவித்துக் கதறினுன்.

கௌசல்யா புத்திரர் மித்ரகேதுவைத் தூக்கி அவன் கண்ணீரைத் துடைத்துச் சமாதானப்படுத்தினுர்.

அப்பொழுதுதான் மித்ரகேது தனது சிறு வேண்டுகோளை விடுத்தான். தனது மடியிலிருந்து சில பொற் காசுகளை அவரது பாதங்களில் சமர்ப்பித்த அவன்,

''ரகுநந்தனா! உங்களது திருக்கல்யாண உற்சவத்தின் போதே பொன்னும் மணியுமாக உங்களுக்குப் பரிசு அளிக்க முடியாதது குறித்து நான் அடைந்த துயரத்தை ஸ்ரீமந் நாராயணனே அறிவார். உங்கள் பட்டாபிஷேக வைபவத்தின் போதாவது நல்ல முறையில் காணிக்கை அளிக்க வேண்டும் என்ற பேராவலுடன் இப்பொற் காசுகளைச் சேகரித்து வந்தேன். ஐயோ! இப்பொழுதும் நல்ல காணிக்கை செலுத்தும் பெரும் பாக்கியத்தை நான் அடையக் கொடுத்து வைக்கவில்லையே... ராமா! உங்களுக்காகச் சேர்க்கப்பட்ட இக்காசுகளை மீண்டும் என்னிடம் வைத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. இதை உங்களுடன் எடுத்துச் செல்லுங்கள். அவசியம் ஏற்படும்போது உபயோகியுங்கள்'' என்றான் துயர நெஞ்சுடன்.

ராமனின் முகத்தில் புன்னகை மிளிர்ந்தது. ''மித்ரகேது, இதோ, சுற்றிலும் பார்த்தாயா? நான் கானகத்தில் கஷ்டப்படக்கூடாது என்பதற்காகவும், அங்கு நான் சுகமுடன் சகல போகங்களுடன் வாழ வேண்டுமென்பதற்காகவும் நாட்டு மக்கள் சிறிது நேரத்துக்கு முன்பிலிருந்து கொண்டு கொட்டும் பொற்காசுகள். இவற்றை வனவாசத்தில் காப்பாற்றுவது கஷ்டம் என்பது ஒருபுறமிருக்கட்டும், தந்தையின் வாக்கைக் காப்பாற்றவேண்டுமானால் இப்பொற் காசுகளின்றி வனவாசத்தை எளிய முறையில் கழிக்க வேண்டும். நீயே இவற்றையெல்லாம் எடுத்துச் செல்லப்பா'' என்று சமாதானம் கூறினார்.

பிறகு, அருகே வெஞ்சினமே உருவாக நின்றிருந்த கைகேயியை நோக்கி, ''அம்மா! ஒரே ஒரு வேண்டுகோள். மரவுரிகளைத் தரிக்கக் கொடுத்ததுபோல், எனது கல்யாண காலத்தில் மித்ரகேது அளித்த மிதியடிகளையும் தாங்கள் கொடுத்து அருள வேண்டும். அவற்றை அணிந்து செல்ல நான் விரும்புகிறேன்'' என்றார் ராமர். மித்ரகேதுவோ திகைத்துப் போய் நின்றான்.

விருட்டென உள்ளே சென்ற கைகேயி மிதியடிகளில் கை வைத்ததுமே சஞ்சலத்துடன் நின்றுவிட்டாள். அவள் மனம் காணாததொரு சஞ்சலச் சுழலில் சிக்கியது. ராமர் மித்ரகேதுவிடமிருந்து பாதுகைகள் பெற்ற தினமும், ராமன் கைகேயியிடம் மித்ரகேதுவின் சஞ்சலத்தைக் கூற அவள் வகுத்துக் கொடுத்த வழியும் அனைத்தும் அவள் முன் நிழலாடின. 'நல்ல குணம் கொண்டோனின் பொருளும் நன்மை பயக்குவதாக இருக்கும்' எனத் தான் கூறிய சொற்கள் அனைத்தும் நினைவுக்கு வந்து குழப்பின. தன்னையே தாயாகப் பாவித்துத் தன்னிடமே அனைத்தும்கூறும் ராமனுக்கா தீங்கிழைக்கிறோம் என மனம் போராடியது.

மித்ரகேதுவின் மிதியடிகளைக் காலில் தரித்துப் புறப்பட்டு விட்டார் ராமர். அன்புப் பரிசாகக் கொடுக்கப்பட்ட விலையுயர்ந்த பொருள்கள் பரந்தாமனுடன் கானகத்துக்குச் செல்லவில்லை; தங்கள் அன்பெல்லாம் எடுத்துக் காட்டி, ரகுராமனின்றி உலகம் இல்லை எனக் கதறித் துடித்த மக்கள் தசரத மைந்தனுடன் வனத்துக்கு ஏக முடியவில்லை; அன்பு காட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த பெற்றோர்களைத் தன்னுடன் அழைத்துச் செல்லக் கௌசல்யையின் திருக்குமாரன் ஒப்பவில்லை; அருமை மனைவியையும், அன்புக்குகந்த அநுஜனையும் பல வாதப் பிரதிவாதங்களுக்குப் பிறகே அழைத்துச் செல்ல ஒப்புக்கொண்ட ஸ்ரீராமன், தன்னிச்சையுடன் விரும்பி ஏற்றுத் தன்னுடன் எடுத்துச் சென்ற பொருள் ஒன்றே ஒன்றுதான். அந்தப் பாக்கியத்தை அடைந்த பொருள் மித்ரகேதுவினால் கொடுக்கப்பட்ட பாதுகைகள்தான்!

''மித்ரகேது! நீ பாக்கியவான். அருமையான பொருளைக் கொடுத்திருக்கிறாய். ராமனுக்கு, எங்களாலும், நாங்கள் கொடுத்த பொருள்களாலும் எவ்விதப் பயனுமில்லை. நீ கொடுத்த பொருளோ அவரைக் கல்லினின்றும், முள்ளினின்றும் காப்பாற்றும்; வெய்யில் தகிக்கும் வேளைகளில் திருப்பாதங்களைக் காக்கும்; உன் மிதியடிகளுக்குக் கிடைத்த பாக்கியம் எங்களுக்கு இல்லையே....'' மக்கள் ஒரு முகமாகக் கூறினர்; கதறிப் புலம்பினர்.

''ரகுராமா!'' எனக் கூவியபடி அவர் செல்வதை நோக்கியபடி பேச முடியாது விக்கித்து நின்று விட்டான் மித்ரகேது.

லட்சுமி கடாட்சத்தைப் பூரணமாக அனுபவிக்க முடியாத அபாக்கியத்துடன் அயோத்தி சோகத்தின் சின்னமாக விளங்கியது. மாமன் இல்லத்திலிருந்து வந்து கொண்டிருந்த பரதரை வெறுப்புடன் வரவேற்ற மக்கள், அவர் வந்து பெரும் சூறாவளியைக் கிளப்பியபோது அவரைத் தெய்வமெனப் போற்றி வியந்து நின்றனர். கைகேயியின் சூழ்ச்சிக்கும் தமக்கும் சம்பந்தம் இல்லை என அவர் பிரமாணம் செய்து கூறியபோது கௌசல்யை விக்கித்து அவர் வாயை மூடிய காட்சியை மக்கள் மறக்கவே முடியவில்லை.

தந்தைக்கான ஈமச்சடங்குகளை முடித்து ஜடாமுடியுடன் பரதர் அண்ணனை அழைத்து வரக் கிளம்பியபோது அயோத்தியும் கிளம்பிவிட்டது. பரதர் அனைவரையும் உவந்து அழைத்துச் சென்றார். அவர்களுடன் சென்றவர்களில் மித்ரகேதுவும் ஒருவன்.

தேடிவந்த தம்பியை ஆர்வத்துடன் அணைத்த ரகுநந்தனன், தந்தை இறந்த துயரச் செய்தி கேட்டுத் துடிதுடித்து விட்டார்.

சித்ரகூடம் அயோத்தியின் திருச்சபையாக விளங்கியது. மக்களும், குருவும் சகோதரர்கள் யாது கூறுவார்களோ என ஆர்வத்துடன் அவ்விருவர்களையும் மாறி மாறி நோக்கினர். கடைசியில் துணிவைஒன்றுகூட்டித் தம் விருப்பத்தை எடுத்துக் கூறினார் பரதர். அண்ணன் நாடு திரும்பாவிடில் தம் மனப்பாரம் எவ்வளவு அதிகமாகும் என்று நெஞ்சுருகக் கூறினார்.

ராமபிரானோ தாம் நாடு திரும்ப முடியாத காரணத்தை எடுத்துக் கூறினார். அதற்குச் செவிசாய்க்காமல் பரதர் தர்ப்பை விரித்து அதில் அமர்ந்து, 'ராமனின்றி நான் திரும்ப மாட்டேன்' என்று பிரமாணம் செய்ய விழைந்தபோது ராமர் ஓடிவந்து பரதனைத் தூக்கித் தழுவினார். இதுபோன்ற பிரமாணங்கள் தர்மத்தைக் குலைக்க வல்லது என்று கூறி,














தர்மத்தின் உபதேசங்களை பரதரது மனத்தில் படும்படி கூறினார்.

மனம் சற்றுச் சமாதானம் கண்ட பரதர், "அண்ணா! ஒரே ஒரு வேண்டுகோள். சூரியனுக்கு முன் அகல் விளக்கு பிரகாசிக்குமோ! ஜோதிப் பிம்பமாய் நீங்கள் அமரவேண்டிய சிம்மாதனத்தில் என் சிறு உடலை ஏற்றி அதைக் களங்கமுறச் செய்ய மாட்டேன். ஆகையால் உங்கள் அடையாளமாக ஏதேனும் முக்கிய பொருள் கொடுங்கள். அதைச் சிம்மாதனமேற்றி, பட்டாபிஷேகம் செய்வித்துத் தங்களைக் கற்பனையில் கண்டு நாட்டை ஆண்டு கொண்டிருப்பேன்" என்றார்.

'இவனல்லவோ சகோதரன்' என்று மக்கள் பெருமையுடன் பரதரை நோக்க, ராமனோ யோசனையில் ஆழ்ந்துவிட்டார். 'மகிமை பொருந்தியதாக எந்தப் பொருளை இவனுக்கு அளிப்பது?'

அந்நேரத்தில்தான் ஒரு மூலையில் கருணையின் வடிவாகப் பதுங்கிக் கிடந்த கைகேயி சத்ருக்னரைப் பார்த்துக் கூறுவதுபோல் பரதனிடம் கூறினாள். பரதன் தன்னிடம் பேசவும் மாட்டான் என்பதை அவள் அறிவாள்.

'குழந்தாய்! நான் செய்த தீவினை, என்னையே சுடட்டும். மைந்தன் பரிதாபமாகக் கதறும் இவ்வேளையில் என் மனம் வெடித்து நான் சாகாமலிருப்பது, நான் தாயின் உருவல்ல, பாபத்தின் கோர பிம்பம் என எடுத்துக் காட்டட்டும். இப்பாபிக்கு உலகம் புகழ் மைந்தன் ஒருவன் பிறந்தது ஆச்சரியமே! அம் மைந்தனின் விருப்பப்படி அவன் சிம்மாதனம் ஏறுது அண்ணனின் பொருளை ஏற்று அரசாட்சிக்கு வழிகோலட்டும்... பெரியோர்களின் திருப்பாதங்களே என்னைப் போன்ற பாபிகளுக்கும், சிறியோர்களுக்கும் வழிகாட்டியாக அமைய, அவை பூஜிக்கத் தகுந்தவை என யாவரும் அறிவர். ஆகையால் ராமனது திருப்பாதங்களை இவ்வளவு நாட்களாக அலங்கரித்த அந்தப் பாதுகைகளே சிம்மாதனம் ஏறி அரசு செலுத்தட்டும்...'' என்றாள்.




"என்னங்க அப்படிப் பாக்கிறீங்க? இதுதான் இந்த வருஷம் புதுஜினுசு கோயமுத்தூர் நோட்டு டிசைன் புடவை! அழகா யிருக்குல்லே???"

ஓயாது கைகேயியைத் திட்டிக் கொண்டிருந்த மக்கள், அவள் வார்த்தைகளைக்கேட்டுவியந்து அவளைப் புகழ்ந்தனர். பரதர் ஒருமுறை கைகேயியை ஏறிட்டு நோக்கி விட்டுத் தலை குனிந்தார். பிறகுதாய் சொல்கேட்டு ராமனது பாதுகைகளைத் தரும்படி வேண்டினார்.

கைகேயியின் சமயோசித புத்தியைப்பாராட்டியபடி ரகுராமன் கூட்டத்தோடு நின்றிருந்த மிச்ரகேதுவை ஒருமுறை நோக்கினார் அர்த்தபுஷ்டியுடன். 'துச்சப் பொருளாக எண்ணி மனம் குழம்பினானே இந்த மிச்ரகேது. இந்தப் பொருளின் உயர்வை இப்பொழுது தெரிந்து கொள்ளட்டும்' என்ற எண்ணம் போலும். பாதுகைகளைக் கழற்றி பரதனிடம் அளித்து விட்டார்.

ஓடோடி ராமனிடம் வந்தான் மிச்ரகேது. "அபசாரம்! அபசாரம்! நான் அளித்த எளிய பொருளைச் சிம்மாதனத்தில் அமர்த்தினால் அரசாட்சிக்குக் குந்தகம் விளையுமே!" என்று பணிவுடன் கூறினான்.

ராமனது முகத்தில் புன்னகை பளிச்சிட்டது. அவர் மிச்ரகேதுவுக்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. மிச்ரகேதுவும் மேலே சொல்லத் தோன்றாமல் தயங்கினான்.

அப்பொழுது, "மிச்ரகேது, நீ துச்சமாகக் கருதும் பொருள் எவ்வளவு மகிமை பொருந்தியது என்பதை அறிந்து கொண்டாயல்லவா! நல்லவர்கள் கொடுக்கும் பொருளும் நல்லதாகத்தான் இருக்கும். மேலும் என் அண்ணனது திருவடிகளை இதுகாறும் தாங்கிய இந்தப் பாதுகைகள் தூய்மை பெற்று அரசாட்சியைச் செவ்வனே நடத்தும் என்பதில் ஏது சந்தேகம்?" எனக் கூறியபடி பரதர், பாதுகைகளைத் தலைமேல் தாங்கி அயோத்திக்குப் புறப்பட்டு விட்டார்.

"ராமா, உன் பாதங்களைக் கல்லிலிருந்தும் முள்ளிலிருந்தும் காப்பாற்றிய பாதுகைகளையும் தந்து விட்டாயே. இனிமேல் எப்படித்தான் இங்கு இருப்பாயோ!" என்று துயர சிரத்துடன் கௌசல்யை கேட்டாள்.

"அம்மா! இப்பொழுது என்னைவிட அரசற்ற அயோத்தி பாதுகாக்கப்பட வேண்டியது அவசியம். இதுகாறும் என்னைப் பாதுகாத்த பாதுகைகள் அரசாட்சியைச் செவ்வனே நடத்த ஆசீர்வதியுங்கள்" என்றார் மைந்தன்.

பரதரது சிரசில் கம்பீரமாகப் புறப்பட்ட பாதுகைகள் அயோத்தியை அடுத்த நந்திக்கிராமத்தில் சிம்மாதனத்தில் அமர்ந்து ராம ராஜ்யத்துக்கும் மேலாக அரசாட்சி செய்தன. பரதருக்கும் பெருமை தேடித் தந்தன. இப்படியாகத் தமக்குப் பெருமை தேடிக் கொண்ட அந்தப் பாதுகைகளுக்குப் பெருமை தேடித் தந்தவள் கைகேயி அல்லவா? தன் பெருமையைப் பலி கொடுத்துப் பிறருக்குப் பெருமை தேடித் தருபவர்கள் கைகேயியைப் போல் எவ்வளவுபேர் இருக்க முடியும் என்ற மகிழ்ச்சியில் அவற்றின் மகிமை மேலும் உயர்ந்தது.

ராமனைப் பாவித்து அப்பாதுகைகளைத் தினம் ஒரு முறை அனைவரும் தரிசித்தது போல் மிச்ரகேதுவும் பாக்கியம் பெற்ற தன் எளிய பரிசைக் கண்டு ஆனந்தம் எய்தினான். நாள்தோறும் அவற்றை வணங்கி விட்டு வந்தான்.

அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்

**நம்பிக்கையும் நாணயமும் தற்கால நாகரீகத்திற்கு ஏற்றதுமான**

# வெள்ளி சாமான்கள்

இயந்திரங்கள் உதவியால் விரைவில் தயார் செய்து மொத்தமாகவும் சில்லறையாகவும் விற்கப்படும்

நேரில் விஜயம் செய்து தங்கள் தேவைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்

●★●

# நாதெள்ள சம்பத்து செட்டி சன் & கோ. (பிரைவேட்) லிமிடெட்

**177, சைனா பஜார் ரோடு - - - - சென்னை-1**

தபால் பெட்டி 1625 ● தந்தி : "நாதெள்ள" ● போன் : ஷோரூம் 2002 - வீடு 61725

---

தந்தி : அம்ருதம் தபால் பெட்டி : 82 போன் : 2208

# ஆர்ய வைத்திய பார்மஸி (கோயமுத்தூர்) லிட்.

தலைமை ஆபீஸ் : திருச்சி ரோடு, கோயமுத்தூர்-1

**உண்மையான ஆயுர்வேத மருந்துகளுக்கும் சிகிச்சைகளுக்கும் சிறந்த இடம்**

கிளைகள் : புது டில்லி (போன் : 55687) சென்னை (போன் : 85752) கள்ளிக்கோட்டை (போன் : 2984) கண்ணனூர் (போன் : 92) எர்ணாகுளம் (போன் : 494) பாலக்காடு (போன் : 195) பொன்னானி (போன் : 41) ஆலத்தூர், கஞ்சிக்கோடு, கோயமுத்தூர் (ரயில்வே ஜங்ஷன் எதிரில்)

தொழிற்சாலை : கஞ்சிக்கோடு (தக்ஷிண ரயில்வே)




யோக்யதாம்சமும் அநுபவமும் உள்ள வைத்தியர்கள் எல்லாக் கிளைகளிலும் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். நோயாளிகளிடமிருந்து வரும் கடிதங்களைப் பிரதம வைத்தியர் நேரில் கவனித்து மருந்துகளும், சிகிச்சை முறைகளும் எழுதி அனுப்பப் படுகின்றன. "பஞ்சகர்மா" முதலிய விசேஷ சிகிச்சைகள் வைத்தியர் பார்வையில் தலைமை ஆபீஸிலும், எர்ணாகுளம் பொன்னானி கிளைகளிலும் செய்யப்படுகின்றன.

தமிழ், மலையாளம், ஆங்கிலம், ஹிந்தி மொழிகளில் வேண்டுவோருக்கு விலை ஜாபிதா இலவசமாக அனுப்பப்படும் விவரங்களுக்குத் தலைமை ஆபீஸுக்கு எழுதவும் :

**ஆர்ய வைத்தியன் : பி. வி. ராமவாரியர்**

பிரதம வைத்தியர் & மானேஜிங் ஏஜண்டு

OSR

Grams: "PIONEER", Coimbatore — Phone: 4141 & 4142

# THE COIMBATORE PIONEER MILLS LTD.

**Post Box No. 829, PEELAMEDU, COIMBATORE-4**

**MILLS**

| PEELAMEDU | PERIANAICKENPALAYAM |
|---|---|
| 27,226 Spindles | 22,000 Spindles |

Manufacturing

| | |
|---|---|
| $40_s$, $60_s$, $80_s$, & $2/60_s$ Carded & $100_s$ Combed Yarn | $20_s$ to $40_s$ Yarn & $2/40_s$ |

---

Grams: "BALTEX", Shencottah / "BALTEX", Coimbatore — Phone: Shencottah No. 36 / Coimbatore No. 4114

# THE BALARAMAVARMA TEXTILES LTD.

**SHENCOTTAH**

**Spindles** ... ... ... 16368

Manufacturing $20_s$ to $80_s$ Cotton and $20_s$ to $40_s$ S. F. Yarns

---

Grams: "CHANDRATEX", Coimbatore — Phone: 4333

# CHANDRA TEXTILES PRIVATE LIMITED

**PEELAMEDU P. O., COIMBATORE-4**

**Spindles** ... ... ... 12,320

Insist on $60_s$, $80_s$ and $100_s$ Carded Yarn for quality and durability

---

Phone: 4155

# THE PIONEER TEXTILES

**RANGASWAMY NAGAR - VEDAPATTY - COIMBATORE**

**Spindles** ... ... ... 12,000

Manufacturing $40_s$, $60_s$ and $80_s$ Special Quality Yarn

# ருஷ்யாவில் பெண்கள்

ஸ்ரீமதி விசாலாக்ஷி நாராயணசாமி

"ஸோவியத் ருஷ்யா பிரும்மாண்டமான ஒரு கோட்டைபோன்ற நாடு. அதைச் சுற்றிலும் கட்டுப்பாடுகள் என்னும் இரும்புத் திரை, மதில்போல் எழுப்பப் பட்டிருக்கின்றன. இத்திரையை விலக்கிக்கொண்டு அயல் நாட்டினர் யாரும் உள்ளே போக முடியாது. ஆகவே உள்ளே என்ன நடக்கிறது என்பதைப் பற்றி உள்ளது உள்ளபடியே வெளி நாட்டினர் அறிந்து கொள்ள முடியாது எல்லாம் ரகசியம்'' என்றெல்லாம் நாம் எண்ணுவதுண்டு.

ஓரளவுக்கு அப்படித்தான் இருந்தது. ஆனால் சமீப காலத்தில் இந்த இரும்புத் திரை சற்று விலகியுள்ளது. வெளி நாடுகளிலிருந்து பல யாத்திரீகர்களும் தூதுகோஷ்டியினரும் தனிப்பட்டவர்களும் ஏராளமாக ருஷ்யாவுக்குச் சென்று வருகின்றனர். அங்கே ருஷ்ய மக்களுடன் அளவளாவி அவர்கள் கண்டதையும் கேட்டதையும் எடுத்துக் கூறுகிறார்கள். எனக்கும் ருஷ்யாவுக்குச் சென்று வரச் சமீபத்தில் ஒரு வாய்ப்புக் கிடைத்தது. அங்கே சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது அந்த நாட்டு மக்களின் நடை உடை பாவனைகள், பழக்க வழக்கங்கள், மனப் போக்குகள், பிரச்னைகள், அவற்றை அவர்கள் சமாளிக்கும் வகை, மற்றும் இவை போன்ற பல விஷயங்களைக் கதம்பமாகக் கவனித்தேன். இங்கே என் அனுபவங்கள் சிலவற்றை மட்டும் கோவையாகச் சொல்ல விரும்புகிறேன். ருஷ்யாவில் இப்போது காணப்படும் விறுவிறுப்பான வாழ்க்கைக்கு ஆதாரமாக விளங்குவது மாதர்களின் முன்னேற்றமே என்று நான் கருதுகிறேன். எனவே ருஷ்யாவில் மாதர்களின் நிலை பற்றியே இங்கு எழுதுகிறேன்.

அகில இந்திய மாதர் மகாநாட்டின் பிரதிநிதிக் குழுவில் ஒருத்தியாக நான் காபூல் வழியாக டாஷ்கென்ட் நகருக்கு விமானத்தில் பயணமானேன். டாஷ்கென்ட் விமான நிலயத்தில் இறங்கியதும் அங்கு திரளாகக் கூடியிருந்த மாதர் கூட்டம் பூச்செண்டுகளுடனும் புன்முறுவலுடனும் எங்களை அன்புடன் வரவேற்றனர். கூட்டத்தில் சில ஆண்களும் இருந்தனர். விமானத்தின் வேகம் ருஷ்யாவில் உள்ள நகரங்களெல்லாம் உண்மையில் ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பால் இருந்தாலும் மிக அருகில் இருப்பது போன்ற பிரமையை உண்டாக்குகிறது. இரண்டாயிரம் மைல்களுக்கு அதிகமாக உள்ள டாஷ்கென்ட் - மாஸ்கோ பிரயாணம் மூன்றரை மணி நேரத்தில் முடிந்து விட்டது. வேகமாகப் பிரயாணம் செய்ததுடன் உண்மையிலேயே காலத்தை வென்று விட்டதாகவே தோன்றியது. மேற்குத் திசையை நோக்கிச் சென்றதால் எங்கள் கடிகாரங்களில் மணியைக் கூடத் திருப்பி வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ஸோவியத் ருஷ்யாவில் நாங்கள் தங்கியது இருபத்தொரு நாட்களே. இதற்குள் நாங்கள் பல்வேறு இடங்களுக்குச் சென்று பல விஷயங்களைக் கவனித்தோம். நாங்கள் கண்ட பெண்களில் சிலர் எஞ்ஜினீயர்கள்; சிலர் ஜெட் விமானப் 'பைலட்'டுகள்; பலர் மோட்டார் டிரைவர்கள்; நாங்கள் சென்ற விமானத்தை ஜார்ஜியாவுக்கு ஓட்டிச் சென்றவள் கூட ஒரு பெண்மணி. தற்கால ருஷ்ய வாழ்க்கையில் பெண்மணிகள்தான் எங்கும் காணப்படுகின்றனர்.

1917ம் ஆண்டுக்குப் பின் ருஷ்யாவில் பல துறைகளில் வேகமாக முன்னேற்றங்கள் தோன்றியுள்ளன. அசுர வேகத்தில் நடைபெறும் இந்தப் பிரும்மாண்டமான தேசிய முயற்சியில் ருஷ்யப் பெண்களின் பங்கு மிகக் கணிசமானதாகும்.

நாங்கள் பேட்டி கண்ட ருஷ்ய மாதர்களில் ஸ்ரீமதி ஜூரா இல்கமோவா ஒருவர். டாஷ்கென்டிலுள்ள உஸ்பெக்கிஸ்தான் உயர் நிர்வாகக் குழுவின் காரியதரிசியாகப் பதவி வகிக்கிறார்.

மத்திய ஆசியாவில் முப்பது ஆண்டுகளுக்கு முன் மாதர்கள் எல்லோரும் பர்தா முறையில்தான் வாழ்ந்து வந்தார்களாம். எழுத்து வாசனையே அறியாதவர்களாக இருந்து வந்தார்களாம். ஆனால் இப்போது அவர்கள் ஆண்களுடன் சமஉரிமை அனுபவிக்கிறார்கள் என்ற விவரத்தை அவர் சொன்னார். முன்பு வீட்டில் ஒரு பெண் குழந்தை பிறந்தால் தாயாரைப் பார்த்து, ''இதைவிட ஒரு செங்கற்கட்டியைப் பெற்றிருந்தாலும் உபயோகமாக இருந்திருக்குமே'' என்று இடித்துக் காட்டுவார்களாம். ஆனால் இப்போது ருஷ்யப் பெண்மணிகள் மற்றவர்களுக்குச் சமமாக வாழ்வதில்லை என்பதை ஸ்ரீமதி ரஹிம்பா பாபேவ வெற்றிச் சிரிப்புடன் கூறினார். இவர் குருஷேவ் 1956ம் ஆண்டில் இந்தியாவுக்கு விஜயம் செய்தபோது அவருடைய கோஷ்டியில் ஒருவராக நம் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தவர். உஸ்பெக் குடியரசுக்கு ஜனாதிபதி பதவி வகிக்கும் முதலாவது ருஷ்ய மாது ஸ்ரீமதி நஸ்ரிதினோவா. தமது பதவியை மிகவும் திறம்பட வகிப்பவர் என்பது அவருடைய தன்னம்பிக்கை மிகுந்த தோற்றத்திலிருந்தே தெரிந்தது. ''பர்தா'' முறை ருஷ்யாவில் இப்போது அறவே ஒழிந்துவிட்டது. உஸ்பெக்கிஸ்தான் குடியரசில் பள்ளிச் சிறுவர்களில் நாற்பத்தைந்து சதம் பெண்கள்தாம்.

காஷ்மீருக்குச் சிறிது வடக்கே இந்திய எல்லையை யொட்டியுள்ள தாஜிக்கிஸ்தான் குடியரசுப் பகுதியிலும் இது போன்ற அனுபவம்தான் எங்களுக்கு ஏற்பட்டது. இக்குடியரசின் உப ஜனாதிபதியாகப் பதவி ஏற்றுள்ள முதல் பெண்மணி லைபிதா அஜிமோவா. ஸ்டாலினாபாத் நகரில் நாங்கள் இறங்கியதும் எ



ருஷ்யநாட்டுக் குழந்தை நல விடுதிகளைக் கட்டுரையாசிரியை பார்வையிடுகிறார்.

களுக்கு வரவேற்பு அளித்தது ருஷ்ய அழகி ஸ்ரீமதி நீனா ஜுபோவா என்பவர்.

எங்களுடன் அளவளாவிக் கௌரவித்த மற்றொரு ருஷ்ய மாது ஸ்ரீமதி ஏகடெரினு புர்ட்சேவா. இவர் மாஸ்கோவிலுள்ள சோவியத் உயர் நிர்வாகக் குழுவில் அங்கம் வகிப்பவர். முன்னுள் ருஷ்ய உப ஜனாதிபதியான வாராஷிலாவுடன் இந்தியாவுக்கு விஜயம் செய்தவர். எங்களுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர். ருஷ்ய மாதர் கமிட்டியின் தலைவி.

ருஷ்யாவில் பெண்மணிகள் தொழிலில் எத்தனை வகைகளில் ஈடுபட்டிருக்கின்றனர், அவர்கள் உழைப்பின் சக்தி, உற்பத்தியில் அவர்கள் பங்கு முதலிய விஷயங்களைப் பற்றி விஸ்தாரமாக எங்களுக்கு எடுத்துச் சொன்னர் நீனா பாபோவே. சுகாதார மந்திரி ஸ்ரீமதி கௌரினு ஆரோக்கியத்துக்குத் தாமே ஓர் உதாரணம் என்பதுபோல் விளக்கினர். விஞ்ஞான முறையினுல் ருஷ்யா முழுவதிலும் சுகாதாரத் துறையில் எவ்வளவு முன்னேற்றம் நிகழ்ந்துள்ளது என்பதை அவர் எடுத்துக் கூறினர். ஸைபீரியா பிரதேசத்தில் உட்கோடியில் உள்ள பல கிராமங்களுக்குப் போக்குவரத்து சாதனங்கள் குறைவாக உள்ளதால், ஹெலிகாப்டர் விமானம் மூலம் வைத்திய உதவி அளிக்கப்படுகிறதென்ற விவரங்களையும் ஸ்ரீமதி கௌரினு விளக்கி வைத்தார்.

ஒரு நாள் மாலை மாஸ்கோவிலுள்ள பாதாள மின்சார ரயிலில் சென்றபோது தந்தி நிலயத்தில் வேலைபார்த்துவந்த ஒரு பெண்மணியைச் சந்தித்தோம். எங்கள் புடவைகளைக் கண்டு மோகித்த அவள் எங்களைப் பல கேள்விகள் கேட்டு அவளுடைய ஆர்வத்தைக் காட்டினள். உற்சாகம் மேலிட்டு, எங்களை அவள் தொழில் புரியும் இடத்துக்கு அழைத்துச் சென்று, அவள் இயக்கும் நுட்பம் மிகுந்த கருவியைப் பற்றி மிக விஸ்தாரமாகச் சொன்னுள். நாங்கள் பிரமிப்பு அடைந்தோம். அப்போதுதான் அங்கிருந்து அன்றைய வேலையை முடித்துக்கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருந்த ஆயிரக்கணக்கான பெண்களையும் கண்டோம்.

லெனின்கிராட் நகரத்திலே ஒரு நீதிமன்றத்துக்குப் போயிருந்தோம். அப்போது ஒரு விவாகரத்து வழக்கு விசாரிக்கப்பட்டது. நீதிபதி ஒரு பெண்மணி. உதவிக்கு இரண்டு ஜூரிகள் இருந்தனர்.



மாதர் மகாநாட்டுக் குழுவினர் மாஸ்கோவிலுள்ள சோவியத் சங்கத்தில்

அமைதியுடன் மிகத் தெளிவாக அவர் தமது தீர்ப்பைப் படித்துக் கூறினர்.

ஒரு கலாசாலையில் பூதத்துவப் பகுதியில் பின்னி வட்ட ஜடையுடனும் கறுப்பு கௌன் உடையுடனும் இருந்த பதினேழு வயதுச் சிறுமி, அவளுடைய அறிவுத் திறனுல் எங்களைப் பிரமிக்க வைத்து விட்டாள். பெரியதொரு படத்தில் மின்சார விளக்குகளின் மூலம் ருஷ்யா தேசத்தில் என்னென்ன கனிப்பொருள்கள் எந்தெந்த இடத்தில் கிடைக்கின்றன என்பதை வெல்லாம் விளக்கிச் சொன்னுள்.

ருஷ்யாவில் ஒவ்வொரு பெண்மணிக்கும் தொழில் செய்யும் உரிமை உண்டு. ருஷ்ய அரசியல் சட்டத்திலே இவ்வுரிமை அளிக்கப்பட்டுள்ளது. சட்டத்தில் மட்டும் அல்ல; நடைமுறையிலும்கூட.

தொழிற்சாலைகளிலும், தொழிற்கூடங்களிலும், காரியாலயங்களிலும் 50 சதவீதம் பெண்கள் வேலை செய்கின்றனர். அதாவது மொத்த எண்ணிக்கையில் பாதிப் பேர் பெண்கள். சில துறைகளில் அவர்களின் எண்ணிக்கை இதற்கும் அதிகம். உயர் கல்வித்துறையில் பெண்கள் 53 சத வீதமும், டாக்டர்களாக 80 சத வீதமும், வைத்தியத்துறையில் 85 சத வீதமும் பெண்கள் தான் பணியாற்றுகின்றனர். சோவியத்ருஷ்யாவின் உயர் நிர்வாக மன்றத்தின் பதினேந்து உறுப்பினர்களில் நான்கு பேர்கள் பெண்மணிகள். விஞ்ஞானக் கல்வி நிலையங்களில் சுமார் 2 லட்சம் பேர்கள் வேலை செய்கின்றனர். இவற்றில் 40 சதம் பெண்கள் ருஷ்ய தேசப் பௌதீக கலா நிலயத்தில் 5795 பெண்கள் பணியாற்றுகின்றனர். மொத்த எண்ணிக்கையில் அவர்கள் 42 சதம். மாஸ்கோ சர்வ கலாசாலையில் மட்டும் 1000 ஆசிரியர்களும் பேராசிரியர்களும் இருக்கின்றனர். ஆராய்ச்சிக் கூடங்களிலும், பரிசோதனை நிலயங்களிலும் பல பெண்மணிகள் வேலை செய்கின்றனர்.

தொழில் சாதனைக் கென்று பரிசு பெற்ற பெண்மணிகள் பலர் இருக்கின்றனர். அதே போல் அதிகக் குழந்தைகள் பெற்றெடுத்த தாய்மார்களும் விசேஷமாகக் கௌரவிக்கப் படுகிறர்கள். பத்துக் குழந்தைகளுக்கு மேலுள்ள தாய்மார்களுக்குப் பட்டங்கள் வழங்கப் படுவதுடன், குழந்தைகளின் சம்ரக்ஷணைக்காகச் சலுகைகளும் அளிக்கப் படுகின்றன. மற்ற நாடுகளில் பெண்கள் வேலை செய்வதற்கு வயது ஒரு தடையாக இருக்கிறது. ருஷ்யாவில் வயது ஒரு தடையே அல்ல. கிழவிகளும்கூட இஷ்டப் பட்டால் வேலை செய்யலாம். விவாகமான பெண்களும் தாய்மார்களும்கூட வேலை செய்வதில் தடங்கல் ஒன்றும் இல்லை. பிரசவ காலங்களில், பிரசவத்துக்குமுன் 56 நாட்களும், பிரசவத்துக்குப் பின் 56 நாட்களும் சம்பளத்துடன் விடுமுறை அளிக்கப்படுகிறது.

ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்குவதில் தாங்களும் பெரும் பணியாற்றுகிறோம் என்ற பெருமிதமும் நன்மதிப்பும் ருஷ்யப் பெண்மணிகளிடம் காணப்படுகின்றன. அவர்கள் பங்கெடுத்துக் கொள்ளாத துறையே இல்லை என்று சொல்லலாம். அரசாங்கமும் அவர்களுடைய வீட்டு வேலைத் தொல்லைகளைக் குறைத்து அவர்கள் நிலைமையை உயர்த்த எல்லாவித திட்டங்களையும் நிறைவேற்றி வைக்கத் தயங்குவதில்லை.

நமது நாட்டில் காந்திய இயக்கத்தின் போது இந்தியப் பெண்மணிகளின் வீரமும் தீரமும் பகிரங்கமாகத் தெரிந்தன. இந்திய மாதர்களும் தலைவர்களாகப் பொறுப்பு ஏற்க முடியும் என்பது வெட்ட வெளிச்சமாயிற்று. ஆனல் நமது முன்னேற்றத்தையும், இங்கிலாந்து முதலிய மேல் நாடுகளில் மாதர் முன்னேற்றத்தையும் கருத்தில் கொண்டு ருஷ்யாவை நோக்கும்போது அங்கே காணும் மாதர் முன்னேற்றம் பிரமிக்கத் தக்கது.

ஸ்ரீமதி ஜுபா இக்கபோவாவுடன் கட்டுரையாசிரியை • லெனின்கிராட் நகர் நீதிமன்றத்தில் அ.இ. மாதர் மகாநாட்டின் பிரதிநிதிகளுடன் நீதிபதி வோல்கோவ்யாக்.



# லாரன்ஸ் வில்சனின் காதல்!

"இந்தியாவிலிருந்து வந்திருக்கிறேன்" என்றதும் என்னைக் கூர்மையாகப் பார்த்தார் அந்த மனிதர். ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்து விடுதலை யடைந்த பிறகு பாரத நாடு எப்படி முன்னேறியிருக்கிறது என்பதை ஒரு நிமிஷ நேரத்துக்குள் அளந்து பார்த்து விட எண்ணுவதுபோல் இருந்தது. புன்முறுவலோடு கூடிய அந்தப் பார்வை! மறுகணம் "பைன்" (Fine) என்று ஒரு சம்பிரதாய பூர்வமான வார்த்தை அவருடைய உதட்டிலிருந்து உதிர்ந்தது. அவருடைய மனமோ என்றால் அந்த வார்த்தையில் சம்பந்தப்பட்டுக் கொள்ளாமல் ஏதோ தனியானதொரு சிந்தனையிலே போய் ஆழ்ந்திருந்தது என்பதை அவருடைய பார்வை புலப்படுத்தியது!

அப்பொழுது மாலை ஆறுமணி யிருக்கும். 'இந்தியா கிளப்' என்ற நம்முடைய விடுதிக்கு அருகிலே உள்ளதும், லண்டன் நகரத்தின் தேசீயக் கலைக் காட்சி மண்டபத்துக்கு எதிரே இருப்பதுமான 'ட்ரபால்கர் ஸ்கவேர்' (Trafalgar Square) என்ற சதுக்கத்தில், இங்கிலாந்தின் கோடை வெயில் - இரவு பத்து மணி வரை காய்கிற அந்த இங்கித வெயில் - அந்த வேளையில் சுகமாகக் காய்ந்து கொண்டிருந்தது! சிறுவர்களும் சிறுமியர்களும் அவர்களுடைய பெற்றோர்களும் - பாட்டனார்களும் பாட்டிகளும் கூட - அந்த வெயிலை அநுபவித்தவாறு புறாக்களுக்குப் பிஸ்கட்டும் பட்டாணிக் கடலையும் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். கறுப்புப் புறாக்களும் வெண் புறாக்களும் எவ்வித நிறபேதமும் இல்லாமல் அவர்களுடைய தோளின்மேல் ஏறி வீற்றிருந்து ஆனந்தமாக இரை சாப்பிட்டுக் கொண்டிருந்தன!

எனக்கு அறிமுகம் செய்து வைக்கப் பட்ட புதிய நண்பர் - லாரன்ஸ் வில்சன் என்று பெயர் - சதுக்கத்தின் பெஞ்சு ஒன்றில் உட்கார்ந்தவாறு, எதிரே பொங்கிச் சுழலுகிற தண்ணீர் ஊற்றைப் பார்த்துக் கொண்டே வெயிலையும் நுகர்ந்து கொண்டிருந்தார்! இவரை இந்த இடத்தில் எப்படியும் கண்டு பிடித்து எனக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே, ஜான்சன் என்ற நண்பர் என்னை இந்தச் சதுக்கத்துக்கு அழைத்து வந்திருந்தார்!

"தமிழ் நாட்டிலிருந்து வருகிறார் இவர்!" என்று மறுபடியும் என்னைப் பற்றி அறிமுக வாக்கியம் கூறினார் ஜான்சன். அவ்வளவுதான்! மறுகணம் அந்தப் புதிய மனிதரின் மனம் சிந்தனை உலகிலிருந்து படீரென்று வெளியே குதித்து வந்து என்னைப் பார்த்தது! 'தமிழ் நாடு' என்ற அந்த வார்த்தைக்கு இப்படிப்பட்ட ஒரு சக்தி இருந்ததை அந்த அளவில் இதற்கு முன்னால் நான் பார்க்கவில்லை!

"தமிழ்நாடா?" என்று மீண்டும் ஒரு முறை கேட்டார்.

"ஆமாம். தமிழ்நாட்டைச் சேர்ந்தவர். தலைநகரமாகிய சென்னையிலிருந்து வருகிறார்!" என்று ஜான்சன் மேலும் விளக்கினார்.

"சென்னையிலிருந்தா? காஞ்சிபுரத்துக்கு அருகிலேயுள்ள சென்னையிலிருந்தா? அடடா!" என்றார் மிஸ்டர் லாரன்ஸ் வில்சன்! எனக்கு அது திகைப்பை உண்டாக்கியது. இவருடைய பார்வையில் சென்னை நகரத்தை விடக் காஞ்சிபுரத்துக்கு இத்தனை முக்கியம் ஏற்பட்டு விட்டதை எண்ணி ஆச்சரியப்பட்டேன்!

"நீங்கள் சென்னைக்கு வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறது!" என்று மெதுவாக இழுத்தேன்.

"வந்திருக்கிறேன்! ஆவடியில் பல மாதங்கள் இருந்திருக்கிறேன்! காஞ்சிபுரம் என்றால் எனக்கு உயிர்! அங்குள்ள 'பகோடா'க்கள் எல்லாம் எனக்கு மனப் பாடம்!!" என்றார் வில்சன், முகம் முழுதும் மலர்ச்சி தோன்ற. நம்முடைய கோவில்களுக்குப் 'பகோடாக்கள்' என்று பெயர் சூட்டிய பழைய மேனாட்டு மரபை நினைத்து அதற்கு ஒரு வணக்கம் செலுத்தி விட்டு வில்சன் அவர்களை ஆவலோடு பார்த்தேன்.

"உங்களுக்குக் கதை கேட்கப் பிடிக்குமா?" என்று கேட்டார் வில்சன். என் பதிலை எதிர்பார்த்துக் காத்திராமல் அவரே மேலும் சொன்னார்:

"உங்களுக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் இந்தக் கதையை உங்களுக்குச் சொல்லித்தான் ஆக வேண்டும். தமிழ் நாட்டிலிருந்து அல்லவா வருகிறீர்கள் நீங்கள். கதையைக் கேட்டு விட்டு என் மன நிலையின் காரணத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதை எனக்குச் சொல்ல வேண்டும். என்ன? கதையைச் சொல்லட்டுமா?"

இவ்வாறு கேட்டார் வில்சன்.

"மிஸ்டர் வில்சன்! கட்டாயம் சொல்லுங்கள். கதை கேட்பது என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். இந்தக் கோடை வெயிலில் யாருடைய மூளையிலிருந்தாவது ஒரு சிறுகதை வெளி வராதா என்றுதான் இந்தச் சதுக்கத்தில் நடந்து கொண்டிருக்கிறேன். கட்டாயம் சொல்லுங்கள்!" என்றேன்.

மக்கள் கூட்டத்தின் இரைச்சலிலிருந்து ஒதுங்கி, ட்ரபால்கர் ஸ்கவேரைக் கடந்து, எதிரேயுள்ள 'நாஷனல் காலரி' மண்டபத்தின் படிகளிலே ஏறிப் போய், அதன் உயரமான தளத்திலே உட்கார்ந்து கொண்டோம்.

## 2

லண்டன் நகரத்தில் சித்திரக்காரர்களை இனம் கண்டு பிடிப்பது மிகவும் எளிது. தாடி வளர்த்துக் கொண்டு தலைமயிரைக் கோதி விடாமல் அடர்த்தியாகப் புரளும்படி விட்டுக் கொண்டு, வக்கணைப் பேச்சுக்கள் ஏதுமின்றி, ஆங்கிலேயச் சம்பிரதாயங்களிலிருந்து மாறுபட்டுச் சுயேச்சையாக நடமாடுகிற சில மனிதர்களைக் 'காபி பார்' (Coffee bar) என்று அழைக்கப்படும் விடுதிகளில் சந்திக்கலாம். நிச்சயம் இவர்கள் எழுத்தாளர்களாக இருக்க வேண்டும், அல்லது ஓவியர்களாக இருக்க வேண்டும்!

வில்சன் இத்தகைய கலைக் குழுவைச் சேர்ந்தவர்தான்! என்றாலும் தாடி கிடையாது! காபி பாருக்குப் போவதில்லை. 'மாடல்கள்' என்று பெயர் வைத்துக் கொண்டு, சித்திரக்காரர்களுக்கும் கலையன்பர்களுக்கும் நவநாகரிக உடைகள் செய்யும் தையற் கலைஞர்களுக்கும் என்றே தங்கள் வாழ்வை அர்ப்பணம் செய்து, 'வழிமேல் விழி வைத்து' என்பது போல் டெலிபோன் மணிமேல் காதை வைத்துக் கொண்டு இருக்கும் அழகிகள் பலர் லண்டனில் உண்டு. வில்சன் இந்த அழகிகளின் வீடுகளுக்கும் செல்வதில்லை. 'பப்' (Pub) என்று அழைக்கப்படும் மது அங்காடிகளிலும் நுழைவதில்லை! போதாக் குறைக்குப் புலால் உணவு என்பதே இல்லாமல் வெறும் ரொட்டியும் பாலும் 'யோகர்ட்' (Yogurt) என்கிற தயிரும் சாப்பிட்



வாது. நூற்றி நாற்பது பவுண்ட் எடையுள்ள தமது உடம்பைத் தினந்தோறும் ட்ரபால்கர் சதுக்கத்துக்குத் தூக்கிச் செல்கிறா என்பதில் லண்டன் நகரத்து மக்களுக்குத் தீராத வியப்பு!

ஆங்கிலேயர்களுக்கு மனிதர்களை எடை போடும் பழக்கம் உண்டு. அவர்களால் வில்சனை ஒரு பைத்தியக்காரன் என்று புறக்கணிக்க முடியவில்லை! அதே சமயம் தங்களில் ஒருவனாக எண்ணிப் பழகவும் முடியவில்லை! எனவே அன்னிய தேசத்திலிருந்து யாராவது வந்தால் காட்சிச்சாலைக்கு அழைத்துப் போய்க் காட்டுவது போல, இந்த விநோதப் பிறவியையும் மாலை நேரத்தில் ட்ரபால்கர் சதுக்கத்திலே அழைத்து வந்து காட்டுவது வழக்கம்! அந்த வழக்கத்தின்படியே ஜான்சன் என்ற நண்பர் என்னை இன்று இங்கே அழைத்து வந்து அறிமுகத்தைத் தொடங்கி விருக்கிறார். ஆனால் வில்சனோ இது ஒன்றையும் மனத்தில் போட்டுக் கொள்ளாமல் தாமும் தமது சித்தப்படி மாகத் தம் வரலாற்றைச் சொல்லத் தொடங்குகிறார். அவர் சொன்ன வாக்கியங்களை அப்படியே கூறுகிறேன்:

சிறு வயதிலிருந்தே எனக்குச் சித்திரம் வரைவதில் ஆர்வம் அதிகம். என் பாட்டனார் இந்தியாவில் சிப்பாய்க் கலகத்தின்போது நிகரற்ற சேவை புரிந்தார் என்பதற்காக அவருக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் அளவற்ற வெகுமதிகள் கொடுத்தது. அவர் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குக் கப்பல் ஏறிய போது விதம் விதமான ரத்தினங்களும், விலை மதிப்பற்ற தங்க அணிகலன்களும், அற்புதம் அற்புதமான சிற்பச் சிலைகளும் கொண்டு வந்தார். இவற்றில் சில இன்றும் இந்த நகரத்தின் கலைச் சாலைகளிலும், லண்டன் டவர் (Tower of London) போன்ற சரித்திர நிலையங்களிலும் காட்சிப் பொருள்களாகப் பாட்டனாரின் நன்கொடை என்ற குறிப்போடு வைக்கப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்கலாம்!

சிறு வயதில் இந்தக் காட்சிப் பொருள்களை என் பாட்டனாரிடம் நான் பார்த்தபோது, முதலில் எனக்கு அவை விநோதமாகப்பட்டன. பிறகு அந்த விநோதத்துக்கு மத்தியில்ஒரு கவர்ச்சி புலப்பட்டது. நாளாக நாளாக இந்தச் சிலைகளைப் பார்த்து நானும் இவற்றைப் போலக் காகிதத்தில் வரைய ஆரம்பித்தேன். இந்தப் பழக்கத்தில் படிப்படியாகச் சிலைகளிலே எனக்கு ஒரு பிரியம் உண்டாக ஆரம்பித்தது. இவற்றைப் போலக் காகிதத்திலே வரைவது எத்தனை



கஷ்டம் என்பதை உணர உணர எனக்கு உங்கள் நாட்டுக் கலைஞர்களிடம் பெரிய மதிப்பும் பயமுமே ஏற்பட்டன.

என் தகப்பனாருக்கு ஒரு மோட்டார்த் தொழிற்சாலையில் வேலை. பாட்டனாரோடு எங்கள் குடும்பத்தின் கலையார்வம் தீர்ந்தது! தகப்பனாருக்குக் கலை, சித்திரம், சிலை இவற்றிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. இவற்றில் நம்பிக்கை வைத்திருப்பவர்களிடமும் நம்பிக்கை கிடையாது! கலைஞர்கள் எல்லாம் திருடர்கள் என்று சொல்லுவார்! கலையன்பர்கள் எல்லாரும் கொள்ளைக்காரர்கள் என்று ஆதாரங்களோடு பேசுவார்! யாரும் எதிர்த்து ஒரு வார்த்தை சொல்ல முடியாது. அதிலும் இரவு எட்டு மணிக்குப் பிறகு அவரிடம் உரத்துப் பேசுவது என்றால் என் தாயாருக்குமே நடுக்கந்தான்! இந்தச் சூழ்நிலையில் எனது சித்திர ஆர்வம் என்ன பாடு பட்டிருக்கும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்.

ஒரு நாள் தற்செயலாக என் அறைக்குள் வந்த தகப்பனார் அங்கே சில காபிக் கிறுக்கல்களைப் பார்த்து விட்டார். அவ்வளவுதான்; அன்றைக்கு மாலையிலேயே எங்கள் வீட்டு மூலையிலே இருந்த பாட்டனாரின் சிலைகள் அத்தனையையும் பொறுக்கி யெடுத்துப் 'பாட்டனாரின் நன்கொடை' என்ற குறிப்போடு காட்சிச் சாலைகளுக்கு அனுப்பிவிட்டார். இதன் பிறகு என்னை என்ன செய்யப் போகிறார் என்று தெரியாமல் நான் மௌனமாகக் காத்துக் கொண்டிருந்தேன்!

இந்தச் சந்தர்ப்பத்திலேதான் உலக யுத்தம் மூண்டது. ஒரு நாள் என் தாயாரைக் கூப்பிட்டு என்னை ராணுவத்தில் சேர்த்து வெளிநாடுகளுக்கு அனுப்பும்படி ஏற்பாடு செய்திருப்பதாக அறிவித்தார். யாரிடமும் யோசனை கேட்டால்தானே ஏதாவது பேச முடியும்! அந்த வழக்கமே அவரிடம் கிடையாது. தம்முடைய முடிவுகளை மட்டும் செய்திகளைப் போல் அறிவிப்பார்.

தாயாருக்கு இது இஷ்டமில்லை. என்றாலும் என்ன சொல்ல முடியும்! இரவு எட்டு மணிக்குமேல் தொழிற்சாலையிலிருந்து திரும்பியதும் இந்தச் செய்தியைச் சொல்லியிருக்கிறார்!

என் சம்பந்தப்பட்டவரை மனத்தின் ஆழத்தில் ஒரு மகிழ்ச்சி இருந்தது என்பதை உங்களுக்குச் சொல்ல வேண்டும். ஏனென்றால் ராணுவத்தில் பலரை அப்போது இந்தியாவுக்கு அனுப்பிக் கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன். பாட்டனார் கொண்டுவந்த சிலைகளின் தாய்நாட்டையும், அந்தச் சிலைகளை உருவாக்கிய அவற்றின் "பெற்றோர்"களையும், அவர்களுடைய பரம்பரையையும் பார்க்க ஒரு நல்ல சந்தர்ப்பம் என்று உள்ளூற மகிழ்ந்தேன்.

நான் எதிர்பார்த்து மகிழ்ந்தபடியே என்னை இந்தியாவுக்கு அனுப்பினார்கள். அங்கு போனபிறகு சென்னைத் தொகுதியிலே சேர்த்து ஆவடி என்ற இடத்துக்கு நான் போய்ச் சேருவதற்குச் சில முயற்சிகள் செய்தேன். வெற்றியும் பெற்றேன்.

எங்களுடைய ராணுவ வட்டம் சென்னைக்கு அருகில் ஆவடியிலே ஒரு வன்மணற் பொட்டலில் இருந்தது! எனக்கு அந்த வெப்பமான பொட்டல் தண்மை மிகுந்த லண்டன் நகரத்தை விடக் குளிர்ச்சியாகத் தோன்றியது! சனி, ஞாயிறுகளில் நான் காஞ்சீபுரத்துக்குச் செல்ல ஆரம்பித்தேன்.

காஞ்சீபுரத்தில் நாட்டியக் கலையில் மிகவும் புகழ் பெற்ற ஒரு குடும்பத்தில் சில பழைய சிலைகள், படிமங்கள், விற்பனைக்குக் கொடுப்பதாகவும், ஆங்கிலேயர்கள் அதிகப் பணம் கொடுத்து வாங்குவதால் அவர்களிடம் விற்பனை செய்வதில் இந்தக் குடும்பத்துக்கு மிக்க திருப்தியென்றும் கேள்விப்பட்டேன்.

ஐயா, தமிழ் நாட்டு நண்பரே! இதைச் சொல்லும்போது ஏன் ஒரு மாதிரியாக என்னைப் பார்க்கிறீர்? உண்மையைத் தான் சொல்லுகிறேன். இங்கே லண்டன் நகரத்திலுள்ள கலைக்காட்சிச் சாலைகளில் உங்கள் நாட்டிலிருந்து வந்துள்ள சிலைகளும் படிமங்களும் எத்தனை இருக்கின்றன தெரியுமா? உங்களைவிட அவற்றைப் பற்றி எங்களுக்கு எல்லா வரலாறும் தெரியும்! அந்தக் குறிப்புக்களையும், கலைக் காட்சி வழிகாட்டிப் புத்தகங்களையும் படித்துப் பாரும்; நான் சொல்வதை ஒப்புக் கொள்ளுவீர்!



சரி; இப்பொழுது அந்த விவாதம் எதற்கு? நான் வாங்கிய சிலைகள் எதுவும் காட்சிச்சாலையில் இல்லை. அவை என்னிடந்தான் இருக்கின்றன!"

இவ்வாறு கூறினார் வில்சன்-கண்களைச் சிமிட்டிக் கொண்டே.

"என்ன! உங்கள் வீட்டில் சிற்பங்கள் நிறைய வைத்திருக்கிறீர்களா?" என்று ஆவலோடு கேட்டேன்.

"சிற்பங்கள் என்று பன்மையிலே சொல்ல மாட்டேன். முக்கியமாக ஒரு படிமம் இருக்கிறது. அதுதான் என்னுடைய உயிர். அதன் விலை என்ன என்று என்னிடம் கேட்டால் வில்சனின் உயிர் என்றுதான் பதில் சொல்வேன்!"

இவ்வாறு கூறிவிட்டு வில்சன் மௌனமாக இருந்தார். அவருடைய கண்கள் கலங்கின. பிறகு அந்தக் கண்களைச் சுருட்டி விழித்துக் கொண்டு தொடர்ந்தார்.

"காஞ்சீபுரத்துக்கு நான் போக ஆரம்பித்ததிலிருந்து என்னுடைய மனத்தில் ஒரு விதமான கிறக்கம் உண்டாக ஆரம்பித்தது! இரத்த வேகம் அதிகமாக இருப்பவர்களுக்குச் சில சமயங்களில் ஒரு மாதிரியான மயக்க நிலை—அதாவது முழு மயக்கமும் இராது, முழு விழிப்பும் இராது; அப்படி ஒரு நிலை இருக்கும் அல்லவா, அந்த மாதிரி ஒரு நிலை—எனக்கும் ஏற்பட்டது. துப்பாக்கி பிடிக்கிற கையில் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. 'இடது கால் வலது கால்' என்று மாற்றி மாற்றிப் பயிற்சி செய்யவேண்டிய கால்களில் ஒருவித ஆட்டம் உண்டாக ஆரம்பித்தது. எங்கள் 'காப்டன்' இதைக் கவனித்தார்!

ஒரு நாள் நான் காஞ்சீபுரத்திலிருந்து ஆவடிக்குத் திரும்ப இரவு வெகுநேரம் ஆயிற்று. மறுநாட் காலை எங்கள் காப்டன் என்னைக் கூப்பிட்டுக் காரணம் கேட்டார். "காஞ்சீபுரத்தில் அருமையான ஒரு வெண்கலப் படிமம் வாங்கினேன். அதுதான் நேற்றிரவு நேரமாகி விட்டது!" என்று சொல்லி, அவருக்கு ஆதாரம் காட்டுவதற்காக அந்தப் படிமத்தை எடுத்துக் காட்டினேன்! நாட்டியமாடுகிற ஒரு கன்னி ஒரு முத்திரையை அபிநயமாகக் காட்டி நிற்கிறாள்! அந்தப் படிமத்தைப் பார்த்ததும் காப்டன் கடகடவென்று சிரித்தார்!

"வில்சன்! மை டியர் பாய்! என் அருமை இளைஞனே! காஞ்சீபுரத்தில் பாழடைந்த கோயில்கள் அதிகம்! இம்மாதிரிச் சிலைகள் நூற்றுக் கணக்கில் அங்கே சிதறிக் கிடக்கும். இரவு நேரங்களில் அங்கே போனால் மோகினிப் பிசாசு உன்னைப் பிடித்துக் கொள்ளும்! பிறகு நமது ராணுவத்துக்கு ஒரு வீரன் அநாவசியமாக நஷ்டமாகும்!" என்று சொல்லி மறுபடியும் அந்தக் கடகடச் சிரிப்பைச் சிரித்தார். எனக்கு ஆவேசம் வந்தது. ஆனாலும் என்ன பேசமுடியும்! கோபத்தோடு 'அட்டென்ஷனில்' நின்று, அத்தனை வேகத்தையும் சேர்த்து வைத்து ஒரு சல்யூட் அடித்துவிட்டு, என்னுடைய முகாமுக்குத் திரும்பினேன்!

நண்பரே, காஞ்சீபுரத்தின் பாழ்வெளிகளைப் பற்றி அந்தக் காப்டனுக்கு என்ன தெரியும்? ஏன், உமக்குத்தான் என்ன தெரியும் என்று கேட்கிறேன்! அடடா! அதிலும் அந்த அழகான படிமம்! அதை நான் யாரிடம் வாங்கினேன், எப்படி வாங்கினேன் என்பதெல்லாம் யாருக்காவது தெரியுமா! தெரியுமா என்று கேட்கிறேன்!"

வில்சனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. நான் பயந்து விட்டேன். கதையைக் கேட்டுக் கொண்டே என் அருகில் இருந்த நண்பர் ஜான்சன் என்னைப் பார்த்து, "பயப்படாதேயும்!" என்று சொல்கிற பாவனையில் கண்களில் ஒரு சின்ன "அபிநயம்" செய்தார்! வில்சன் இப்பொழுது மறுபடியும் பேசினார்:

"நண்பரே, அன்றிலிருந்து எங்கள் காப்டன் என்னுடைய நடமாட்டத்தைத் தணிக்கை செய்யத் தொடங்கினார்! நான் காஞ்சீபுரம் சென்றால் என்னோடு இன்னொரு வீரனையும் அனுப்ப முனைந்தார். இதெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை. எனவே இரகசியமாக இரவு நேரங்களில் நான் ஆவடியிலிருந்து சைக்கிளில் கிளம்ப ஆரம்பித்தேன்

அந்தக் கோவில்களைச் சுற்றியுள்ள பாழ் வெளிகளில் நிசி நேரத்தில் உலவும்போது சிற்பங்களும் சிலைகளும் உயிர் பெற்று என்னிடம் வந்து பேசுவது போல் எனக்குத் தோன்றும்! ஆகா! அந்த இன்ப அனுபவத்தை விட்டு விட்டு, ஆவடியின் பொட்டலில் துப்பாக்கி பிடித்துக் கொண்டு நிற்கும்படி என்னைக் கட்டாயப் படுத்தினால் எப்படி? என் மனம் கண்டிப்புகளை யெல்லாம் உதறிச் சாடியது!

இதெல்லாம் மெள்ள மெள்ளக் காப்டனுக்குத் தெரிய வந்தது. அவருக்கு ஆத்திரம் தாங்கவில்லை. என்னைத் தண்டிக்க அவர் விரும்பவில்லை. ஆனால் என் போக்கில் என்னை விடவும் அவருக்கு மனமில்லை!

இப்படியிருக்கும் போதுதான் ஒரு நாள் என்னை மிகவும் அவசரமாகக் கூப்பிட்டார் காப்டன். எனக்கு நாலு மாதங்கள் லீவு கொடுத்திருப்பதாகவும், தாய் நாட்டுக்குச் சென்று மரணப் படுக்கையில் இருக்கும் என் தாயாரை நான் போய்ப் பார்க்க வேண்டும் என்றும் தெரிவித்தார்! எனக்கு இந்தச் செய்தி எதிர்பாராததோடு விசித்திரமாகவும் இருந்தது! என்றாலும் நான் வேறு எதுவும் செய்ய இயலாத நிலையிலிருந்தேன்!

தமிழன்பரே, இங்கிலாந்துக்கு நானாகவே லீவில் வரவேண்டும் என்று விரும்பியிருந்தால் முடிந்திருக்கும் என்று நினைக்கிறீர்களா? அதிலும் அப்பொழுதிருந்த ராணுவக் கெடுபிடியில்!

நான் இந்த ஊருக்குத் திரும்பிய பிறகு அதிக நாள் ராணுவத்தில் இருக்கவில்லை. யுத்தம் முடிவதற்குச் சில நாட்கள் முன்பே என் மனத்தில் ஒரு பெரிய யுத்தம் மூண்டது. என் தாயாரும் இந்த மனித சமூகமும் சேர்ந்து எனக்காகப் பல காதல் இளம் கன்னியர்களைத் திருமணம் செய்து கொடுக்கக் காத்திருந்தும்கூட என் இதயம் அதொன்றிலும் ஈடுபடவில்லை. இந்த இதயத்துக்கு ஏற்கனவே திருமணம் ஆகிவிட்டது.

இரவு நேரங்களில் ஏகாந்தமான என்னுடைய அறையில் எனது இன்பமான கனவுகளில் அவளும் நானும் வாழ்கிறோம்! வெண்கலப் படிமத்திலிருந்து சிலம்பொலிக்கச் சதங்கைகள் கொஞ்ச அவள் எழுந்து வருவாள்! விதம் விதமான அபிநயங்களால் என் உள்ளத்தில் ஆயிரம் ஆயிரம் வண்ண ஓவியங்களை அவள் எழுதுகிறாள்! மெய்யின் ஒளியும், காற்சதங்கையின் கீதமும், கைவிரல்களிலே தெறிக்கிற உணர்ச்சிகளும் என்னை அவளுக்கு அடிமையாக்கி விட்டன. என் வாழ்வு முழுதும் அந்த நடன ராணியின் பாதங்களிலே காணிக்கை செலுத்தி விட்டேன்! இந்த உடம்பு அவளுக்குச் சொந்தம்! இந்த உயிர் அவளுடையது. இந்த மனிதன் வில்சனின் உடைமைகள் எல்லாம் அவளுக்கு உரியன. அவள் என்னுடைய நிசி நேரத்துக் கனவுகளில் மட்டுந்தானா வருவாள்? இதோ என் எதிரே அந்தப் பொங்கும் ஊற்றிலிருந்து அவள்தோன்றி வருகிறாள்! இந்தக் காற்றிலே அவள் நீந்துகிறாள்! அதோ புறாக்களின் இறகுகளிலே அவளுடைய முந்தானையின் அசைவு தெரிகிறது! இந்தக் காட்சிச் சாலையிலுள்ள சித்திரங்களின் ஒவ்வொரு

''நம்ம கலியாணத்தின்போதே உன்னை ஒரு விஷயம் கேட்கணும்னு இருந்தேன். அதற்கு இப்பத்தான் தைரியம் வந்தது! பொம்மனாட்டிகள் வெட்கப்படுமாதிரி கொஞ்சம் நின்னு காண்பியேன்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வண்ணமும் அவளுடைய மேனியின் சாயை. தெரிகிறதா?''

இவ்வாறு சொல்லி முடித்தார் வில்சன். அவருடைய வார்த்தைகள் என் சிந்தனையைக் குழப்பின.

''என்ன மௌனமாக இருக்கிறீர்கள்? என்னை ஒரு பைத்தியக்காரன் என்று சொல்லவும் என்னுடைய ஆங்கிலேயச் சகோதரர்களுக்கு முடியவில்லை. அதே சமயம் என்னை அவர்களில் ஒருவனாகவும் சொல்லிக் கொள்ள முடியவில்லை! ஜான்சனிடம் கேளுங்கள், அப்படித்தான் சொல்லுவார்! ஆனால் நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார் வில்சன்.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருப்பது தவறு என்று எனக்குப் பட்டது!

''மிஸ்டர் வில்சன்! உங்கள் இரவுக் கனவுகளையும் பகற்கனவுகளையும் கேட்ட பிறகு எனக்கு ஒன்று தோன்றுகிறது. நீங்கள் கோபித்துக் கொள்ளாவிட்டால் அதைச் சொல்லுகிறேன்!'' என்றேன்.

''சொல்லாவிட்டால்தான் கோபித்துக் கொள்ளுவேன்'' என்றார் வில்சன்.

''கோவில்களில் வைத்துப் பூஜை செய்ய வேண்டிய சிலைகளையும் படிமங்களையும் பீடத்திலிருந்து அகற்றி அவற்றை வெறும் அலங்காரப் பொருள்களைப்போல் நடத்தினால் விபரீதங்களும் மனக் கோளாறுகளும் விளையும் என்று எங்கள் ஊரிலே பெரியவர்கள் சொல்லுவார்கள். நான் என்ன நினைக்கிறேன் என்றால்...''

''தெரியும், நீங்கள் நினைப்பதெல்லாம்! உங்கள் தமிழ் நாட்டைப் பற்றி எனக்கு எல்லா விஷயத்திலும் மதிப்பு உண்டு. ஆனால் இது போல் மூடநம்பிக்கைகள் இருக்கின்றனவே. அவற்றைப் பற்றித்தான் எனக்கு வருத்தம்!'' என்றார் வில்சன்.

''மன்னிக்க வேண்டும்! நீங்கள் எதை மூடநம்பிக்கை என்று சொல்லுகிறீர்களோ, அந்த மூட நம்பிக்கைதான் எங்கள் கலைக்கெல்லாம் வித்து. அந்த நம்பிக்கையில்லையென்றால் எங்கள் கலைகளுக்கும் இத்தனை உன்னதம் இல்லை. அந்தப்புரங்களிலே வைக்கக் கூடிய அலங்காரப் பொருள்களைத்தான் நாங்களும் செய்வோம்!''

வில்சன் எழுந்தார். அவருக்கு ஆத்திரம் வந்தது.

''அறிவுக்கு ஒத்து வராத விஷயங்களைப் பேச ஆரம்பித்து விட்டீர்கள்! இந்த இடத்திலேதான் நாம் பிரிய வேண்டும்'' என்றார் வில்சன்.

''உங்களுடைய சொந்த வாழ்க்கை அனுபவங்கள் எவ்வளவு தூரம் அறிவுக்கு ஒத்து வருமோ, அவ்வளவு தூரம் இந்த நம்பிக்கைகளும் அறிவுக்கு ஒத்து வரும்!'' என்று சொல்லிக் கொண்டே நானும் எழுந்தேன். ஆனால் என் வார்த்தைகள் அவர் காதில் விழவில்லை. ஒரே குதியில் சதுக்கத்திலே போய்த்தான் நின்றார் வில்சன்.

ஜான்சன் என்னிடம் சொன்னார்: ''என்ன! வில்சனைப் பற்றி நீங்கள் ஒரு முடிவுக்கு வரும் முன்பு நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ள ஒரு செய்தியை மட்டும் உங்களுக்குக் கட்டாயம் சொல்ல வேண்டும்!''

''என்ன அது?'' என்று மிக மிக ஆவலாகக் கேட்டேன்.

''ஆவடியில் இவர் இருந்த போது, ஏதோ ஒரு காதலில் ஈடுபட்டு அதன் விளைவாக இவருக்கு ஒருவித மூளைக் கோளாறு ஏற்பட்டது என்று இங்கே பேசிக் கொள்வார்கள்! அறிவுக்கு ஒத்து வருகிற செய்தி இது ஒன்றுதான்!'' என்றார் ஜான்சன். நான் சிரித்தேன்.

''என்ன சிரிக்கிறீர்கள்?'' என்று ஜான்சன் கேட்டார்.

''இல்லை! அறிவுக்கு ஒத்து வருகிற விஷயம் என்று தனியான ஒரு தத்துவம் இருக்கிறதாக எனக்குப் படவில்லை. நம்பிக்கை என்று ஒன்று வந்து விட்டாலே அது அறிவுக்கு அப்பாற்பட்டது என்றுதான் அர்த்தம்! அதில் மூடநம்பிக்கை என்றும் புத்திசாலித்தனமான நம்பிக்கை என்றும் பேதம் ஏது? எங்கள் சிலைகளையெல்லாம் நீங்கள் கலை விநோதம் என்று பார்க்கிறீர்கள். நாங்கள் புனித தேவதைகளாகப் பார்க்கிறோம். இது பிறப்பினால் ஏற்பட்ட மன இயல்பு. உங்களையோ வில்சனையோ நான் குறை கூறவில்லை!'' என்று சொன்னேன்.

''அப்படியென்றால் கனவுக்கும் நனவுக்கும்...'' என்று வார்த்தைகளை அசைபோட்டார் ஜான்சன். நான் சொன்னேன்: ''நனவு என்பது கலை என்ற கனவுக்குப் பின்னும் இருந்து கொண்டு அதை இயக்குகிற தெய்வம் ஒன்றுதான்! அது ஒன்றே நனவு! மற்றதெல்லாம் கனவு. நாம் நனவாகக் காண்பதெல்லாம் கனவுதான்!''

ஜான்சனுக்கு ஆவேசமே வந்தது!

''அப்படியென்றால் நீங்கள் வில்சனின் கனவையும், அந்தக் கனவிலே வருகிற காதலியையும் நம்புகிறீர்களா?'' என்று வேகத்தோடு கேட்டார் ஜான்சன்.

''இந்த உலகம் முழுவதுமே ஒரு கனவு. இதை நம்பக் கூடாது என்பதுதான் எங்கள் நாட்டுச் சித்தாந்தம்!'' என்று சொன்னேன் சிரித்துக்கொண்டே.





பிலிப்ஸ், விழாக்களை ஒளிமிகுந்து அதிக
மகிழ்ச்சிகரம் பொருந்தியதாகச் செய்கின்றது!

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்








# பிலிப்ஸின் தீபாவளி வாழ்த்துக்கள்!



இன்பம் பொங்கும் தீபாவளி நன்னாளில்
பிலிப்ஸின் அலங்கார விளக்குகளை ஏற்றியும்
பிலிப்ஸின் ரேடியோ மூலம் விசேஷ தீபாவளி
நிகழ்ச்சிகளைக் கேட்டும் ஆனந்தியுங்கள்.

எங்கள் புதிய பிலிப்ஸ் ஷோருமுக்கு
ஒருமுறை விஜயம் செய்யுங்கள்

## மாடர்ன் ரேடியோ ஸர்வீஸ்

146, பெரிய தெரு
கும்பகோணம்



51, கச்சேரி ரோடு
விழுப்புரம்






சுகமாக வசிப்பதற்கு
இயற்கையாக உதவுவது

**Racold**

ராகோல்ட் வீட்டுக்கு உபயோகமான
நீடித்து உழைக்கும் மின் சாதனங்கள்



விற்பனைக்கும் பிறகும் சர்வீஸ்
என்ற உத்தரவாதத்தின்பேரில்
விற்பனை செய்யப்படுகிறது

REFRIGERATION & APPLIANCES CO. PTE. LTD.
Fitwin Court, 95, Queen's Road, Bombay 1.



உலகத்திலுள்ள சிறந்த காபிகளில் இந்தியக் காபி ஓர் உன்னத ஸ்தானம் வகிக்கிறது. அதிக காபி அருந்தி பூரிப்பும் பெருமையும் அடையுங்கள்!

உங்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் அளிக்க, சிறந்த ரகங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட காபிதான் மிக முக்கியம் என்பது ஞாபகமிருக்கட்டும்.

# தீபாவளி

## திரும்பவும் வருகிறது!

இந்தப் புனிதத் தீபாவளித் திருநாளன்று
காபி உங்கள் உற்சாகத்தை மேன்மேலும் பெருக்கட்டும்




காபி போர்டு, பெங்களூர்



1817-ம் ஆண்டிலே ஆரம்பிக்கப்பட்ட...

# நமாஷ் - குதிரை

இன்று சிறப்புடன் விளங்குகிறது

# ஹிந்த்

## சைகிள்





டான்டீஸ் என்று அழைக்கப்படும் இந்தக் குதிரையை இரண்டு கால்களையும் தரையில் உந்தி விட்டுச் செலுத்தி வந்தார்கள். அக் காலத்தில் விளையாட்டுக்களில் விருப்பமுள்ள கனவான்களிடையே பிரபலமாக இருந்த இந்தத் நமாஷ் குதிரையில் ஒரு மணி நேரத்தில் 15 கிலோமீட்டர் தூரம்தான் செல்ல முடிந்தது. 1817லிருந்து இந்த சைகிள் ஆச்சரியப்படக்கூடிய மாறுதல்களை அடைந்துள்ளது. இந்தத் தொழில் துறைக்க முன்னேற்றங்களைத்தும் இன்று நாம் காணும் ஹிந்த் சைக்கிளில் பார்க்கலாம். சைகிள் உற்பத்தியில் ஹிந்த் சைகிள் தொழிற்சாலை தேசத்திலேயே முன்னணியில் விளங்குவதோடு, பத்து லட்சத்திற்கும் அதிகமான சைகிள்களை முதன் முதலில் மக்களுக்கு வழங்கி யிருக்கிறது. எல்லோருடைய விருப்பத்துக்கும் ஏற்றவகையில் விதவிதமான ரகங்களில் சைக்கிள்களை உற்பத்தி செய்வது ஹிந்த் தொழிற்சாலையின் தனிச்சிறப்பு அம்சமாகும்!

EYEBROW COSMETIC

# ஐப்ரோ
## கண் புருவ
## அழகுசாதனம்

கண் புருவ காஸ்மெடிக் பென்ஸில் ஓர் அத்தியாவசியமான அழகு சாதனம் என்ற முறையில் தயாரிக்கப் பட்டிருப்பதோடு 'மேக்-அப்' உபயோகத்துக்கும் சிலாக்கிய மானதாகும். பிலிம் ஸ்டுடியோக்களில் மேக்-அப் இலாக்காவில் அவசியம் இருக்க வேண்டிய சாதனம்.

தயாரிப்பாளர்கள்:
தி மதராஸ் பென்ஸில் பாக்டரி, மதராஸ்-21

---

எமது அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்
மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்

# டால்மியா
## ஸ்டோன்வேர் பீங்கான் தயாரிப்புகள்



பூமிக்கடியில் செல்லும்
சாக்கடைக்கு வேண்டிய
ஸ்டோன்வேர் குழாய்கள்



பாலங்கள், தண்ணீர் சப்ளை,
சாக்கடைகளுக்குத் தேவைப்படும்
ஆர்.ஸி.ஸி. ஸ்பன் குழாய்கள்



இந்திய, ஆங்கில முறையில்
அமைக்கப்படும் தனி அறைகள்,
முகம் கழுவும் பேஸின்கள்,
சிறுநீர் கழிக்குமிடம், ஆகிய
சுகாதாரத்துக்கு வேண்டிய
பீங்கான் சாமான்கள்



கைத்தொழில்
வேலைகளுக்கு வேண்டிய
ரிபிராக்டரீஸ்கள்




டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்
டால்மியாபுரம் (திருச்சிராப்பள்ளி)

DC-3TM

# புத்தொளி பூத்துக் குலுங்க...

எண்ணற்ற விளக்குகள் விழாவிற்கு எழில் சேர்க்கும். இதயங்களோ இன்பப்பண் ஆர்க்கும். கண்கள் ஒளி சேர்க்கும். விழா, கவலையினைத் தீர்க்கும். களிப்பினை வார்க்கும், எல்லோருக்கும்!

பாதுகாப்பான உணர்விற்குப் பாதை அமைக்கின்றன, மகிழ்வும், மனநிறைவும்!

உங்களுக்கும், உங்கள் அன்பிற்கு உரியவர்களுக்கும், உறுதியான வருங்காலப் பாதுகாப்பிற்கு வகைசெய்ய ஆயுள் இன்சூரன்சு அல்லால் வேறு வழியும் உளதோ?



## ஆயுள் இன்சூரன்சு போல

ஆதரவு தருவது எதுவுமே இல்லை

ASP-LIC-SP-8

எங்கள் மனமார்ந்த

# தீபாவளி வாழ்த்துக்கள்



# ஸ்டாண்டர்ட் டென்

உறுதியான கார்

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்)
பிரைவேட் லிமிடெட்.

சென்னை — பெங்களூர் — உதகை



Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publication Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10 Managing Editor, T. Sadasivam.

# என்ன குறி வேண்டும்?

எதிர்காலத்தை எட்டிப் பார்க்க வேண்டுமென்ற ஆசை மனிதனுக்கு இன்று நேற்றல்ல, அநாதிகாலம் தொட்டே இருந்து வருகிறது. எவ்வளவோ பகுத்தறிவு வளர்ந்துதான் இருக்கிறது. எனினும் மரத்தடி ஜோதிடர்களின் எண்ணிக்கைகூடக் குறையவில்லை.

சாதாரணக் களிமண்ணைக் கொண்டு பொம்மைக் கலைஞர் அரிய கலைப் பொம்மைகளைச் சிருஷ்டித்து விடுகிறார். பாறாங்கல்லைக் கொண்டு சிற்பி அரிய சிற்ப உருவத்தை நிர்மாணித்து விடுகிறார்.

எதிர்காலத்தை எட்டிப் பார்க்க நமக்கு உரிமை இல்லைதான். ஆண்டவனுடைய திருவுள்ளத்தைச் சோதிக்க நாம் யார்? எனினும் மனிதனின் இந்த அற்ப ஆசையே அரிய இலக்கியங்கள் உருவாக இடமளித்திருக்கின்றன. 'குறவஞ்சி நாடகங்கள்' என்று தமிழில் எத்தனையோ சிறு நூல்கள் உள்ளன. அவற்றுக்கெல்லாம் சிகரமாக விளங்குவது குற்றாலக் குறவஞ்சி என்பது அறிஞர்களின் துணிபு.

வஸந்தவல்லி என்றும் போல் அன்று பந்து விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது குற்றாலத்து நன்னகரின் வீதியில் உலா வந்தார் குற்றால நாதர். அவரைக் கண்டவுடன் அவளுக்கு நெஞ்சம் உருகினாற் போல் தோன்றியது. பின்பு மயக்கம் போல் வந்தது. ஓ! இதற்குத்தான் மோகம் என்று பெயரோ!

வாகனைக் கண்டுருகுதையோ - ஒரு
மயக்கமதாய் வருகுதையோ
மோகம் என்பதும் இதுதானோ? - இதை
முன்னமே நானும் அறியேன்! ஓ!

இப்படி ஒரு நிலையை உண்டாக்கி விட்டுக் குற்றால நாதர் மறைந்து விடுகிறார். பிறகு அவரை அடைவோமோ என்ற ஏக்கம் - தீராத ஏக்கம் உண்டாகிறது. இதை வெளியில் சொல்லவும் முடியவில்லை. குறி சொல்லும் குறத்தி வருகிறாள். அவளைக் கேட்கிறாள், உனக்குக் குறி சொல்லத் தெரியுமா என்று.

"என்ன குறியாகிலும் நான்
சொல்லுவேன் அம்மே!"

என்று குறத்தி பதில் சொல்லிவிட்டு, கைக் குறி, மெய்க் குறி, கண் குறி என்று அவள் அடுக்கிக் கொண்டு போகும் குறிகள் பிரமிக்கச் செய்வதாகும்.

இப்படி அவள் குறி சொல்லத் தொடங்குவதும், குறுக்குக் கேள்விகள் கேட்பதும் மிக மிக ரஸமானவை. தமிழ்ப் படித்தவர் ஒவ்வொருவரும் படித்து அனுபவிக்க வேண்டிய பாடல்கள். நகைச்சுவை அப்படிக் குமிழி யிட்டு ஓடும்.

* * *

இப்படிக் குறி சொல்லும் அருமையான காட்சியை ஓவியர் வினு இங்கு தருகிறார்.

கல்கி தீபாவளி மலர் 1960

# வண்டியும் மாடும்

ரயில், மோட்டார், பஸ் வசதிகள் எவ்வளவோ ஏற்பட்டிருந்தும் இதோ இப்படத்தில் காண்பதுபோன்ற இனிய காட்சிகளை இன்றும் நாம் நமது கிராமப்புறங்களில் காணலாம்.

பார வண்டிகளில் குடும்பம் குடும்பமாய் மக்கள் யாத்திரை போவதையும் மத்தியான வேளைகளில் மர நிழல்களில் தங்குவதையும் பார்க்கலாம்.

மதுரை, ஸ்ரீரங்கம், ராமேசுவரம் போன்ற ஊர்களுக்குத் திருவிழாக் காலங்களிலும், புனித நாட்களிலும் மாரியம்மன் உற்சவ நாட்களிலும் இருபது மைல், முப்பது மைல் சுற்று வட்டாரக் கிராமங்களிலிருந்து மக்கள் குடும்பம் குடும்பமாய்ப் பார வண்டிகளில் ஏறி உட்கார்ந்து களிப்பாகத் தெம்மாங்குப் பாட்டுக்கள் பாடிக்கொண்டு வருவார்கள். அவர்கள் குறித்த ஊரைப் போய் அடைய மூன்று நாட்கள், நான்கு நாட்கள்கூட ஆகலாம். ஆகவே, அவர்கள் வழியில் தங்கித் தங்கிப் போய்ச் சேருவார்கள். விடியற்காலை, சூரியோதயத்துக்கு முன் புறப்பட்டு விடுவார்கள். மத்தியான உச்சி வேளை வந்துவிட்டால், மரங்கள் இருக்கிற இடத்தில் மாட்டை அவிழ்த்துவிட்டு, அதற்கு வைக்கோலைப் போட்டுவிட்டு இவர்கள் மூலைக்கு மூலை மூன்று மூன்று கற்களை அடுப்பாக வைத்துப் பக்கத்தில் கிடக்கும் சுள்ளிகளைக் கொண்டு, தீமூட்டிச் சோறு பொங்கிச் சாப்பிட்டு விட்டு, அப்படியே மரத்து நிழலில் இளைப்பாறுவார்கள். சிறிது வெயில் தாழ்ந்த பிறகு மீண்டும் யாத்திரை தொடங்குவார்கள்.

இப்படி அவர்கள் போகும்போதும் தங்கும்போதும் பலப்பல விதமான நாடோடிப் பாடல்களைப் பாடிக் கொண்டு போவார்கள். அந்தப் பாடல்களில் நவரஸமும் ததும்பும். எல்லாவற்றுக்கும் மேலாகப் பக்திரஸம் பொங்கி வழியும்.

• • • • •

முன் காலங்களில் இப்படி வண்டிகளில் போகும் போது வழிப்பறிக் கொள்ளைகளும் நடப்பதுண்டு.

இதை வைத்து, ஓர் அண்ணனுக்கும் தம்பிக்கும் நடந்த சம்பாஷணையாக அந்தத் தெம்மாங்கு மெட்டிலேயே பாரதியார் ஓர் அருமையான பாடல் பாடியிருக்கிறார் :

"காட்டு வழிதனி லே — அண்ணே
 கள்ளர் பயமிருந்தால் ?" — "எங்கள்
வீட்டுக் குலதெய்வம் — தம்பி
 வீரம்மை காக்குமடா !"
"நிறுத்து வண்டி யென்றே — கள்ளர்
 நெருக்கிக் கேட்கையிலே ?" — "எங்கள்
கறுத்த மாரியின் பேர் — சொன்னால்
 காலனும் அஞ்சுமடா !"

பாரத நாட்டுக் கிராம மக்களின் ஆழ்ந்த தெய்வ பக்தியை எவ்வளவு அழகாகக் காட்டிவிட்டார் !

மாடும் வண்டியும், ஏர் உழுவதற்கும், எரு அடிப்பதற்கும், நெல் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கும் உபயோகப்படுகின்றன. இப்படியெல்லாம் உழைத்து வாழும் பிழைப்புக்கு உபயோகப்படும் வண்டியும் மாடும், அவர்கள் உள்ளத்தை உய்விக்கும் தெய்வ பக்திக்கும் உபயோகப்படுகின்றன. புனித க்ஷேத்திரங்களுக்கும் அழைத்துச் செல்கின்றன !

கல்கி தீபாவளி மலர் 1960

## சற்றே விலகி இரும் பிள்ளாய்...!




மாப்பிள்ளை: கொஞ்சம் தள்ளி நில்லு. என் எதிரே பிள்ளையார் இருப்பது பக்கத்து வீட்டுக்காரர்களுக்குத் தெரியாது. நான் உனக்குத்தான் தோப்புக்கரணம் போடுகிறேன் என்று நினைத்துக் கொள்ளப் போகிறார்கள்!



Rock Fort, Trichy

Photo: D. I. Chanthamian

# வள்ளுவர் இன்பம்



திருக்குறள் இன்பத்துப் பாலில் கருத்தழகும் கவிதை நயமும் பொருந்திய அகத்துறைக் குறட்பாக்கள் பல உள்ளன. அறத்துப் பாலில் சிறந்த அறநூலாசிரியராகவும், பொருட்பாலில் அரசியல் அறிஞராகவும் தோன்றும் வள்ளுவர் இன்பத்துப்பாலில் கவிஞராகவே மாறி விடுகிறார். அகப் பொருள் அழகும், புனைந்துரைச் செறிவும் வாய்ந்த இடங்கள் திருக்குறள் இன்பத்துப்பாலில் நிறைய வருவதே இதற்குச் சான்று. அத்தகைய நயம் பொருந்திய சில குறட்பாக்களின் காட்சிகளை 'வள்ளுவர் இன்பம்' என்ற வரிசையில் இங்கே வரைந்து அளித்திருக்கிறார் ஓவியர் திரு எஸ். ராஜம்.

வானிலுள்ள நட்சத்திரங்கள், முழுமதியையும், அதே போல் அழகிய தலைவியின் முகத்தையும் பார்த்து எது முழுமதி, எது முகமென மருண்டு கலங்குவதாகத் தலைவன் கூறுகிறான்.

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன்

தலைவியின் முகத்தையும், முழுமதியையும், விண்மீன்களையும் கண்டு தலைவன் இவ்வாறு புனைந்து கூறும் அழகை இங்கே முதல் படத்தில் காண்கிறோம்.

தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று வெகு நாட்களாகிவிட்டது. அவன் சென்ற தினத்திலிருந்து நாட்களை ஒவ்வொன்றாக எண்ணிச் சுவரில் புள்ளி விடுகிறாள் தலைவி. சுவரில் புள்ளியிட்டுப் புள்ளியிட்டு அவள் கைவிரல்கள் தேய்ந்து விட்டன. தலைவன் வரவை எதிர்பார்த்துப் பார்த்துக் கண்களும் ஒளியிழந்து விட்டன. தலைவி தன் காதலன் சென்ற நாட்களை எண்ணிப் புள்ளியிடுதலையும் வாயிற்புறத்தே தலைவன் மீண்டு வந்து கொண்டிருத்தலையும் இரண்டாவது ஓவியத்தில் காண்கிறோம்.

வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்

ஒவ்வொரு முறையும் தலைவன் பிரிந்துசென்று மீளும்போதெல்லாம் அவன் மேல் கோபித்துக் கொள்ள வேண்டுமென்று நினைப்பாள் தலைவி. ஆனால் கோபித்துக் கொள்ள வேண்டுமென்ற நினைப்பெல்லாம் அவனைக் காணும் முன்புதான் உண்டாகும். அவனைக் கண்டால் கோபமெல்லாம் மறைந்துவிடும்.

'கண்ணுக்கு மையெழுதுகிற போது மையெழுதும் கோல் கண்ணுக்குத் தெரிவதில்லை. அது போல் காதலனைக் காணாத போது உண்டாகிற சினம் அவனைக் கண்டதும் மறைந்து போகிறது' — என்னும் நினைப்போடு தலைவி கண்களுக்கு மை தீட்டும் காட்சியை மூன்றாவதாகக் காண்கிறோம்.

எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட இடத்து

ஊடல் காதலுக்கு உரம் என்பது வள்ளுவர் கருத்து. ஊடலைப் பற்றிய அழகிய கற்பனைகள் திருக்குறள் இன்பத்துப்பாலில் நிறைந்துள்ளன.

தலைவன் மாலையணிந்து கொண்ட தோற்றத்துடன் தலைவிக்கு முன் வந்து நின்று காட்சியளிக்கிறான். தலைவி அவனை நோக்கி, "எனக்காக நீங்கள் இந்த மாலையைச் சூட்டிக் கொள்ளவில்லை. வேறு யாரோ ஒருத்திக்குக் காட்டுவதற்காகச் சூடிக் கொண்டிருக்கிறீர்கள்" என்று சொல்லிப் பிணங்குகிறாள். மாலை சூடி நிற்கும் தலைவனையும் அவனுடன் பிணங்கி ஒதுங்கும் தலைவியையும் நான்காவது படம் சித்திரிக்கிறது.

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று.

வள்ளுவர் இன்பம் என்னும் இப்பகுதியில் இந்நான்கு குறட்காட்சிகளையும் அடுத்து வரும் பக்கங்களில் காணலாம்.



# சக்தி வெறி

உலகை இரு கூறாகப் பிரிக்கின்றனர் விஞ்ஞானிகள். அதாவது ஒன்று பொருள், மற்றொன்று சக்தி.

பேச்சளவில் பிரிக்கிறார்களே தவிர, ஆனால் இவை இரண்டும் என்றும் இணை பிரியாதவை என்று இன்றைய விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

ஓர் அணுவை எடுத்துக் கொண்டாலும் அதனில் மாபெரும் சக்தி நிரம்பியிருக்கிறது என்பது அவர்கள் கண்ட உண்மை. இதற்குமேல் நாம் இவ் விஷயத்தை இங்கு விவரிக்கத் தேவையில்லை.

இன்றைய விஞ்ஞானிகள் கண்ட இவ் வுண்மையை நம் முன்னோர்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே கண்டு வியந்தனர். இந்தப் பொருளைப் படைத்தவர் யார், இச் சக்தியை நிரப்பி இயக்குபவர் யார் என்று வியந்து சிவம், சக்தி என்றனர்.

பின்னர் சிவத்தையும் சக்தியையும் பிரிக்க முடியாத தன்மையையும் கண்டு வியந்து வியந்து பல்வேறு வகைகளில் விளக்கினர்; வழிபட்டனர். அர்த்தநாரீசுவர வடிவமே இந்தக் கருத்தின் விளக்கமல்லவா?

அணுவுக்குள் அணுவாயும், அண்டத்துக்குள் அண்டமாயும் விளங்கும் அந்தப் பராசக்தியைப் பாரதியார் பலப்பல வகைகளில் பாடிப் பரவுகிறார். இதோ ஒரு பாடல்:

**ஓம், சக்திமிசை பாடல்பல பாடு — ஓம்**
**சக்தி சக்தி என்று தாளம் போடு**
**சக்திதரும் செய்கை நிலம் தனிலே — சிவ**
**சக்திவெறி கொண்டுகளித் தாடு.**

இந்தப் பாட்டுக்கு அரிய விளக்கமாக அமைந்துள்ளது சித்திரம்.

சக்தி வெள்ளம் எங்கும் நிரம்பிக் கிடக்கிறது. அது மட்டுமல்ல, அது ஒரு கதியில் களிநடனம் புரிகிறது என்று விஞ்ஞானிகளும் மெய்ஞ்ஞானிகளும் கூறுகின்றனர்.

அணுவுக்குள்ளிருக்கும் எலக்டரான்களும் ப்ரோடான்களும் ஒன்றையொன்று ஒரு கதியில் சுற்றிவரும் அழகை வர்ணித்து வர்ணித்து மயங்குகிறார்கள் விஞ்ஞானிகள்!

இப்படி யெல்லாம் இயக்கும் அந்தச் சக்தி யார் என்று தெரியாமல் விஞ்ஞானம் திண்டாடுகிறது!

அந்த இடத்தில் மெய்ஞ்ஞானி தோன்றி, "அதுவே அன்னை பராசக்தி. அப் பராசக்தியைப் பாடுவோம், பணிவோம், பரவுவோம்" என்கிறார்.

*கல்கி தீபாவளி மலர் 1960*

# சிற்பச் சித்திரங்கள்

அழகைக் கண்ட இடங்களில் எல்லாம் ஆலயங்கள் கண்டு மகிழ்ந்த பெருமையுடையது தமிழ் மரபு. ஆலயங்களில் இலங்கும் சிற்பச் செல்வங்கள் பழமைதொட்டு வரும் அந்தக் கலைப் பெருமைக்கு நிலைத்த சான்றுகளாக நிற்கின்றன. இந்தப் பகுதியில் சிற்பச் சித்திரங்களாக அளிக்கப் பெற்றுள்ளவை மதுரை, திருநெல்வேலி, பேரூர் ஆகிய திருத்தலங்களைச் சார்ந்தவை.

### 1. யோகபோகேஸ்வரர்

யோகதண்டம் ஊன்றிப் பத்மாசனத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் இறைவன் தவமிருக்க, இடப் பக்கம் போகமே வடிவமாக உமை வீற்றிருக்கும் தோற்றத்தில் யோக போகேஸ்வரர் சிற்பம் காட்சியளிக்கிறது. யோகமும், போகமும் இணைந்த இறைமைக் காட்சியை இச் சிற்பத்தில் காண்கிறோம்.

திருநெல்வேலி சுவாமி நெல்லையப்பர் சந்நிதியில் உட்பக்கத்து முதல் பிராகாரத்தின் தென் பக்கத்தில் இந்த யோகபோகேஸ்வரர் சிற்பத்தைக் காணலாம்.

### 2. கஜசம்ஹாரர்

கஜ சம்ஹாரம் செய்த பெருமையால் சிவபெருமானுக்குக் 'கரியுரித்த பெம்மான்' என்றொரு சிறப்புப் பெயர் உண்டு. கஜசம்ஹாரத் தோற்றத்திலுள்ள சிவபெருமானின் அழகிய சிற்பங்கள் தமிழகத்தின் பல பகுதிகளில் இருக்கின்றன.

சம்ஹாரக் கோலத்திலும் அழகு காட்டும் பெருமானின் கம்பீரத்தை இந்தச் சிற்பத்தில் கண்டு மகிழ்கிறோம். கஜசம்ஹாரரின் இந்த எழில் வாய்ந்த சிற்பம் கோவைக்கு அண்மையில் உள்ள பேரூரில் இருந்து எழுதியது ஆகும்.

### 3. திரிபுராந்தகர்

'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்' என்றும் 'முப்புரங்களைச் செற்ற முக்கண் இறைவன்' என்றும் சிவபெருமானுடைய திரிபுர சம்ஹாரப் புகழைத் தமிழ் இலக்கியங்கள் பாடுகின்றன. தேரேறி நின்று திரிபுர சம்ஹாரப் பெருமை துலங்கக் காட்சியளிக்கும் இந்தச் சிற்பம் மதுரை மீனாட்சியம்மன் கோவில் சுவாமி சந்நிதியின் முன் புறமுள்ள மண்டபத்தில் இருக்கிறது. போர்க் கோலம் பூண்டு நிற்கும் உணர்ச்சி சூழ் பாவங்கள்தாம் சிற்பத்தில் எத்துணை அழகாகப் பொருந்தி யிருக்கின்றன!

### 4. அல்லி அர்ச்சுனன் - பவழக்கொடி

திருநெல்வேலி - சுவாமி நெல்லையப்பர் கோயிலில் நந்திக்கு வடக்குப் பக்கம் சோமவார மண்டபத்தின் முன்புறம் மகாபாரதக் கதாபாத்திரங்களான அல்லியும், அர்ச்சுனனும் இணைந்து நிற்பது போல் உருவாக்கப்பட்டுள்ள இரண்டு அழகிய சிற்பங்கள் காட்சியளிக்கின்றன. இவற்றின் எதிரில் உள்ள மற்றொரு தூணில் பவழக்கொடி தன் தோழிகளுடன் வனப்பு வாய்ந்த கோலத்தில் எழிலுற நிற்கும் காட்சி சிற்பமாக இலங்குகிறது. இந்த அற்புதச் சிற்பங்கள் யாவற்றையும் நமது ஓவிய வல்லுநர் திரு விநு அவர்கள் மலருக்கு அணிகலன் போல் சிறப்புற வரைந்து வழங்கியிருக்கிறார்கள்.



# குமார சம்பவம்

இந்த ஆண்டு மலரின் அட்டைச் சித்திரத்தைப் பார்த்தீர்களா? — 'எங்கே பார்த்தோம்?' என மயங்கி அல்லவா நிற்கிறோம். என்ன அழகு. என்ன சாயல்! ஆகா அந்தக் கண்களின் லாவண்யம் தான் என்ன! அன்னமென அடி யெடுத்து வைக்கும் பாங்குதான் என்ன!

"இவள் ஒரு வனகுமாரி போல் காண்கிறாளே! யார் இவள்? எங்கிருப்பவள்? இவள் தந்தை யார்?" என்று கேட்பது காதில் விழுகிறது.

இவள்தான் பார்வதி. பர்வதராஜனான ஹிமவானின் மகள். இவள் முந்தையப் பிறவியில் தக்ஷனுடைய மகளாகப் பிறந்த ஸதி தேவி; சிவபெருமானை மணந்தாள்.

தக்ஷன் ஒரு யாகம் நடத்தினான். எல்லா தேவர்களையும் அழைப்பித்துக் கௌரவம் செய்தான். ஆனால் சொந்த மகளையும் மருமகனையும் அழைக்கவில்லை. ஸதிக்குத் தந்தை நடத்தும் வேள்வியைக் காணவேண்டும் என்று ஆவல் எழுந்தது. சிவபெருமான் வேண்டாம் என்றார். அவமானப்படுத்துவார்கள் என்று எச்சரிக்கை செய்தார். தந்தைப் பாசம் மிகுந்தது. சிவபெருமான் கூறியதைக் கேட்கவில்லை. ஸதி யாகத்துக்குச் சென்றாள். அங்கு அவள் அவமானப்படுத்தப்பட்டாள். ஸதி கோபமடைந்து, அந்த வேள்வித் தீயிலே தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள்.

ஸதியைப் பறிகொடுத்த சிவபெருமான் இமயமலைச் சாரலில் மோனத் தவத்திலாழ்ந்துவிட்டார்.

ஸதி இமவானுக்கும் அவன் மனைவி மேனுவுக்கும் மகளாகப் பிறந்தாள். உமை என்றும் பார்வதி என்றும் பெயர் பூண்டாள்.

* * * *

தாரகாசுரன் என்றோர் அரக்கன் உலகில் கொடுமைப் படுத்திக் கொண்டு வந்தான். அந்த அரக்கனின் கொட்டத்தை அடக்க முடியாமல் தேவர்கள் தத்தளித்தனர். அப்போது உமைக்கும், சிவபெருமானுக்கும் பிறக்கும் முருகப்பெருமானால்தான் அவனைக் கொல்ல முடியும் என்று அறிகிறார்கள். இது எவ்வளவு சிரமமான காரியம்! சிவபெருமானோ, கண்களை மூடிக் கொண்டு மோனத் தவத்தில் ஆழ்ந்திருக்கிறார். உமையோ, தனது பூர்வஜன்ம நினைப்பின்றி இமவானின் புதல்வியாக வாழ்ந்து வருகிறாள்! இவர்கள் இருவருக்கும் மணமுடித்து வைப்பதே பெரும் பாடாயிற்றே! இந்தச் சம்பவங்களை மகாகவி காளிதாஸன் அபாரமான கலைத் திறனுடன் ஓர் அரிய காவியமாகச் செய்து முடித்திருக்கிறார். அக் காவியத்தின் அழகைப் பார்த்து உலகம் வியந்து வியந்து முடியவில்லை!

அறிந்தவர்கள் காளிதாஸனின் ஸம்ஸ்கிருதச் சொல்லாட்சியையும் வர்ணனைகளையும் சொல்லிச் சொல்லி மகிழ்கிறார்கள்! ஸம்ஸ்கிருதம் அறியாதவர்கள் அக் காவியத்தின் கட்டுக் கோப்புக்கே மெய் சிலிர்த்து விடுகிறார்கள்!

இத்தகைய அரிய காவியத்திலிருந்து ஒரு சில காட்சிகளை இம்மலரின் அட்டையிலும் அடுத்து வரும் பக்கங்களிலும் உயிரோவியமாக்கி யிருக்கிறார் மணியம்.

* * *

குமார சம்பவம்: முருகன் தோற்றம் என்னும் இக் காவியம், ஹிமவானுக்கு உமை பிறப்பதிலிருந்து தொடங்குகிறது.

இமயமலை எழிற் காட்சிகளை வர்ணித்து விட்டு, அவ்வரசனுக்குப் பிறந்த மகளின் வளர்ச்சியையும் அழகையும் வர்ணிக்கிறார். பிறகு அவள் நடையையும் வர்ணிக்கிறார்: அவள் அந்த வனப்பிரதேசத்தில் நடக்கும்போது, அந்த அன்னங்களிடமிருந்து நடை பயில்வது போல் தோன்றுகிறதாம். அன்னங்களோ, அவள் நடக்கும்போது அவள் பாதச் சிலம்புகளின்று எழும் இனிய நாதத்தை மிகுந்த ஆர்வத்துடன் பயிலவிழையுமாம்! இக் காட்சியையே, இவ்வருஷ மலரின் அட்டைச் சித்திரமாகத் தருகிறார் ஓவியர் மணியம்.



இப்படி வனத்தில் திரிந்து கொண்டிருந்த இந்த இளமங்கைக்கு, நாரத முனிவர் வந்து 'உனக்கு ஏற்ற மணாளன், அதோ மலையில் மோனத்தவத்தில் ஆழ்ந்திருக்கும் சிவபெருமான்தான்' என்று சொல்லி, சிவபெருமானின் மெய்ப் புகழைப் பாடிவிட்டுச் செல்கிறார். அப்போதிருந்து சிவபெருமானையே மணக்க வேண்டும் என்று உமைக்கு ஆவல் எழுகிறது.

சிவபெருமானிடம் அணுகி உமையை மணந்து கொள்ளும்படி கேட்க யாருக்குத் துணிச்சல் உண்டு? ஆகவே, உமையையே சிவபெருமானுக்குப் பணிவிடை செய்து, அவரை மணந்து கொள்ளும்படி கேட்க இமவான் அனுமதிக்கிறார். உமையும் தன் அழகுக்கு அழகு செய்துகொண்டு சிவபெருமானுக்குப் பணிவிடை செய்யச் செல்கிறாள்.

ஒருநாள் சிவபெருமான் தமது மோனத் தவத்தைக் கலைத்து, கண் திறந்து உமையைப் பார்க்கிறார்.

புலனைந்தும் வென்ற மகான் உமையின் அன்புப் பணிவிடையைக் கண்டு, "உன் ஒருத்தியையே காதலிக்கும் அன்புக் கணவன் உனக்கு வாய்ப்பான், இனிய நங்கையே!" என்று ஆசி கூறினார்.

தெய்வத்தின் சொல் பொய்யாவதில்லை. ஆகவே இனிப் பயமில்லை, என் மனோரதம் நிறைவேறிவிடும் என்று மகிழ்கிறாள் உமை.

தேவர்களின் வேண்டுதலின்மீது அங்கு வந்திருந்த மன்மதன் இதுதான் சமயம் என்று தனது கரும்பு வில்லை வளைத்து, மலர்க்கணையும் தொடுத்தான்.

உமையோ தனது மலர்க் கரங்களால், சிவபெருமானுக்குத் தாமரை விதைகளால் தொடுத்த ஜப மாலையைத் தனது அன்புக் காணிக்கையாக அளிக்கிறாள்.

அதை அம் முக்கண்ணன் உமையைக் கருதி ஏற்க இருந்தான். மன்மதன் தனது மலர்க் கணையை ஏவி விட்டான்! பூரண சந்திரன் கடலின் மீது உதயமானதும் எப்படிக் கடலில் அலைகள் எழும்புகின்றனவோ, அந்தகைய சலனம் இறைவன் உள்ளத்தில் எழுந்தது!

அத்தருணம் உமை தன்னிடம் கொண்டுள்ள ஆழக் காதலின் தன்மையை அவளது செவ்விதழ்களின் மூலம் ஆண்டவன் உணர்ந்தான். இந்தக் காட்சியையே ஓவியர் இரண்டாவது சித்திரமாகத் தந்திருக்கிறார்.

இப்படித் தம் இதயம் சஞ்சலப் பட்டதற்குக் காரணம் யார் என்று அறிய சிவபெருமான் சுற்று முற்றும் பார்த்தார். அங்கே மன்மதன் நின்று கொண்டிருந்தான். கோபம் பொங்கியது. தேவர்களோ "வேண்டாம்! பொறுத்துக் கொள்ளுங்கள்" என்று வான வீதியிலிருந்து அலறி வேண்டினர். நெற்றிக் கண் திறந்தது; மன்மதன் சாம்பலானான். ரதி மயக்க முற்று விழுந்தாள்.

காமன் அழிந்து பட்டான். அதிலிருந்து உமை ஒன்று தெரிந்து கொண்டாள். இறைவனைத் தன் பேரெழிலால் மயக்கி வென்று விடமுடியாது என்று கண்டு கொண்டாள். பின் வேறு வழி தான் என்ன?

'வீரத் தவ வாழ்க்கை வாழ்ந்து அவன் அருளைப் பெறுவதே வழி என்று முடிவு செய்தாள்.



அரண்மனை வாழ்வையும், அரச போகத்தையும் தியாகம் செய்து, மரவுரி தரித்து, மலைப்புறத்தில் பர்ணகுடி அமைத்து, பழங்களும் காயும் கனியும் இலையும் தின்று கடும் தவமியற்றினாள்.

தவ வாழ்க்கை இடையில், ஒவ்வொரு சமயம் கானகத்தில் செடி கொடிகளுக்குத் தண்ணீர் ஊற்றி வளர்த்து வந்தாள்.

அவள் தண்ணீர் கொண்டு வந்து செடி ஒன்றுக்கு ஊற்றி வளர்ப்பதைப் பார்க்கும்போது, பிற்காலத்தில் அவள் பெற்று வளர்க்க இருக்கும் கந்தனுக்கு மூத்த குழந்தையோ இது எனத் தோன்றுமாம். அத்தனை தாயின் பரிவுடன் வனக் கொடியை வளர்த்தாள் என்கிறார் கவி காளிதாஸன். இந்தக் காட்சியையும் மணியம் தந்திருக்கிறார்.

உமையின் தவத்தைக் கண்டு மகிழ்ந்து, சிவபெருமான் ஒரு பிரம்மசாரி வேஷம் பூண்டு, உமையின் ஆசிரமத்துக்கு வந்தார். யாரோ படித்த பிரம்மசாரி, உபசரிக்க வேண்டியது கடமையென்று உமை வரவேற்றாள். பிரம்மசாரியோ, "இவ்வளவு அழகுடன் விளங்கும் உனக்கு என்ன குறையிருக்க முடியும்? எதற்காக இந்தக் கடும் தவம்?" என்று வினவினார்.

உமையாள் தன் தோழி மூலம் சிவபெருமானைக் கணவனாக அடையும் பொருட்டுத் தவமிருப்பதைக் கூறினாள். இதைக் கேட்ட அந்தக்கபட பிரம்மசாரி, "நாடு நகரம் கிடையாது. வசிப்பதோ சுடுகாடு, பூசுவதோ நீறு; உண்பதோ பிச்சை யெடுத்து; உடுப்பதோ யானைத் தோல், இப்படிப்பட்டவனையா மணக்க விரும்புகிறாய்?" என்று ஏளனமாகப் பேசுகிறார். அதற்கு உமை, "பெரியோர்களைத் தூற்றிப் பேசுபவன் மட்டும் பாபம் செய்பவனில்லை. பேசுவதைக் கேட்பவரும் பாவம் செய்தவராகிறார்! அதனால் நான் இவ்விடத்தை விட்டுப் போகிறேன்" என்று கோபத்தோடு எழுந்தாள். அப்போது அவள் மேல் அணிந்திருந்த மரவுரி நெகிழ்ந்தது. அக்கணம் சிவபெருமான், தம் உண்மைச் சொரூபத்துடன் அவள் கையைப் பற்றுகிறார்!

இந்தக் காட்சியையும் ஓவியர் மணியம் தந்திருக்கிறார்.

இதற்குப் பின் கவி காளிதாஸன் சிவனுக்கும் உமைக்கும் திருமணம் நடப்பதுடன் தமது காவியத்தை முடிக்கிறார்.

உமை, முருகனுடன் கொஞ்சி விளையாடும் காட்சியுடன் குமார சம்பவத்தை முடிக்கிறார் ஓவியர் மணியம்.

குமார சம்பவம், காமத்தை அழித்து, தவத்தாலும் தியாக வாழ்விலும் பிறந்த அன்பே நிலையானது என்பதை வற்புறுத்த எழுந்த காவியம்.



शर्वादिपरमसाधकगुर्वानीताय कामपीठजुषे ।
सर्वाकृतये शोणिमगर्वायास्मै समर्प्यते हृदयम् ॥

பரசிவன் முதல் குரு பரம்பரை
பரவு காஞ்சியம் பதியிலே
வரஸுராஸுராதிய சராசரத்
துருவமா யெழுந்த ருளிய
கருணை வாரியாய்க் காம பீடமே
லரசு செய்யுமுலை கன்னியின்
மருவு குங்குமப் படிவமே நினைந்
துள்ள மனைத்தையும் மறந்ததே.

नित्यं निश्चलतामुपेत्य मरुतां रक्षाविधिं पुष्णती
तेजस्संचयपाटवेन किरणानुष्णद्युतेर्मुष्णती ।
काञ्चीमध्यगतापि दीप्तिजननी विश्वान्तरे जृम्भते
काचिच्चित्रमहो स्मृतापि तमसां निर्वापिका दीपिका ॥

நீரிலணையாதாழி வாயுவிலு மசையாது
நிறை மதியொடி ரவிக்கும் ஒளி கொடுக்கும்
ஓரிடம மர்ந்திடினு முலகெலா மொளி வீசும்
உம்பருட னன்பரைப் பாதுகாக்கும்
ஆரணப் பொருளாய் நம் உள்ளம் நிறைந்தே
அடர்ந்த அஞ்ஞான மெனும் மதிமயக்கும்
காரிரு ளொழிக்கக் கருத்திலும் விளங்குமோர்
கஞ்சி காமாக்ஷி யெனும் மணி விளக்கு.



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளை ஜகன்மாதாவான காஞ்சி காமாட்சி தேவி அல்லும் பகலும் அனவரதமும் நிழல்போல் தொடர்ந்து வழிகாட்டி அருள் பாலிக்கிறாள்.



கல்கி தீபாவளி மலர் - 1960
மணியம்.


SANKAR
I C
BRAND
சங்கர் பிராண்ட்
போர்ட்லண்ட் ஸிமெண்ட்
தயாரிப்பாளர்களிடமிருந்து
உங்களுக்கு
தீபாவளி
நல் வாழ்த்துக்கள்
இந்தியா ஸிமெண்ட்ஸ்
லிமிடெட்.
சென்னை-2
தொழிற்சாலை: சங்கர்நகர்,
திருநெல்வேலி ஜில்லா

REGISTERED No. M. 4392
Supplement to the Kalki issue Dated 23-10-1960
Registered as a Newspaper in Ceylon